


ஓம்
தத்சத்
பரப்பிரஹ்மணே நம:

# கைவல்லிய நவநீத

# வசன வினாவிடை

விரிவுரையுடன்.




இது
ஸ்ரீ சாது இரத்தின சற்குருவின் பாதசேகரராகிய
பண்டிதர்
கோ. வடிவேலு செட்டியாரவர்களால்
இயற்றப்பட்டு,

ஷியாராலும்

ம. ஷண்முக முதலியாரவர்களாலும்
அச்சிடப்பட்டது.

---

 1923. [ரூபாய் 2—8—0.

Printed at the
*Noble Press, Triplicane,*
Madras.

கைவல்லிய நவநீதச் செய்யுளின்

# முதற்குறிப்பகராதி.

கைவல்லிய நவநீதச் செய்யுளின்

முதற்குறிப்பகராதி

முற்றிற்று.

---



# பிழை திருத்தம்.

—*—

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 9 | 5 | யந்தா | யந்தான் |
| 18 | 20 | யென்னை | மென்னை |
| 22 | 24 | தரிசிப்பது | தரிசிப்பித்து |
| 25 | 10 | யிருக்கின்ற | யுமிருக்கின்ற |
| 28 | 15 | வுணர்க | வுமுணர்க |
| 30 | 24 | அமூர்தமாய் | அமூர்த்தமாய் |
| 31 | 15 | ஒன்று | ஒன்ரு |
| 31 | 30 | மயைக்கும் | மாயைக்கும் |
| 53 | 18 | விடத்து | விடத்து) |
| 62 | 22 | டரிணம | பரிணம |
| 75 | 38 | மொங்கு | மோங்கு |
| 76 | 31 | அயம | அயம் |
| 81 | 32 | சொரூபதா | சொரூபமதா |
| 83 | 5 | குளி | குளிர் |
| 83 | 33 | என் | என்று |
| 86 | 2 | அக்கினிக் | அக்கினி |
| 91 | 2 | யிரம | பிரம |
| 96 | 20 | யிரஹ்ம | பிரஹ்ம |
| 96 | 33 | மாக்கு | மாகு |
| 97 | 16 | கருமையுள்ள | கருமையாயுள்ள |
| 120 | 34 | கத்குரு | சற்குரு |
| 123 | 28 | ஸ்துலத் | ஸ்தூலத் |
| 135 | 2 | மற | மற் |
| 136 | 9 | சிதோஷ்ண | சீதோஷ்ண |
| 136 | 22 | நித்தித்தல் | நிந்தித்தல் |
| 138 | 26 | ஞென்றும் | ஞேன்றும் |
| 145 | 25 | வொமென்று | வோமென்று |
| 146 | 21 | விளங்கா | விளங்கா |
| 152 | 31 | ளின்றியே | நின்றியே |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 153 | 3 | எல்லாச் | தெல்லாச் |
| 153 | 27 | கூறுதிங் | கூறுவதிங் |
| 168 | 6 | வகுந்துக் | வகுத்துக் |
| 176 | 33 | பின்ணை | பின்னை |
| 188 | 7 | தம்முன் | தம்முள் |
| 213 | 10 | ஞற்சொருப | ஞற்சொருப |
| 214 | 13 | விருத்திகளம் | விருத்திகளாம் |
| 260 | 14 | சேதநந்தின்கண் | சேதனத்தின்கண் |
| 264 | 7 | பூமிமென்று | பூமியென்று |
| 266 | 20 | பாதார்த்தாபாவனை | பதார்த்தாபாவனை |
| 275 | 5 | ளவர்கு வெகு | ளவர்க்கு வெகு |
| 288 | 32 | சீவர்களநு | சீவர்களது |
| 289 | 13 | யூதித் | யூகித் |



ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணே நம:.

# முகவுரை.

போத சொரூப புண்ணிய ரத்திர
பரம சற்குரு பாதபங் கயங்கள்
சிரமேற் கொள்வாஞ் சித்தா தற்கே.

நம்மனோர் தன்னை (ஆத்மாவை)ச் சிவமென்றுணர்தலாகிய தத்துவ ஞானத்தை அஞ்ஞானம் சந்தேகம் விபரீதமென்னுந் தடை மூன்று மில்லாது சற்குருவருளால் பெற்று, தானறிவாநந்த வடிவமாக விளங்கி, அதனால் சாதல் பிறத்தலென்னுஞ் சங்கட மில்லா திருத்தற் பொருட்டு, தானறிவாநந்த வடிவமாகவே விளங்கும் பரமேசுவரன் ஒவ்வொரு சிருஷ்டியி னாரம்பத்திலும் அநாதியாயுள்ள வேதத்தை அதன் கிரமந் தவறாது திருவாய் மலர்ந்தருளி வருகின்றா னென்பதும், அதன் பொருளைக் குருவடிவங் கொண்டுவந்துநன்மாணுக்கர்க்கு உபதேசஞ் செய்வதுவாயிலாக விளக்கியருளுகின்றானென்பதும் சாஸ்திர சம்மதமாம். பரமேசுவரன் குருவடிவங்கொண்டு வந்து வேதப் பொருளை நன்மாணுக்கர்க்கு உபதேச வாயிலாக விளக்கிய நூல்களுள் **கைவல்லிய நவநீத** மென்பது மொன்றாம். இது "ஆரணப் பொருளாம் வித்தி யாநந்தம் விளங்க வேதும், காரணங் குறைவி லாமற் கைவல்ய நவநீ தத்தைப், பூரண மாக்க வேண்டிப் பூர்வமா நன்னி லத்தில், நாரண குருந மக்கு நவின்றனர் கனவில் வந்தே" என்றிக் கைவல்லிய நவநீத நூலாசிரியர் திருவாய் மலர்ந்தருளி யிருப்பதனாலும் நன்கு விளங்குவதாம். இக் கைவல்லிய நவநீத மென்னும் ஞானசாஸ்திரம் "சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல், நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல், ஓசையுடைமை யாழமுடைத் தாதல், முறையின் வைப்பே யுலக மலையாமை, விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த, தாகுத னூலிற் கழகெனும் பத்தே" என்று நன்னூல் கூறியவாறு சுருங்கச் சொல்லல் முதலிய பத்தழகையும் பெற்று வேதப்பொருளை நன்கு விளக்குவதாக விருத்தலின், நன்மக்கள் யாவராலும் பொன்னேபோற் போற்றப்பட்டு வருகின்ற தென்பது மிகு பிரசித்தமாம். வேதாந்தசாஸ்திரங்களின் பொருளனைத்தையும் சுருக்கமாகவும் விளக்கமாகவும் பொருந்துமாற்றோடு (யுத்தியோடு) பொருந்துமாறு விளங்குமுதா

ணத்துடன் கரதலாமலகம் (உள்ளங்கை நெல்லிக்கனி) போல நன்மாணுக்கருணரக் கூறு மிந்நூல் தன்னைச் சிவசொரூபமாந் தேசிகர் வாயிலாகப் பக்தி சிரத்தையோடு படித்தொழுகுவார்க்குச் சர்வதுக்க நிவிர்த்தி - பரமாநந்தப் பிராப்தி வடிவமாயுள்ள மோட்சத்தைத் தருவதாக விருத்தலின், மோட்ச விருப்புடையார் யாவர்க்கும் நற்றுணையாக விருப்பதாம்.

நம்மனோர் பிறவிக் கடலைக் கடப்பதற்குத் தோணியாகவும், வேதாந்த சாஸ்திரங்களி னரிய பெரிய பொருள்களை யறிந் துணர்தற்குச் சிந்தாமணியாகவும், மன வொருமை யென்னும் விசிராந்தி பெறுதற்கு மாநச சரோவரமாகவும் (ஏரியாகவும்), ஆநந்தாநுபவத்தினது சங்கற்பத்தைப் பூர்த்தி செய்வதற்குக் கற்பகத்தருவாகவும், துக்க நிவிர்த்தி பெறுதற்குக் காமதேநுவாகவும், தன்னை மறைத்த பந்தமென்னு மஞ்ஞான வடிவ யானையைக் கொல்வதற்குச் சிங்கமாகவுமுள்ள இந்நூல் தமிழ்ப் பாஷையி லிருப்பது தமிழ் மக்கள் செய்த பெரும் புண்ணியத்தின் பயனே யாகும். இந்நூலின் முறையதியற்புதமா யிருப்பதால், இது தெலுங்கு முதலிய பாஷையிலும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது. ஐரோப்பாக் கண்டத்துள்ள ஜெர்மன் தேசத்திலே ஜெர்மன் பாஷையிலும் இது மொழிபெயர்க்கப்பட்டிருப்பதை யுணர்வார்க்கு இந்நூலி னருமை பெருமை மிகச் செவ்விதாக விளங்குவனவாம்.

“படர்ந்தவே தாந்த மென்னும் பாற்கடன் மொண்டு முன்னூற், குடங்களி னிறைத்து வைத்தார் குரவர்க ளெல்லாங் காய்ச்சிக், கடைந்தெடுத் தளித்தே னிந்தக் கைவல்ய நவநீ தத்தை, யடைந்தவர் விடய மண்டின் றலைவரோ பசியி லாரே” என்றிந் நூலாசிரியர் பாயிரச் செய்யுளில் திருவாய்மலர்ந்தருளியுள்ளா ராயினும், பெரும்பான்மையும் இந்நூலுக்கு முதனூலாகக் கொண்டது ஸ்ரீ - வித்தியாரண்யசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியுள்ள பஞ்சதசியே யாம். இது பஞ்சதசியையும் இக்கைவல்லிய நவநீதத்தையு மூன்றிப் படித்து நோக்குவார்க்குக் குன்றிடை யிட்ட விளக்குப் போல மிக நன்றாக விளங்குவதாம்.

தமிழ்ப் பாஷையில் தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனா ரருளிச்செய்துள்ள தமிழ்மறை யென்னுந் திருக்குறள் எங்கும் மிகப் பிரசித்தி பெற்று விளங்குவதுபோல விளங்கு மிக் கைவல்லிய நவநீத நூலின் ஆசிரியரது சரித்திரம் இதுகாறு மெவர்க்கும் செவ்வையாகத் தெரியா திருக்கின்றது. இந்நூலை யருளிச்செய்த ஸ்ரீ - தாண்டவராய சுவாமிகள் நன்னிலமென்னும் மதுவனத்தி லெழுந்தருளி யிருந்த நாராயண தேசிகரது சிஷ்யரென்பது மாத்திரம் இந் நூலால் தெரிவதன்றி வேறொன்றும் தெரியாமையின், இவரது சரித்திர மெழுதுவது கூடாதாயிற்று; ஆயினும், ஸ்ரீ தாயுமானவ சுவாமிகள், “கல்லாத பேர்களே நல்லவர்க ளல்லவர்கள்” என்னுஞ்



செய்யுளில் (“கறுவியஞ் ஞானத்தைக், கண்ட வக்கணங் கொல்வது ஞானமே கருமமன் றறிவாயே” என்று கைவல்லிய நவநீதங் கூறுவதை மேற்கொண்டு) “கைவல்ய ஞான நீதி நல்லோ ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று நாட்டுவேன்” என்று திருவாய்மலர்ந்தருளி யிருத்தலாலே இவரது காலம் தாயுமானவரது காலத்திற்கு முற்பட்டதா மென்பது மாத்திரந் தெரிகின்றது. தாயுமானவர் இற்றைக்கு 256 வருஷத்திற்கு முன்னிருந்து மகாசமாதி பெற்றா ரென்பது அவரது சமாதிக் கட்டடச் சாசனத்தால் தெரியவருகின்றமையின், இவரது காலமும் இற்றைக்கு முன் ஏறக்குறைய ஐந்நூறு வருஷ காலமாகவாவ திருத்தல் வேண்டும். இதனால் இற்றைக்கு ஐந்நூறு வருஷத்திற்கு முன் ஸ்ரீ - தாண்டவராய சுவாமிக ளிருந்து, நன்னிலம் ஸ்ரீ - நாராயண தேசிகரது கருணையால் இக் கைவல்லிய நவநீதத்தை யருளிச் செய்தன ரென்பது உணரற் பாலதாம்; இற்றைக்கு அறுநூறு வருஷங்களுக்கு முன்னிருந்து நிலவி வருகின்ற நூல்களில் கைவல்லிய நவநீத மென்னும் நூலைப் பற்றிய பிரஸ்தாபம் காணப்படாமையு மிங் குணர்தற் பாலதாம். கைவல்லிய நவநீத நூலாசிரியர் நாகபட்டினத்திலே வேளாள மரபிலே பிறந்து வளர்ந்து சிற்றின்பவெண்ணத்தை யொழித்து நடராஜமூர்த்தி யுபாசனைசெய்து வந்து, அம்மூர்த்தியினது பாதச் சிலம்பொலி கேட்கும் பாக்கியத்தைப் பெற்றனர்; அதனால், நன்னிலம் - நாராயண தேசிகரது கருணையைப் பெற்றுக் கைவல்லிய நவநீத மென்னும் ஞான சாஸ்திரத்தை யுலகத்தா ருய்யுமாறு திருவாய்மலர்ந்தருளின ரென்பது கர்ண பரம்பரையாய்க் கேட்கப்பட்டு வருகின்றது. ஸ்ரீ தாண்டவராய சுவாமிகளைச் சிலர் ஸ்மார்த்தப்பிராமண மரபிற் பிறந்தவரென்றும், சிலர் சிவாலயத்திற் பூசைசெய்யும் குருக்கள் மரபிற் பிறந்தவ ரென்றும் கூறுகின்றனர். தத்துவ ஞானிகள் தம்முச்சி மேற்கொண்டு வியந்து போற்றுமாறு ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய கைவல்லிய நவநீத மென்னும் ஞானநூல் பல்லாயிரக் கணக்காக யாண்டும் பரவியிருப்பினும், மந்தஜிஞ்ஞாசுக்கள் தன்னைப் படித்து எளிதிற் பொருளுணர்தற் கருமையாக விருத்தலின், அக் குறை நீங்குதற் பொருட்டு, அதனை வினாவிடை வடிவமாக வசன நடையில் விரிவுரையுட னெழுதி யச்சிட்டு வெளியிடலானேன். கைவல்லிய நவநீதத்திற்குப் பிரசித்தமாகப் பிறையாறு-ஸ்ரீ-அருணாசல சுவாமிக ளுரை, ஈசூர்-ஸ்ரீ-சச்சிதாநந்த சுவாமிக ளுரை, சிதம்பரம்-ஸ்ரீ-பொன்னம்பல சுவாமிக ளுரை யென மூன் றுரைக ளிருக்கின்றன. அவை வேதாந்த சாஸ்திரங்களைச் செவ்வையாகப் படித்தவர்க் கன்றி மற்றவர்க்குப் பெரிதும் பயன் றருவனவன்றா யிருத்தலே யான் இவ்வசன வினாவிடையை விரிவுரையுடன் எழுதினமைக்கு முக்கிய காரணமாம். இவ்வசன வினாவிடையை விரிவுரையோடு யானெழுதுவதற்கு எனக் குதவியா

யிருந்த சாஸ்திரங்கள் பஞ்சதசி, விருத்திப்பிரபாகரம், விசாரசாகரம், தத்துவாநுசந்தாநம், வேதாந்தபரிபாஷை, சித்தாந்தபிந்து, பாலபோதம், விசாரசந்திரோதயம், வேதாந்த பரிச்சேதம், ஞானவாசிஷ்டம், பெருந்திரட்டு முதலியனவாம்.

யான் இவ்வசன வினாவிடையை விரிவுரையுடன் இற்றைக்குப் பன்னிரண்டு வருஷத்திற்குமுன் னெழுதித் தத்துவவிளக்கப் படலத்தைச் சென்னை - கோமளேசுவரன்பேட்டை - சச்சிதானந்த அச்சியந்திர சாலையில் அச்சிட்டு முடித்து, சந்தேகந்தெளிதற் படலத்தை யச்சிடத் தொடங்கினேன்; தொடங்கியபோது ஐரோப்பிய மகா யுத்த மாரம்பமாய் விட்டமையால், காகித விலை முதலியன ஒன்றற்கு மூன்று நான்கு பங்காய் விட்டன, அதனால், சந்தேகந்தெளிதற் படலத்தை யச்சிடுவது எனக்கு முடியாததாய் விட்டது. இற்றைக்கு நான்கு வருஷத்திற்கு முன் பந்த நல்லூரென்னும் பந்தணை நல்லூர் மிராசுதார் ஸ்ரீமத் - S. சட்டையப்பப் பிள்ளை யவர்கள் தாங்கொண்டுள்ள வேதாந்த சாஸ்திரங்களின்மீதுள்ள அபிமானத்தால் சந்தேகந்தெளிதற் படலத்தை யச்சிட்டு முடித்து, கைவல்லிய நவநீத வினாவிடையை வெளியாக்க வேண்டுமென்றெனக்கு வற்புறுத்திக் கூறி, பொருளுதவியுஞ் செய்தனர்; அவர் செய்த பொருளுதவியாலும், சிதம்பரந்தாலுக்கா-ரெட்டியூர் - மிராசுதார் ஸ்ரீமத் - V. S. விசுவநாத ரெட்டியாரவர்கள் செய்த பொருளுதவியாலும், சென்னை - சிந்தாதிரிப்பேட்டை - கன்ட்ராக்டர் ஸ்ரீமத்-டி. துரைசாமி நாயகரவர்கள் செய்த பொருளுதவியாலும் சந்தேகந்தெளிதற் படலத்தை யச்சிட்டு முடித்தேன். வேதாந்த சாஸ்திரத்தில் பேரபிமானமும் நற்குண நற்செய்கையுமுடைய இக்கனவான்கள் இந்நூல் விஷயமாகச் செய்த வுதவி யெஞ்ஞான்றும் கருதுதற் குரியதாம்.

சென்னை, கோமளேசுவரன் பேட்டை ஸ்ரீ சாது இரத்தின வேதாந்த சபையினருள் ஒருவரும், எனதாப்தருமாகிய ஸ்ரீமத் ம. சண்முக முதலியாரவர்கள் இந்நூலை யச்சிடுங்காலத்தி லென்னுடனிருந்து, எனக்குச் செய்த உதவி யளவிறந்ததாம். அவ்வுதவி ஒருபோதும் மறக்கற் பாலதன்றாம்.

இக் கைவல்லிய நவநீத வசன வினா விடையை விரிவுரையுட னெழுதுவதற் குரிய விவேக மெனக் குண்டாதற்குக் காரண பூதரா யிருந்த ஸ்ரீ சற்குரு - மகாத்மா - சை. இரத்தின செட்டியாரவர்களது பெருங் கருணை யென்னுள்ளத்தில் எக்காலத்திலும் நிலைபெறுதற்குரியதாம்.

இந்நூலைச் செப்பமாக அச்சிட்டுத் தந்த சென்னை - கோமளேசுவரன் பேட்டை, சச்சிதானந்த அச்சியந்திரசாலைத் தலைவர் நன்றியும், சென்னை, திருவல்லிக்கேணி, Noble Press தலைவர் நன்றியும் மறக்கற்பாலன வன்றாம்.



இந்நூலின்கண் பிரமப் பிரமாதங்களால் தவறு நேரிட்டிருத்தல் கூடும்; அதனை வேதாந்த வித்வத் சிரோமணிகள் தெரிவிப்பாராயின், அது மறுபதிப்புப் புஸ்தகத்தைச் சுத்தமாக அச்சிடுவதற்குப் பேருபகாரமாம்.

இக் கைவல்லியநவநீத வசன வினா விடையை விரிவுரையுட னெழுதுமாறு எனது சித்தத்தின்கண் குருவடிவமாக வெழுந்தருளியிருந்து, என்னையேவிவந்த ஸ்ரீ நடராஜப்பிரபு இஃதெஞ்ஞான்றும் நிலைபெறுமாறுங் கருணை புரிவாராக.

இதிற் பிழை யுளதாயின், உலகம் பொறுக்க.

கோ. வடிவேலு செட்டியார்.
சென்னை, 29—12—22.

---

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு திருவடி வாழ்க.

---

PRINTED AT THE NOBLE PRESS, MADRAS, S. E.

ஓம்

தத்சத்

பாப்பிரஹ்மணே நம:.

இந்நூலாசிரியர் மாணுக்கருள் ஒருவராகிய

## ஸ்ரீமத் - ச. கந்தசாமி முதலியாரவர்கள்

இயற்றிய

# சிறப்புப்பாயிரம்.

---

நிலைமண்டில வாசிரியப்பா.

மலர்கதிர் முன்னர் மயக்கு மிருள்போல்
மலமுதன் மூன்று மயக்க மிரியவும்
மதபே தங்களான் மயங்குத லின்றி
விதமுறு மவற்றி னொற்றுமை வியக்கவும்
வேத முடியின் விளங்கிய பொருளை
நாதன் சங்கா னாகி நவின்றனன்
அதனல்
வடமொழி யானூல் வந்தன பலவே
தென்மொழி யானூல் தெரித்தன சிலவே
அவற்றுள்
கைவல்லிய நவநீ தப்பெயர் நூலின்
மையறு வளமையும் மாண்பொருள் விளக்கமும்
எய்தலும் உண்டோ எல்லா நூற்கும்
உய்வகை காணுரை ஒன்றோ பலவே
அவைதாம்
இலக்கிய விலக்கணப் பன்னூ லாய்விற்
புலக்க ணுய்த்திலார் புரியுமா றிலவே
அதனல்
சின்னூல் தெரிந்த சிற்றறி வினரும்
பன்னூ லாய்ந்த பகர்கேள் வியரும்
நன்னூ லாமிது நாமறி பாற்றே
தொன்னூற் கருத்தெலாம் பண்ணுமிந் நூலே



என்றென் றவாவ ரியம்பிக் கைக்கொள
வசன நடையில் வினுவிடை யாக
விரிவுரை யிடந்தொறும் வேண்டுவ விளக்கிக்
கைவல்லிய நவநீத வசன வினுவிடைப்
பெயரி னருளினன் பெரியோ னியாரெனி
னுயரிய புகழ்நிறை யுத்தம னுரிமையிற்
பல்மா ணுக்கர் பரவும் பான்மையன்
இல்லற ஞானி யிலக்கண விலக்கிய
வேதாந்த தர்க்க போதகா சிரியன்
வெளிக்கண் ணிருந்து முளக்கண் குருடாய்ப்
பிறந்தும் பிறவாப் பெற்றிய ராகிப்
பழிப்பினை யடையும் பல்லோர்க் கிரங்கி
அரந்தை தீர்த்தவ ரகவிரு ளோட்டி
நயம்பல விளைக்கும் ஞான பாநு
வேதாந்தப் பிரசாரக வித்தகன் குறளுடன்
நானா சீவ வாதநற் கட்டளை
தர்க்க பரிபாஷை தமக்குரை கண்டோன்
பெருந்திரட் டாதிப் பெருநூல் பலவும்
அருமையாச் சோதித் தச்சிட் டருளியோன்
சித்தாந்த பிந்தொடு சிறந்த சாத்திரங்கள்
ஆரியந் தேர்ந்தநல் லறிஞர்தந் துணையால்
தமிழிற் றந்த தகவோன் கோமள
மாநக ருறையு மகோப காரி
பெரும்புகழ் வடிவேற் பெயர்பெறு மகானே.

---

பண்டிதர்கள் அபிப்பிராயம்.

வித்வான் - வல்லநகர்

## ஸ்ரீமத் - வைத்தியலிங்கம் பிள்ளையவர்களது

அபிப்பிராயம்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பேதநிலை யுறுசமய வாதிகளும் போதநிலை
பெரிது மேவித்
தீதறத்தம் முடிக்கணியக் கைவல்ய நவநீதத்
தெய்வ நூலைப்
பூதலத்திற் கல்லாரும் பொருணலந்தேர்ந் தினிதுய்யப்
புலத்தி னுய்ந்து
காதலுடன் வினுவிடையாக் கத்தியத்தின் வரைந்தளித்தான்
கவின மாதோ.

அத்தகையோன் யாரென்னிற் கோமளமா நகருடையர்
னகத்தி யன்போல்
வித்தையுளான் வசியர்குல விளக்கனையான் றன்னிலையின்
விளங்கி வாழ்வான்
புத்தமுத மெனமொழிவான் புல்லியவெற் கினியதமிழ்
புகன்றான் மாறில்
உத்தமனல் லருள்வடிவேற் சிரேட்டியெனு மபிதானத்
தொருமே லோனே.

---

வித்வான் - கீழ்நகர்

### ஸ்ரீமத் - வேணுகோபால நாயகரவர்களது

அபிப்பிராயம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பிறந்திறந் துழலுந் துயரொழிந் தறிவாம்
பெருநெறி யெய்தியே வாழுந்
திறந்தெரி கைவல் லியநவ நீதத்
தெய்வநூ வினைவினா விடையாச்
சிறந்தநற் றமிழின் வரைந்தினி தளித்தான்
சிறியனேற் கினியதே சிகனும்
அறந்திகழ் வடிவேற் சிரேட்டிகோ மளம்வாழ்
அண்ணனற் புண்ணியன் மாதோ.

---

சென்னை - சிந்தாதிரிப்பேட்டை,

### ஸ்ரீமத் கா. பொனுசாமி நாடார்

அவர்களியற்றிய

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கோமள புரம்வாழ் கோவடி வேலாங் குருமணி கோதெலா நீக்கி
நாமகள் வியக்க நயம்பல விளங்க நம்மனோ ரின்புரு வாக
வாமமாக் கைவல் லியநவ நீத வசனவி னாவிடை விரிவா
நேமமா வியற்றி யருளினா னதன்சீர் நிலவுல கினும்பெரி தாமால்.



ஓம்
தத்சத்
பரப்பிரஹ்மணே நமஃ.

# கைவல்லிய
# நவநீதவசனம்,
## வினாவிடை.



## பாயிரம்.

இஷ்டதேய்வ நமஸ்கார வடிவ * மங்கலம்.

பொன்னில மாத ராசை பொருந்தினர் பொருந்தா ருள்ளந்
தன்னிலந் தரத்திற் சீவ சாட்சிமாத் திரமாய் நிற்கு
மென்னிலங் களினு மிக்க வெழுநில மவற்றின் மேலா
நன்னில மருவு மேக நாயகன் பதங்கள் போற்றி.

(பொழிப்புரை). பொன், மண், பெண் என்னும் மூன்றனிடத்தும் ஆசையுடைய அஞ்ஞானிகள் அஃதின்றிய ஞானிகள் என்னு மிருவரது அந்தக்கரணங்களில் ஆகாயம்போன்று ஜீவசாட்சிமாத்திரமாய் நிற்கின்ற (சாங்கியர் முதலியோர் கூறும்) ஞானபூமிக ளெல்லாவற்றிலுஞ் சிறந்த சுபேச்சை முதலிய சப்த பூமிகளுள் மேலான சிறப்புடைய துரியாதீத பூமியில் விளங்காநின்ற ஏக நாயகன் திருவடிகளை வணங்குவாம்.

---

* எடுத்துக் கொண்டநூ லிடையூறின்றி யினிது முடிதற்பொருட்டும் படிப்போர்க்குத் தம்மிடத்தில் நாஸ்திகப்பிராந்தி நீங்குதற்பொருட்டும் நூலாசிரியரால் நூன்முகத்திற் செய்யப்படும் மங்கலம் வஸ்துநிர்த்தேசம் (பொருளியல் புரைத்தல்), வணக்கம் (நமஸ்காரம்), வாழ்த்து (ஆசீர்வாதம்) என மூவகைத்தாம்.

(i) நமஸ்காரமுதலியன வின்றிக் கேவலம் பரமேசுவர சங்கீர்த்தனம் (ஸ்துதி) வஸ்து நிர்த்தேச வடிவ மங்கலமாம்.

(ii) நமஸ்காரத்திற்குத் தகுதியான பரமேசுவரன், குருமுதலியவர்களிடத்து நமஸ்காரஞ் செய்பவன் தன திழி தகைமையை யுணர்த்துதற்பொருட்டு மனோ வாக்குக் காயங்களால் செய்யப்படும் வியாபார விசேடம் நமஸ்கார வடிவ மங்கலமாம்.

(iii) நூலாசிரியர் தாம் விரும்பிய பொருளையும் தமது சீடர் விரும்பிய பொருளையு மடைதற் பொருட்டுப் பரமேசுவரனைப் பிரார்த்தித்தல் ஆசீர்வாத வடிவ மங்கலமாம்.

இவற்றி னவாந்தரபேத மிருபத்தேழாம்.

நிலமென்ற திண் டதற்குரிய மக்களை. எந்நிலமென்ற திண் டவத்தையை. ஏகநாயக னென்றது மும்மூர்த்தி வடிவான ஈசுவரனை. பதங்கள் போற்றி யென்றது இந்நூலின் விடயமான ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைக் குறிப்பித்து நின்றது; பதங்கள் தத்பதமும் துவம்பதமும், போற்றி அசி பதமுமாம்.

‘ எந்நிலங்களினு................பதங்கள் போற்றி’ என்பதற்கு மற்றோருரை வருமாறு:—எல்லாப் புண்ணிய க்ஷேத்திரங்களிலும் சிறந்த அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை யென்னுஞ் சப்தபுரியினும் மேலான நன்னிலமென்னும் திருப்பதியி லெழுந்தருளிய ஏக நாயகனாய் விளங்குகின்ற நாராயண தேசிகரது திருவடிகளை வணங்குவாம் என்பது. 1

ஆன்மசொரூப நமஸ்கார வடிவ மங்கலம்.

ஈன்றளித் தழிக்குஞ் செய்கைக் கேதுவா மயனாய் மாலா
யான்றவீ சனுமாய்த் தானே யநந்தமூர்த் தியுமாய் நிற்கும்
மூன்றமுத் தனுமா யின்பப் புணரியா தவனாய் நாளுந்
தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே.

(பொ-ரை). (மாயையின் இராசத சத்துவ தாமத குணங்களால் உலகத்தைப்) படைத்துக் காத் தழிக்கும் முத்தொழிற்குங் காரணமாயுள்ள பிரமனாயும், விஷ்ணுவாயும், வியாபகனான உருத்திரனாயும், (இன்னும்) அஷ்டமூர்த்தியாயும் (தனது நிலையிற் பிறழாது) நிற்கும் பரிபூரணமான நித்திய முத்தனுமாயும் (புத்தியின் சத்துவ குணத்தால் வைராக்கிய மயமான சாந்தவிருத்தியில் விளங்கும்) ஆனந்தக் கடலாயும், (அஞ்ஞான விருளைக் கெடுக்கும்) ஞான சூரியனாயும், சதாகாலமுந் தானே விளங்குகின்ற நிர்மலமான ஆன்மசொரூபத்தை வணங்குகின்றேன்.

அஷ்டமூர்த்தம்:—பஞ்சபூதம், இருசுடர் (சூரிய சந்திரர்), சிவன். 2

குருவின் நமஸ்கார வடிவ மங்கலம்.

எவருடை யருளால் யானே யெங்குமாம் பிரம மென்பால்
கவருடைப் புவன மெல்லாங் கற்பித மென்ற றிந்து
சுவரிடை வெளிபோல் யானென் சொரூபசு பாவ மானே
னவருடைப் பதும பாத மநுதினம் பணிகின் றேனே.

(பொ-ரை). எவரது கிருபையினால் யானே சுவரின்கணுள்ள ஆகாசம்போன்று சர்வவியாபகமான பிரஹ்மம், (பிரஹ்ம சொரூபமாகிய) என்னிடத்துப் பல கூறுபாடுடைய பிரபஞ்சமியாவும் (கயிற்றரவுபோல்) மித்தையென (ஐயந்திரி பின்றி) யுணர்ந்து † சுபாவமாக யான் எனது நிசசொரூபமானேனோ அந்தக் கிருபாமூர்த்தியினது தாமரை மலர்போன்ற திருவடிகளை நாடோறும் வணங்குகின்றேன்.



‘யானே யெங்குமாம் பிரமம் என்பதும்’, ‘ யானென் சொரூபசுபாவமானேன்’ என்பதும் அகம்பிரஹ்மாஸ்மி மகாவாக்கியத்தைக் குறிப்பித்து நின்றன. திட அபரோக்ஷ ஞானம் வந்தபிறகும் ஈசனாதியரை வணங்குதல் செய்ந்நன்றி மறத்தலென்னுங் குற்ற நீங்குதற்பொருட்டாம். 3

குருசொரூப நமஸ்கார வடிவ மங்கலம்.

என்னுடை மனது புத்தி யிந்திய சரீர மெல்லா
மென்னுடை யறிவி னாலே யிரவிமுன் னிமமே யாக்கி
யென்னுடை நீயு நானு மேகமென் றைக்கியஞ் செய்ய
வென்னுடைக் குருவாய்த் தோன்று மீசனை யிறைஞ்சி னேனே.

(பொ-ரை). எனது (சம்சயவடிவ) மனம், (நிச்சயவடிவ) புத்தி, ஞானேந்திரிய பஞ்சகம், கன்மேந்திரிய பஞ்சகம், (பிராணாதிபஞ்சகம்) என்னும் சூக்கும சரீரம், இதற்கிடமான ஸ்தூலசரீரம், இவ்விரண்டிற்கும் ஏதுவான அஞ்ஞானவடிவ (காரண) சரீரம் இவை பற்றி நிகழும் சாக்கிராதி யவஸ்தாத்திரய முதலிய வனைத்தையும் எனதெதார்த்த ஞானத்தினாலே சூரியனைக்கண்ட பனிபோன்று அபாவமேயாக்கித் (துவம்பதலட்சியார்த்தமாகிய) நீயும் (தத்பத லட்சியார்த்தமாகிய) நானும் (கடாகாய மகாகாயம் போன்று) ஒன்றேயென்று என்னுடைய ஐக்கியத்தை (எனக்குபதேசித்தருள) என்னுடைய ‡ குருமூர்த்தமா யெழுந்தருளிய பரமேசுவரனை வணங்கினேன். 4

---

† ‘ சுபாவமாக ’ என்பதால் காரண காரியபாவம், குண குணிபாவம், விகார விகாரிபாவம், அம்சாம்சிபாவம், பிம்பப் பிரதிபிம்ப பாவம், உபாசக வுபாசியபாவம், பிரகாசக பிரகாசிய பாவம், ஆதார ஆதேயபாவம், அதிஷ்டான அத்தியஸ்தபாவ முதலியன வில்லையென்பது பெறப்படுமொ றறிக.

‡ குருவென்னும் பதத்தில் கு அஞ்ஞானத்தையும் ரு ஞானத்தையுமுணர்த்துவனவாம். ஆகவே, அஞ்ஞானத்தை ஞானத்தாற் கெடுப்பவர் குருவென்பதாயிற்று. அத்வயதாரகோபநிஷத் “குருவே பரப்பிரஹ்மம், குருவே யடையத்தக்க மேலானகதி. குருவென்னும் பதத்தில் கு என்னுமெழுத்து அந்தகாரம் (அவிச்சை) என்னு மருத்தமுடையது. ரு என்னுமெழுத்து அதையொழிப்பதென்னு மருத்தமுடையது. அஞ்ஞானமாகிய விருட்டை யொழிப்பதாற் குருவென்று கூறப்படுகின்றார்” என்று கூறுமாறறிக.

* அதிகாரி, சம்பந்தம், விஷயம், பயன் என்னும் † அநுபந்த சதுஷ்டயத்துள் குருவணக்க மூலமாக இந்நூற்கு ‡ அதிகாரியும் இந்நூலின் ¶ விஷயமும் கூறல்.

அந்தமு நடுவு மின்றி யாதியு மின்றி வான்போல்
சந்தத மொளிரு ஞான சற்குரு பாதம் போற்றிப்
பந்தமும் வீடுங் காட்டப் பரந்நூல் பார்க்க மாட்டா
மந்தரு முணரு மாறு வத்துதத் துவஞ்சொல் வேனே.

(போ-ரை). ஆதிமத்தியாந்த ரகிதமாய் (அசங்கத்தன்மை முதலிய தர்மங்களால்) ஆகாயம்போன்று எக்காலத்தும் விளங்காநின்ற ஞானவடிவ சற்குருவினது திருவடிகளை வணங்கி (அவரது கிருபையினால்) பந்தவிலக்கணமும் மோட்ச விலக்கணமும் (சிஞ்ஞாசுகட்குத்)தெரிவித்தற்பொருட்டு (வியாசர்முதலிய பூர்வாசாரியர்களா லருளிச் செய்யப்பட்டு) விரிந்துள்ள வேதாந்த சாஸ்திரங்களை விசாரித் துணரும் வலியின்றிய மந்தாதி காரிகளும் (அவற்றை) யெளிதி லறியும்படி வஸ்துவி னுண்மையைக் கூறுகின்றேன்.

முதலிய வென்றதனால் சூக்குமத் தன்மை, வியாபகத் தன்மை, நிஷ்கிரியத்தன்மை முதலியனவுங் கொள்க. 5

இந்நூல் கூறுவதற் கேதுவும் இதனது § சம்பந்தமும் பயனுங் கூறல்.

படர்ந்தவே தாந்த மென்னும் பாற்கடன் மொண்டு முன்னாற்
குடங்களி னிறைத்து வைத்தார் குரவர்க ளெல்லாங் காய்ச்சிக்
கடைந்தெடுத் தளித்தே னிந்தக் கைவல்ய நவநீ தத்தை
யடைந்தவர் விடய மண்டின் றலைவரோ பசியி லாரே.

---

* "விடயமது சிவசீவர் தமதேகத் துவமாம்
விமலனொடு நூற்கறையப் படலறையுந் தன்மை,
யடைதலுறு சம்பந்தம் பயன்றுயரொ லாநீத்
தானந்த பதம்பெறுதல் சாதனநான்கினையு, முடையவனே யதிகாரி"
என்று வேதாந்த சூளாமணி கூறுவதிங் கறியத்தக்கதாம்.

† தன்னை யறிந்தபின்னர் முமுட்சுவைக் கிரந்தத்தோடு பொருத்துவது அனுபந்தமெனப்படும். கட்டில் நான்கு கால்களின்றி நில்லாமை போன்று அனுபந்த சதுஷ்டயமின்றி யெந்நூலும் நிலைபெறுமையின் அவற்றை யுணர்ந்தவர்க்கே நூலிற் பிரவிருத்தி யுண்டாமென்க.

‡ அதிகாரி - மந்தர். ¶ விஷயம் - வத்து தத்துவம்.

§ எடுத்தளித்தல் சம்பந்தமும்; அலையாமை பயனுமாம்.



(போ - ரை). (வியாசர்முதலிய) பரமாசாரியர்கள் யாவரும் மிகவிரிந்துள்ள வேதாந்த மென்னுந் திருப்பாற் கடலின்கண் (சூத்திர பாஷியாதி வடிவ) தலைமை வாய்ந்த சாஸ்திரங்களென்னுங்குடங்களில்மொண்டு (வேதாந்த வடிவபாலை) நிறைத்து வைத்தார்கள்; (அங்ஙன நிறைத்துவைத்த வப்பாலினை யெல்லாம் சற்குரு சந்நிதானத்திற் சிரவணமாகிய தீயிற்) காய்ச்சி (மநநமாகியமத்தினாற்) கடைந்து (அனுபூதியளவாக) வெடுத்து இக்கைவல்லியநவநீத (மென்னும் ஞானசாஸ்திர) த்தைத் (திரட்டிக்) கொடுத்தேன்; (இதனைத் தமதுசுவானுபூதியளவாகப்)பெற்றவர் நித்திய திருப்தராய் விளங்குதலின் சப்தாதி விஷயவடிவ பிருதிவியை யுண்டு (அவ்வாசனவசத்தினாற் பிறப்பிறப்பினை யடைந்து) வருந்துவரோ (வருந்தமாட்டார்கள்).

வேதாந்தம் - உபநிஷத்து. 6

இந்நூலின் படலவகை கூறல்.

முத்தனை வேங்க டேச முகுந்தனை யெனையாட் கொண்ட
கத்தனை வணங்கிச் சொல்லுங் கைவல்ய நவநீ தத்தைத்
தத்துவ விளக்க மென்றுஞ் சந்தேகந் தெளித லென்றும்
வைத்திரு படல மாக வகுத்துரை செய்கின் றேனே.

(போ - ரை). (அவித்தையினின்று) நீங்கினவனும் திருவேங்கடத்திற்கிறைவனாகிய முகுந்தனும் என்னை யடிமைகொண்டருளிய கர்த்தனுமாகிய நாராயண குருவினது (திருவடிகளைத் திரிகரணசுத்தியாக) வணங்கித் (தன்மயமாகுமாறு) கூறுங் கைவல்லிய நவநீத மென்னும் ஞான சாஸ்திரத்தினைத் தத்துவவிளக்கப் படலமென்றும் சந்தேகந் தெளிதற் படலமென்றும் இருதிறத்ததாகப் பிரித்து (சிஞ்ஞாசுகட்கு ஆத்மவிசார மெளிதிலுண்டாமாறு குருசிஷ்ய சம்வாதமாக)வைத்துக் கூறுகின்றேன். 7

முகுந்தன்—முத்தியையும் புத்தியையுந் தருபவன்.

ஜீவப்பிரஹ்மங்களின் ஐக்கிய ஞானத்தை விளக்கும் பகுதி தத்துவ விளக்கப் படலமென்றும், அதிற்றோன்றும் ஐயத்தை நிவிர்த்திக்கும் பகுதி சந்தேகந் தெளிதற் படலமென்றும் கூறப்பட்டன வென்க.

பாயிரம் முற்றிற்று.



ஓம்
தத்சத்
பரப்பிரஹ்மணேநம:

# ¶ கைவல்லியநவநீத வசனம்,

## வினு விடை.

## முதலாவது
## † தத்துவவிளக்கப்படலம்.

### இந்நூல் கேட்டற்குரிய அதிகாரியின் சாதன சதுஷ்டய விலக்கணங் கூறல்.

நித்திய வநித்தி யங்க ணிண்ணயந் தெரிவி வேக
மத்திய விகப ரங்கள் வருபோகங் களினி ராசை
சத்திய முரைக்க வேணடுஞ் சமாதியேன் ருறு கூட்ட
முத்தியை விரும்பு மிச்சை மொழிவர்சா தனமிந் நான்கே. 1

(1) § நித்தியவநித்திய வஸ்துக்களின் நிச்சயத்தை யறியும் விவேகம் * நித்தியாநித்திய வஸ்து விவேகமாம்; (அஃதாவது ஆத்மா நித்தியம் தேகாதிப் பிரபஞ்சம் அநித்தியமென வேறுபிரித்துணர்தலாம்).

(2) சிருஷ்டிக்குமுன்னும் சங்காரத்திற்குப் பின்னுமிராது சிருஷ்டிக்குப் பின்னும் சங்காரத்திற்கு முன்னுமிருப்பதான இகலோக பரலோகங்களில் கரும ஜந்நியமாய் வருகின்ற போக (சுக)ங்களில் ஆசையின்மை

¶ கைவல்லிய நவநீத மென்பதன்பொருள் மோட்சத்தைத் தத்துவ ஞான வாயிலாகத் தருவதில் வெண்ணெய்போல்வ தென்பதாம்.

† தத்துவவிளக்கப்படலம் என்பதன் பொருள் தத்துவ ஞானத்தை விளக்கும் நூற்கூறுபாடு என்பதாம். தத்துவம் - உண்மை ; அஃதாவது ஜீவப்பிரஹ்ம ஐக்கியம்.

§ அழிவுபாட் டபாவத்திற் கெதிர்மறை யாகாதது நித்தியமாம்; அஃதாவது (என்றும்) நாசமில்லா திருப்பதாம். அழிவுபாட்டபாவத்திற் கெதிர்மறையாவது அநித்தியமாம்; அஃதாவது (ஒருகாலத்தில்) நாசத்தை யடைவதாம்.

* இவ்விவேக முண்டாயபோது சாத்திரத்தினாலும் யுக்தியினாலும் ஜகத்து மித்தையெனப் பரோட்சமாக வறியப்படுகின்றதாதலின் அதன் அபரோட்ச ஞானமுண்டாதற்பொருட்டு இகாமுத்திரார்த்த பலபோகவிராகமுதலியவுத்தரசாதனங்களோடுகூடியஞானம் வேண்டப்படுகின்றதென்க.



இகாமுத்திரார்த்த பலபோக விராகமாம்; (அஃதாவது இவ்வுலகத்திலும் சுவர்க்காதி யுலகத்திலுமுள்ள போகங்களில் அநித்ததுக்காதிதோஷ தரிசனத்தால் காக்கை மலம்போல அருவருப்புற்று ஆசையில்லா திருத்தலாம்).

(3) சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை யென்பன சமாதிசட்க சம்பத்தியாம்.

(4) முத்தியை விரும்பும் இச்சை ‡ முமுட்சுத்துவமாம்; (அஃதாவது சர்வதுக்க நிவிர்த்தி பரமாநந்தப் பிராப்தி வடிவ மோக்ஷத்தில் தீவிரமான இச்சையாம்).

இந்நான்கும் உண்மையாகக் கூறத்தக்க அதிகாரிக்குரிய சாதனங்களாம்.

ஈண்டுக்கூறிய சாதனநான்கனுள் முன்முன்னுள்ளது பின்பின்னுள்ளதற் கேதுவாம்.

வினு:—சமமுதலிய ஆறும் ஒரு சாதனமாத லெங்ஙனம்?

விடை:—இவ்வாறும் ஒருமாலையில் கோக்கப்பட்ட மணிபோலப் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) சகாயமாயிருத்தலின் ஒரு சாதனமாகக் கருதப்பட்டனவென்க.

வினு:—சமமுதலியவற்றி னிலக்கணம் யாது?

சமந்தமம் விடல்ச கித்தல் சமாதானஞ் சிரத்தை யாருஞ்
சமமகக் கரண தண்டந் தமம்புறக் கரண தண்ட
மமர்தரு கருமம் பற்று தறுத்தலே விடலென் றுகு
மமர்செயுங் காம மாதி வரினடக் குதல்ச கித்தல். 2

விடை:—(1) அந்தக்கரணத்தை (லௌகிக) விஷயங்களிற் செல்லாவாறு தடுத்தல் சமமாம்.

(2) சுரோத்திராதி யிந்திரியங்களைச் சத்தாதி விஷயங்களிற் செல்லாவாறு தடுத்தல் தமமாம்.

(3) ஸ்திரி, தனம், ஜாதி, அபிமான முதலியசாதனங்களோடு பொருந்திய சகலகருமங்களையும் மீண்டும் வந்து பற்றுவாறொழித்தல் விடலாம்; (விடல், உபாதி, உபராமம் என்பன ஒருபொருட்கிளவி).

‡ "பயனை யுத்தேசியாது மந்தனும் ஒன்றில் முயலுகின்றதில்லை" என்னும் நியாயத்தினால் முத்தியாகிய பயனை யுத்தேசியாது ஒருவனுக்கும் நிஷ்காம முதலிய கர்மங்களில் முயற்சி யுண்டாகாது. ஆதலால் மந்தமுமுட்சுத்துவம் சர்வ சாதனங்கட்கு முன்னரே யுண்டாயிருக்கின்றது.

அது ஏனைய சாதனங்கள் சித்தித்த பின்னர்த் தீவிரமுமுட்சுத்துவமாகின்றது. அதுவே சற்குருசரணடைதல் பூர்வகமாயுள்ள சிரவணமுதலியபிற் சாதனங்களில் முயலுதற்குக் காரணமாம்.

(4) பூர்வ சம்ஸ்காரத்தினால் அந்தக்கரணத்தில் மயக்கத்தைச் செய்யுங் காமக்குரோதாதிக ளெழுமாயின் அவற்றை விரியவிடாது விவேகத்தினாலடக்குதல் **சகித்தலாம்.** (சகித்தல், திதிட்சையென்பன ஒருபொருட்கிளவி). [சிரவணாதிகளைச் செய்யுமிடத்து அவற்றிற்கு விரோதமான சீதோஷ்ணமுதலிய துவந்துவங்களைச் சகித்தல் திதிட்சையா மெனக் கூறுவது முண்டு].

சிரவணப் பொருளைத் தானே சித்தஞ்சிந் திக்கு மாறு
சரதமா வைக்கு மித்தைச் சமாதான மேன்பர் மேலோர்
பரமசற் குருநூ லன்பு பற்றலே சிரத்தை யாகும்
வரமிகு சமாதி யாறு வகையின்சோற் பொருளி தாமே. 3

(5) பாகிய விஷயங்களிற் செல்லாவாறுதடுக்கப்பட்ட சித்தமானது பெரியோர்களிடத்துக் கேட்டறிந்த ஞான சாஸ்திரார்த்தத்தையே யுள்ளவாறு சிந்திக்கும்படி செய்தல் **சமாதானமாம்.** [நித்திரை, சோம்பல் முதலியவற்றை விடுவதாலுண்டாகும் மனதினிலை சமாதானமாமெனக் கூறுவது முண்டு].

(6) சற்குருவாக்கியத்திலும், வேதவாக்கியத்திலும் விசுவாசம் வைப்பது † **சிரத்தையாம்.**

---

† "சமை தமையே திதிக்கையுப ரதிசிரத்தை சமாதி சமைமுதலா மறுகுணங்கள்" என்று வேதாந்தசூளாமணி முதலியவை கூறியதுபோற் கூறாது ஈண்டுச் சிரத்தையை ஈற்றிற் கூறியதன் காரணம் வருமாறு:—
விருட்சத்தின் சர்வாங்கங்களிலும் பலம் சிரேஷ்டமாதல் போல
ஞானத்தின் சர்வசாதனங்களிலும் சிரத்தையே சிரேஷ்டமாம். பலத்தின்
உற்பத்திக்குப் பின்னர்ப் பலத்தின் பரிபாகாவஸ்தை யுண்டாவதுபோன்
று சிரத்தையின் உற்பத்திக்குப்பின் முமுட்சுத்வம் உண்டாகின்றமையின்
முமுட்சுத்வம் சிரத்தை யென்னும் பலத்தின் பரிபாகாவஸ்தையாம். இது
பற்றியே அது சிரத்தைக்குப்பின் கூறப்படுகின்றது.
சாஸ்திர வாக்கியத்திலும் குருவாக்கியத்திலும் பெரியோர்வாக்கியத்
திலும் உண்டாகும் சிரத்தை ஈசுவரன் குரு முதலியவர்களின் பக்தியில்
லாது உண்டாவதில்லை. எவனது சித்தத்தில் ஆரம்பத்தில் ஈசுவரன் குரு
பெரியோர் என்னும் இவர்களிடத்து பூஜ்ஜிய (பூசிக்கப்படும்) புத்தியாகப்
பிரீதிவடிவ பக்தி யுண்டாகின்றதோ அவனுக்கே சாஸ்திர வாக்கியத்திலும்
குரு வாக்கியத்திலும் பெரியோர் வாக்கியத்திலும் பக்தியானு சாரமாகச்
சிரத்தையுண்டாகும். ஆதலால் பக்தி எதுவோ அது ஞானத்திற்கும் ஞான
த்தின் சர்வ சாதனங்கட்கும் முக்கிய காரணமாம். ஆகையால் பக்தி பூர்வ
மாயுள்ள சிரத்தை சர்வ சாதனங்களிலும் முக்கிய சாதனமாம்.
ஈண்டுச் சிரத்தை, விசுவாசம், நம்பிக்கை, அன்பு என்பன ஒருபொ
ருட் கிளவியாம்.



சாதனசதுஷ்டயத்தைப் பற்றி விவேகசூடாமணி கூறுவதிங்கறியத்தக்கதாம்; வருமாறு:—

சத்தியம் பிரம மேயாஞ் சகமிது மித்தை யாமென்
றித்திறஞ் சாத்தி ரத்தா லெய்திய நிச்சயந்தா
நித்தியா நித்தி யங்க ணிகழ்த்திய விவேக மென்று
சுத்தமா மேலோ ராலே சொல்விட லாகு மன்றே. 1

அத்திர மான தேக மாதியா யயனை யீறாய்
நித்திய மிலாத தான நிகிலமாம் போக்கி யத்தி
னத்திறங் காண்டல் கேட்ட லாதியா லறிந்த வற்றின்
மெத்தவு மருசி தானே மேன்மைசேர் விரதி யாகும். 2

துன்னிய விடய மெல்லாந் தோடமென் றெண்ணுந் திட்டி
தன்னினு லஃதி னின்றுந் தடையிலா விரதி பெற்று
மன்னிய விலக்கி யத்தின் மாசற மனதை வைத்தல்
பன்னிய சமமா மென்றே பகருவர் மேலோ ரெல்லாம். 3

பரவிய விடயக் கூட்டம் பற்றியே தாவா நின்ற
விருவகை யிந்தி யத்தை யித்திர ணின்று மீட்டு
மருவுதன் கோள கத்தின் மாறாது நிற்க வைத்தல்
பொருவிலா தமமா மென்றே புகலுவர் பெரியோ ரெல்லாம். 4

உரைதரு சமத மத்தி னுறவினாற் சித்த மற்றும்
பரவிய பாகி யத்தைப் பற்றாது தன்னிற் றானே
திரமதா யூன்றி நின்று திரமிலாக் கன்ம மெல்லாம்
வரையற விடுத்த றானே வரவுப ரதியா மன்றே. 5

எத்துய ரெய்தி னாலு மேங்கியே யழுதி டாம
லத்துயர் நீங்கு பாய மற்பமுஞ் செய்தி டாமற்
புத்தியின் றயிரி யத்தாற் பொருந்திய துயரை யெல்லா
மெத்தவுஞ் சகிக்குந் தன்மை மேன்மைசேர் திதிட்சை யாகும். 6

சுத்தவே தாந்த நூலுஞ் சூக்குமக் குரவன் சொல்லுஞ்
சத்திய மென்ப தாகச் சார்ந்திடு நிச்ச யத்தை
வத்துவின் சாட்சாத் காரம் வருவதற் கேது வான
வுத்தமச் சிரத்தை யென்றே யுரைப்பருண் மையை யுணர்ந்தோர். 7

சுத்தமாம் பிரமத் தின்கண் சுழலுறாஞ் சித்தந் தன்னை
யெத்தன மியாதி னாலு மென்றுமே யூன்ற வைத்தல்
சத்தியச் சமாதி யென்றே சாற்றலா மஃதை யன்றிச்
சித்தமே கின்ற வாறே செல்வது சமாதி யன்றால். 8

ஆதியி லஞ்ஞா னத்தா லாகிய வகங்கா ராதி
யேதமாந் தேக மீறா யெய்திய பந்த மெல்லாந்
தீதரு ஞானத் தாலே தீர்ப்பதற் கிச்சை செய்த
லேதமின் முமுட்சுத் தன்மை யென்றுகூ றிடலா மன்றே. 9

4 சாதன மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை
யாதலா லிந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண் டாகு
நூதன விவேகி யுள்ள நுழையாது நுழையு மாகில்
பூதசன் மங்கள் கோடி புனிதனும் புருட னாமே.

சாதன சதுஷ்டயத்தின் பயனை உடன்பாட்டு
வாயிலாகவும் எதிர்மறை வாயிலாகவும் கூறல்.

† கோடரி முதலிய சாதனங் (கருவி) க ளில்லாது துணித்தல் முதலிய காரியத்தைச் செய்து முடிப்பவ ருலகத்தி லொருவரு மின்மையின், (மேற்கூறிய) ‡ இந்நான்கு சாதனங்களையும் பூரணமாகப் பெற்றவர்க்கே ஜீவப்பிரஹ்ம ஐக்கியஞானம் சந்தேகவிபரீத மின்றி யுண்டாகும். (இந்த ஞானமார்க்கத்தில் சாதனசதுஷ்டயத்தைப் பெறுதலில்லாத)

---

† கோடரிமுதலிய சாதனமில்லாதபோது துணித்தல் முதலிய சாத்திய முண்டாகாமை போன்று சாதன சதுஷ்டய மில்லாதபோது ஜீவப்பிரஹ்ம வைக்கியஞானமாகிய சாத்திய முண்டாகா தென்பதாம்.

சாதன சதுஷ்டய மிருந்தால் ஜீவப்பிரஹ்ம வைக்கிய ஞான முண்டா மென்பது உடன்பாடு. சாதன சதுஷ்டய மில்லாவிட்டால் ஜீவப்பிரஹ்ம வைக்கிய ஞான முண்டாகாதென்பது எதிர்மறை. சாதனம்—முடிப்பது; சாத்தியம்—முடிக்கப்படுவது.

‡ இங்ஙனங் கூறியதால் சாதன சதுஷ்டயத்தின் ஏது, சொரூபம், காரியம், அவதி, பல மென்னுமைந்தும் இங்கே அறியத்தக்கனவாம். அவை வருமாறு:—

I. (1) அந்தக்கரணசுத்தி யில்லாதவர்களுக்கு நித்தியா நித்திய வஸ்து விவேக முண்டாகாமையின், அந்தக்கரண சுத்தியே நித்தியா நித்தியவஸ்து விவேகத்திற்கு ஏது (காரணம்). (2) பிரஹ்மமே நித்தியமாயுள்ளது ஏனைய தனித்தியமா யுள்ளதென்று சாஸ்திரவாயிலாக நிச்சயித்தலே சொரூபம். (3) சாஸ்திர வாயிலாக நித்திய மின்னது அனித்திய மின்னதென்று நிச்சயித்ததைச் சதா சிந்தித்துக்கொண்டிருத்தலே காரியம். (4) நாமரூப வடிவங்களியாவும் அநித்தியம் அவையின்றியது நித்தியமென்று நிச்சயித்தது எவ்வாற்றானும் நீங்காது நன்றாய்த் திடப்பட்டிருப்பதே அவதி (எல்லை). (5) புண்ணிய லோகப் பிராப்தியே பலம்.

II. (1) சப்தாதி விஷயங்களில் தோஷ திருஷ்டி யுண்டாகாத போது விராக முண்டாகாமையின், விஷயங்களிலுள்ள தோஷதிருஷ்டியே இகாமுத்திரார்த்தபலபோக விராகத்திற்கு ஏது. (2) அவாவின்றி விஷயங்களைப்பற்றற விடுத்தலே சொரூபம். (3) வாந்தியெடுத்த அன்னம் போன்று அவாவின்றிப் பற்றற விடுத்த விஷயங்களில் மீண்டும் சம்ஸ்கார வாயிலாக அவா வுண்டாகாமையே காரியம். (4) யாண்டு யாண்டு நாமரூப



† நூதன விவேகியின் மனமானது செல்லாது, (ஒருசமயம்) செல்லுமாயின் அவன் கீழ்ப்போன அளவிறந்த ஜன்மங்களில் நிஷ்காம கர்மங்களை யனுஷ்டித்து அதனால் அந்தக்கரணசுத்தியுடையவனான புருஷனாவன். (4)

அதிகாரியின் செய்கையைக் கூறல்.

வினா:—சாதன சதுஷ்டயத்தைப் பூரணமாகப்பெற்றுள்ள அதிகாரியின் செய்கை யாது?

---

முண்டு ஆண்டாண்டுத் துக்கமுண்டென்று காண்டல் கருத லுரை வாயில்களாலுணர்ந்து நாமரூபமுள்ள விடங்களையெல்லாம் நரகமாகக் காண்டலே அவதி. (5) புண்ணிய லோகப் பிராப்தியே பலம்.

III. (1) இயமநியமாதிக ளில்லாதபோது சமாதிசட்க சம்பத்தியுண்டாகாமையின், இயமநியமாதிக ளுண்டாயிருத்தலே சமாதிசட்க சம்பத்திக்கு ஏது. (2) சித்த நிரோதமே சொரூபம். (3) வியவகார க்ஷயமே காரியம். (4) பிரவிருத்தியற்றுச் சுழுத்தியவஸ்தையைப் போல விஷயங்களை மறந்திருத்தலே அவதி. (5) புண்ணியலோகப் பிராப்தியே பலம்.

IV. (1) சாதுசங்கப் பழக்கமில்லாதபோது அத்தியந்த துக்க நிவிர்த்தியும் தடையற்ற வானந்தமு மாகிய மோட்சத்தின்கண் தீவிரவிச்சை யுண்டாகாமையின், சாதுசங்கப்பழக்கமே முமுட்சுத்துவத்திற்கு ஏது. (2) மனைவிமக்களர்த்தங்களிற் சிறிதேனு மிச்சையின்றி மோட்சமாத்திரத்திலுள்ள விச்சையே சொரூபம். (3) ஆனாற்கல்வி யறிவுடைமை வயிராக்கியமுதலியவற்றையுடைய பிரம நிஷ்டகுருவை யடைதலே காரியம். (4) குருவிற்குச் செய்யுந் தொண்டொன்றையே கைக்கொண்டு ஏனையகருமங்களையெல்லாம் விட்டுவிடலே அவதி. (5) புண்ணியலோகப் பிராப்தியே பலம்.

இந்நான்கு சாதனமு மொருமித்துக் கூடியிருந்தா லிங்குத்தானே விரைவில் ஆத்ம விசாரமே பலமா மென்க.

சாதன சதுஷ்டயம் பூரணமாயிருந்தால் ஜீவப்பிரஹ்ம வைக்கிய ஞானமுண்டாமென்று கூறப்பட்டதாயினும் இனம்பற்றிச்சிரவண, மனன, நிதித்தியாசனம், தத்துவம் பதார்த்த சோதனமென்னு மிந்நான்குங்கொள்க. நித்தியா நித்திய வஸ்துவிவேகமுதல் தத்துவம் பதார்த்தசோதன மீறாயுள்ள வெட்டும் தத்துவஞானத்திற்கு அந்தரங்கசாதனங்களாம். கர்மோபாசனைகள் பகிரங்கசாதனங்களாம். அந்தரங்கம் - உள். பகிரங்கம் - வெளி.

† "ஊனை வடிவென்றல் விட்டுத்தன் னுண்மையை யுள்ளவா காணு விடின், மானு மழுவுமாய் வந்தாலும் வன்பவ மாளாதி ருக்குங்கிடீர்." என்று பாடுதுறையும், "மேலாஞ் சதுட்ட சாதனங்கண் மேவி நிறைந்த பேர்க்குரைக்கின், மேலா மதுநா மெனத்திடமாய் விளங்குமவையில் லாதவர்க்கு

5 இவனதி காரி யானே னிந்திரி யங்க ளாலும்
புவனதேய் வங்க ளாலும் பூத ‡ பௌ திகங்க ளாலுந் [ம்பிப்
தவனமுன் றடைந்து வெய்யிற் சகித்திடாப் புழுப்போல் வெ
பவமறு ஞான தீர்த்தம் படிந்திடப் பதறி ஞனே.

6 ஆனபின் மனைவி மக்க ளர்த்தவே டணைகண் மூன்றில்
கானவர் வலையிற் பட்டுக் கைதப்பி யோடு மான்போல்
போனவன் வெறுங்கை யோடே போகாத வண்ணஞ் சென்று
ஞானசற் குருவைக் கண்டு நன்றுக வணங்கி ஞனே.

விடை:—(சாதன சதுஷ்டய முடைய) இவ்வதிகாரி † அத்தி யான் மிகத்தினுலும், அதிபூதத்தினுலும், அதிதைவத்தினுலு முண்டாகும்

---

மேலாம் பரமன் மான்மழுவாய் விளங்கி யுரைத்தும விளங்காது, மேலாஞ் சாத னங்கள்வர மேவ வேண்டுஞ் சாதுசங்கம்." என் றத்வைதவுண்மையும் கூறுவதால் நூதனவிவேகியின் மனம் தத்துவஞான மார்க்கத்திற் செல்ல மாட்டாதென்பது நன்கு விளங்கும்.

இதனுல் கிருதோபாசகனிடத்து விவேகமுதலிய சாதனங்கள் தீவிர மாய் வெளிப்பட்டுத் தோன்றுதலின் அவன் தத்துவஞானமடைதற் கதி காரியாமென்றும், அகிருதோ பாசகனிடத்து அவை மந்தமாய் வெளிப் பட்டுத் தோன்ருமையின் அவன் தத்துவ ஞானமடைதற் கநதிகாரி (நூதனவிவேகி)யா மென்றும் விளக்கியவாறும்.

(1) கிருதோபாசகன் சகுணப்பிரஹ்மத்தின் சாட்சாத்கார பரியந்த முபாசனை செய்தவன்.

(2) அகிருதோபாசகன் அங்ஙன முபாசனை செய்யாதவன். இவன் வெகுகால வப்பியாசத்தால் தத்துவத்தில் நிலைத்தற்குரியவ ஞகின்றுன்.

‡ ஆகாயாதி பூதங்களின் காரியமாகிய பிண்டப்பிரமாண்டாதிகள் பௌதிகமாம்.

† (1) வியாதி, பசி, தாக முதலியவற்று லுண்டாகுந் துக்கம் அத்தி யான்மிக துக்கமாம். (2) திருடர், புலி, பாம்பு முதலியவற்று லுண் டாகுந் துக்கம் அதிபூத துக்கமாம். (3) யட்ச ராட்சசப் பிரேதக் கிரகாதி களாலும் சீத வாத ஆதபங்க (குளிர்காற்றுவெயில்க) ளாலு முண்டாகும் துக்கம் அதிதைவ துக்கமாம்.

(1) ஆத்மாவை யாசிரயித்திருக்கும் ஸ்தூலசூக்கும சரீரம் அத்தியான் மமாம்; அதனுலாந் துக்கம் அத்தியாத்ம துக்கமாம். (2) தனது சரீரவிந்திரி ய முதலியவற்றிற்கு வேருய் நேத்திரேந்திரியத்திற்கு விஷயமாவது அதி பூதமாம்; அதனுலாந் துக்கம் அதிபூத துக்கமாம். (3) தனது சரீரவிந்திரிய முதலியவற்றிற்கு வேருய் நேத்திரேந்திரியத்திற்கு விஷயமாகாதது அதி தைவமாம்; அதன்பிரேரணையா (ஏவலா)லாந் துக்கம் அதிதைவதுக்கமாம்.



‡ தாபத்திரயத்தை யடைந்து வெயிலின்|றுபத்தை (சூட்டை)ச் சகிக்காத புழுவைப்போல வாடிச் சம்சாரதாபம் ஒழிதற் கேதுவான ¶ ஞானதீர்த் தத்தில் மூழ்கப்பதறினவனுய் (5) * மனைவிமக்கள் பொருளென்னும் ஈஷ ணுத்திரயத்தினின்றும் நீங்கி வேடர்வலையி லகப்பட்டு (அதைக்கிழித்து)

---

‡ தாபத்திரயம் - மூவகைத்துன்பம்.

¶ கங்கைமுதலிய புண்ணிய தீர்த்தங்களில் விசுவாசத்தோடு மூழ் கித் தீவினையை யொழித்து, அதனுல் மானச தீர்த்தம் வாய்க்கப் பெற்று அதில் மூழ்கி மனவொருமையடைந்தவரே, ஞானதீர்த்தத்தில் முழுகுவதற் கதிகாரியாவர். மானசதீர்த்தமாவது உண்மை, ஈகைமுதலியவற்றை யுடை யராதல், அதில் மூழ்கல் உண்மை முதலியவற்றை விடாது கைக்கொண் டொழுகல். ஞானதீர்த்தம் ஜீவப்பிரஹ்ம வைக்கியஞானம். அதில் மூழ் கல் அந்தஞானம் பிறழாதிருத்தல்.

சத்தியந் தானஞ் சம்மத மின்சொற் சாற்றுத லொருவழிப் படுதல்
புத்தியே முதல கரணமோர் நான்கு மடக்குதல் புலன்கள்போம் வழியி
னுய்த்திடா தமைத்தல் பொறைதிட ஞான முயிர்க்கெலாந் தண்ணளி புரித
வித்திற மனைத்து மானத தீர்த்த மெனவெடுத் தியம்பினர் மேலோர்.

என்று காசிகாண்டமும்,

உள்ளத்தி னுள்ளே யுணர்வெனுந் தீர்த்தநீர்
மெள்ளக் குடைந்துநின் றூடார் வினைகெடப்
பள்ளமு மேடும் பரந்து திரிவரிக்
கள்ள மனமுடைக் காசினி யோரே.

என்று திருமந்திரமும் கூறுமாறறிக.

* ஈண்டுக் கூறியதுறவு (சந்நியாசம்) விவிதிஷா ; சந்நியாசம் வித்வத் சந்நியாசமென்னு மிரண்டனுள் விவிதிஷா சந்நியாசமாம்.

(i) தத்துவஞான முண்டாதற் பொருட்டுப் பிரபஞ்சத்தின் தோஷ திருஷ்டி பூர்வகமாக வுண்டாகுந் தீவிரதர வைராக்கியத்தினுல் சிஞ்ஞா சுவி(ஞானவிருப்பமுடையவ)னுற் செய்துகொள்ளப்படுஞ் சந்நியாசம் விவி திஷா சந்நியாசமாம். இச்சந்நியாசத்தை முன்னர்ப் பெற்றவர்கள் சிகித் துவசன் முதலியோராவர்.

(ii) தத்துவஞான முண்டாய பின்னர்ப் பிரபஞ்சத்தின் தோஷ திருஷ்டி மித்தியாதிருஷ்டி பூர்வகமாக வுண்டாகும் தீவிரதர வைராக்கி யத்தினுல் வாசனுக்ஷய மனோநாச தத்துவஞானங்களின் அப்பியாச|வாயி லாக ஜீவன்முத்தி விலட்சணுநந்தத்தின்பொருட்டு வித்துவானுல் செய்து கொள்ளப்படுஞ் சந்நியாசம் வித்வத் சந்நியாசமாம். இச்சந்நியாசத்தைப் பெற்றவர்கள் யாக்ஞவல்கியர் முதலியோராவர். இவ்விரண்டு சந்நியாச மும் பரமஹம்ச சந்நியாசத்தின் பாகுபாடாம்.

7 வணங்கிநின் றழுது சொல்வான் மாயவாழ் வெனுஞ்சோ கத்தா
லுணங்கினே னைய னேயேன் னுள்ளமே குளிரும் வண்ணம்
பிணங்கிய கோச பாசப் பின்னலைச் சின்ன மாக்கி
யிணங்கிய குருவே யென்னை யிரட்சித்தல் வேண்டு மென்றான்.

8 அன்னதன் சிசுவை யைய ளுமைமீன் பறவை போலத்
தன்னகங் கருதி நோக்கித் தடவிச்சந் நிதியி ருத்தி
யுன்னது பிறவி மாற்று முபாயமோன் றுண்டு சொல்வேன்
சொன்னது கேட்பா யாகிற் றொடர்பவந் தொலையு மென்றான்.

அதனின்றுந்தவறியோடுகின்ற மானைப்போன்று விரைந்து † (நான்யார்?
எனக்கு இச்சம்சார துக்கம் எதனாலுண்டாயிற்று? எதனால் நீங்கும்?
இது நீங்குவதற்குரிய உபாயத்தைப் போதிக்க வல்லவர் யாவர்? அவர்
எவ்விடத்திருக்கின்றனர்? அவரை யெவ்வா றடையலாமென் றுளம்பத
றிச்) சென்றனன்; அங்ஙனஞ் சென்றவன் வாளாசெல்லாது பத்திர புட்
பாதிகளைக் காத்திற் கொண்டு சென்று ஞானாசிரியரைத் தரிசித்துப் பத்
திரபுட்பாதிகளால் அவரது திருவடியில் (சைதந்யம் ஸாஸ்வதம் சாந்தம்
வியோமாதீதம் நிரஞ்சநம், நாதபிந்து களாதீதம் தஸ்மை ஸ்ரீகுரவேநம:
என்றுகூறி) அர்ச்சித்து அவருக்குச் சந்தோஷ முண்டாகும்படி திரிகரண
சுத்தியாக வணங்கினான். (6)

அங்ஙனம் வணங்கினவன் எழுந்து அவருக்கெதிரே யிருகரங்கூப்பி
நின்றழுது கொண்டு தந்தையே! என்போன்றாரைக் காத்தற்பொருட்டுக்
கருணையே திருவுருவமாகப் பொருந்திய எனது குருவே! மித்தையான
சம்சாரவாழ்வென்னுந் துக்கத்தினால் வெதுகாலமாக வாடினேன்.

ஆதலால், தேவரீர் எனதந்தக்கரணம் சீதள மாகும்படி ஒன்றனு
ளொன்றாகச் செறிந்திருக்கின்ற அன்னமயமுதலிய பஞ்சகோசங்களில்
யானெனதென்றெழும் அபிமானவடிவ பந்தத்தை நாசமாக்கி யென்
னைக் காத்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தனன். (7)

தீட்சாத்திரயம்.

வினா:—அவர் அவனுக்கியாது செய்தனர்? யாதுகூறினர்?

† "நானாரிப் பவமெனக்கு வந்தவா றென்கொ னசிப்பதெவ ராலெனவாய்ந் தலர்கரங்கொண் டேகி, யானுநற் கல்வியறி வடக்கம்வை ராகமாதியாங் குணமுடைச்சற் குருவையடைந் தெதிர்மண், ணானாரப் பணிந்தெழுந்தன் பாற்கரங்கள் குவித்து வுறவமுத்தி யருட்குருவே யென்பாசத்தழிவு, தானாமெத் திறத்தினா லெனவினவல் சீடன் றனதுவிதி வத்துபசன் னத்துவமா மன்றே".

என்று வேதாந்த சூளாமணி கூறுவதிங் கறிதற்பாற்றும்.



9 தொடர்பவந் தொலையு மென்று சொன்னதைக் கேட்ட போதே
தடமடு முழ்கி னான்போற் சரீரமுங் குளிர்ந்துள் ளாறி
யடருமன் பொழுகு மாபோ லாநந்த பாஷ்பங் காட்டி
மடன்மலர்ப் பாத மீண்டும் வணங்கிநின் றிது சொல்வான்.

விடை:—† அங்ஙனம் பிரார்த்தித்துநின்ற தமது சீடனைச் சற்குருவானவர் (1) ஆமையானது கரையிலுள்ள தனது முட்டை குஞ்சாகுமாறு அதனைத் தனதகத்திற் பாவிப்பதுபோன்று (சீடன்) சொரூபாவரணமொழிந்து (தனது) நிஜசொரூபமாய் விளங்கும்படி தன்னுள்ளத்திற்பாவித்து, (2) மீனானது தனது சினை (முட்டை) குஞ்சாகுமாறு அதனைநோக்குவதுபோன்று (சீடனது) சஞ்சிதவினை கெடுமாறு அன்போடு நோக்கி, (3) பின்பு பறவை தனது முட்டைகுஞ்சாகுமாறு அதனைத்தனதுசிறகினால் பரிசிப்பதுபோன்று சம்சயபாவனை (சந்தேகம்) விபரீதபாவனை (விபரீதநிச்சயம்) ஒழிந்து முடிவான ஆன்மவிசார மிவனுக்குண்டாக வேண்டுமென்று அஸ்தமஸ்தகசையோகஞ்செய்து (அஞ்சாதே யென்று அப்பயாஸ்தத்தைச் சீடனது சிரத்தில்வைத்து)தமதெதிரேயிருக்கவைத்து அவனை நோக்கி உனது பிறவியையொழித்தற்குரிய வுபாயமொன் றிருக்கின்றது, அதனை யுனக்குபதேசிக்கின்றேன், நீயானுபதேசிப்பதைக் கவனமாய்க் கேட்டுபதேசித்தவாறொழுகுவாயாயின் உன்னையநாதிகாலமாய்த் தொடர்ந்து வந்துள்ள பிறவி நிவிர்த்தியாய் விடுமென் றருளிச் செய்தனர். (8)

சீடன் குருவின் வசனத்தினா லகமகிழ்ந் தன்புமிக்கு
அவரை வணங்கிப் பிறவியை மாற்று முபாயத்தை
யுபதேசிக்கவேண்டுமென் றிரத்தல்.

வினா:—பிறகு சீடன் யாதுசெய்தனன்?

விடை:—அவன் அநாதிகாலமாய்த் தொடர்ந்து வந்துள்ள உனது பிறவியானது நிவிர்த்தியாய்விடுமென்று சற்குரு அருளிச்செய்ததைக் கேட்டபோதே (வெயிலாற்றபிக்கப்பட்டு அதனால்வாடி) விசாலமான மடுவிலே முழ்கினவனைப்போன்று மனவெப்பந்தணிந்து அதனால் சரீரமுங் குளிர்ந்து அகத்தே நெருங்கியுள்ள அன்பு ததும்பிப்புறத்தே ஒழுகுமாறுபோல ஆனந்தக்கண்ணீர் விட்டுச் சற்குருவினது தாமரைமலர் போன்ற திருவடிகளை மீண்டும் வணங்கியெழுந் திருகரங்களையுஞ் சிரசின் மேற் கூப்பி யெதிரே நின்று, (9)

† (i) ஆமைபோற் சிந்தித் தருளுருவ மாக்குமாற், காமாதி நீத்தவரைக் காண். (ii) மீன்போற் றிருநோக்கால் விமல னுருவாக்குந், தான்போக்கி நின்ற தரம். (iii) கோழிபோற் றீண்டியுயிர்க் குற்ற மறுத்தாளு, மாழிவிட முண்ட வரன். என்று சிவஞானவள்ளலார் கூறுவது மறிக.

10சொன்னது கேட்க மாட்டாத் தொண்டனு னுவுஞ் சுவாமி
நின்னது கருணை யாலே நீரெனை யாள லாமே
யுன்னது பிறவி மாற்று முபாயமொன் றுண்டேன் றீரே
யின்னதேன் றதைநீர் காட்டி யீடேற்றல் வேண்டு மென்றான்.

11 அடங்கிய விருத்தி யானேனென் றறிந்தபின் செறிந்த மண்ணின்
குடம்பையுட் புழுமுன் னூதுங் குளவியின் கொள்கை போலத்
தொடங்கிய குருவு மான்ம சொரூபமே மருவ வேண்டி
யுடம்பினுட் சீவ னைப்பார்த் துபதேச மோது வாரே.

சுவாமி! தேவரீ ருபதேசிப்பதைக்கேட்டு அதன்படி யொழுகமாட்டாத அடிமை யாகிய வென்னையும் (அரசர்கள் தமது ஆணைவழிச்செல்லாதோரைச் சதுர்விதவுபாயங்களால் வசமாக்கித் தமது ஆணைவழியிற் செலுத்தி யாள்வதைப்போல) தமது கருணையினு லடக்கியாளுதல் தங்கட்குக் கடமையாம். தேவரீர் உனது பிறவியையொழித்தற் குரிய உபாயமொன் றிருக்கின்றதேன் றருளிச்செய்தீரே, இத்தன்மையதேன் றதனை உபதேசித்து அடியேனைப் பிறவிக்கடலினின்றும் கரையேற்றல்வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தான். (10)

குருபதேசம்.

வினு:—அவனுக்குக் குரு யாது கூறினுர்?

விடை:—இவன் அகம்பாவவிருத்தி(சரீரத்தில்யானேனென்னும் புத்தி) யடங்கியவனேன் † றாராய்ந்தறிந்த பிறகு ‡ மட்கூண்டினுள் (கொட்டிப்

† திரவியாதி விஷயப் பிரயோஜன நிமித்தம், பிரசித்தியினிமித்தம், பூஜார்த்த வந்தனமரியாதையி னிமித்தம் தத்துவந் தெரிந்துகொள்ள வந்தவனே, அல்லது தத்துவத்தின் இரகசியத்தை யறிந்தபின்னர், நிந்திக்கும் பொருட்டுக் கரந்தவேடங்கொண்டு வந்தவனே, அல்லது உள்ளவாறு பிறவிக் கஞ்சி வந்தவனே வென்றாராய்ந் தறிதலாம். இஃது "இயற்கைகுணஞ் சோதித்து முன்னே பின்னே யாவையுமாம் பிரமநீ யென்னல் வேண்டும், வியப்புறவா சையினுழல்வார்க் கிவ்வா றோதின் மீளாத நீரகில் வீழ்த்த தாகும், தியக்குறுபோ கத்தாசை தீர்ந்து புந்தி தெளிந்தவனைப் போல்வார்க்கே திகழத் தோன்றும், மயக்கமற வுணர்த்த வல்ல குருவைக் கிட்டா வருந்தியுந்தன் பிறப்பறுக்கு மகனு மாங்கே" என்று ஞானவாசிட்டங் கூறுமாற்றானு முணரப்படும்.

‡ இது பிரமரகீட நியாயமாம். பிரமரம் - ஒருவகையான வண்டு (குளவி); கீடம் - புழு; நியாயம் - திருஷ்டாந்தம். குளவி பச்சை நிறமுள்ள வொருவகைப் புழுவை (கொட்டிப்பார்த்து மிகத் துடிப்பதையும் துடியாமற்கிடைப்பதையு மொழித்து மத்திமத்துடிப்புடையதை)ப்பிடித்து வந்து தனது கூண்டிற்குள்வைத்துச் சிலகாலம்வரை ஒவ்வொருநாளும்



12. வாராயென் மகனே தன்னை மறந்தவன் பிறந்தி றந்து
தீராத சுழற்காற் றுற்ற செத்தைபோற் சுற்றிச் சுற்றிப்
பேராத கால நேமிப் பிரமையிற் றிரிவன் போத
மாராயுந் தன்னைத் தானேன் றறியுமவ் வளவுந் தானே.

பார்த்து மத்திமத் துடிப்புடையதேன்று சோதித் தெடுத்துவைத்த) புழுவிற்குமுன்னே (அது தன்னுருவ மாகும்படி) தொனிசெய்யுங் குளவியின் தன்மையைப் போன்று உபதேசிக்கத் தொடங்கிய சற்குருவும் சீடன் பிராந்தி நீங்கித் தனது நிசவடிவமான ஆன்மசொருபத்தை யடைதற்பொருட்டு அவனது தேகத்துளிருக்கும் † ஜீவனைநோக்கி, அன்பனே! யானுபதேசிப்பதைக் கவனமாய்க் கேட்கக்கடவாய். (11)

‡ சற்குரு சந்நிதானத்தில் ஞானசாஸ்திரப் பயிற்சியினு லாராய்ந்தறியத்தக்க பிரத்யகாத்மாவாகிய தன்னைப் பிரஹ்மமேன் றுள்ளவாறுணரும் வரைக்கும் தன்னைமறந்தவன் (தனது நிசவடிவத்தை விசாரித்தறியாதவன்) நீங்காத சுழற்காற்றிலகப்பட்ட திரணம்போன்று சுற்றிச்

தனது கூர்மையான மூக்கினுல்அப்புழுவைக் கொட்ட, அப்புழு அது கொட்டுவதனுலாய வருத்தத்தைப் பொறுக்க முடியாது வருத்தமுற்று இடைவிட்ட போதெல்லாம் குளவிவந்து கொட்டுமே யென்னும் பயத்தினுல் எப்போதும் அதனையே நினைத்துக்கொண்டிருந்து சிலகாலத்தி லக்குளவியின் வடிவாய் விடுகின்றதென்பதாம். இவ்வாறே நானே பிரஹ்மமென் றிடையீடின்றிப் பாவிக்கிறவன் பிரஹ்மமே யாவனென்பது துணிபொருளாம்.

† ஜீவனைநோக்கி யென்றதனுல் கூடஸ்தன் உபதேசத்திற் குரியவனென்று பிறர் கூறுவது பொருந்தாதென்பதும் காரியகாரண வடிவதேகம் எவ்வாற்றானும் சித்துருவமாகாதென்பதும் பெறப்படுமாறறிக.

‡ தன்னை யறிந்தவன் பிறவியினின்றகலுவா னெனவே, அவன் பிறவிக்கும், அதன் காரணமான விருவினைக்கும், அவற்றின் காரணமான இராகத் துவேஷங் கட்கும், அவற்றின் காரணமான யானெனதென்னுமபிமானத்திற்கும், அதன் காரணமான அவிவேகத்திற்கும், அதன் காரணமான அஞ்ஞானத்திற்கும் அதனது ஏனைய காரிய (உலக)ங் கட்கும் அதிஷ்டானமா யிருக்கின்றா னென்பது பெறப்படும். கயிற்றை யறியாமையினுல் தோன்றும் அரவு அதை யறிவதனுல் நீங்குவது போலத் தன்னை (தனது நிசவடிவாகிய சிவத்தை) அறியாமையினுல் தோன்றிய பிறப்பு முதலியவை தன்னையறிவதனுல் நீங்குமென்ப தொருதலையாம்.

13. தன்னையுந் தனக்கா தாரத் தலைவனை யுங்கண் டானேல்
பின்னையத் தலைவன் றானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வ
னுன்னைநீ யறிந்தா யாகி லுனக்கொரு கேடு மில்லை
யென்னைநீ கேட்கை யாலே யீதுப தேசித் தேனே.

சுற்றி (மாறி மாறிப் பிறந் திறந்து) நீங்காத ‡ காலசக்கரச் சுழற்சியிற் சுழலாநிற்பன். (12)

ஆதலால் (பரிபாகமுள்ள ஒருவன் சற்குருவாயிலாக, ஆபாசனான) † தன்னை (சீவனை)யும் தனக்காதாரமாகிய தலைவ (தனது நிசவடிவமான கூடஸ்த)னையும் (நிருவிகற்ப சமாதிவாயிலாக) அறிந்தானாயின்,

சிவத்தில் தோன்றிய வுலகம் தன்னையறிவதனால் நீங்கு மென்பதனால் தானுஞ் சிவமும் ஒன்றாமென்பது பெறப்படும்.

இதுபற்றித் திருமந்திரம்

தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை, தன்னை யறியாமற் றானே கெடுகின்றான், றன்னை யறியு மறிவை யறிந்தபின், றன்னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே.

எல்லா மறியு மறிவு தனைவிட்டு, வெல்லா மறிந்து மிலாபமிங் கில்லை, யெல்லா மறிந்த வறிவினை நானென்னி, லெல்லா மறிந்த விறையெனலாமே.

என்னை யறிந்திலே னித்தனை காலமு, மென்னை யறிந்தபி னேதுமறிந்திலே, னென்னை யறிந்திட் டிருத்தலுங் கைவிடா, தென்னையிட்டென்னை யுசாவுகின் றேனே. என்றும்,

பாடுதுறை

தன்னால் விளையுஞ் சகசீவ பரந், தன்னா லழியுந் தனதாம் விழியா, லென்னா லெனையென் னிலெனக் கருளு, மன்னே யடியே னபய மபயம்.
என்றும் கூறுமா றறிக.

‡ காலசக்கரச் சுழற்சியிற் சுழலல் - இறப்பு நிகழ் வெதிர்வென மாறி மாறிவருங் காலத்தின்வசமாய்ப் பிறந்திருந்துசாதலை யிடைவிடாதடைந்து வருதல்.

† தான் (சீவன்) தலைவ (கூடஸ்த)னாதல் பாதசமானாதி கரணியமும், தலைவன் பிரஹ்மமாதல் முக்கிய சமானாதி கரணியமுமாம்.

(i) கயிற்றின்கண் கற்பிதமாயுள்ளவரவு கயிற்றினை யுணர்ந்தவிடத்து அவ்வரவிற்குப் பாதமுண்டாய்க் கயிற்றோடு அபேதஞ்சித்தித்தல்போன்று ஆத்மாவின் (சிவத்தின்) கண் கற்பிதமாயுள்ள சீவன் ஆத்மாவை யறிந்தவிடத்து அவனுக்குப் பாதமுண்டா யாத்மாவோ டபேதஞ்சித்திக்கின்றதென்க.



14. என்னைத்தான் சடனா வுள்ளத் தெண்ணியோ சொன்னீ ரையா
தன்னைத்தா னறியா மாந்தர் தரணியி லொருவ ருண்டோ
பின்னைத்தா னவர்க ளெல்லாம் பிறந்திறந் துழலு வானே
னின்னைத்தா னம்பி னேற்கு நிண்ணய மருளு வீரே.

15. இன்னது தேகந் தேகி யிவனென வுணர்வான் யாவ
னன்னவன் றன்னைத் தானென் றறிந்தவ னாகு மென்றார்
சொன்னபின் றேகி யாரித் தூலமல் லாம லென்றான்
பின்னது கேட்ட வையர் பிழையு நகையுங் கோண்டார்.

பின்பு (அவன்) அத்தலைவன் தானாகி அப்பால் அத்தலைவனான தானே பிரஹ்மமென்னு மநுபவமுடையவனாய்ப் பிறப்பினின்றும் விடுபடுவான். இவ்வாறு உன்னை (உனது நிசவடிவாகிய கூடஸ்தனைப் பிரஹ்மமென்றுள்ளவாறு) அறிந்தாயாயின் உனக்கொரு கெடுதியுமுண்டாகமாட்டாது. (கசத்ததேகத்தி லிருப்பினும் ஆநந்தக்கடல் வடிவேயாவாய்). இதுதானதிரகசியமான உபதேசம் (என்றருளிச் செய்தனர்). (13)

சீடன் வினா:—(அது கேட்டுச்சீடன்) எனதாசிரியரே! தாங்கள் அடியேனை † மூடனாகத் திருவுளத்திற் கருதியோ (உன்னைநீ யறிந்தாயாயின் உனக்கொரு கெடுதியு முண்டாகமாட்டாது) என்றருளிச் செய்தீர். பூமண்டலத்தின்கண் தம்மைத்தாமென் றறியாத மக்கள் யாரேனுமொருவருளரோ?(இல்லையே). அங்ஙனமாக, அவர்களியாவரும் பிறந்திறந்து (காலசக்கரச் சுழற்சியிற்) சுழலாநிற்பது யாதுகாரணம்? தேவரீரையே (மாதா, பிதா குரு, தெய்வமாக) நம்பியுள்ளவடியேனுக்கு அந்த நிச்சயத்தை யுள்ளவா றுபதேசிப்பீராக (என்று பிரார்த்தித்தனன்). (14)

எவ்வத்துவிற்குப் பாதமுண்டாய் எதனோ டபேதமுண்டாகின்றதோ அவ்வத்துவிற்கு அதனோடு பாதசமானாதிகரணிய முண்டு. பாதம்-பொய்யென்று நிச்சயித்தல்.

(ii) கடாகாசத்திற்கு மகாகாசத்துடன் எப்போதும் அபேதமிருப்பது போன்று ஆத்மாவிற்கு(கூடஸ்தனுக்கு)ப் பிரஹ்மத்துடன் எப்போது மபேத மிருக்கின்றதென்க.

எவ்வத்துவிற்கு எவ்வத்துவோடு எப்போது மபேத மிருக்கின்றதோ அவ்வத்துவிற்கு அதனோடு முக்கிய சமானாதிகரணிய முண்டு.

† மூடன்-சாஸ்திரவாசனையின்றி விதியாயும் விலக்காயுமுள்ள போகங்களில் விருப்புடையவன்.

தன்னைத்தா னறிதலின் சொரூபங் கூறல்.

குருவின் விடை:—(பரமாசிரியர்) அன்பனே? † (கடாதிபோலறியப் படுவதான) தேகமிது, (இதனை யறிபவனான) தேகி (தேகத்தையுடைய வன்) இவனென்று (சந்தேக விபரீதமின்றிச் சிற்சடங்களைப்) பிரித்தறி பவன் யாவனோ அவனே தன்னைத்தானே (பிரஹ்மமே)ன் றறிந்தவனா வன் (என்றருளிச்செய்தார்).

சீ-வினா:—(அதுகேட்டுச் சீடன்)ஐயனே! ‡ இத்தூலசரீரமே தானல்லாமல் வேறே தேகியாவன்? (யான் காணவில்லை; அவனிருந்தாற் காணப்படானா?).

தேகத்தினுந் தேகி வேறெனா அவஸ்தாத்திரய வாயிலாக உணர்த்துதல்.

கு-விடை:—அதனைக்கேட்ட பரமாசிரியர் * துன்பமும் புன்சிரிப்புங் கொண்டவராய்ச் (15)

† தேகம் அசத்து, ஜட, துக்க, அநித்திய, கண்ட வடிவ மென்றும், தேகி சத்து, சித்து, ஆநந்த, நித்திய, பூரண வடிவ மென்றும் செவ்வையாக வேறுபிரித்தறிதலே ஈண்டுத் தன்னைத்தானறிதலாம்.

சரீரத்திரயமும் அவற்றுள் நிகழும் அவஸ்தாத்திரயமும் அச்சரீரத்திரயத்துள்ள பஞ்சகோசங்களும் நானன்று, இவற்றிற்கு நான் சாட்சி, சாட்சியாகிய நான் சச்சிதாநந்த நித்திய பரிபூரணவடிவப் பிரஹ்மமா யிருக்கிறே னென்று ஆத்மாவிற்குந் தேகத்திற்கும் அவிவேக காலத்துள்ள அபேதப்பிராந்தியை நிவிர்த்தித்தற் பொருட்டுப் பேதவிவேசனம் செய்தல் வேண்டும். பின்னர், (ஞானகாலத்தில்) தேகாதிவடிவ அநாத்மாவைச் சாஸ்திர யுக்தியினாலும் ஆத்மாவின் திடவபரோட்ச ஞானத்தினாலும் பொய்யென்று நிச்சயித்துக் கயிற்றிற்றோன்றிய வரவு அதனினும் பின்னமாயிராமை போன்று அது பிரஹ்மமின்ன மன்றென்று தெளிதல்வேண்டு மென்க.

‡ ஸ்தூல சரீரத்தில் நானென்னும் பிராந்தியின் வாயிலாக இந்திரிய முதலியவற்றில் நான் கண்டேன் நான் நினைத்தேன் என்றற் றொடக்கத்தனவாகப் பிராந்தியுண்டாதலும், இப்பிராந்தியின் வாயிலாக இஃதென் மாடு, இஃதென் கன்று என்றற் றொடக்கதனவாகப் பிராந்தி யுண்டாதலும் அனுபவசித்தமா யிருத்தலின், ஸதூலசரீரம் முன்னரெடுத்துக் கூறப் பட்டது.

* அஞ்ஞானத்தினால், நாம் கூறியதை யிவனறியாது போனானெனத் துன்பமும், இவனது அஞ்ஞானத்தையொழிப்பது நமக்கருமையா வெனப் புன்சிரிப்புங் கொண்டாரென்க.



16. தேகமல் லாமல் வேறே தேகியார் காணே னென்றாய்
மோகமாங் கனவில் வந்து முளைத்தவ னெவனீ சொல்வாய்
சோகமாங் கனவு தோன்றாச் சுழுத்திகண் டவனார் சொல்வா
யாகநீ நனவி லெண்ணு மறிவுதா னேது சொல்வாய்.

17. நனவுகண் டதுநான் கண்ட நனவுள நினைவு நீங்கிக்
கனவுகண் டதுஞ்சு ழுத்தி கண்டதும் வேறான் றேபோற்
றினமநு பவிப்ப தோக்குந் தெரியவு மில்லை சற்றே
மனதினி லுதிக்கும் பின்னே மறைக்கும தருளு வீரே.

சீடனை நோக்கி, அன்பனே ! நீ யான் மனிதனென்னும் அநுபவத்தால் தானென்பதற்குப் பொருள் தேகமே யல்லாமல் இதற்கு வேறாகத் தேகியாவன் ? யான்காணவில்லை ; (அவனிருந்தாற்காணப்படானா) என்று கூறினை. (தேகம் சேஷ்டையற்றுக்கிடக்கவும்) நித்திராமோகத்தாலுண்டாகுஞ் சொப்பனத்தின் கண் வந்து தோன்றிச் சப்தாதி விஷயங்களை யறிபவன் யாவன்? (அவன் தேகமா? தேகத்திற்கு வேறு பட்டவனா? இதனை நன்காராய்ந்து) நீ கூறக்கடவாய். (சாக்கிரமேயன்றி) துன்பமுண்டாதற்குக் காரணமாகிய சொப்பனமுந் தோன்றாத சுழுத்தியின்கண் அஞ்ஞானத்தை யறிந்தவன் யாவன் ? (இதனையும் நன்காராய்ந்து நீ) சொல்லக்கடவாய். ¶ சாக்கிரத்தில் சொப்பனம் சுழுத்தியென்னு மிரண்டையும் நினைக்கின்ற அறிவுதான் யாது? (அது நீ கருதுகின்ற தேகமா ? அதற்கு வேறானதா? இதனையும் நீ நன்காராய்ந்து) சொல்லக்கடவாய் (என்று கூறியருளினர்). (16)

¶ (1) எதில் நாற்பத்திரண்டு தத்துவங்களால் வியவகார முண்டாகின்றதோ அது சாக்கிராவஸ்தையாம். அந்நாற்பத்திரண்டு தத்துவங்கள் ஞானேந்திரிய பஞ்சகம் கர்மேந்திரிய பஞ்சகம் அந்தக்கரண சதுஷ்டயம் என்னும் பதினான்கும், அவற்றின் அதிதேவதைகள் பதினான்கும், அவற்றின் விஷயங்கள் பதினான்குமாம்.

(2) சாக்கிராவஸ்தையிலனுபவித்த பதார்த்தங்களின் சம்ஸ்காரம் மயிர் நுனிப் பாகம்போன்று மிகுசூக்குமமாய்க் கண்டத்தின்க ணுள்ள ஹிதை யென்னும் நாடியிலிருக்கும். அச்சம்ஸ்காரத்தினால் நித்திரா காலத்தில் சப்தாதி விஷயங்களும் அவற்றின் ஞானமு முண்டா கின்றன. அவற்றா லெதில் வியவகார முண்டாகின்றதோ அது சொப்பனாவத்தையாம்.

(3) உறக்கத்தினின்றும் விழித்தபோது யான் ஒன்று மறியாது சுகமா யுறங்கினேனென்று எதனது ஸ்மிருதி (நினைப்பு) உண்டாகின்றதோ அது சுழுத்தியவஸ்தையாம்.

18. தாலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டு வார்போ
லாலத்தி னுடுக்கள் காட்டி யருந்ததி காட்டு வார்போற்
றூலத்தை முன்பு காட்டிச் சூக்கும சோருப மான
மூலத்தைப் பின்பு காட்ட முனிவரர் தொடங்கி னரே.

சீடன் தேகத்தினும் தேகி வேறெனத் தனதனுபவத்தினு லங்கீகரித்து அதனை நன்கு விளக்கல்வேண்டுமெனல்.

சீ-வினு:—ஐயனே சாக்கிரத்தில் † ஸ்திரமான சப்தாதி விஷயங்களை யறிந்ததும், நானறிந்த சாக்கிரத்தின்கண் ணுள்ள சங் கற்பங்களொழிந்து சொப்பனத்தில் அஸ்திரமான சப்தாதிவிஷ யங்களை யறிந்ததும், இவ்விரண்டுந்தோன்றாத சுழுத்தியில் அஞ் ஞானத்தையறிந்ததும் இத்தேகத்திற்குவேறான ஒரு தேகியே போன்று யான் நாடோறு மனுபவிப்பதொவ்வும். அங்ஙனமாயி னும் அஃதுள்ளவாறு விளங்கவில்லை. ஆனால் அது தங்களுடைய உபதேசத்தினல் இமைப்போது மனத்தில் விளங்குகின்றது; பின்பு அஞ்ஞானத்தினல் மறைந்து விடுகின்றது. அங்ஙனமாகாது தேகியின்சொரூபம் பிரத்தியட்சமாகு முபாயத்தை யுபதேசித் தருளல் வேண்டும் (என்று பிரார்த்தித்தனன்). (17)

கு-விடை:—ஆசிரியர் சீடனுக்கு உலகத்தில் முன்னர் விருட்சத்தின் கிளை நுனியைக் காட்டிப் பின்னர் மூன்றும் பிறையைக் காட்டுவார்போல வும், ஆகாயத்தின்கண் முன்னர் நட்சத்திரங்களைக்காட்டிப் பின்னாருந் ததியைக் காட்டுவார்போலவும் ‡ (சாகாசந்திர நியாயத்தாலும் ஸ்தூ லாருந்ததி நியாயத்தாலும்) ஸ்தூலருபமான ஜகஜீவபரங்களை முன்னர்த் தரிசிப்பது பின்னர்ச் சூட்சுமருபமான ஜகத்காரணப் பிரஹ்மத்தைத் தரி சிப்பிக்கத் திருவுளத்திற் கருதி (18)

† சாக்கிரத்திற் காணப்படும் பதார்த்தங்கள் மீண்டும் (உறங்கி விழித் தபிறகும்) காண்டற்குரியனவா யிருத்தலின் ஸ்திரமென்றும், சொப்பனத் திற் காணப்படும் பதார்த்தங்கள் மீண்டும் (மற்றொரு சொப்பனத்தும்) காண்டற்குரியன வாகாமையின் அஸ்திரமென்றும் ஸ்தூல திருஷ்டியாற் கூறப்பட்டன.

‡ (1) ஒருவன் மற்றொருவனுக்கு முன்னர் மாக்கிளையி னுனியைக் காட்டிப் பின்னர் அதுவாயிலாக மூன்றும் பிறையைக்காட்டல் சாகாசந் திர நியாயமாம்.

(2) முன்னர் ஸ்தூலருபமான வசிஷ்டர் முதலிய நட்சத்திரங்க ளைக் காட்டிப் பின்னர் அதுவாயிலாகச் சூட்சுமருபமான அருந்ததி நட் சத்திரத்தைக் காட்டல் ஸ்தூலாருந்ததி நியாயமாம்.



19. அத்தியா ரோப மென்று மபவாத மென்றுஞ் சொல்லு
முத்தியாற் பந்தம் வீடென் றுரைக்கும்வே தாந்த மெல்லா
மித்தையா மாரோ பத்தாற் பந்தமா மபவா தத்தான்
முத்தியா மிவ்வி ரண்டின் முந்தியா ரோபங் கேளாய்.
20. ஆரோப மத்தி யாசங் கற்பனை யாவ வெல்லா
மோரோர்வத் துவினில் வேறே யோரோர்வத் துவினை யோர்த
ஞருடு பணியாய்த் தோன்ற னரணுகித் தறியிற் ருேன்ற
னீருடு கானற் ருேன்ற னிறந்தலம் வெளியிற் ருேன்றல்.

அன்பனே! வேதாந்த சாஸ்திரங்களனைத்தும் அத்தியாரோப யுக்தி யினல் * பந்தமும், அபவாதயுக்தியினல் முத்தியு முண்டாகின்றன வென்று கூறுகின்றன. மித்தியாவடிவ ¶ அத்தியா ரோபத்தினற் பந்தமும் அப

ஆத்ம சாட்சாத்கார வுபாயமாய அதத்வியாவிருத்தி யிலக்கணம், தடத்தவிலக்கணம், சொருபவிலக்கண மென்னு மூன்றனுள், இது தடத்த விலக்கணமாம்.

(1) தேகாதி யனாத்மவர்க்கங்களை யுக்தியால் இதுவல்ல இதுவல்ல வென்று கழித்து எஞ்சிநின்ற ஆத்மாவை யறிவிப்பது அதத்வியாவிருத்தி யிலக்கணமாம்.

(2) சாகாசந்திரநியாய முதலிய நியாயங்களால் ஜகத்காரண சிவத்தை யறிவிப்பது தடத்த விலக்கணமாம்.

(3) சூரியன் மிகுந்தவுஷ்ணப் பிரகாச வடிவினனென்பது போன்று ஆத்மா (உண்மையாக) சச்சிதாநந்த நித்திய பரிபூரண வடிவமென்பது சொருப விலக்கணமாம். இவ் விலக்கணங்களின் விரிவை விருத்திப் பிரபாகர முதலியவற்றிற் காண்க.

* அன்னிய வனான்மா வின்கண் ணகமெனும் புந்தி பந்த, மின்னது புருடர்க் கெல்லா மேதமா மஞ்ஞா னத்தாற், றுன்னிய சனன மாதித் துயர்தரு மேதுவாக, மன்னும்.

சதுரனே யவிவே கத்தாற் சர்ப்பமே யிரச்சு வென்னு, மதிநிகர் தமசி னலே மறைந்திடப் பட்டோர்க் கெல்லா. மதுவலாப் பொருளிடத்தி லது வெனும் புந்தி யுண்டா, மதனினு லசத்தின் மாலே யனர்த்தமாம் பந்த மாமே. என்பது விவேகசூடாமணி.

¶ அதிஷ்டானத்தின் விஷம(வேறாய) சத்தின் அவபாச(தோற்ற)ம், அல்லது தனது அபாவ அதிகரண (இட) த்தில் அவபாசம் அத்தியாச மாம் (பிராந்தியாம்). பிராந்திஞானம் ஞானத்தியாசமும், அதன் விஷ யம் அர்த்தாத்தியாசமுமாம்.

அதிஷ்டான சேஷம் (அதிஷ்டான மாத்திர மெஞ்சி நிற்றல்) அப வாதமா (தெளிவா) ம்.

விவர்த்த வடிவ காரியத்தின் (கற்பித வரவின்) காரணம் (கயிறு) அதிஷ்டானமாம்; அல்லது எது பிராந்தியுள்ளபோது தோற்றுவதின்றே எதன் தோற்றத்தால் பிராந்தி நீங்குகின்றதோ அஃது அதிஷ்டானமாம்.

21. இப்படிப் போல நாம ரூபங்க ளிரண்டு மின்றி
யோப்பமா யிரண்டற் றேன்று யுணர்வொளி நிறைவாய் நிற்கு
மப்பிர மத்திற் றேன்று மைம்பூத விகார மெல்லாஞ்
செப்புகற் பனையி னாலே செனித்தவென் றறிந்து கொள்ளே.

வாதத்தினால் முத்தியுமுண்டாவனவா யிருத்தலின் இவ்விரண்டனுள் † முன்னர் அத்தியாரோபத்தினைக் கேட்கக்கடவாய். (19)

அத்தியாரோபத்தின் பரியாயநாமமும்
இலக்கணமும் திருஷ்டாந்தமுங் கூறல்.

(1) ஆரோபம், அத்தியாசம், கற்பனை (பிராந்தி) யென்பன அத்தியாரோபத்தின் பரியாய நாமங்களாம். (2) ஒரு வஸ்துவினிடத்து மற்றொருவஸ்துவையுணர்தல் அதனிலக்கணமாம். (3) * (அரவின்மையான) கயிற்றினிடத்து அரவு தோன்றுதலும், (கள்வனின்மையான) தறியினிடத்துக் கள்ளன் தோன்றுதலும், (நீரின்மையான) கானலிடத்து நீர்தோன்றுதலும், (நீல நிறமும் கோப்பரை கவித்தாற் போன்றுள்ள விடமும் இன்மையான) ஆகாயத்தில் நீலநிறமும் கோப்பரை கவித்தாற் போன்றுள்ள விடமும்தோன்றுதலும்(பிறவும்)அதற்குத் ‡ திருஷ்டாந்தமாம்.(20)

பிரபஞ்சவுபாதான காரண மாயை சுத்தசேதன (சிவத்) தில் தானத்தியாசமா யிருத்தற்குத் தானே காரணமா யிருத்தலின் அது காரணாத்தியாசமெனவும், அதனால் பிரபஞ்சம் சேதனத்தி லத்தியஸ்தமா யிருத்தலின் அது காரியாத்தியாச மெனவும் கூறப்படும். விளக்குத் தனது பிரகாசத்திற்கும் ஏனையவற்றின் பிரகாசத்திற்குந் தானே யேதுவா யிருத்தல்போல மாயை தனது அத்தியாசத்திற்கும் பிரபஞ்சத்தின் அத்தியாசத்திற்கும் தானே ஏதுவாம்.

காரியாத்தியாசம், அர்த்தாத்தியாசம், ஞானாத்தியாச மென் றிருவகைத்தாம்.

"ஆதியி லஞ்ஞா னத்தா லாகிய வகங்கா ராதி, யேதமாந் தேக மீறு யெய்திய பந்த மெல்லாம்" என்று விவேக சூடாமணி கூறுவதால் காரணாத்தியாசமும் காரியாத்தியாசமும் நன்குவிளங்கும்.

† பந்தத்திற்கேதுவான அத்தியாரோபத்தின் சொரூபந்தெரியாவிடத்து, முத்திக்கேதுவான அபவாதத்தின் சொரூபந்தெரியாதாகலின்முன்னரத்தியாரோபங் கூறப்பட்டது. "பந்தத் துருவங் கேட்டுணரிற் பாவீட்டுருவு மேல்வெளியாம்" என்பது வாசிட்டம்.

* கயிற்றின்கண் அரவுதோன்றுதல் அர்த்தாத்தி யாசமும், அதன் ஞானம் ஞானாத்தியாசமுமாம். இங்ஙனமே ஏனையவற்றையு முணர்க. இவ்வத்தியாசம் அநிர்வசநீயக்கியாதி யெனப்படும்.

‡ வாதிப் பிரதிவாதிக ளிருவரும் அங்கீகரித்த பதார்த்தம் திருஷ்டாந்த (உதாரண) மாம்; அதனாற் பெறப்பட்டது தாஷ்டாந்தமாம்; அதுவே சித்தாந்தமாம்.





22. அதுதானேப் படியென் றக்கா லநாதியாஞ் சீவ ரெல்லாம்
பொதுவான சுழுத்தி போலப் பொருந்துமவ் வியத்தந் தன்னி
லிதுகால தத்து வப்பே ரீசனுட் பார்வை யாலே
முதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வியத்த மாமே.

அதனைத் தாஷ்டாந்தத்தி லமைத்துக் கூறல்.

இப்படிப்போல (கயிறுமுதலியவற்றின்கண் அரவு முதலியவை தோன்றுதல்போன்று) ஒரு நாமமும் ஒருரூபமும் தன்பாலில்லாது சமமாயும், அத்துவிதமாயும், ஞானப்பிரகாசமாயும், பூரணமாயும், எஞ்ஞான்றுமொருதன்மைத்தா யிருக்கின்ற (சுருதி சித்தமான) அந்தப் பிரஹ்மத்தினிடத்திற் றேன்ற நின்ற (நாமரூபமான) பஞ்சபூதவடிவ காரியங்களியாவும் இனிக்கூறப்படுங் கற்பனையினா லுண்டாயினவென் றறியக் கடவாய். (21)

* சிருட்டிக் கிரமம்.

சீ - வினா:—அஃதெங்ஙனம்?

* உண்மையாக வுள்ளது பிரஹ்மமே; தேகாதிப் பிரபஞ்சம் எஞ்ஞான்று மின்றென்று கூறும் சுருதி சிருட்டியைக் கூறுவது யாதுபற்றியெனின், சிருட்டியைக் கூறாது பிரபஞ்சத்தின் நிஷேதத்தைப் பிரஹ்மத்தின்கண் கூறுமிடத்து, பிரஹ்மத்தின்கண் நிஷேதிக்கப்படும் பிரபஞ்சம் வாயுவின்கண் நிஷேதிக்கப்படும் ரூபம்போல் பிரஹ்மத்திலிராது வேறிடத் திருக்கின்றதோவென்னு மையமுண்டாம்; ஐயமின்றிப் பிரஹ்மம் அத்விதீயமென்று கூறுதற் கியையாமற்போதலின் சிருட்டியைக் கூறும் வாக்கியத்தினால் பிரபஞ்சம் பிரஹ்மத்தினின்று முண்டானதென்னும் ஞானமுள்ளபோது உபாதானத்தி லில்லாது காரியம் மற்றோரிடத்திருக்குமென்னு மையம் நிவிர்த்தியாம். ஆகவே, நேதி நேதி (இதுவல்ல இதுவல்ல) என்றற் றொடக்கத்து வாக்கியங்களால் பிரஹ்மத்தினிடத்தும் அந்தப் பிரபஞ்சமின்றென்று கூறும்போது பிரபஞ்சம் வான்தாமரை மலடிமகன் முதலியனபோன்று துச்சமே (அசத்தே)ன விளங்கும்; அதனால் அகிலப்பிரபஞ்சப் பிராந்தியற்ற அகண்ட சச்சிதாநந்தப் பிரஹ்மமேக மென்பது செவ்விதிற் பெறப்படும். அதுபற்றிச் சிருட்டி கூறப்படுகின்றதென்க. இச்சிருட்டி கிரமசிருட்டி யுகபத்சிருட்டியென விருவகைத்தாம். கிரமசிருட்டி கனிஷ்டாதிகாரியின்பொருட்டும், யுகபத்சிருட்டி மத்திமாதிகாரியின் பொருட்டும் கூறப்படுகின்றன. மேற்கூறப்படுஞ் சிருட்டி கிரமசிருட்டியாம்.

சொப்பனவுலகு மனத்தினிடத்துக் கிரமமின்றி யுண்டாவது போன்று தேகாதிப் பிரபஞ்சம் பிரஹ்மத்தி னிடத்துக் கிரமமின்றி யுண்டாகின்றதென்பது யுகபத் சிருட்டியாம். இது திருஷ்டி சிருஷ்டிவாத மெனப்படும்; அஃதாவது ஞான முண்டாகும்போதே ஞேயமுமுண்டாகின்ற தென்பது.

த - விடை:—(சிருட்டிக்குமுன்னர்) ¶ அனுதியா (உற்பத்தியின்றி) யுள்ள ஜீவகோடிகளனைத்தும் சர்வ சாதாரண வநுபவமான சுழுத்தி

---

¶ ஜீவர்கள் அநாதியென்று கூறப்பட்டதேனும் இனம்பற்றி, பிரஹ்மம், அவித்தை, அவ்விரண்டன் சம்பந்தம், ஈசன், அவற்றின்பேதம் என்னு மிவையு மநாதி யென்று கொள்க.

ஜீவர்கள் முதலிய வாறும் சொரூபமாக வனுதியென்பதும் பிரபஞ்சம் பிரவாகமாக (நீரோட்டம் போன்று) அநாதி யென்பதும் வேதாந்த சித்தாந்தமாம். இவற்றுள், பிரஹ்மம் பாரமார்த்திக சத்தாகவிருத்தலின், அஃதொழிய வனையவை மித்தையாம்.

(1). பிரஹ்மம் அவித்தைக்கு அதிஷ்டானமாயிருத்தலின் அஃது அவித்தையினின்றும் உண்டாவதில்லை. ஈசுவராதி நான்கும் பிரஹ்மமின்றிச் சித்தியாமையால் பிரஹ்மம் அந்நான்கினின்று முண்டாவதில்லை. ஆதலால் பிரஹ்மம் அநாதியாம்.

(2). பிரஹ்மம் நிர்விகாரமாயிருத்தலின் அதனினின்றும் அவித்தை யுண்டாவதில்லை. ஈசுவராதி நான்கன்சித்தியோ அவித்தையினது சித்தியின் அதீனமாயிருத்தலின் அவற்றினின்றும் அவித்தை யுண்டாவதில்லை. ஆதலால் அவித்தை அநாதியாம்.

(3-4). ஜீவேசுவரர்கள் கேவலம் பிரஹ்மத்திலிருந்தாவது கேவலம் அவித்தையிலிருந்தாவது பரஸ்பரத்தினின்ருவது சுவசித்தியின் அதீனத்தின் பேதத்தி[illegible]ின்ருவது உண்டாவதில்லை. அவித்தியாசேதனங்களது சம்பந்தத்தின் சித்தியால் ஜீவேசுவரர்களின் சித்தியுளதாகின்றது. அச் சம்பந்தம் தானும் அநாதியாயிருக்கின்றது. அதனினின்றும் அவர்களுண்டாவதில்லை. ஆதலால் ஜீவேசுவரர்களும் அநாதியாவர்.

(5). பிரஹ்மமும் அவித்தையும் அநாதியாகலின் அவற்றின்தாதாத்மிய சம்பந்தமும் அநாதியாம்; அவற்றினின்றும் அஃது உண்டாவதில்லை, ஈசுவரன் முதலிய மூன்றன் சித்தியோ சம்பந்தத்தினது சித்தியின் அதீனமாயிருக்கின்றது; ஆதலால் அவற்றினின்றும் அஃது உண்டாவதில்லை. ஆதலால் அவித்யாசேதனங்களின் சம்பந்தமும் அநாதியாம்.

(6). இவ்வைந்துவஸ்துக்களும் தாமே தம்மிலிருந்துண்டாகின்றன வெனக்கொள்ளின் ஆத்மாசிரிய (தன்னைப் பற்றுதலென்னுந்) தோஷமுண்டாகும். ஆதலால் இவ்வைந்து வஸ்துக்களும் தாம் தம்மினின்று முண்டாவதில்லை. எதனுல் இவற்றிற்கு உற்பத்தியில்லையோ, அதனுல் அவ்வைந்து வஸ்துக்களுக்கும் பரஸ்பரம் பேதமுண்டு. அதற்கும் உற்பத்தி பொருந்தாது.

இவ்வாற்ருல் இவ்வாறு வஸ்துக்களுக்கும் உற்பத்தி யில்லையாகலின் இவை சொரூபமாக அநாதியாம்.



23. உத்தம வெளுப்புச் செம்மை யுரைத்திடு கறுப்பு மாகுஞ்
சத்துவ குணத்தி னேடு ரசோகுணந் தமோகு ணந்தான்
சுத்தமோ டழுக் கிருட்டாச் சொல்லுமுக் குணமு மூன்ரு
யொத்துள வேனுந் தம்மு ளொருகுண மதிக மாமே.

---

யவத்தையைப் போன்று † அவ்வியக்தத்தி னிடத்து (கரும வாசனைகளுடன்) லீனமாயிருக்கும். (அப்போது அவர்களது கர்மபரிபாகத்தை யனுசரித்தெழுகின்ற) ‡ காலதத்துவமென்னும் பெயருடைய ஈசுவரனது § சங்கற்பத்தினுல் இவ்வவ்வியக்தமானது முன்னிருந்த (முக்குணசாம்யாவஸ்தை வடிவமான) காரணத்தன்மையை விட்டுச் சத்துவ முதலிய மூன்றுகுணமாக வெளிப்பட்டு விளங்கும். (22)

---

† நாம ரூபங்களாக வெளிப்படாத நிலையில் மாயை அவ்வியக்தமென்று கூறப்படுகின்றது.

‡ ஈசன் சர்வப் பிரபஞ்சத்தையும் படைத்துக் காத் தழிப்பதுபற்றி அவன் காலதத்துவ மென்னும் பெயரால் கூறப்படுகின்ருனென்க.

"பிரம்மா முதலியோரின் நிமிஷமுதல் சகலபூதங்களின் சிருட்டி திதி லயங்கட் காதாரமாயிருத்தலால் அகண்டாநந்த அத்வய (பிரஹ்ம) ம் கால சப்தத்தினுற் கூறப்படுகின்றது" என்பது அபரோக்ஷாநுபூதி.

§ எப்போது ஈசுவரன் ஜீவர்களுக்குக் கர்ம போகங்களைத் தரப் பராமுக மாகின்ருரோ அப்போது பிரளய முண்டாம். அப்பிரளயகாலத்தில் சகல பதார்த்தங்களின் சம்ஸ்காரமும் மாயையிற் றங்குவதோடு, ஜீவர்களி னெஞ்சியுள்ள கர்மமும் சூக்குமமாய் மாயையிற் றங்கும்.

எப்போது அம்மாயையோடு கூடிய ஈசுவரன் ஜீவர்களின் காலகன்ம பரிபாகத்தை யனுசரித் தெதிர்முகமாய் 'ஜீவர்களது போகத்தின்பொருட்டுலகைப் படைப்பேனுக' என்று சங்கற்பிக்கின்ருரோ அப்போது சிருட்டி யுண்டாம். இது

"அந்தத்துள தன்சத்தியை யடைவுற்றுள தாமிச்
செந்துக்கள்செய் கருமந்திகழ் காலம்பரு வஞ்செய்
தெந்தப்பொருள் களுமாக்குவ னெனவேயிறை யுன்னுப்
பந்தப்பட முன்போற்பல வுலகங்கள் படைத்தான்.

காலமுங் கன்மந் தானும் பரிபாக மான வாறே
ஞாலமுண் டாக நல்ல குணத்தினைக் கலந்து நிற்கும்
பாலதொன் றில்லா விந்தச் சத்திமான் படைத்தற் காக
வேலவே யெல்லா மாவோ மென்றுகொண் டிசைந்து பார்த்தான்"

என்று பிரமகீதை கூறுவதால் நன்கு விளங்கும்.

24. ஒருவழி யிதுவா மித்தை யொருவழி வேருச் சொல்வர்
மருவுமவ் வியத்தந் தானே மகதத்வ மாகு மந்த
வருண்மக தத்து வந்தா னகங்கார மாகு மென்றுங்
கருவகங் கார மூன்றுக் காட்டிய குணமா மென்றும்.

அவற்றுள் † சத்துவகுணம் உத்தமமும், வெண்ணிறமும், சுத்தமு மாம். இராசோகுணம் மத்திமமும் செந்நிறமும் அழுக்கு (கலக்கமு) மாம். தமோகுணம் அதமமும், கருநிறமும், இருட்டுமாம்.

இம்மூன்று குணமும் மூன்றுக் தம்முள்ளொத்திருப்பன வாயினும் அவற்றுள் ஒரு குணம் (நெருஞ்சிமுள்போன்று) மேற்பட்டிருக்கும். (சத்துவகுணம்மேற்பட்டிருக்கும்போது இராசோகுணமும் தமோகுணமும் கீழ்பட்டிருக்குமெனவும், இராசோகுணம் மேற்பட்டிருக்கும்போது சத்துவகுணமும் தமோகுணமும் கீழ்ப்பட்டிருக்குமெனவும், தமோகுணம் மேற்பட் டிருக்கும்போது சத்துவகுணமும் இராசோகுணமும் கீழ்ப்பட்டிருக்குமென வுணர்க). (23)

சிருட்டிக் கிரமங்களுள் இஃதொரு பிரகாரமாம்; மற்றொரு பிரகாரமு முண்டு.

‡ மற்றொருவகைச் சிருட்டிக்கிரமம்.

† சத்துவம் பிரகாச வடிவமும், ரஜசு பிரவிர்த்தி வடிவமும், தமசு மோக வடிவமுமாம். இவை முறையே தைஜஸம், வைகாரிகம், பூதாதிக மென்று கூறப்படும். "சத்துவ ஞானமாந் தமமஞ் ஞானமா, மத்திமங் (ரசசு) கலப்பதா மற்றிம் மூன்றையும், புத்தியின் விகாரமே புலப்ப டுத்துமால்" என்பது ஈசுவரகீதை.

‡ மற்றொருவகைச் சிருட்டிக்கிரமம் கூறுவதன் காரணம் வருமாறு:—

"சொப்பனம் கிரமமின்றியு முண்டாகின்றது. அதுபோலப் பிரமமா (பிராந்தியா) கப் பொய்யான ஜகத்தும் விளங்குகின்றது. இதன் கிரமத்தை யறிய இச்சிக்கின்றவன் கானற் சலத்தில் வஸ்திரத்தை நனைக்க இச்சித்தல்கூடும். உபநிஷத்துக்களில் ஜகத் துற்பத்தி யநேகப் பிரகாரமாகச் சொல்லப்படுகிறது. சாந்தோக்ய உபநிஷத்தில் சத்ரூபப் பிரஹ்மத்தினின்றும் அக்கினி, ஜலம், பிருதிவி யென்பவை கிரமமாக வுண்டாயினவென்று சொல்லப்பட் டிருக்கிறது. தைத்ரீய வுபநிஷத்தில் ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பிருதிவியென்னும் ஐந்து பூதங்களும் கிரமமாக வுண்டாயினவென்று சொல்லப்பட்டிருக்கிறது. சிலவிடத்து எல்லாவற்றையும் பரமேசுவரன் சிருட்டிக்கிறுரென்று கிரமமின்றியு முற்பத்தி சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதமாக ஜகத்துற்பத்தி வேதத்தில் பலவிதமாகச் சொல்லப்பட்டிருத்தற்குத் தாற்பரிய மிதுவாம்:—ஜகத்துப் பொய். அஃது ஒருபதார்த்தமா யிருக்குமிடத்து அதனுற்பத்தியை யநேகவிதமாக



25. இக்குணங் களிலே விண்போன் றிருக்குஞ்சிற் சாயை தோன்
முக்குணங் களினுந் தூய்தா முதற்குண மாயை யாகு [று
மக்குணப் பிரமச் சாயை யந்தரி யாமி மாயை
யெக்குணங் களும்பற் றுதோ னிமித்தகா ரணனு மீசன்.

சீ-வினு:—அஃதெங்ஙனம்?

கு - விடை:—ஜீவர்கள் கரும வாசனைகளோடு விலீனமாயிருக்கும் அவ்வியக்தமே (அவர்களது கர்ம பரிபாகத்தை யனுசரித்தெழுகின்ற காலதத்துவ மென்னும் பெயரையுடைய ஈசுவரனது சங்கற்பத்தினுல்) (சமஷ்டி புத்திவடிவ) ‡ மகத்தத்துவமாம்; அஃது அகங்காரதத்துவமாம்; (கீழ்வருவனவற்றிற்குக்) காரணமான அவ்வகங்காரமானது முற்கூறிய சத்துவாதி முக்குணங்களாம். (24)

சத்துவம் இராசசு * தமசு என்னு மிம் முக்குணங்களிலே ஆகாயம்

வேதங் கூறியிருக்க மாட்டாது. அநேகப்பிரகாரமாகக் கூறியிருக்கின்றமையின், உற்பத்திக் கிரமத்தைக் கூறுவதில் வேதத்திற்கு அபிப்பிராயமின்று; ஆனுல் அத்வைதப் பிரஹ்மத்தை யறிவிப்பதற்காக ஜகத்தை நிஷேதிக்கப் பொய்யான ஜகத்தை யிவ்விதமாக ஆரோபஞ்செய் திருக்கின்றது. திருஷ்டாந்தம்:—மரயானையொன்று மேலெழும்புவதற்காக விநோதார்த்தமாகச் செய்யப்படுகின்றது. அதன் காதும் வாலுங் கோணுமாயின், அதை ஒழுங்குப்படுத்த ஒருவரும் பிரயத்தனஞ் செய்வதில்லை. அதுபோல அத்வைத ஞானத்தின்பொருட்டுப் பிரபஞ்சத்தை நிஷேதிப்பதற்காகப் பிரபஞ்சம் ஆரோபிக்கப்படுகின்றது. ஆகையால் பிரபஞ்சத்தி னுற்பத்திக் கிரமத்தை யொரேவிதமாகக்கூற வேதம் முயற்சிக்கவில்லை. பிரபஞ்சத்தினுற்பத்தியை யொரேவிதமாக வேதங்கூருமையின், வேதத்தின் அபிப்பிராயம் பிரபஞ்சத்தை நிஷேதிப்பதிலாம்; அதனுற்பத்தியி லன்றென் றறிதல்வேண்டும்" என்பது விசாரசாகரம்.

‡ விதைத்துத் தண்ணீர் வார்க்க அங்குரமு (முளையு) மாகாது பீச (விதை) நியாயமுங் காட்டாது உற்பின்னுவஸ்தையை யடைந்துள்ள பீஜம் போன்று காரணமான அவ்வியக்தமு மாகாது காரியமான வகங்காரமுமாகாது மித்தியா ஞானமுற்ற நிர்விகற்ப சொரூபத்தால் மத்தியாவஸ்தையா யிருப்பது மகத்தத்துவமாம்.

* தமோகுணத்தில் சித்தின் பிரதிபிம்பம் நேரே யின்ருயினும் அதன் காரியமான சூக்கும பூதத்தின் சத்துவாம்ச சமஷ்டியினுற் ருேன்றும் அந்தக்கரணத்திலும் அதன் காரியமான ஞானுகார விருத்தியிலும் சித்தின் பிரதிபிம்ப முண்டாதல்பற்றி உபசாரவழக்கால் தமோகுணத்திலும் சித்தின் பிரதிபிம்பமுண்டென்று கூறப்பட்டது.

போன்று (அசங்கமாய், வியாபகமாய், சூக்குமமாக) இருக்கின்ற சித்தின் (பிரஹ்மத்தின்) பிரதிபிம்ப முண்டாம். இம் முக்குணங்களிலுஞ் சுத்தமான சத்துவகுணமானது மாயையென்று கூறப்படும்.

ஈசுவர வர்ணனம்.

அச் சுத்தமான சத்துவகுணத்திற் றோன்றிய பிரஹ்மத்தின் பிரதிபிம்பமானது * அந்தரியாமியா (எவ்வத்துவினும் உள்ளீடாய் நிறைந்திருப்பவனு)ம்; (அவ்வந்தரியாமியே தனக்குச் சரீரமான) மாயையிலும் (அதன் பரிணாமமான) ¶ சர்வஞ்ஞத்துவாதி குணங்களிலும் யானெனதென்னும் அபிமானமுறாதவனுவன்; அவன் (உலகிற்கு) † நிமித்தகாரணனாகிய வீசனும். (25)

* காரணசரீர சமட்டி யபிமானி, அஞ்ஞான வுபகித சைதந்நியன், காரணோபாதிகன், மாயாபாசகன், மாயி, மாயாவி, ஜகத்யோனி, ஆநந்தமயன், அட்சரன், அவ்வியக்தன், சபளப் பிரஹ்மம், சகுணப்பிரஹ்மம், பரன், பரமன், மகேசுவரன், பரதேவதை, தற்பத முக்கியார்த்தன், மாயோபாதிகனென்றற் றொடக்கத்தன அந்தரியாமியின் பரியாய நாமங்களாம்.

¶ சர்வஞ்ஞத்துவம், சர்வேசுரத்துவம், சர்வநியந்திருத்துவம், சர்வாந்தரியாமித்துவம், சர்வகர்த்திருத்துவம், சர்வசக்தித்துவ முதலியன ஈசுவரனது முக்கிய குணங்களாம்.

" அவ்வொருவனுகிய ஈச்சுரனுக்கே எக்காலத்திலும் எத்தேசத்திலும் காரியத்தை யுண்டுபண்ணுந் தன்மை யிருத்தலின் நித்தியத்துவ வியாபகத்துவமும், எக்காரியத்தையும் அறிவதற்குஞ் செய்வதற்குஞ் சமர்த்தனுகையால் சர்வஞ்ஞத்துவமும் சர்வசத்திமத்துவமும் (எல்லா வல்லமையுடைமையும்), காலமானது தான் அமூர்த்தமாய் (வடிவமில்லாததாய்) இலைபூ முதலியவற்றை யுண்டாக்குமாறுபோலச் சகல காரியங்களையும் ஆக்குவோனு யிருத்தலின் நிட்களத்துவமும், சர்வாத்துமாக்க ளிதயத்திலும் அந்தரியாமியாகிப் புறம்பே சுருதி ஸ்மிருதிரூபமான ஆணையால் நியாமக(நடத்துவோ)னு யிருத்தலின் சர்வப் பிரேரகத்துவமும், குலாலாதி கர்த்திருத்துவத்தால் அந்நியமான கடபடங்கள் நியமிக்கப்படுதல்போல அந்நிய சரீராதியை நியமித்தலாலும் விசுவமெல்லாம் விசுவேசுரனி னின்றும் நியமமானவையென்று சுருதி யிருத்தலாலும் சர்வாத்துமகத்துவமும்(எல்லாவடிவமாதலும்), தனக்குப் பிதாவும் கர்த்தாவுமின்றி அத்விதீயனு யிருத்தலின் சர்வ சுதந்திரத்துவமும் (தன்வசத்தனுலும்), ஆத்மாக்கள் செய்த கர்மத்தினை யநுசரித்துச் சுகதுக்கங்களைத் தருதலால் இராகத்துவேஷ மின்மையும், தன்னல் சிருஷ்டியான ஆகாயாதி ஜகத்தை வேறுவிதமாகச் சிருஷ்டிசெய்வதற்கு வேறு சமர்த்தரில்லாமையால் சர்வேசுவரத்துவமும் உண்டென்பது நிச்சயம்" என்பது விவேகசிந்தாமணி.

† உலகமாகிய காரியத்திற்கு ஈசனது சரீரபாகம் (மாயை) முதற்



26. ஈசனுக் கிதுசு ழுத்தி யிதுவேகா ரணச ரீரங்
கோசமா நந்த மாகுங் குணமிரா சதம வித்தை
தேசறு மவித்தை தோறுஞ் சிற்சாயை சீவ கோடி
நாசமா முயிர்க்கப் போது நாமமும் பிராஞ்ஞ னமே.

27. அழுக்கோடு பற்றுஞ் சீவர்க் கதுவேயா நந்த கோசஞ்
சுழுத்திகா ரணச ரீரஞ் சொன்னதிம் மட்டு மோக
முழுக்குணத் திரண்டால் வந்த மூலவா ரோபஞ் சொன்னேம்
வழுத்துசூக் குமவா ரோப வழியுநீ மொழியக் கேளாய்.

ஈசனுக்குச் சத்துவகுணவடிவ இம்மாயையே சுழுத்தியவஸ்தையும், காரணசரீரமும், ஆனந்தமய கோசமுமாம்.

ஜீவவர்ணனம்.

இராசோகுணமானது † அவித்தையென்று கூறப்படும்.

[அந்தகாரம் (இருள்) ஒன்றயிருந்தும் அஃது அம்ச (கூறு) பேதத்தாற் பலவாய்த் தோன்றுதல் போன்று, அவித்தை ஒன்றுயிருப்பினும் அஃது அம்சபேதத்தாற் பலவாய்த்தோன்றுதலின் அது மலிந சத்துவமெனப்படும். அந்த] மலினசத்துவமாயுள்ள அவித்தைகடோறும் தோன்றியுள்ள சித்தின் பிரதி பிம்பங்களே ஜீவராசிகளாம். அப்போது (தத்துவஞானத்தினுல் வாச்சியபாகம்) நாசமாகாநின்ற சீவராசிகட்குப் பெயரும் ‡ பிராஞ்ஞ(நன்றறிபவ) னென்று கூறப்படும். (26)

காரணமும் சேதனபாகம் நிமித்தகாரணமுமாம். (கடத்தின்) உற்பத்தி, ஸ்திதி, லயங்களின் காரணம் (மண்) முதற்காரணமாம். (கடத்தின்) உற்பத்திமாத்திரத்தின் காரணம் (தண்டசக்கரம்) நிமித்தகாரணமாம். சிலந்திப்பூச்சியினின் றுண்டாகும் நூலுக்கு அதனது உடற்பாகம் முதற்காரணமாயும், உயிர்ப்பாகம் நிமித்தகாரணமாயு மிருத்தலறிக.

" சிலந்தி யுமிழ்ந்து விழுங்குவ தெப்படி தேகத்தே, மலந்தரு கேசவுரோமம தெப்படி மண்ணிற்கே, பலந்தரு மோடதி யெப்படி யப்படி யீசன்பால், அலர்ந்த தடங்க வெறுங்கன வொக்கும தாயுங்கால்" என்பது பிரமகீதை.

† மயைக்கும் அவித்தைக்கும் பேதங்கூறுவது வேதாந்திகளுள் ஏகதேசிகளது கொள்கையாம்.

‡ காரணசரீர வியட்டி யபிமானி, அவித்தியோபாதிகன், காரியோபாதிகன் என்றற் றொடக்கத்தன பிராஞ்ஞனது பரியாய நாமங்களாம்.

28. ஏமமா யாவி னேத வீசனு ரருளி ளுலே
பூமலி யுயிர்கட் கெல்லாம் போகசா தனமுண் டாகத்
தாமத குணமி ரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்றும்
வீமமா மூட லென்றும் விவிதமாந் தோற்ற மென்றும்.

29. தோற்றமாஞ் சத்தி தன்னிற் சொல்லிய விண்ணும் விண்ணிற்
காற்றதாங் காற்றிற் றீயாங் கனலினீர் நீரின் மண்ணும்
போற்றுமிவ் வைந்து நொய்ய பூதங்க ளென்று பேராஞ்
சாற்றுமற் றிவற்றிற் போக சாதன தநுவுண் டாகும்.

‡ அவித்தையிற் பிரதிபலித்துள்ள சீவராசிகட்கு அதுவே சுழுத்தி யவஸ்தையும், காரண சரீரமும், ஆநந்தமயகோசமுமாம். இதுகாறும் அகங்காரத்தின் காரியமான சத்துவகுணவடிவ மாயையாலும், இரசோகுணவடிவ அவித்தையாலு முண்டான காரணசரீர அத்தியாசங் கூறினும். இனிக்கூறும் சூட்சுமப்பிரபஞ்ச அத்தியாசக் கிரமத்தையும் நீ கேட்கக்கடவாய். (27)

ஆவரண விட்சேபசத்தி.

பிராந்திவடிவமாயையினல் ஜகசிருட்டிமுதலியவற்றை லீலையாகவுடைய ஈசனது கருணையினல் அவித்தையிற் கருமவாசனைகளோடு பிரதிபலித்திருக்கும் ஜீவர்கட்கெல்லாம் * போகசாதனமான சூட்சுமசரீரங்களுண்டாதற் பொருட்டு (எஞ்சிநின்ற) தமோகுணப்பிரதான மாயையானது ஆவரணம் (மறைப்பு), விட்சேபம் (தோற்றம்) என்றிரண்டு சத்திகளாகப் பிரிந்தது. (28)

சூட்சுமபூத வுற்பத்தி.

அவற்றுள், ¶ விட்சேபசத்தியினின்றும் (சத்ததன்மாத்திரையான

‡ ஆவரணம் (மறைப்பு) சத்துவகுணத்திலிராது இரசோகுணத்திலிருத்தலின், இரசோகுணவடிவ அவித்தியா சம்பந்தமுடைய ஜீவர்கள் அந்தவாவரணத்தால் தமது நிஜவடிவத்தையுணராது தேகாதிகளில் யானெனதென்னும் பிராந்தியுடையவராயிருக்கின்றனர். அச்சம்பந்தம் நீங்கினல் அஃதுணரப்படும்.

* போகமாவது சுகதுக்கங்கள் புலப்படத் தோன்றுதல்; சாதனம் அதற்கேதுவாதல்.

¶ "விட்சேபசத்தியினின்றும் ஆகாயமும்...உண்டாயின என்றுகூறியது ஸ்தூல திருஷ்டியினுலாம். சர்வாரோபத்திற்கும் அதிஷ்டானம் சேதனமன்றிப் பிறிதொன் றின்றென்பதும், ஓராரோபம் மற்றோ ராரோபத்திற் கதிஷ்டானமாவது யாண்டுமின்றென்பதும் சித்தாந்தமா யிருத்தலின்



30. ஆதிமுக் குணமிப் பூத மடங்கலுந் தொடர்ந்து நிற்குங்
கோதில்வெண் குணத்தி லைந்து கூறுணர் கருவி யாகு
மோதிய பின்னை யைந்து முளம்புத்தி யிரண்டா ஞான
சாதன மாமிவ் வேழுஞ் சற்குணப் பிரிவி னுலே.

ஆகாயமும், ஆகாயத்தினின்றும் (பரிசதன்மாத்திரையான) வாயுவும், வாயுவினின்றும் (ரூபதன்மாத்திரையான) தேயுவும், தேயுவினின்றும் (ரசதன்மாத்திரையான) அப்புவும், அப்புவினின்றும் (கந்ததன்மாத்திரையான) பிருதிவியும் உண்டாயின. † இவ்வைந்தும் சூட்சுமபூதங்கள் (அபஞ்சீகிருத பூதங்கள்) என்னும்பெயரை யுடையனவாம். இவற்றினின்றும் போகசாதனமென்னும் சூட்சுமசரீரங்கள் தோன்றும். (29)

மாயையின் விட்சேப சத்தியோடுகூடிய சேதனத்தினின்று ஆகாயமும், ஆகாயத்தோடுகூடிய சேதனத்தி னின்று வாயுவும், வாயுவோடு கூடிய சேதனத்தி னின்று தேயுவும், தேயுவோடுகூடிய சேதனத்தி னின்று அப்புவும், அப்புவோடுகூடிய சேதனத்தி னின்று பிருதிவியு முண்டாயின வென்று கொள்க.

முற்கூறியுள்ள மகத்தத்துவ முதலியவற்றின் சிருட்டியிலும் இனிக்கூறப்படும் சிருட்டியிலு மிவ்வாறே யூகித்துக்கொள்ளல் வேண்டும்.

"மாயையொடு விரவுமந்தச் சிவத்தினின்றும் பழுதைமா சுணமே போல, வாயவபஞ் சீகிருத சூக்குமவா காயமுமற் றதினி ருந்து, வாயுவுமற் றதினழலு மதிற்சலமு மதினிருந்து வயங்கு மண்ணும், பாயவபஞ் சீகிருத மாகவே யம்மாவுற் பத்தி யான" என்பது சூதசங்கிதை.

† பூதபஞ்சகத்தின் குணம், வியாபாரம், தர்மம், அதிதேவதை யென்பன வருமாறு:—

| பூத பஞ்சகம். | குணம். | வியாபாரம். | தர்மம். | அதிதேவதை. |
|---|---|---|---|---|
| ஆகாயம் | சத்தம் | இடங்கொடுத்தல் | வெளி | சதாசிவன் |
| வாயு | சத்தம் பரிசம் | உலாவல் | பரிசம் | மகேசன் |
| தேயு | சத்தம் பரிசம் ரூபம் | பாகமாக்கல் | வெப்பம் | உருத்திரன் |
| அப்பு | சத்தம் பரிசம் ரூபம் ரசம் | பிண்டீகரித்தல் (திரட்டல்) | நெகிழ்ச்சி | விஷ்ணு |
| பிருதிவி | சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் | பொறுத்தல் | கடினம் | பிரமன் |

31. இராசத குணத்தில் வேறிட் டெடுத்தகூ றைந்து மைந்தும்
பிராணவா யுக்க ளேன்றும் பெருந்தொழிற் கருவி யென்றும்
பராவிய பெயரா மிந்தப் பதினேழு மிலிங்க தேகஞ்
சுராசுரர் நரர்வி லங்காய்த் தோன்றிய வுயிர்கட் கெல்லாம்.

காரணமான தமோகுணப் பிரதான மாயையின் சத்துவாதி குண மூன்றும் காரியமான இச்சூட்சுமபூத முற்றும் (காரணமான மண்ணின் கருமை அதன் காரியமான கடமுற்றும் சம்பந்தித்திருப்பது போன்று) சம்பந்தித் திருக்கும். * சூட்சும பூதங்களின் சத்துவ குணத்தினின்று (சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராண மென்னும்) † ஞானேந்திரிய பஞ்சகமும் ‡ (அந்தக்காரணமென்னும்) மனமும் புத்தியு முண்டாயின. இவ்வேழும் சத்துவ குணத்தினின்று முண்டாயினமையின் o ஞானசாதனங்களாம். (30)

* சூட்சும பூதங்களினது சத்துவ குணத்தின் சமஷ்டியி னின்று அந்தக்கரண சதுட்டயமும் வியஷ்டியி னின்று ஞானேந்திரிய பஞ்சகமு முண்டாயின வென்றுகொள்க. சித்தத்தை மனத்திலும், அகங்காரத்தைப் புத்தியிலுமடக்கி அந்தக்கரணம் இரண்டெனக் கூறப்பட்டது.

† ஞானேந்திரிய பஞ்சகத்தின் வியாபாரம் அதிதேவதை ஸ்தான மென்பன வருமாறு:—

| ஞானேந்திரிய பஞ்சகம். | வியாபாரம். | அதிதேவதை. | ஸ்தானம். |
|---|---|---|---|
| சுரோத்திரம் | கேட்டல் | திக்கு | காது |
| துவக்கு | பரிசித்தல் | வாயு | [தோல் உடம்பு அல்லது |
| சட்சு | காண்டல் | சூரியன் | கண் |
| சிங்குவை | ருசித்தல் | வருணன் | நா |
| ஆக்கிராணம் | மோத்தல் | அசுவினிதேவதை | நாசி |

‡ அந்தக்கரண சதுட்டயத்தின் வியாபாரம், அதிதேவதை, ஸ்தான மென்பன வருமாறு:—

| அந்தக்கரண சதுட்டயம். | வியாபாரம். | அதிதேவதை. | ஸ்தானம். |
|---|---|---|---|
| மனம் | சங்கற்ப விகற்பம் | சந்திரன் | கண்டம் |
| புத்தி | பதார்த்த நிச்சயம் | பிரமன் | முகம் |
| சித்தம் | பதார்த்த சிந்தனை | விஷ்ணு | நாபி (கொப்பூழ்) |
| அகங்காரம் | உடம்பினை யானென் றபிமானித்தல் | உருத்திரன் | சர்வாங்கமும் |

o ஞான சாதனம் - அறிகருவி; அஃதாவது ஞானாகாரவிருத்தி யுண்டாதற்குச் சாதனமாதலாம்.



ஷ்டி † பூதங்களின் இராசோகுணத்தி னின்று (பிராணன், அபானன், சமானன், உதானன், வியானனென்னும்) * பிராணபஞ்சகமும், (வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபத்தமென்னும்) ‡ கர்மேந்திரிய பஞ்சகமு முண்டாயின. (அந்தக்காரணத் துவயம், ஞானேந்திரிய பஞ்சகம், கருமேந்திரிய பஞ்சகம்,பிராண பஞ்சக மென்னும்) இப்பதினேழ தத்துவங்களும் தேவர், அசுரர், மநுடர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரங்களாய்த் தோன்றிய ஜீவகோடிகளனைத்திற்கும் சூட்சும சரீரமாம். (31)

† சூட்சும பூதங்களினது இராஜோ குணத்தின் சமஷ்டியி னின்று பிராண பஞ்சகமும், வியஷ்டியி னின்று கர்மேந்திரிய பஞ்சகமு முண்டாயின வென்று கொள்க.

* பிராணபஞ்சகத்தின் வியாபாரம், அதிதேவதை, ஸ்தான மென்பன வருமாறு:—

| பிராண பஞ்சகம். | வியாபாரம். | அதிதேவதை. | ஸ்தானம். |
|---|---|---|---|
| பிராணன் | உசுவாச நிசுவாசம் | விசிட்டன் | இருதயம் |
| அபானன் | மல மூத்திரத்தைக் கழித்தல் | விசுவகர்த்தா | குதம் |
| சமானன் | உண்ட அன்னசாரத்தை யுடல்முற்றும் பகுத்துக் கொடுத்தல் | ஜயன் | நாபி |
| உதானன் | வாந்திசெய்வித்தல் | அஜன் | கண்டம் |
| வியானன் | தேகத்தை நிறுத்துவித்தல் | விசுவயோனி | சர்வாங்கமும் |

‡ கர்மேந்திரிய பஞ்சகத்தின் வியாபாரம், அதிதேவதை, ஸ்தான மென்பன வருமாறு:—

| கர்மேந்திரிய பஞ்சகம். | வியாபாரம். | அதிதேவதை. | ஸ்தானம். |
|---|---|---|---|
| வாக்கு | வசனித்தல் | அக்கினி | வாய் |
| பாணி | இடுதல் ஏற்றல் | இந்திரன் | கை |
| பாதம் | நடத்தல் | வாமனன் (விஷ்ணு) சூரியனுமாம் | கால் |
| பாயுரு | மலசலாதி விடுதல் | மிருத்யு (யமன்) | குதம் |
| உபத்தம் | சுகஞ்செய்தல் | பிரஜாபதி (பிரமன்) | குய்யம் (ஆண்குறி, பெண்குறி) |

கர்மேந்திரியம் - கிரியாசாதனம்; அஃதாவது கிரியைக் கேதுவாதலாம்.

32\. இவ்வுடன் மருவுஞ் சீவ னிலங்குதை சதனென் ருவ
னிவ்வுடன் மருவு மீச னிரணிய கர்ப்ப ஞவ
னிவ்வுட லிரண்டு பேர்க்கு மிலிங்கசூக் குமச ரீர
மிவ்வுடற் கோச மூன்ற மிதுகனு வவத்தை யாமே.

33\. சூக்கும சடமிம் மட்டுஞ் சொல்லினே மிப்பாற் றூல
மாக்குமா ரோபந் தானு மடைவினின் மொழியக் கேளாய்
தாக்குமிவ் வுயிர்க்குத் தூல தநுவும்போ கமுமுண் டாகக்
காக்குமவ் வீசன் பஞ்சீ கரணங்கள் செய்தான் ருனே.

$ இச்சூட்சும சரீரத்திற் பொருந்திய ஜீவனும் ஈசனும் முறையே † தைஜசனென்றும் ‡ இரணியகருப்பனென்றும் சொல்லப்படுவர். பதினேழு தத்துவ வடிவமான இச்சரீரம் ஜீவேசுவ ரிருவர்க்கும் இலிங்க தேக மென்னும் பெயரையுடைய சூட்சும சரீரமாம். இது (பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசமென) மூன்று கோசமாம்; சொப்பனுவஸ்தையாம். (32)

ஸ்தூலபூத உற்பத்தி.

இதுகாறும் சூட்சுமபூத சூட்சும சரீரங்களி னுத்தியாசங் கூறப்பட்டது. இனி ஸ்தூலதேகமுதலிய பிரபஞ்ச சிருஷ்டியி னுத்தியாசமுங் கூறுதும்; கேட்கக்கடவாய். சூட்சும சரீரத்தோடு கூடிய இந்த ஜீவ கோடிகட்கு (அவரவர் துகருமங்கட்குத் தக்கவாறு) ஸ்தூல சரீரங்களும் (அவ்வச் சரீரங்கட்குத் தகுதியான) போகமு முண்டாதற்பொருட்டு யாவரையும் வேற்றுமையின்றி யிரட்சிக்கும் பரமேசுவரன் தமோகுணமுடைய சூட்சும பூதங்களைந்தையும் ¶ பஞ்சீகரணஞ் செய்தனன். (33)

$ சூட்சும சரீரத்தின் வியஷ்டியிற் பொருந்திய ஜீவனெனவும் சூட்சும சரீரத்தின் சமஷ்டியிற் பொருந்திய ஈசனெனவுங் கொள்க.

† சூட்சுமசரீரவியட்டியபிமானி, பிராதிபாசிகஜீவன், சொப்பன கற்பிதன் என்றற் றொடக்கத்தன தைஜசனது பரியாய நாமங்களாம். தைஜச னென்பதன்பொருள் சூரியன்முதலிய வொளிப்பொருள்க ளின்றியும் விளங்குகின்றவ னென்பது.

‡ இலிங்கசரீர சமஷ்டியபிமானி, மகாப்பிராணன், சூத்திரான்மா என்றற்றொடக்கத்தன இரணியகருப்பனது பரியாயநாமங்களாம். இரணியகருப்ப னென்பதன்பொருள் ஸ்தூலபூத வுற்பத்திக்குக் காரணமான வுடம்புடையவ னென்பது.

¶ சூட்சும பஞ்சபூதங்கட்குப் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) உண்டாகுங் கலப்புப் பஞ்சீகரண மெனப்படும்; பஞ்சீகரண மடைந்தபூதம் பஞ்சீகிருத பூத மெனப்படும்.



34\. ஐந்துபூ தமும்பத் தாக்கி யவைபாதி நந்நான் காக்கி
நந்துதம் பாதி விட்டு நான்கோடு நான்குங் கூட்ட
வந்தன தூல பூத மகாபூத மிவற்றி னின்றுந்
தந்தன நான்காந் தூல தநுவண்ட புவன போகம்.

அவன் † ஆகாசமாதி யைந்து பூதங்களுள் ஒவ்வொன்றையும் சமமாக இரண்டிரண்டு பாகஞ்செய்து(அஃதாவது பத்தாக்கி) பின் அவற்றின் ஒவ்வொரு பாகத்தை வாளாவைத்து மற்றை ஒவ்வொருபாகத்தையும் நந்நான்கு பாகமாகச்செய்து, வாளாவைத்த பெரியவரைப் பாகங்களில் தத்தம்பாகத்தைவிட்டு மற்றை நான்கு பூதங்களின் அரைப் பாகத்துடன் பாகஞ்செய்த நந்நான்கையு முறையாகக்கூட்ட அதனல் ஸ்தூலபூதங்களுண்டாயின. இதுவே பஞ்சீகரணக் கிரமமாம். இவ்வா

† பஞ்சீகரணக்கிரமம் வருமாறு:—

ஆகாயம் வாயு தேயு அப்பு பிருதிவி

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகாயம் | ஆ | வா | தே | அ | பி | ஆகாயம் |
| வாயு | ஆ | வா | தே | அ | பி | வாயு |
| தேயு | ஆ | வா | தே | அ | பி | தேயு |
| அப்பு | ஆ | வா | தே | அ | பி | அப்பு |
| பிருதிவி | ஆ | வா | தே | அ | பி | பிருதிவி |

"தன்மாத் திரைக ளைந்தினையு மோரொன் றிரண்டாய்ப் பகுத்தொன்றை, நந்நா லாக்கித் தன்பாதி யொழிந்த நாலி னுடன்கூட்டி, யின்னே யல்லா தவைநான்கி னியல்பிற் கூட்ட வானுதி, பின்னே தூல பூத மெனப் பிறக்கு மெனவே பெயர்த்துரைத்தான்" என்பது பிரமகீதை.

றுண்டான பஞ்சீகிருத மகா பூதங்களாய விவற்றினின்றும் பாமேசுவானல் பிரமாண்டமும் * சதுர்த்தசபுவனமும், ஜீவர்களது போகத்திற்குத் தகுதியான உணவாதிகளும், போகத்திற் கிடமான † சராயுஜ, அண்டஜ, சுவேதஜ, உற்பீஜமென்னும் நால்வகைப்பிறப்பாகிய தேவர் மனுடர் பசு பட்சிமுதலிய ஸ்தூலசரீரங்களு ‡ முண்டாக்கப்பட்டன. (34)

---

* பிருதிவிக்குக் கீழுள்ள அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதாளமென்னு மேழும், பிருதிவிக்கு மேலுள்ள பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம், ஜனலோகம், தபலோகம், சத்தியலோகமென்னு மேழுமாகிய பதினான்குமாம்.

† (1) சாராயுவி (பையி) னின்று முண்டாவது சராயுஜமாம்; அது மனித, பசு முதலிய சரீரமாம்.

(2) அண்டத்தி (முட்டையி) னின்று முண்டாவது அண்டஜமாம்; அது பறவை பாம்பு முதலிய சரீரமாம்.

(3) வியர்வையினின்று முண்டாவது சுவேதஜமாம்;அது பேன் கொசுகு முதலிய சரீரமாம்.

(4) பூமியைப் பிளந்துகொண்டுண்டாவது உற்பீஜமாம்; அது விருட்சாதி சரீரமாம்.

பெரும் பான்மையாகச் சத்துவப்பிரதான சரீரம் தேவ சரீரமும், ரஜஸ்பிரதான சரீரம் மனித சரீரமும், தமப்பிரதான சரீரம் பசு பட்சி முதலியவற்றின் சரீரமுமாம்.

‡ ஈண்டுக்கூறிய சிருட்டியுள் பாமேசுவான் மகத்தத்துவமுதல்
இரணியகருப்பாது சரீரோற்பத்திவரையிற் சாக்ஷாத் (நேரே) கர்த்தா
வாம்; ஏனையவற்றி னுற்பத்தியில் இரணியகருப்பர்வாயிலாகக்கர்த்தாவாம்.
"இரணிய கருப்பர் மும்மூர்த்திகளிலும் வேறானவர்; சிருட்டியினாரம்பத்தி
லுண்டான ஜீவர். இதற்கு 'அவன் முதற்சரீரி; அவன் புருஷனென்று
சொல்லப்படுகின்றான்; அவன் பூதங்கட்காதிகர்த்தாவென்று சொல்லப்படு
கின்றான்; அந்தப்பிரம்மா சிருஷ்டிக்கு முன்னரிருந்தார்'. 'சிருட்டிக்குமுன்
னர் இரணிய கருப்பரிருந்தார்' என்றற் றொடக்கத்துச் சுருதிகள் ஆதா
மாம்" என்பது வேதாந்தபரிபாஷை.

நேத்திரேந்திரிய ஞானத்திற்கு விரோதியாயும், பிரகாசத்தால் நாச
மடைவதாயும் மின்னல்முதலியனபோன்று விரைவிற்றோன்றியழியுந்தன்
மையதாயும் பரிசமின்றி (ஆவரண) உருவமுடையதாயுமுள்ள இருள் சம்
சார வேதுவான தேகத்தைக் குறித்துக் காரணமாகா திருத்தலின் அது
பற்றி அதனுற்பத்தியும், ஆகாயமே பொருள்களி னிருப்பு நோக்கித் திக்
கென்று கூறப்படுதலாலும் சர்வ கற்பனைக்கு மேதுவான அவித்தையே



35. தூலமே மருவுஞ் சீவன் சொல்லிய விசுவ னாகுந்
தூலமே மருவு மீசன் சொலும்விராட் புருட னாகுந்
தூலமே யன்ன கோசந் துன்னுஞ்சாக் கிரவ வத்தை
தூலகற் பனையீ தென்று தொகுத்தது மனத்திற் கொள்வாய்.

---

இந்த ¶ ஸ்தூலதேகத்திற் பொருந்திய ஜீவனும் ஈசனும் முறையே † விசுவனென்றும் ‡ விராட்புருட னென்றும் சொல்லப் படுவர். ஸ்தூலதேகமே அன்னமய கோசமாம்; அகக்கரணமும் புறக்கரணமும் சம்பூர்ணமாக வியவகரிக்கும் $ சாக்கிராவஸ்தையாம். இதுகாறும் * ஸ்தூலப் பிரபஞ்ச வத்தியாசம் சங்கிரகமாகக் கூறப்பட்டது. (35)

---

காலசப்தத்தாற் கூறப்படுதலாலும் அவ்வேது பற்றி அவற்றினுற்பத்தியும்
சிருஷ்டிக் கிரமத்தில்கூறாது விடப்பட்டன வென்பதிங் கறியத்தக்கதாம்.
பொருள்களின் புடைபெயர்ச்சியே முன்பின் நோக்கம்பற்றிக் காலமெனக்
கூறப்படுகின்றமையின்,காலமென்பதற்குப்பொருள் பொருள்களின் புடை
பெயர்ச்சியேயன்றி வேறின்றாமென்று கூறுவாருமுளர்.

¶ ஸ்தூலதேக வியஷ்டியிற் பொருந்திய ஜீவனெனவும் ஸ்தூலதேக சமஷ்டியிற் பொருந்திய ஈசனெனவுங் கொள்க.

† ஸ்தூலசரீர வியட்டியபிமானி, வியாவகாரிக ஜீவன், புத்திப்பிரதிபலித சைதன்னியன், சிதாபாசன், விட்சேபரூபன், க்ஷேத்திரஞ்ஞன், சரீரி, பிரமாத்ரு, கர்த்ரு, போக்திரு, சம்சாரி, விஷயி, பாவாத்மா, விஞ்ஞானமயன், துவம்பதார்த்த முக்கியார்த்தன் என்றற் றொடக்கத்தன விசுவனது பரியாயநாமங்களாம். விசுவனென்பதன் பொருள் தேகேந்திரிய முதலியவற்றில் வியாபித் திருப்பவ னென்பது.

‡ ஸ்தூலசரீர சமஷ்டியபிமானி, வைராஜசன் என்றற்றொடக்கத்தன விராட்புருடனது பரியாயநாமங்களாம். விராட் புருடன் என்பதன் பொருள் சராசரவடிவப் பிரபஞ்சத்தை யங்கமாக வுடையவனென்பது.

$ காரண சரீரம் சுழுத்தியவத்தையும், சூக்குமசரீரம் சொப்பனவத்தையும் ஸ்தூலசரீரம் சாக்கிராவத்தையும் நிகழுதற்கிடமாமெனக்கொள்க.

* அவ்வியக்த முதல் தமோகுணப் பிரதான மாயையீறாயுள்ளவை அவ்வியாகிருதமென்றும், அபஞ்சீகிருத பஞ்சமகா பூதங்கள் அவற்றின் காரியமாகிய சூக்குமசரீரமென்னுமிவை அமூர்த்தமென்றும், பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்கள் அவற்றின் காரியமென்னுமிவை மூர்த்தமென்றுங் கூறப்படும்.

ஈசுவானது ஸ்தூல சூக்கும காரண சரீரமாகிய விராட்டு, இரணிய கருப்பம், அவ்வியாகிருதம் (மாயை) என்பவற்றுள், அயன் விராட்டிலும், அரி இரணிய கருப்பத்திலும், அரன் அவ்வியாகிருதத்திலும் அந்தர்க்கதமாவர்.

36. சீரிய வீச னுர்க்குஞ் சீவர்க்கு முபாதி யொன்றே
லாரிய குருவே பேத மறிவதெப் படியென் றக்கால்
காரிய வுபாதி சீவன் காரண வுபாதி யீசன்
வீரிய மிகுச மட்டி வியட்டியாற் பேத மாமே.

37. மரங்கள்போல் வியட்டி பேதம் வனமெனல் சமட்டி பேதஞ்
சரங்கடா வரங்கள் பேதத் தனியுடல் வியட்டி யென்பார்
பரம்பிய வெல்லாங் கூட்டிப் பார்ப்பதே சமட்டி யென்பா
ரிரங்கிய பலசீ வர்க்கு மீசர்க்கும் பேத மீதே.

---

சீ-வினா:—சுவாமி! ஈசனுக்கும் ஜீவனுக்கும் (ஸ்தூலசூட்சும சரீரவடிவ) உபாதி யொன்றேயென்று கூறப்பட்டது. அங்ஙனமாயின் அவர்களின் வேற்றுமையை யறிவ தெங்ஙனம்?

கு-விடை:—ஈசன் ‡ காரணோபாதியையும் ஜீவன் காரியோபாதியையு முடைத்தாயிருத்தலின் இவர்கள் தம்முள் வேற்றுமையுடையவர்களே யாவர். இவ்வேற்றுமை சமஷ்டியினாலும் வியஷ்டியினாலு முண்டாயிற்று. (36)

சீ-வினா:—அதனை விளக்கல் வேண்டும்.

---

‡ சூட்சும சரீரமும் ஸ்தூல சரீரமும் ஈசனுக்கும் ஜீவனுக்கு முபாதியா யிருக்கின்றன வென்று மேற்கூறப்பட் டிருக்கின்றமை யறிக. ஒரு வஸ்துவைப் பல வஸ்துபோலக் காட்டற் கேதுவா யிருப்பது உபாதி யெனப்படும். ஆகாயம் ஒன்றாயிருந்தும் அது கடோபாதியால் கடாகாசம் மகாகாசமென வியவகரித்தற் கிடமாயிருத்தலை யுணர்க.

ஈசனுக் குபாதியாயுள்ள மாயை காரணோபாதி யென்றும், ஜீவனுக் குபாதியாயுள்ள (அந்தக்கரணம் அதன் சம்ஸ்காரமென்னு மிவற்றோடு கூடிய) அவித்தை காரியோபாதி யென்றும் கூறுவதுண்டு. இவ்விரண்டனுள் மாயை சமட்டி வடிவமும், அவித்தை வியட்டி வடிவமுமாம்.

சர்வஞ்ஞத்துவம், சர்வகாரணத்துவம், சர்வேந்திரியாமித்துவம், சர்வேசுரத்துவம், சர்வசிருட்டித்துவம், சர்வஸ்திதித்துவம், சர்வசங்காரத்துவ மென்னு மிவ்வேழும் ஈசனுக்குக் காரணோபாதியாமென்றும்,

(1) ஞானேந்திரிய பஞ்சகம் கர்மேந்திரிய பஞ்சகம் ஸ்தூலதேகம், (2) ஷை இந்திரியங்களின் விஷயங்கள், (3) மனம், (4) புத்தி, (5) சித்தம், (6) அகங்காரம், (7) பிராணாதி பஞ்சகம் என்னு மிவ்வேழும் ஜீவனுக்குக் காரியோபாதியா மென்றும் கூறுவதுண்டு.



38. கற்பனை வந்த வாறு காட்டினோங் காண்ப வெல்லாஞ்
சொற்பனம் போல மென்றே துணிந்தவன் ஞானி யாவான்
சேற்புதை மழைக்கா லம்போய்த் தெளிந்தவா காசம் போல
வற்புத முத்தி சேரு மபவாத வழியுங் கேளாய்.

---

கு-விடை:—(ஒரு தோப்பினுள்) இஃதொரு விருக்ஷம் இஃதொரு விருக்ஷ மென்றற் போல்வது † வியஷ்டியாம். விருக்ஷ மெல்லாவற்றையு மொருங்குசேர்த்து இஃதொரு தோப்பு என்றற் போல்வது ‡ சமஷ்டியாம். அங்ஙனமே § சராசரவடிவாய்த் தம்முள் வேற்றுமையுடைய உடல்களிற் சீவர்கட்குத் தனித்தனி நானானென்றுண்டாகும் அபிமானமே வியஷ்டியாம். அவ்வெல்லா வற்றையு மொருங்குசேர்த்து அவற்றில் ஈசனுக்குத் தானென் றுண்டாகும் அபிமானமே சமஷ்டியாம். இதுவே ¶ ஜீவேசபேதத்திற்குக் காரணமாம். (37)

---

† இஃதொரு மரம் இஃதொரு மரம் என்றாற் போன்று தனித் தனிப்பொருள் தனித்தனியாக வொவ்வொரு ஞானத்திற்கு விஷயமாவது வியஷ்டி யெனப்படும். வியஷ்டி, தனிமை, ஒருமை யென்பன ஒரு பொருட்கிளவி.

‡ இஃதொரு தோப்பு என்றாற் போன்று பலபொருள்கள் பொதுமையாக வொருஞானத்திற்கு விஷயமாவது சமஷ்டி யெனப்படும். சமஷ்டி, பொதுமை, பன்மை யென்பன ஒரு பொருட்கிளவி.

§ சராசரம் - இயங்குதிணை, நிலைத்திணை.

¶ ஈசனுக் குபாதி மாயையா மென்றும் ஜீவனுக் குபாதி யவித்தையாமென்றும் காரணசரீரவத்தியாசங் கூறுமிடத்துப் பிரித்துக்கூறினமையின் ஆண்டு ஈசனுக்கும் ஜீவனுக்கு முபாதியொன்றென்னுமாசங்கை யின்றாம். சூக்குமசரீர வத்தியாசங் கூறுமிடத்து அஃதீசனுக்கும் ஜீவனுக்கு முபாதியாமென்றும், ஸ்தூல சரீர வத்தியாசங் கூறுமிடத்து அஃதீசனுக்கும் ஜீவனுக்கு முபாதியாமென்றும் கூறினமையின் சூக்குமசரீர வுபாதியும் ஸ்தூலசரீர வுபாதியும் ஈசனுக்கும் ஜீவனுக்கு மொன்றாயிருக்குமாயின் அவர்களது வேற்றுமையை யறிவது எங்ஙனமாமென வினவப்பட்டது. அதற்குவிடை சூக்குமசரீர சமட்டியும் ஸ்தூலசரீர சமட்டியும் ஈசனுக்குக் காரணோபாதியாம்; சூக்குமசரீர வியட்டியும் ஸ்தூலசரீர வியட்டியும் ஜீவனுக்குக் காரியோபாதியாம். அவற்றால் அவர்கட்கு வேற்றுமை யுண்டென்று கூறப்பட்டது. சமட்டி காரணவடிவ மென்றும் வியட்டி காரியவடிவ மென்றும் கருதப்பட்டன. யாண்டும் சீவேசுவரர்கட்குச் சுதந்தரமான வுபாதிபேத மின்மையின் அவர்கட்குச் சுதந்தரமான பேதமின்றாம். இன்றாயினும், அவாந்தரமான வுபாதிக்குப் பேதமிருத்தலின் அவர்கட்கு அவாந்தரமான பேதமுண்டென்க. "காரியகாரண வுபாதியினால் ஜீவேசபேதங் காணப்படுகின்றது" என்பது மகா நாராயணோபநிஷத்.

39. அரவன்று கயிறென் றுற்போ லாளன்று தறியென் றுற்போல்
குரவன்சொல் லுபதே சத்தாற் கூறுநூ லொளியைக் கொண்டு
புரமன்று புவன மன்று பூதங்க ளன்று ஞானத்
திரமென்னும் பிரம மென்று தெளிவதே யபவா தங்காண்.

அத்தியாரோபம் அபவாதமென்னு மிரண்டனுள், இதுகாறும் (காரிய)அத்தியாரோபமுண்டான கிரமங் கூறப்பட்டது. காணப்படுவன யாவும் † சொப்பனபதார்த்தம் போன்று மித்தையா மென்று ஐயந் திரிபின்றி நிச்சயித்தறிந்தவனே ஞானியாவன். ஆதலால், ‡ இனி (மேக நெருங்கிய) வருஷகாலமொழிய (அதனால்) சரற் காலத்திற் றெளிந் துள்ள வாகாயம்போல் சர்வதுக்கநிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியு மாயமோட்சமடைதற்குரிய அபவாத வழியையுங் கேட்கக்கடவாய். (38)

† சொப்பன பதார்த்தத்திற்கு நித்திரா தோஷத்தோடு கூடிய அவித்தை அல்லது அந்தக்கரணம் உபாதான (முதற்) காரணமும், சாட்சி சேதனம் விவர்த்தமுமாம்.

வானகிக ராமனைத்துங் கற்பனைமாத் திரம்வாளா வளரா நிற்கு
மானசக நனவுதனிற் கனவுபோ லிராகவனே யறிதி யன்றே
யீனமுறப் பிறப்பில்லை யிறப்பில்லை யெவ்விடத்து மொன்று மென்று
ஞானபர மார்த்தத்தா லிவையெல்லாம் பொய்யாக நண்ணு மன்றே.

என்பது ஞானவாசிட்டம்.

“தேசகால சாமக்கிரியின்றிச் சொப்பனத்தில் யானை மலை முதலிய பதார்த்தங்க ளுண்டாகின்றன. ஆதலால் அவை மித்தையெனப் படுகின் றன; அங்ஙனமே ஆகாசாதிப் பிரபஞ்சத்தின் சிருட்டி பிரஹ்மத்தினின்று முண்டாகின்றது. அந்தப்பிரஹ்மத்தில் தேசகாலங்கள் அற்பமுமில்லை. சொப்பனத்தில் யானைமுதலியவற்றி னுற்பத்திக்குவேண்டிய தேசகாலங்க ளில்லா விடினும் அற்பதேசகாலங்க ளிருக்கின்றன. அங்ஙனமே ஆகா சாதிகளி னுற்பத்தியில் அற்பதேசகாலங்களு மில்லை; ஏனெனின், தேச காலமின்றிய பிரஹ்மத்தினின்றும் ஆகாசாதிகளி னுற்பத்தி கூறப்பட் டிருக்கின்றது. .........ஆதலால் ஆகாசாதிகள் சொப்பனம்போல மித்தை யாம்” என்பது விசாரசாகரம்.

‡ சோகமுறு சங்கற்ப நாசத்தான் மனமாளிற் றென்று தொட்ட
மோசமெனு மூடுபனி விட்டகலுஞ் சரற்கால முதிர வந்தா
னாகம்விளங் குவதென்ன நல்லறிவு மாத்திரமாய் மாயா தாகி
யேகமாய் வடிவின்றிப் பிறப்பிறப்பி லாப்பிரம மிலங்கு நொய்தாய்.

என்பது ஞானவாசிட்டம்.



40. படமுநூ லும்பொற் செய்த பணியும்பொன் னும்போற் பார்க்
கடமுமண் ணும்போ லொன்றுங் காரிய கார ணங்க [கிற்
ளுடன்முதற் சுபாவ மீறு வொன்றிலொன் றுதித்த வாறே
யடைவினி லொடுக்கிக் காண்ப தபவாத வுபாய மாமே.

† அதத்வியாவிருத்திவடிவ அபவாத விலக்கணங் கூறல்.

இது பாம்பன்று கயிறென்று தெளிந்தாற்போலவும் இவ்வுரு கள்ள னன்று கட்டையென்று தெளிந்தாற் போலவும் சற்குரு கூறிய பாமோப தேசத்தாலும் வேதாந்தசாஸ்திர விசாரணையினாலும் ‡ ஆத்மாவானது ஸ்தூல சூட்சும காரண தேகமுமன்று, சதுர்த்தச புவனமு மன்று, பஞ்சீ கிருத அபஞ்சீகிருத பூதங்களுமன்று, (அவற்றின் காரணங்களுமன்று, அவற்றின் அபாவமு மன்று), நிர் விசேஷ சின்மாத்ர வடிவப் பிரஹ் மமே யென்று ஐயந்திரிபின்றித் தெளிவதே அபவாதமாம். (39)

லயக்கிரமவடிவ அபவாத விலக்கணங் கூறல்.

காரியமாகிய பிரபஞ்சத்தையும் அதற்குக் காரண (அதிஷ்டான) மாகிய பிரஹ்மத்தையும் (சுருதி யுக்தி யநுபவவாயிலாக) ஆராய்ந்து பார்க்குமிடத்து அவை ஆடையும் நூலும் போலவும் ஆபரணமும் பொன் னும் போலவும் கடமும் மண்ணும் போலவும் (கற்பிதத்திற் பேதமாய் வாஸ்தவத்தில்) அபேதமாம். ஆதலால் § ஸ்தூல தேகமுதல் அவ் வியக்தமீறாக ஒன்றிலிருந்து மற்றொன்றுண்டான படியே முறையாக வொடுக்கி ஆத்மாவிற்கு வேறாகாத பிரஹ்மத்தைத் தவிரப் பிறிதொன் றென்ப தில்லையென் றுணர்வது அபவாதமாம். (40)

† அதத் வியாவிருத்தி - அஃதல்லாததி னின்றும் நீங்குதல்.

‡ மடமையுந் துயரு மவயவ நிறைந்த வடிவமு முடையனு னென்றே
படர்தரு மவற்றிற் கேற்றபன் னடையாற் பாசமும் பந்தமு முளவாஞ்
சடமுறு மிவற்றி லேதுமொன் றல்லேன் றசைநரம் பென்புநீ ரல்லே
னுடலின்மே லான பரமநா னென்னு முறுதியோர் மாயைசெற் றுணர்ந் [தோர்.

என்பது ஞானவாசிட்டம்.

§ ஸ்தூலசரீர முதல் அவ்வியக்தமீறு முள்ளவற்றைப் பிரஹ்மத்தி லொடுக்கிக்காண்டலாவது:—நூலிற்றோன்றிய வாடை நூலை யன்றியும் பொன்னிற்றோன்றிய பணி பொன்னை யன்றியும், மண்ணிற் றோன்றிய கடம் மண்ணை யன்றியு மில்லாமை போன்று, பஞ்சீகிருதபூதத்திற் றோன் றிய ஸ்தூலதேகமுதலியன பஞ்சீகிருத பூதத்தையன்றியும், அபஞ்சீகிருத பூதத்திற்றோன்றிய அந்தப் பஞ்சீகிருதபூதம் அப்பூதத்தையன்றியும், அவ் வபஞ்சீகிருத பூதத்திலேயே தோன்றிய சூக்குமசரீரம் அதனையன்றியும்,

41. தூடண தமத்தில் வந்த தோற்றமாஞ் சத்தி செய்யு
மேடணை விகாரஞ் சொன்னீ ரிரண்டுசத் திகளேன் றீரே
மூடலாஞ் சத்தி செய்யு மோகமுஞ் சொல்லு மையா
கேடறக் குருவே யென்னக் கிருபையோ டருள்செய் வாரே.

42. தானிகர் தனக்கா மீசன் றனையுந்தங் களைத்தாங் கண்ட
ஞானிக டமையு மன்றி நாஸ்திந பாதி யென்னு
மூனிடை யுயிர்க ளுள்ளத் துணர்விழி குருடாம் வண்ணம்
வானிலந் திசைகண் மூடு மழைநிசி யிருள்போன் மூடும்.

சீ-வினா:—பரமகுருவே! தேவரீர் இதுகாறும் தமோகுணப் பிரதான மாயையிற்றோன்றிய ஆவரண விட்சேபமென்னுஞ் சத்திக ளிரண்டனுள், விட்சேபசத்தி செய்யும் விருப்பிற் கிடமான ஆகாயாதிப் பிரபஞ்சவடிவ காரியத்தைக் கூறியருளினீர். இனி ஆவரண சத்திசெய்யும் மோகத்தையும் எனது தீமையகலுமாறு கூறியருளும்படி பிரார்த்திக்கின்றேன். (41)

து-விடை:—அன்பனே! ஆவரணசத்தியானது † சர்வஞ்ஞத்துவாதி குணங்களாலே தனக்கொப்பு முயர்வு மின்றிய பரமேசுவரனையும் தமது

அவ்வபஞ்சீகிருத பூதத்துள்ளும் பிருதிவி அப்புவையன்றியும், அப்பு தேயு வையன்றியும், தேயு வாயுவையன்றியும், வாயு ஆகாயத்தையன்றியும், அவ் வாகாயமும் தமோகுணப்பிரதான மாயையின் விட்சேபசத்தியிற் றோன் றினமையின் அஃததனையன்றியும், ஆவரணசத்தியும் விட்சேபசத்தியும் தமோகுணப் பிரதான மாயையிற் றோன்றினமையின் அவை யதனையன்றி யும், அத்தமோகுணப் பிரதானமாயையும் ஜீவவியவகாரத்திற்கேதுவாகிய அவித்தையும் ஈசுவர வியவகாரத்திற் கேதுவாகிய மாயையும் அகங்காரத் திற் றோன்றினமையின் அவை அகங்காரத்தையன்றியும், அகங்காரம் மகத் தத்துவத்திற் றோன்றினமையின் அஃததனையன்றியும், அம்மகத்தத்து வம் அவ்வியக்தத்திற் றோன்றினமையின் அஃததனையன்றியும், அவ் வவ் வியக்தம் கயிற்றின்கணரவுபோன்று பிரஹ்மத்தின்கண் கற்பனையாயிருத் தலின் அது பிரஹ்மத்தை யன்றியுமில்லை யென்றறிவதாம். "ஒன்றுன சித்தே பிரபஞ்சத்திற் குபாதானகாரணம்; பிரஹ்மத்தைத்தவிர வேறி ன்று; ஆதலால் இந்தச் சகலப் பிரபஞ்சமும் பிரஹ்மமே, வேறன்று". என் பது யோகசிகோப நிஷத்.

† "அப்பாற் குபாதி யாகி யமோககா ரணியா மாயை" என்று வேதாந்த சூளாமணி கூறுவதும், "இவ்வீசன், சத்தெனுந் தன்னை மறைப் பிலா மையினற் தருகதி தேடிலன்" என்று திருப்போரூர்ச் சந்நிதிமுறை கூறுவது மிங்கறியத்தக்கனவாம்.



43 பூன்றமாம் பிரமத் துக்கும் புறத்துள விகாரங் கட்கு
மான்றகூ டத்த னுக்கு மகத்துள விகாரங் கட்குந்
தோன்றிய பேதஞ் சற்றுந் தோன்றுமன் மறைத்து மூடு
மூன்றிய பவவி யாதி யுண்டாக்கு முபாதி யீதே.

44. ஆதார மறைந்து போனு லாரோப மெங்கே தோன்று
மாதார மறையா தாகி லாரோப மிலையே யென்று
லாதாரஞ் சமம்வி சேட மாமென விரண்டு கூறு
மாதாரஞ் சமமா மெங்கு மாரோபம் விசேட மாமே.

நிசவடிவினை யுள்ளவாறறிந்த ஞானிகளையு மறையாது, * ஆகாயம், பூமி, திக்கு என்றற் றொடக்கத்தனவற்றை விழுக்குத் தோன்றவாறு மறைக்கின்ற கார்காலத்திரவினிருள்போல, பிரத்யகாத்மாவில்லை (நாஸ்தி) அஃதிருந்தால் தோன்றாதா (நபாதி) என்று வியவகரிக்கும் ஜீவர்களது ஞான திருஷ்டியானது தருடாதுமாறு அதனைமறைக்கும். அஃதே ஆவரணசத்தி செய்யும் மோகமாம். (42)

சீ-வினா:—இதனை விளக்கிக்கூறியருளும்படி பிரார்த்திக்கின்றேன்.

து-விடை:—பரிபூரண வடிவப் பிரஹ்மத்திற்கும் புறம்பே இதமாகார விருத்திக்கு (இஃதெனும் வடிவ ஞானத்திற்கு) விஷயமாயுள்ள ஆகாசாதி வடிவப்பிரபஞ்சத்திற்கும், (பிரஹ்மத்தினும் வேறகாது) ஞான வடிவாயுள்ள கூடஸ்தனுக்கும் அகத்தே அகமாகாரவிருத்திக்கு (நானெனும் வடிவஞானத்திற்கு) விஷயமாயுள்ள அகங்கார முதலிய தத்துவங்கட்கு முள்ள வேறுபாடு ஞானதிருஷ்டிக்குச் சிறிதும் விளங்காதபடி அவ்வேறுபாட்டினை ஆவரணசத்தி மறைக்கின்றது. இங்ஙனம் மறைப்பதால் இது பிறவிப்பிணியை யுண்டாக்குமுபாதியா யிருக்கின்றது. (43)

ஆதார அதிஷ்டான ஆரோபங்களின் றன்மையைக் கூறல்.

சீ-வினா:—(மிக்க விருளினுற் கயிறு மறைந்து விடுவது போல ஆவரண சத்தியினல் சர்வத்திற்கும்) ஆதாரமானபிரஹ்மமானது (திருஷ்டிக்குத் தோன்றாது) மறைந்து போமாயின் (கயிற்றரவுபோல) ஆரோப வடிவ உலகம் எவ்வாறு தோன்றும்? (மத்தியான வெயிலிலுள்ள கயிறுபோல) ஆதாரமான பிரஹ்மம் மறைபடாது தோன்றுமாயின் ஆரோப வடிவ வுலகம் (கயிற்றரவு போல) தோன்றமாட்டாது. ஆதலா லிவற்றிற்கு விடையருளுமாறு பிரார்த்திக்கின்றேன்.

* அதுதா னறியார்க் கிடர்நல்கி யதுவே யதுவல் லாசதுபோற்
றிசமாய் நிற்கு மிம்மாயைச் சித்தி ரந்தா னற்புதமே
பொதுவா யங்க மத்தனையும் புணர்ந்து பிறிவற் றிருக்கவுந்தா
னிதமா யுயிரை யுயிர்காணு திருக்க மயக்கு மியாரையுமே.

என்பது ஞானவாசிட்டம்.

சு - விடை:—அன்பனே ஆதாரமானது சமம் விசேடமென விரு வகைத்தாம். அவற்றுள், † அதிக தேசத்திலும் அதிக காலத்திலுமுள்ள ஆதாரம் சம ஆதாரமாம்; அற்பதேசத்திலும் அற்பகாலத்திலுமுள்ள ஆரோப ஆதாரம் விசேட ஆதாரமாம். (44)

---

† கயிற்றை யறியாமையினு லதனிடத்துப் பாம்புதோன்றியவிடத்து
இது பாம்பென் றுணரப்படுகின்றது; கயிற்றை யறிந்த போது இது கயி
றென் றுணரப்படுகின்றது. ஈண்டு இது என்பது சம ஆதாரமும், கயி
றென்பது விசேட ஆதாரமும், பாம்பென்பது ஆரோபமுமாம்; தோன்றிய
பாம்பு கயிற்றின் கண்ணதாகலின், கயிறு பாம்பிற்கு ஆரோப வாதாரமாம்.
இவ்விசேடாதாரம் அதிஷ்டானமெனப்படும்.

இது எனும் சமவாதாரமும், கயிறெனும் விசேடாதாரமும் ஒன்றே
(கயிறே) யா யிருப்பினும், சமவாதாரம் இது பாம்பெனும் மயக்ககாலத்
தும் இது கயிறெனும் தெளிவுக் காலத்தும் விளங்குவதுபற்றியும், விசேட
வாதாரம் மயக்ககாலத்து விளங்காது தெளிவுக்காலத்து விளங்குவது பற்றி
யும் அவ்விரண்டிற்கும் வேற்றுமை கற்பித்துக் கூறப்பட்டது.

(1) எது பிராந்தி காலத்தும் பிராந்தியின் நிவிர்த்தி காலத்தும்
தோற்றுகின்றதோ அது சம ஆதார (சாமானிய அம்ச)மாம்.

(2) எது பிராந்திகாலத்துத் தோற்றுவதில்லையோ எதன் தோற்றத்
தால் பிராந்தி நீங்குகின்றதோ அது விசேட ஆதார (விசேஷஅம்ச அல்
லது அதிஷ்டான) மாம்.

(3) எது அஞ்ஞானகாலத்துத் தோற்றுகின்றதோ ஞானகாலத்திற்
றோற்றுவதில்லையோ அது ஆரோப (கற்பிதவிசேஷ அம்ச) மாம்.
ஈண்டு இது என்பது சாமானிய அம்சமும், கயிறென்பது யதார்த்த
விசேஷ அம்சமும், பாம்பென்பது கற்பித விசேஷ அம்சமுமாம்.

இங்ஙனமே, தன்னை யறியாமையினுல் தன்னிடத்திற் றோன்றிய
தேகாதிவடிவப் பிரபஞ்சம் நான் மனிதன், நான் அந்தணன் என்றற்
றொடக்கத்தனவாக வுணரப்படுகின்றது; தன்னை யறிந்தபோது நான்
சிவம் என்றுணரப்படுகின்றது. ஈண்டு நான் என்பது சம ஆதாரமும், சிவ
மென்பது விசேடஆதாரமும், பிரபஞ்சமென்பது ஆரோபமுமாம். சிவம்
பிரபஞ்ச வத்தியாசத்திற்கு அதிஷ்டானமா யிருத்தலின் அது விசேட
ஆதாரமாம். நான் என்னும் சம ஆதாரமும் சிவ மென்னும் விசேட ஆதார
மும் ஒன்றேயாயிருப்பினும், நான் என்பது நான் சீவன் என அஞ்ஞான
காலத்தும் நான் சிவமென ஞானகாலத்தும் விளங்குவதுபற்றியும், சிவ
மென்பது அஞ்ஞானகாலத்துத் தோன்றாது ஞானகாலத்திற்றோன்றுவது
பற்றியும் இவ்விரண்டிற்கும் வேற்றுமை கற்பித்துக் கூறப்பட்டது.



45. சகமதி லிதுவென் சுட்டாஞ் சமானந்தான் மறைந்தி டாது
மிகவிது கயிறு மென்னும் விசேடந்தான் மறைந்து போகு
மகமெனுஞ் சமானந் தன்னை யஞ்ஞான மறைத்தி டாது
பகர்விசே டமதாஞ் சீவன் பரமெனு மதனை மூடும்.

---

† மந்தாந்தகாரத்தில் எதிரே கிடப்பதான கயிற்றில் இது பாம்பென்
னும் வியவகார நிகழுமிடத்து இதுவென்றுசுட்டப்படுவதான சாமானிய
வடிவ மறையாது இது கயிறென்னும் விசேடவடிவம் மறைந்துவிடுகின்
றது. அதுபோல கற்பித விசேடவடிவ ஜீவன் (நானிருக்கிறே னென்றற்
றொடக்கத்து வியவகாரத்தில்)ஆவரணமானது நானேன்னும் சாமானிய
வடிவ ஆதாரத்தை மறையாது, (நான் சதாநந்த வடிவன், நான் சிதா
நந்தவடிவன், நான் நித்தியாநந்த வடிவன், நான் பூரணாநந்த வடிவ

---

† கயிற்றிற்கிரண்டு வடிவமுண்டு: ஒன்று சாமானியவடிவம்; மற்
றொன்று விசேடவடிவம். இது கயிறென்புழி இது என்பது சாமானிய
வடிவமும் கயிறென்பது விசேடவடிவமுமாம். இது சர்ப்பமென்று மித்தி
யா சர்ப்பத்துடன் அபின்னமாய்ப் பிராந்திகாலத்திலும் தோன்றுகின்ற
'இது' என்னும் வடிவம் சமானிய வடிவமாம்; பிராந்திகாலத்தில் எதன்
வடிவம் தோற்றாது எது தோற்றுவதால் பிராந்தி நீங்குகின்றதோ அது
இரச்சுவின் விசேடவடிவமாம், அங்ஙனமே ஆத்மாவிற்கும் இரண்டு வடிவ
முண்டு: ஒன்று சாமானியவடிவம்;மற்றொன்று விசேடவடிவம். சத்வடிவம்
சாமானியவடிவம்; அசங்கத்தன்மை, கூடஸ்தத்தன்மை, நித்திய முத்தத்
தன்மை முதலியன விசேடவடிவம். ஏனெனின், ஸ்தூலசூக்கும சங்காத
மிருக்கின்றதென்புழி ஸ்தூலசூக்கும சங்காதத்தின் பிராந்தி சமயத்திலும்
மித்தையான சங்காதத்திற்கு வேறாகாது சத்வடிவம் விளங்குகின்றது.
ஆதலால், ஆத்மாவின் சத்வடிவம் சாமானிய வடிவமாம். ஸ்தூலசூக்கும
சங்காதத்தின் பிராந்தி சமயத்தில் ஆத்மாவின் அசங்க கூடஸ்த நித்திய
முக்தவடிவம் தோற்றுவதில்லை; ஆனுல், அசங்கமுதலிய வடிவ ஆத்மா
தோற்றுவதால் சங்காத (சரீர) ப் பிராந்தி நீங்குகின்றது. ஆதலால், அசங்
கத்தன்மை, கூடஸ்தத்தன்மை, நித்திய முக்தத்தன்மை, வியாபகத்தன்
மை முதலியன விசேடவடிவங்களாம். எல்லாப் பிராந்திகளிலும் சாமானி
யவடிவம் ஆதாரமாம்; விசேடவடிவம் அதிஷ்டானமாம். சர்ப்பத்திற் காசி
ரயமான விரச்சுவின் சாமானிய 'இது' எனும் வடிவம் சர்ப்பத்திற்காதார
மாம்; விசேட இரச்சுவடிவம் அதிஷ்டானமாம். அங்ஙனமே மித்தியாப்
பிரபஞ்சத்தின் ஆசிரயமான ஆத்மாவின் சாமானிய சத்வடிவம் பிர
பஞ்சத்தின் ஆதாரமாம்; அசங்கத்தன்மை முதலிய விசேட வடிவங்கள்
அதிஷ்டானமாம். ஆதார அதிஷ்டானங்கட்குச் சிறிது வேற்றுமை யிங்ங
னம் ஸ்ரீசங்கரபூஜ்ஜிய பகவத் பாதாசாரிய சுவாமிகளின் சிஷ்ய பரம்பரை
யினரு ளொருவராகிய சர்வாத்ம முனிவரால் கூறப்பட் டிருக்கின்றது.

46. கேவல நிலைதோன் ருமற் கெடுத்தது பஞ்ச கோசஞ்
சீவனுஞ் சகத்து மாகிச் செனித்தவிட் சேப மன்றே
வாவ ரணந்தா னேபா ழனர்த்தமேன் றுரைத்த தேதோ
மேவருங் குருவே யென்று வினவிடின் மகனே கேளாய்.

47. தோற்றமாஞ் சத்தி தானுந் துன்பமாம் பவமா னலு
மாற்றலான் முத்தி சேர்வார்க் கனுகூல மாகுங் காணீ
யூற்றமாம் பகற்கா லம்போ லுபகார நிசியா லுண்டோ [தே.
மாற்றமேன் னுரைப்பேன் மைந்தா மறைப்பது மிகப்பொல்லா

னேன்னும்) பிரஹ்மமாகிய யதார்த்த † விசேட வடிவ ஆதாரத்தை மறைக்கின்றது. அங்ஙனம் மறைப்பதினால் ஆவரண சக்தி பிறவிப் பிணிக் கேதுவாயிற்று. (45)

சீ-வின:—பரமாசிரியரே ! ஜீவப்பிரஹ்ம ஐக்கிய நிலையை விளங்காவாறு மறைத்துக்கெடுத்தது அன்னமயகோச முதலிய பஞ்சகோசமும், அவற்றினபிமானியான சிதாபாச (ஜீவ) னும் ஆகாயமுதலிய சகத்துமா யுண்டான விட்சேபசத்தியல்லவா? அங்ஙனங் கொடியதாயுள்ள விட்சேபசத்தியை நிந்தியாது ஆவரண சத்தி ஞானதிருஷ்டியைக் குருடாம்வண்ண மறைத்துப் பாழாக்கிற்றென்றும், பிறவிப் பிணியை யுண்டாக்கு முபாதியென்றும் அதனை வெறுத்துக் கூறியகாரணமென்ன? அதனைத் தேவரீர் விளங்க வுணர்த்தும்படி வேண்டுகின்றேன். (46)

ஆவரணசத்தியின் பிரதிகூலத்தன்மையையும்
விட்சேபசத்தியின் அனுகூலத்தன்மையையும் கூறல்.

கு-விடை:—அன்பனே ! விட்சேபசத்தியானது பஞ்சகோசமும் சீவனும் சகத்துமாயுண்டாயிருத்தலால் அவிவேகிகட்குத் துன்பத்தைத் தரும் பிறவித்துக்காரணமாயினும், தமதுபிராயத்தினத்தினால் முத்தியை

† ஆன்மா நிர்விசேஷ சின்மாத்திர வடிவமாகலின் அது சாமானிய வடிவமும் விசேட வடிவமுமன்றாம். அங்ஙனமாயினும் அஃது ஆவரணத்தால் சாமானிய விசேட வடிவமாகத் தோன்றுகின்றதென் றீண் டுகித் தறியத்தக்கதாம்.

மறைமுத றனக்கு நாமரூ பங்கண் மருவுத லில்லையே யெனினுங்
கறையற விளங்கு மாயையி னாலே கற்பிக்கப் பட்டன வாகும்
என்பது சூதசங்கிதை.



48. சுழுத்தியிற் பிரள யத்திற் றோற்றமாஞ் சகங்கண் மாண்டு
மழுத்திய பவம்போய் முத்தி யடைந்தவ ரோருவ ருண்டோ
முழுத்தவிட் சேப மெல்லா முத்தியிற் கூட்டு கிற்குங்
கொழுத்தவா வரண முத்தி கூடாமற் கெடுத்த கேடே.

யடைய விரும்பும் விவேகிகட்குத் குருசாஸ்திராதி வடிவமாகச் சாதனமாம். ஆதலால் விட்சேபசத்தி யாவர்க்கும் கேடுதியைத் தருவதன்றாம். யாவர்க்கும் பிரயத்தநத்தை யுண்டுபண்ணுவதற் கேதுவான பகற்காலம் போல † இராக்காலத்தால் அவர்கட்கு உபகாரமுண்டாகின்றதா ? இல்லையே. இவ்வுவமானத்தால் ஆவரணசத்தி மிகக் கொடிய தென்று விளங்கவில்லையா ? (47)

மேலும், ‡ நித்தியப்பிரளய மென்னும் $ சுழுத்தி யவஸ்தையிலும் ¶ மகாப்பிரளயத்திலும் விட்சேப (தோற்றல்) ரூபமான உலகமானது

† இராக்காலம் யாவர்க்கும் நித்திரைக்கேதுவாயிருந்து மிக்க துன்பத்தைத் தருதல்போல ஆவரணசத்தியும் யாவர்க்கும் பிறவிக்கேதுவாயிருந்து மிக்க துன்பத்தைத் தருதலால் (விட்சேபசத்தியினும்) அவ்வாவரண சத்தியே மிகக்கொடி தென்றவாறும்.

‡ க்ஷணத்திற்கு க்ஷணங் காரிய பதார்த்தங்களனைத்தும் தீபச்சுடர் போன்று நாசமாதல் நித்தியப் பிரளயமென்று கூறுதலுமுண்டு.

$ " அதில் (சுழுத்தியில்) சகல காரியங்களும் லயமடைகின்றன. தர்மாதர்மம் பூர்வசம்ஸ்காரமாகிய விவை சுழுத்தி காலத்திற் காரணவடிவமாக விருக்கின்றன. இங்ஙனங் காரண வடிவமாக விருப்பதால் உறங்கி விழித்தவனுக்குச் சுகதுக்காதிகளின் அனுபவத்திற்குப் பொருந்தாமையில்லை; ஸ்மரணத்திற்கும் பொருந்தாமையில்லை. சுழுத்தியில் அந்தக்கரணத்திற்கு நாச மங்கீகரிக்கு மிடத்து அதனது வசமான பிராணாதி கிரியைகட்கும் பொருந்தாமை யில்லை; உண்மையில் சுவாசாதிக ளில்லையாயினும் அவை காணப்படுதல் மற்றவர்களின் பிராந்தியேயாம்; உறங்குபவனது உடல் காணப்படுவது போலும்......அல்லது அந்தக்கரணத்திற்கு ஞானசத்தி கிரியாசத்தியென விரண்டுசத்தியுண்டு. அவற்றுள், ஞானசத்தியுடன் கூடிய அந்தக்கரணத்திற்குச் சுழுத்தியில் நாசமுண்டு; கிரியா சத்தியுடன் கூடிய அந்தக்கரணத்திற்கு நாசமின்று; ஆகவே, பிராணாதிக ளிருப்பதில் விரோதமில்லை" என்பது வேதாந்தபரிபாஷை.

¶ பிரம்மாவின் நூறு வயதிற்குப் பின்னர் அவரோடு ஆகாயாதி சர்வபூதங்களும் நாசமடைதல் மகாப்பிரளயமாம்.

இவ்விருவகைப் பிரளயமேயன்றி வேறு மூன்று பிரளயமுமுண்டு. வருமாறு:—பிரம்மாவி னிராத்திரியாகிய நிமித்தத்தா லுண்டாகும் பூமுதலிய கீழ் மூன்றுலகங்களின் நாசம் நைமித்திகப்பிரளயமாம். பிரம்மாவின் தினத்தி லுண்டாகும் பதினான்கு மநுவந்தரங்களுள் ஒவ்வொன்றனுசம் தினப்பிரளயமாம். காரணசகித ஜகத்திற்குத் தத்துவஞானத்தா லுண்டாகும் பாதம் ஆத்தியந்திகப் பிரளயமாம்.

49. சுத்தியில் வெள்ளி போலத் தோன்றிய தோற்ற மான
சத்தியும் பொய்யே யென்றாற் சத்திசா தனமா வந்த
முத்தியும் பொய்யா மென்னின் மோகநித் திரைவி லங்கா
னித்திரை தெளியு மாபோ னிருவாண நிலைமெய் யாமே.

நாசமடைகின்றது; அவ்வாறு நாசமடைந்தும், அப்போது தம்மைத் துன்பத்திலழுந்தச்செய்துள்ள பிறப்பினின்றும் நீங்கி முத்தியடைந்தவர் யாவரேனு மொருவருளரா? இல்லையே; ஆதலால் பஞ்சகோசமும் சீவனும் சகத்துமாகித் தோன்றிய விட்சேப சத்தியானது புண்ணிய கர்மபரிபாகவசத்தால் பிறவிக் கஞ்சியவரை (குருசாஸ்திராதி வடிவாகநின்று) † பரம்பரையாக வாவது நேரேயாகவாவது முத்தியடையச் செய்யும். ஆவரண சத்தியோ (அவ்வாறன்றாது வித்தில் முளைபோலச் சீவர்களிடத்திருந்து அவர்கள்) முத்தியடையாவாறு செய்தலின், அது மிகவுங் கொடியதாம். (48)

மித்தியாவடிவ விட்சேபசத்தியாலுண்டாகு முத்தி யெவ்வாறு
சத்தியமாமென்னும் வினுவிற்கு விடைகூறல்.

சீ-வினு:—கிளிஞ்சலில் வெள்ளிபோலப் பிரஹ்மத்தி னிடத்துத்தோன்றியவிட்சேபசத்தி மித்தையாகவிருத்தலின் அச்சத்தி (குருசாஸ்திராதி) வாயிலாக வருகின்றமுத்தியும் (அச்சத்திபோல) மித்தையாகுமல்லவா? (அங்ஙனமாயின் "அவன் மீண்டும் வருகின்றதில்லை" என்னுஞ் சுருதியால் மோட்சம் நித்தியமென்பதெவ்வாறு பொருந்தும்)?

கு-விடை:—அன்பனே! ‡ மித்தியா வடிவ நித்திரையிற் கண்ட புலி முதலிய விலங்குகளால் நித்திரை தெளிந்தவிடத்து நித்திரையினபாவ வடிவமான சாக்கிரம் சத்தியமாவதுபோல மித்தையாகிய § விட்சேப சத்திவடிவ குருசாஸ்திராதிகளா லுண்டாகும் முத்தியும் சத்தியமாம். இதி லியாதும் சந்தேகமில்லை யல்லவா? (49)

† பரம்பரை என்றது கர்மோபாசனாதிகளை; நேரே என்றது திட தத்துவ ஞானத்தினை.

‡ மித்தியாவடிவ சொப்பன ஸ்திரீயின் போகத்தால் சத்தியமான வீரியவீழ்ச்சியும், கற்பிதமான சிலா பைரவாதிகளைப் பூசித்தலால் சத்தியமான சம்பத்தும், யதார்த்தமல்லாத கண்ணாடியின் பிரதிபிம்ப முகத்தால் சத்தியமான முகத்தின் அழகு முதலியவற்றை யறிதலுஞ் சித்திப்பதுபோல மித்தியாவடிவ குருசாஸ்திராதிகளாலும் சத்தியமான முத்தியும் சித்திக்கின்றதென்பதாம்.

§ குருவினாலும் வேதாந்த வாக்கியத்தினாலு முண்டாகும் நான் பிரஹ்மம் என்னு மந்தக்கரண விருத்தியினால் காரண சகித(மாயையோடு



50. இம்பரி னஞ்சை நஞ்சா லிரும்பினை யிரும்பா லெய்யு
மம்பினை யம்பாற் பற்று மழுக்கினை யழுக்கான் மாய்ப்பர்
வம்பியன் மாயை தன்னை மாயையான் மாய்ப்பர் பின்னைத்
தம்பமா மதுவுங் கூடச் சவஞ்சுடு தடிபோற் போமே.

சீ-வினு:—ஆவரண விட்சேபமென்னு மிரண்டு சத்திக்குங் காரணமான மாயையினீக்க மெதனாலுண்டாம்? அதனைத் தேவரீர் திருவாய்மலர்ந்தருளும்படி வேண்டுகிறேன்.

கு-விடை:— † விஷத்தினை அதற்குப் பிரதி கூலமான விஷத்தாலும் வாள் வடிவ முதலிய இரும்பினை அதற்குப் பிரதிகூலமான அரமுதலிய விரும்பினாலும், போர் முகத்தில் பகைவரெய்யும் அம்பினை அதற்குப் பிரதிகூலமான அம்பினாலும், ஆடை முதலியவற்றிற் பற்றிய அழுக்கினை அதற்குப் பிரதிகூலமான உவர்மண் முதலிய அழுக்கினாலும்

கூடிய) பிரபஞ்சத்தின் நிவிர்த்தியே மோட்சமாம். அத்தியாச வடிவ அரவின் நிவிர்த்தி அதிஷ்டானவடிவ கயிறாதல் போன்று அத்தியாச வடிவ காரண சகிதப் பிரபஞ்ச நிவிர்த்தியும் அதிஷ்டானவடிவப் பிரஹ்மமாம்; அதனின் வேறன்றாம். ஆதலால் மித்தியாவடிவ காரண சகிதப்பிரபஞ்ச நிவிர்த்தியே சத்திய வடிவமா யிருத்தலின் முத்தி சத்தியமாமென்க.

பந்தம் மித்தையா யிருத்தலின் அதனை யொழித்தற்கேதுவாய சாதனமு மித்தையாகவே யிருத்தல் வேண்டும். ஒருவனுக்குச் சொப்பனவுலகத்திலுண்டான நோயைக் கெடுப்பதற்குச் சொப்பனவுலக மருந்தே உபயோகமாவதன்றிச் சாக்கிரவுலகமருந் துபயோக மாவதின்றாம். அங்ஙனமே, மித்தையான சம்சாரத்தை யொழிப்பதற் கேதுவாய சாதனமும் மித்தையாக விருத்தல் வேண்டுமே யன்றிச் சத்தியமாக விருத்தல் கூடாதென்க.

† இரும்பா லிரும்பு திருந்துவபோ லியற்று மனத்தான் மனந்திருந்தும்
திரும்பா நிராசை வடிவாகிச் செறியுந் தன்னா லியற்றுவதாய்
விரும்பா நின்றோர்க் கெளிதான வெய்ய மனத்தி னுபசாந்தி
பெரும்பா ரந்தீர் நற்கதியாம் பிறிதோர் கதியு நன்றாகா.

தன்னுருவ மாய்வதற்கே முயல்வ தாகித் தமமொழித்த வவிச்சையினாற் சகல மான, வின்னலுறு குற்றமிலா விச்சை யெய்து மெய்கணைகள் கணையாலே நஞ்சை நஞ்சாற், றன்னுபகை பகையாலே தீது தீதாற் றடைப்பதுபோ லவித்தைதனைத் துடைத்தல் வேண்டு, முன்னியுறப் பார்த்தலுமே யிதன்சு பாவ மொழிந்துபோய்த் தன்மாய்வா லுதவு மின்பம்.

என்பது வாசிட்டம்

51. இந்தமா யையினுற் சீவர்க் கேழவத் தைகளுண் டாகு
மந்தவே ழவத்தை தம்மை யடைவினின் மொழியக் கேளாய்
முந்தவஞ் ஞான மூடன் முளைத்தல்கா ணுத ஞானஞ்
சந்ததங் கண்ட ஞானந் தழல்கெடல் குளிர்மை யாதல்.

முறையே மருத்துவர், கோல்லர், போர்விரர், வண்ணர் கேடுப்பது போல ஆத்மானுத்ம விசாரமுடையோர் † அசுத்த மாயையினைச்சுத்த மாயையினுற் கேடுப்பர். பின்பு அச் சுத்தமாயையும் பிணஞ்சுடு தடி போல அசுத்த மாயையோடு கேடடுப்போம்; இதுதான் மாயையைக் கேடுப்பதற் குரிய வழி. (50)

* சப்தாவஸ்தையின் றன்மை யுரைத்தல்.

சீ - வினு:—அசுத்த மாயையினைச் சுத்தமாயையினுற் கெடுப்ப தெப்படி ?

† "மனமாயை மாயையிம் மாயை மயக்க, மனமாயை தான்மாயும்" என்று திருமந்திரங் கூறுவதால் மனமே மாயையாமென்பது பெறப்படுதலின் மனத்தை மனத்தாற் கெடுப்பது மாயையை மாயையாற் கெடுக்குமுபாயமாம்.

கெடுக்குமனம் சத்துவகுணத்தால் வைராக்கிய மயமான சாந்த விருத்தியும் கெடப்படுமனம் இரசோகுணத்தால் இராகமயமான குரோத விருத்தியும் தமோகுணத்தால் அஞ்ஞான மயமான மூட விருத்தியுமாம். இது "மனதுசத்துவசொரூபம்" என்னு மிக்கைவல்லிய நவநீதச் செய்யுளாலும் செவ்விதின் விளங்கும்.

பிரயத்தந பூர்வகமாகச் சம்பாதிக்கும் சுத்தமனத்தால் அசுத்தமனம் தடையின்றிக் கெடுமென வீண் டுணர்த்தியவாறும். கெடுக்குமுபாயமாவது சித்தவிருத்தியடங்காது சலித்து ஒருபொருளைப் பற்றுமாயின் பற்று முதிர்ந்து நிச்சயிப்பதற்கு முன்னர் விவேகத்தால் அதனை யுடனே யழித்துவிடுதலாம்.

இது "எந்த வெந்த வாதனைக ளிதயத் தெழுந்த வவையெல்லா, மந்த வந்த விடத்தழிக்கி னதுவே மாயைக் கழிவாகும்" என்று ஞானவாசிட்டங் கூறுவதால் நன்கு விளங்கும்.

* சப்தாவஸ்தையின் சொரூபத்தை யறிவதால் நான்பிரஹ்மமென்னும் ஞானம் கூடஸ்தனுக் குண்டாகின்றதா? ஆபாச (ஜீவ)னுக் குண்டாகின்றதா? என்னும் வினுவிற்கு அந்தஞானம் ஆபாசனுக் கன்றிக் கூடஸ்தனுக் குண்டாவதில்லை யென்னும் விடைபெறப்படும். இதனது விரிவை விசாரசாகரம் நான்காவது தரங்கத்திற் காண்க.



52. பிரமமாந் தனைம றந்த பேதைமை யேயஞ் ஞானம்
பரனிலை காணு மென்று பகர்தலா வரண மூட
னரனெரு கருத்தாற் சீவ ஞனென முளைத்த ரேற்றங் [னம்
குரவன்வாக் கியத்தாற் றன்னைக் குறிக்கோளல் பரோட்ச ஞா

53. தத்துவ விசாரஞ் செய்து சகலசந் தேக மும்போ
யத்துவி தந்தா ணுத லபரோட்ச ஞான மாகுங்
கர்த்தனுஞ் சீவ பேதங் கழிவதே துக்கம் போதன்
முத்தனு யெல்லாஞ் செய்து முடிந்ததா னந்த மாமே.

து-விடை:—அன்பனே! கூறுதும். இந்தமாயைகளாற் சீவர்கட்குச் சப்தாவஸ்தைக ளுண்டாகின்றன; அவை அஞ்ஞானம், ஆவரணம் (மூடல்), விட்சேபம் (முளைத்தல்), பரோட்ச (காணுத) ஞானம், அபரோக்ஷ (பிரத்தியட்ச) ஞானம், சோகநிவிர்த்தி (தழல்கெடல்), நிரங்குசத்திருப்தி (குளிர்மையாதல்—தடையற்றவாநந்தம்) என்பனவாம். (51)

(1) (சுருதிவிசாரத்திற்குமுன் ஜீவன்) பிரஹ்மவடிவமாகிய தன்னை (கூடஸ்தனை) யானுரேன்று கருதாமலிருந்த பேதைமை (அறியாமை) யே அஞ்ஞானமாம்.

(2) (பின்னுெருசமயம் சிதாத்மப்பிரசங்கம் நேர்ந்தவிடத்து † பிரஹ்மமில்லை, அஃதிருந்தால் விளங்கும், இல்லாமையின் அது விளங்கவில்லையென்று கூறுதல் ஆவரணமாம்.

(3) அப்பால் அவன் கருமத்தைச்செய்பவனும் அதன்பயனை அனுபவிப்பவனும் நானேன்னு மோரெண்ணத்தால் (தன்னைக் கர்த்திருத்துவ போக்திருத்துவ முடைய சீவனெனக்கருதி) நான் ஜீவனென வெளிப்படுதல் விட்சேபமாம். இது துக்கம், சோகம், பிராந்தி யென்று கூறப்படும்.

(4) பின்னர் ‡ (சத்தியம் ஞானம் அநந்தம் பிரஹ்மம் என்று பிரஹ்மத்தி னிருப்பைக் கூறும்) குருவினுபதேசத்தினுல் (பிரத்தியக பின்ன பிரஹ்மமாகிய) தன்னையுண்டென் றுணருதல் (பிரஹ்ம மில்லை யென்னும் அசத்துவாபாதக வாவரணத்தைக் கெடுக்கும்) பரோட்ச ஞானமாம். (52)

† பிரஹ்ம மில்லை யென்னும் வியவகாரத்திற்கேது அசத்துவாபாதக (அசத்துத்தன்மையைச் சம்பாதிக்கும்) ஆவரணமாம்; அது விளங்கவில்லையென்னும் வியவகாரத்திற்கேது அபானுபாதக (விளக்கமின்மையைச்சம்பாதிக்கும்) ஆவரணமாம். இவை முறையே நாஸ்தி நபாதி யெனக் கூறப்படும்.

‡ பிரமாத்மாவினது அல்லது ஜீவாத்மாவினது சொரூபத்தையுணர்த்தும் வாக்கியம் அவாந்தர வாக்கியமெனப்படுதலின், இவ்வாக்கியம் பரமாத்மாவின் சொரூபத்தை யறிவிக்கும் அவாந்தரவாக்கியமாம்.

54. இதுநினக் கறியும் வண்ண மிப்படி யோருதிட் டாந்தம்
புதுமையாங் கதைகேள் பத்துப் புருடரோ ராற்றை நீந்தி
யுதகதீ ரத்தி லேறி யோருவனேன் பதுபே ரெண்ணி
யதனேடு தசமன் ருனேன் றறியாமன் மயங்கி நின்ருன்.

(5) (பிறது நீயே பிரஹ்மமேன்னும் மகாவாக்கியத்திறல்) தத்துவ (பிரஹ்ம) விசாரஞ்சேய்து † பிரமாண பிரமேயங்களிலுள்ள சகலசம் சமயமும் நிவிர்த்தியாய் அத்வைதப் பிரஹ்மமே தானுதல் (பிரஹ்மம் விளங்கவில்லை யென்னும் அபானுபாதக ஆவரணத்தைக் கேடுக்தும்) ‡ அபரோட்சஞானமாம்.

(6) (பிரஹ்ம சாட்சாத்காரத்திற்துப் பின்னர்) நான் கர்த்திரு போக்திரு என்னும் ஜீவத்துவம் நீங்துவதே $ சோகநிவிர்த்தியாம்.

(7) சர்வ துக்கங் களினின்றும் விடுபட்டவனுய்ச் சேய்யத்தக்கன வேல்லாம் சேய்யப்பட்டன, அடையத்தக்கன வேல்லாம் அடையப் பட்டன வேன்னும் சந்தோஷமே ¶ நிரங்குசத் திருப்தியாம். (53)

† (1) வேதாந்தங்களில் ஜீவப் பிரஹ்மங்களின்பேதம் கூறப்படுகின் றதா? அல்லது அபேதம் கூறப்படுகின்றதா? என்பது பிரமாணத்திலுள்ள சம்சயமாம். (2) ஜீவப் பிரஹ்மங்களின் பேதம் சத்தியமா? அல்லது அபே தம் சத்தியமா? என்பது பிரமேயத்திலுள்ள சம்சயமாம். சம்சயம்-சந்தேகம்.

‡ நீயே பிரஹ்மமென்று சற்குரு கூறும் மஹா வாக்கியத்தினல் நான் பிரஹ்மமென் றுண்டாகும் அபரோட்சஞானம்: பிரஹ்மத்தை நானறிய வில்லையென்னு மஞ்ஞானம், பிரஹ்மமில்லை விளங்கவில்லை யென்னு மிருவகை யாவரணம், நான் பிரஹ்மமல்லன் ஆனல் சுபாசுப கர்மங்களைச் செய்பவனும் சுகதுக்கங்களை யனுபவிப்பவனுமாகிய ஜீவனென்னும் விட் சேப மென்னு மிவ்வளவு அவித்தியா சமூகத்தை நாசஞ்செய்வதாமென்க.

$ என்னிடத்துச் ஜன்மமும் மரணமும், சுகதுக்கங்களின் லேச மும் ஒரு சம்சாரதர்மமு மில்லை; ஆனல் நான் ஜனன மரண மின்றிய பிரஹ்மமென் றறிவதே சோக நிவிர்த்தியாம்.

¶ சோகநிவிர்த்தியும் நிரங்குசத்திருப் தியும் அபரோட்ச ஞானத்தின் பலமாம். இவ்வவஸ்தையின் பிரசங்கத்தால் அசுத்தமாயை சுத்தமாயை யாற் கெடுமென்பது செவ்விதின் விளங்கும். ஈண்டுக்கூறிய சப்தாவஸ் தையுள், அஞ்ஞான ஆவரண விட்சேபமென்னு மூன்றும் பந்தகாரணமும், பரோட்சஞானம் அபரோட்சஞானமென்னு மிரண்டும் அவற்றினிவிர்த்தி சாதனமும், சோகநிவிர்த்தி நிரங்குசத்திருப்தி யென்னுமிரண்டு மோட்ச வடிவமுமாம்.



55. அறியாத மயலஞ் ஞான மவனிலை காணே மேன்றல்
பிறியாவா வரண மாகும் பிழைகோண் டழல்விட் சேப
நெறியாளன் றசம னுண்டு நிற்கின்ரு னேன்ற சோல்லைக்
குறியாக வேண்ணி நேஞ்சிற் கோள்வது பரோட்ச ஞானம்.

சீ - வினு—ஐயனே? சுயம்பிரகாச சித்ரூப ஆன்மாவிற்கு நித்திய அபரோட்சத்துவ மிருத்தலின், அதற்கு அஞ்ஞானுதி சப்தாவஸ்தைக ளுண்டா மென்ப தெவ்வாறு? அதனை யொரு திருஷ்டாந்த வாயிலாகக் கூறுமாறு பிரார்த்திக் கின்றேன்.

கு - விடை † பத்துப் புருஷர்க ளொருங்கு சேர்ந்து விநோத மாக யாத்திரை செய்யும்போது வழியிலுள்ள தோர் பிரவாகமுடைய நதியை நீந்திக் கடந்து அதன் கரைமே லேறினவுடன் அவர்களுள் தலைமையாயுள்ளவன் ஏனைய ஒன்பது புருடர்களையும் முறையே ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது என்றெண்ணி அவ்வொன்பதின்மரோடு தான் பத்தாமவ னேன் றெண்ணி யறியாது பிரமித்து நின்றன். (54)

(1) அவ்வாறு பிரமித்து நின்றவன் அவ்வொன்பதின்மரை யெண் ணிய தன்னைத் தசமனேன் றறியாத மயக்கமே அஞ்ஞானமாம்.

(2) அதனல் தசமன் (தான்) இல்லை; இல்லாமையாற் காணே மென்று கூறுதல் இருவகை யாவரணமாம்.

(3) பின்பு தசமன் நதியில்மூழ்கி யிறந்தானேன்று துக்கங்கோண் டழுதல் விட்சேபமாம்.

† பத்துப் புருஷர்க ளென்பதற்குத் தாஷ்டாந்தம், ஆபாசனும் புரி யட்டகமும் ஆத்மாவுமாம். புரியட்டகமாவன:—

(1) ஆகாசாதி பூதபஞ்சகம், (2) சுரோத்திராதி ஞானேந்திரிய பஞ்ச கம், (3) வாக்காதி கர்மேந்திரிய பஞ்சகம், (4) பிராணுதி வாயுபஞ்சகம், (5) மனுதி யந்தக்கரண சதுஷ்டயம், (6) அவித்தை, (7) காமம், (8) கர் மம் என்பனவாம்.

சிரவண மாதி யைந்துஞ் செறிந்தவாக் காதி யைந்தும்
வருபிரா ணுதி யைந்து மருவும்வா னுதி யைந்து
மிருதய மாதி நான்கு மெய்திய வவித்தை காமம்
பரவுகன் மம்மிவ் வெட்டும் பகர்புரி யட்ட கங்காண்.

என்பது விவேகசூடாமணி.

இப் புரியட்டகமுடைய வாபாசன் சம்சாரமென்னுங் கானற் சல வாற்றிற் பிரவேசித்து, அதனது மனிததேகமாகிய கரையிலேறி ஞான விருப்ப காலத்தில் நானென்று விசாரித்துத் தனது நிஜவடிவ

56. புண்ணிய பதிகன் பின்னும் புருடரோன் பதின்மர் தம்மை
யெண்ணாநீ தசம னாவை யென்னவே தன்னைக் காணல்
கண்ணினிற் கண்ட ஞானங் கரைதல்போ வதுநோய் போத
றிண்ணிய மனதி லையந் தெளிதலா னந்த மாமே.

(4) அப்பால் கல்வி யறிவொழுக்க முடையனாய் அந்நதியின் கரைப் பக்கமாய்ப் பிரயாணஞ்செய்யு மொருவன் அவ்வழுகையைக் கேட்டு, அழுமிடத்திற் சென்று தசமன் நதியில் முழ்கி யிறக்கவில்லை; அவனிவ் விடத் திருக்கிற னென்றுகூற, கூறிய அவ்வாக்கியத்தைத் தசமன்நிச்சய மாகக் கொள்வது † பரோட்ச ஞானமாம். (55)

(5) பிறகு தசமன் அந்தப் பிரயாணியை நோக்கி, ஐயரே! தசமன் எங்கிருக்கின்றான்; அவனைத் தேவரீர் தயவுசெய்து காட்டல்வேண்டு மென்று பிரார்த்திக்க, அவன் தசமனை நோக்கி ஒன்பதின்மரை'யெண் ணிய நீயே தசமனாவை யென்று கூற, அதனால் அவன் தன்னைத் தசம னாகக் காண்டலே ‡ அபரோட்சஞானமாம்.

(6) அதன்பிறகு தசமன் நதியில் முழ்கி யிறந்தானென்று வருத்தங் கொண்டழுகை நீங்குவதே சோகநிவிர்த்தியாம்.

(7) அதனால் சம்சயம் நீங்கி ஆநந்த முண்டாதலே நிராங்குசத்திருப்தி யாம். (56)

(இத்திருஷ்டாந்தத்தால் ஆன்மாவிற்கும் அஞ்ஞானாதி சப்தாவஸ்தை பொருந்துமென்பது நன்குவிளங்கும்).

ஆன்மாவின் வேறாகிய ஒன்பது தத்துவங்களையு மறிந்து அவற்றை யறி யும் தனது நிஜவடிவை யறியாமையே அஞ்ஞானமும், அதனால் ஆத்மா வில்லை இருந்தாற் காணப்படாதா வென்னும் இருவகை யாவரணமும், அதனால் அர்த்தாத்தியாச ஞானாத்தியாச வடிவ விட்சேபமும், அதன் பின்னர்ப் பிரஹ்ம மிருக்கின்றது என்று சற்குரு கூறும அவாந்தர வாக்கி யத்தைக் கேட்டலால் 'பிரஹ்ம மிருக்கின்றது' என்னும் பரோட்சஞான மும், அப்பால் பிரஹ்மம் யார் என்னும் வினாவிற்கு நீயே பிரஹ்மமென்று குருகூறும் விடையாகிய மகாவாக்கியத்தினால் நான் பிரஹ்மமென்னும் அபரோட்ச ஞானமும், அதனால் அஞ்ஞானத்தினாலாகிய ஆவரணத்தோடு கூடிய இருவகை யத்தியாச வடிவ விட்சேப நாசமும், அதனால் தடை யற்ற வாநந்தமும் ஆபாசனுக் கன்றிக் கூடஸ்தனுக் குண்டாகாமை யறிதற் பாற்றும்.

† கடமிருக் கின்றது, படமிருக்கின்றது என்றாற் போல்வதா லுண் டாகும் ஞானம் பரோட்ச ஞானமாம்.

‡ இது கடம் இது படம் என்றாற் போல்வதா லுண்டாகும் ஞா னம் அபரோட்ச ஞானமாம்.



57. தசபுமான் றனைக்கண் டாற்போற் சற்குரு மூர்த்தி யேயென்
னிசவடி வினையான் காண நீர்காட்டல் வேண்டு மென்றான்
சுசிபெறு மிலக்கி யார்த்தந் தொம்பதந் தற்ப தங்கட்
கசிபத வைக்கியஞ் செய்யு மதுசெயு முண்மை கேளாய்.

### மகாவாக்கிய விசாரம்.

சீ - வினா:—சற்குரு மூர்த்தியே! தசமன் தன்னை அபரோட்ச மாகக் கண்டு † சோக மோகங்கள் நீங்கி யாநந்த மடைந்தாற் போன்று அடியேனும் எனது நிசவடிவத்தை யபரோட்ச மாகக் கண்டு சோகமோகங்கள் நீங்கி ஆநந்த மடையும்படி கருணை புரி தல்வேண்டும்.

கு-விடை:—அன்பனே!(சாமவேதத்தின் சாந்தோக்கிய வுபநிடதத் தின் ஆறாவது பிரபாடகத்திலுள்ள தத்துவமசியென்னும் மகாவாக்கியமா னது) துவம்பத தத்பதங்களின் ‡ இலட்சியார்த்தங்கட்கு (அது நீயா யிருக்கின்றாய் என்னும்) அசிபதப்பொருளான ஐக்கியத்தை விட்டுவிடாத லட்சணையினால் போதிக்கின்றது. அஃதவ்வாறு போதிக்குந்தத்வார்த் தத்தைக் கூறுகின்றனம்; அதனைக் கவனமாய்க் கேட்கக்கடவாய். (57)

† சோகம் - இஷ்டவஸ்து பிரிந்தகாலத்து அது மீண்டுங் கிடைத் தற் குரியதாகாமையை யுணர்தல்; மோகம் - விபரீதபுத்தி.

‡ சத்தத்திற் (பதத்திற்)கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தம் சத்தத்தின் விருத்தி யெனப்படும். அஃது இருவகைத்தாம். அவற்றுள்: ஒன்றுசக்தி விருத்தி, மற்றொன்று லட்சணாவிருத்தி. சத்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சாட்சாத் (நேர்)சம்பந்தம் சத்தத்தின் சக்திவிருத்தியாம். சக்திவிருத்தியினா லறியப்பட்ட அர்த்தத்தின் வாயிலாகச் சத்தத்திற்கு அருத்தத்தோடுள்ள பரம்பரைச் சம்பந்தம் சத்தத்தின் லட்சணா விருத்தியாம்.

அவற்றுள், சக்திவிருத்தியினால் அறியப்படு மர்த்தம் சத்தத்தின் வாச்சியார்த்தமாம். இதுவே சக்கியார்த்த மென்றும், முக்கியார்த்த மென் றும், போத்தியார்த்த மென்றும், விதேயார்த்த மென்றும் கூறப்படும்.

இலக்ஷணா விருத்தியினா லறியப்படுமோர்த்தம் சத்தத்தின் இலக்ஷி யார்த்தமாம். அந்த லக்ஷணாவிருத்தி ஜகத் (விட்டது), அஜகத் (விடா தது), பாகத்தியாகம் (விட்டுவிடாதது) என்னும் வேறுபாட்டால் மூவ கைத்தாம். இவற்றிற் குதாரணம் கங்கையி லிடைச்சேரி, சிகப்போடு கின்றது, அவனே இவன் என்பனவாம்.

58. விண்ணென்றை மகாவிண் ணென்று மேகவிண் ணென்றும்
பாரின், மண்ணென்று கடவிண் ணென்று மருவிய சலவிண்
ணென்று, மெண்ணுங்கற் பனைபோ லொன்றே யெங்குமாம்
பிரம மீச.னண்ணுங்கூ டத்தன் சீவ ஞன்குசை தங்ய மாமே.

59. பூச்சிய வீசன் சீவன் புகல்பத மிரண்டி னுக்கும்
வாச்சியம் லட்சி யந்தான் மலமிலாப் பிரம மான்மா
காச்சிய பாலி னெய்போற் கலந்தோன்றுங் கடைந்தே டுக்கு
மாச்சிய மென்ன வுன்னை யறிந்துநீ பிறிந்து கொள்ளே.

சீ-வினு:—கவனமாய்க் கேட்கின்றேன் ; தேவரீர் கூறியரு
ளல் வேண்டும்.

கு-விடை:— † ஆகாச மொன்றயிருந்தும் அஃது உபாதியினல் மகா
காசம், மேகாகாசம், கடாகாசம், சலாகாசமென நால்வகைத்தாக
வியவகரிக்கப்படுதல் போல, சேதனம் ஒன்றயிருந்தும் அஃதுபாதியி
னல் பிரஹ்மம், ஈசுவரன், கூடஸ்தன், ஜீவன் என நால்வகைத்தாக
வியவகரிக்கப் படுகின்றது. (58)

† (1) பிரமாண்டத்தி னுட்புறமெங்கும் ஏகரசமாய் வியாபகமாயுள்ள
ஆகாசம் மகாகாசமெனப்படும்; அதுபோல, பிரமாண்டத்தி னுட்புற
மெங்கும் ஏகரசமாய் வியாபகமாயுள்ள சேதனம் பிரஹ்மமாம்.

(2) மேகத்திற் கவகாச (இட)ங் கொடுக்கின்ற ஆகாசமும், மேக
ஜலப் பிரதிபிம்பாகாசமும் மேகாகாச மெனப்படும்; அது போல, மாயை
யின் அதிஷ்டான சேதனமும், அதன்கணுள்ள சேதனத்தின் சாயையு
(பிரதிபிம்பமு)ம் ஈசுவரனும்.

(3) நீரினல் நிறைந்துள்ள கடத்திற்கு எவ்வளவு ஆகாசம் அவகா
சங்கொடுக்கின்றதோ அவ்வளவு ஆகாசம் கடாகாசமெனப்படும்; அது
போல, புத்தி அல்லது வியஷ்டி அஞ்ஞானத்திற்கு அதிஷ்டானமாயுள்ள
சேதனம் கூடஸ்தனும்.

(4) நீரினல் நிறைந்துள்ள கடத்தில் மேக நட்சத்திரங்களுடன்
பிரதிபிம்பித்துள்ள ஆகாசமும் கடாகாசத்தின் பிரதிபிம்பமும் ஜலாகாச
மெனப்படும்; அதுபோல, புத்தி அல்லது அவித்தையிற் பிரதிபிம்பித்து
ள்ள சேதனமும் அதன் அதிஷ்டான சேதனமு (கூடஸ்தனு)ம் சீவனும்.

"சிவனே டீசன்கூ டத்தன் பிரமமென்னச் சித்துநான் காங்குடநீர் சகு
வுறும்வெண் மீன்வான், தூவுபனி நீர்விம்ப வனுமிதா காசஞ் சொல்கடா
விச்சின்ன காசமொடு மாவான், மேவுமிவை யவற்றினுக்குத் திட்டாந்த
முறையாம்" என்பது வேதாந்த சூளாமணி.



60. பிறிவதெப் படியென் றக்காற் பிணமாகு முடனு னென்னு
மறிவினைக் கொல்லல் வேண்டு மைம்பூத விகார மன்றே
வேறியதோர் துருத்தி மூக்கின் விடுவது போலுன் மூக்கா
லேறிபிரா ணனுநீ யல்லை யிராசத குணவி காரம்.

சீ-வினு:—இந்நான்கு சேதனங்களுள், வாச்சியார்த்தசேதன
மெவை? இலட்சியார்த்தசேதன மெவை?

கு-விடை:—(தத்துவமசிமகாவாக்கியத்தின்) † தத்பதவாச்சியார்த்
தமும் இலட்சியார்த்தமும் முறையே ஈசுவரனும் பிரஹ்மமுமாம்; துவம்
பத வாச்சியார்த்தமும் இலட்சியார்த்தமும் முறையே ஜீவனும் கூடஸ்
தனுமாம்.

அவ்வாறிருப்பினும் அவை காய்ச்சப்பட்ட பாலில் வெண்ணெய்
கலந்தோன்றயிருப்பது போல அவிவேகத்தாற் கலந்தோன்றாக விளங்
குகின்றன. ‡ ஆதலால் பாலினின்றும் மத்தினல் கடைந்து பிரித்தெடு
க்கும் வெண்ணெயினைப்போல விவேகத்தால் இலட்சியார்த்தமானவுன்
னையறிந்து வாச்சியார்த்தத்தினின்றும் பிரிந்திருக்கக்கடவாய். (59)

சீ-வினு:—ஐயனே! யான் அவ்வாறு பிரிந்திருக்கும் வழி விள
ங்கவில்லை. அதனைத் தெரிவிக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

ஆத்மா ¶ பஞ்சகோசங்களுள் ஒன்றன்றெனல்.

† (1) தத்பத வாச்சியார்த்தம் மாயையோடுகூடிய பிரஹ்ம வடிவ
வீசுவரனும்; (2) தத்பத லட்சியார்த்தம் மாயையின்றிய அவாச்சியமான
சுத்தப் பிரஹ்மமாம்; (3) துவம்பத வாச்சியார்த்தம் சிதாபாச சகித புத்தி
அல்லது அவித்தையோடுகூடிய கூடஸ்த சேதனவடிவ ஜீவனும்; (4) துவ
ம்பத லட்சியார்த்தம் சிதாபாச சகித புத்தி அல்லது அவித்தைவடிவ வுபா
தியின்றிய அவாச்சியமான கேவல கூடஸ்த சேதனமாம்.

‡ "பிறிந்திடக் கடைந்த வெண்ணெய் பின்புமோ ரதனைக் கூடிற்
செறிந்திடா வாறு போலத் தேகமுந் தேகி தானும்
பிறிந்திடப் பார்த்த பின்பு பெயர்த்ததி னிற்பி னுங்கேள்
செறிந்திடா வாறு செய்யுந் தேசிகன் றேசி கன்றான்". என்பது
மெய்ம்மொழி.

¶ (1) அன்ன ரசத்தினற் றேன்றிப் பின்னர் அதனுலே விருத்தி
யடைந்து அப்பால் அன்னவடிவப் பிருதிவியி லொடுங்கும் ஸ்தூலசரீரம்
அன்னமயகோசமாம். (2) (சூட்சுமதேகத்தில்) பிராணுதி வாயுக்களும்
கன்மேந்திரியங்களும் கூடியது பிராணமயகோசமாம்; (3) மனமும்
ஞானேந்திரியங்களுங் கூடியது மனேமயகோசமாம்; (4) புத்தியும் ஞானே
ந்திரியங்களுங் கூடியது விஞ்ஞானமய கோசமாம். (5) (சுழுத்தியில்)

து-விடை:— † அன்னமயகோசமான இத்தூலசரீரம் பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களின் காரியமாயிருத்தலினாலும் சிலகாலத்திற்குள் பிண வடிவமாய்ப்போதல் நிச்சயமாயிருத்தலினாலும் இதனை ஆத்மாவென்று கருதும் பிராந்தியை விடக்கடவாய்.

சீ-வினா:—தேசிக மூர்த்தியே ! அங்ஙனமாயின், பிராணனை (பிராணமயகோசத்தை) ஆத்மாவென்று கொள்ளக்கூடாதோ ?

து-விடை:— ‡ பிராணன் அபஞ்சீகிருத பஞ்சபூதங்களின் இரசோகுண காரியமா யிருத்தலினாலும் தோற்றுருத்தி தனது மூக்கால் காற்றை விடுவதுபோல உனது மூக்கால் விடப்படுவதாயிருத்தலினாலும் அதுவும் நீயல்ல. (60)

---

காரணசரீரவடிவினதான அவித்தையிலுள்ள மலினசத்துவமான பிரியம், மோதம், பிரமோதமென்னுந் திரிவித விர்த்தியுங் கூடியது ஆநந்தமய கோசமாம். கோசம்-உறை. பிரியமான ஒன்றைக் காண்டல், அடைதல், அனுபவித்த லென்பவற்றாலுண்டாகும் சுகம் முறையே, பிரியம், மோதம், பிரமோதமாம். சுழுத்தியில் சாட்சியாகாரமாகவும், சுகாகாரமாகவும், அவஸ்தாஞ்ஞானகாரமாகவு மூன்றவித்தியா விருத்தி யுளவென்று முணர்க.

அன்னமய கோசத்துள் பிராணமய கோசமும், அதற்குள் மனோமய கோசமும்,அதற்குள் விஞ்ஞானமயகோசமும், அதற்குள் ஆநந்தமயகோசமுமுளவாமென் றுணர்க.

† விவாதத்திற்கு விஷயமாகிய அன்னமயகோசம் (ஸ்தூலசரீரம்) ஆத்மாவன்று; பஞ்சீகிருத பஞ்சமகாபூத காரியமா யிருத்தலின்; கடம் போல என்பது அனுமானம். எதன்கணையமுண்டாகின்றதோ அது விவாதத்திற்கு விஷயமெனப்படும். தேகாகாரமாகப் பரிணமித்த பிருதிவி முதலிய தத்துவங்களே ஆத்மாவெனச் சார்வாகர் இலௌகிகர் முதலியோர் கூறுதலின், அன்னமயகோசம் விவாதத்திற்கு விஷயமாம்.

"அன்னமே செய்த தூல வாக்கையே யன்ன கோச
மன்னமுண் டாலஃ தீய்யு மஃதிலா தேலி றக்குந்
துன்னிய மேதை யத்தி தோன்முதற் கூட்ட மான
வன்னது நித்த சுத்த மாகிய வான்மா வாகா" என்பது விவேக சூடாமணி.

‡ விவாதத்திற்கு விஷயமாகிய பிராணமயகோசம் ஆத்மாவன்று; ஜடமாயிருத்தலின்; கடம்போல என்பது அனுமானம். ஹிரண்யகர்ப்ப வுபாசகர் பிராணனை ஆன்மா என்பர்.

"ஐந்துகன் மேந்தி யத்தோ டமைபிரா ணன்க லந்து
மைந்தமுன் சொல்பி ராண மயமெனுங் கோச மாகு
மிந்தக்கோ சத்தி னூன்முன் னிசைத்தகோ சந்நி றைந்து
வந்ததன் செய்கை யெல்லாம் வலியுறச் செய்யா நிற்கும்."



61. கரணமா மனது புத்தி கருத்தாவா மவையான் மாவோ
தரமுள விரண்டு கோசஞ் சத்துவ குணவி காரம்
வரமறு துயிலா நந்த மயனேயு நானேன் றுதே
விரவிய தமவஞ் ஞான விருத்தியின் விகார மாமே.

---

சீ-வினா:—அவ்வாறாயின், மனத்தினை (மனோமயகோசத்தை) ஆத்மாவென் றுரைக்கக்கூடாதோ ?

து-விடை:— † மனம் அபஞ்சீகிருத பஞ்சபூதங்களின் சத்துவகுண காரியமாயிருத்தலினாலும், கிரியாசத்தியுடைய கரணவடிவாயிருத்தலினாலும் அதனையும் ஆத்மாவென்று கருதாதே.

சீ-வினா:—அப்படியாயின், புத்தியை (விஞ்ஞானமயகோசத்தை) ஆத்மாவென்று சொல்லக்கூடதோ ?

து-விடை:— ‡ புத்தி மனம் போல அபஞ்சீகிருத பஞ்சபூதங்களின் சத்துவகுணகாரியமாயிருத்தலினாலும், ஞானசத்தியுடைய கருத்தாவடிவமா யிருத்தலினாலும் அதனையும் ஆத்மாவென்று கொள்ளாதே.

---

"உன்னிய வாயு வைப்போ லுள்ளிலும் வெளியி லும்போ
யின்னதின் விகார மாகி யெங்குமே விட்டா நிட்ட
மன்னியந் தனதி தென்ன வணுவுமே யறியா தத்தாற்
பின்னரும் பரவ சத்தாற் பேசுமீ தான்மா வாகா." என்பது விவேக சூடாமணி.

† மனோமயகோசம் ஆத்மாவன்று; முன்னவத்தையைவிட்டு வேறவத்தையைக் கிரகிக்கும் விகாரத்தையுடையதா யிருத்தலின்; ஸ்தூலதேகம் போல என்பது அனுமானம்.

தேகத்தில் யானெனுந் தன்மையையும் வீடு முதலியவற்றில் எனதெனுந் தன்மையையுஞ் செய்துகொண்டு இந்திரிய வாயிலாக வெளியிற் செல்லுங் கரணவடிவமா யிருப்பது மனமாம். நாரத பாஞ்சராத்திரத்தை யனுசரித்தவர்கள் மனோமயகோசத்தை ஆன்மா என்பர்.

"பரவியே யொடுங்க லாலும் பரிணமி யாத லாலும்
விரிதுயர் வடிவ தாலும் விடயமாந் தன்மை யாலு
முரைமனோ மயகோ சந்தா னுணர்வுரு வான்மா வாகா
தெரிவுரு வான வான்மாத் திருசியப் பொருளா மோசொல்." என்பது விவேகசூடாமணி.

‡ விஞ்ஞானமய கோசம் ஆத்மா அன்று; ஒடுக்கமுதலிய வவத்தைகளையுடையதா யிருத்தலின்; கடம்போல என்பது அனுமானம்.

சுழுத்தியில் சிதாபாசனுட னொடுங்கி ஜாக்கிரத்தில் நகநுனிமுதல் சிகைபரியந்தம் சரீரத்தில் வியாபித்துக் கருத்தாரூபமா யிருப்பது புத்தியாம். யோகாசாரர் விஞ்ஞானமய கோசத்தை ஆத்மா என்பர்.

சீ-வி௫:—அவ்வாறாயின், சுழுத்தியில் பிரகாச வடிவமும் அப்பிரகாசவடிவமும் விளங்குதலின் அவ்விருவடிவமு மான ஆநந்தமய கோசமே ஆத்மாவென்று கூறலாமல்லவா?

[சுழுத்தியிலுள்ள சேதனத்தின் ஆபாசசகித அஞ்ஞானம் ஆநந்தமயகோசமாம். அது பிரகாசவடிவமாகவும், அப்பிரகாச வடிவமாகவு மிருக்கின்றது. அங்ஙனமிருத்தற்கேது ஆபாசம் பிரகாச வடிவமாகவும், அஞ்ஞானம் அப்பிரகாச வடிவமாகவு மிருத்தலாம்].

கு-விடை:— † ஆநந்தமயகோசம் தமோரூபமான அஞ்ஞான விருத்தியின் காரியமாயிருத்தலின் அதனையும் நானென் றெண்ணுதே. (61)

"ஆதலா லகங்கா ராதி யகிலமா மசத்தை யுந்நன்
னீதியா யான்மா வின்று நித்தமு நீக்க வேண்டு
மோதுவிஞ் ஞான கோச முண்மையா யான்மா வாகா
தேதெனி லனக மைந்தா வேதுவை யியம்பக் கேளாய்."

"சாதுவே விகாரி யாலுஞ் சடமதாந் தன்மை யாலுந்
தீதள வுடைய தாலுந் திருசிய மாவ தாலு
மேதுமே நியம மன்றி யிதுவிப சாரி யாலு
மாதியா மான்மா வாகா தநித்திய நித்த மாமோ." என்பது விவேக சூடாமணி.

"தர்மியாகிய வந்தக்கரணம் ஞானத்திற்கு ஆசிரயமா யிருத்தலின் கர்த்தாவாம். அந்தக்கரணத்தின் டரிணாமமாகிய மனம் ஞானத்திற்குக் கரணமாம்" என்பது விருத்திப்பிரபாகரம் முதற்பிரகாசம்.

† ஆநந்த மயகோசம் ஆத்மாவன்று; சுபகருமத்தின் பயனையனுபவிக்குங்காலம், அல்லது நித்திராகாலமென்னு மிவற்றுள் ஒவ்வொரு காலத்திருத்தலின்; மேகபடலம்போல என்பது அனுமானம். பூர்வமீமாம்சகர் (பட்டர்-பிரபாகரர்), மாத்தியமிகர் (பௌத்தர்) நையாயிகர் முதலியோர் ஆநந்த மயகோசத்தை யான்மா என்பர்.

"பரவுசோ பாதி யாலும் பகுதியின் விகாரத் தாலுங்
கருதிய புண்ணி யத்தின் காரிய மாத லாலுந்
தாமுறு விகாரக் கூட்டந் தன்னிலுட் பட்ட தாலு
மருவுமா னந்த கோச மாசிலா வான்மா வாகா." என்பது விவேக சூடாமணி.

துவம்பதார்த்தத்தை (ஆன்மாவை)ப் பற்றி வாதிகள் கூறுவது வருமாறு:—

"தேகாகாரமாகப் பரிணமித்த நான்கு பூதங்களே துவம் பதார்த்தமென்பர் சார்வாகர்கள்; சக்ஷுமுதலிய இந்திரியங்கள் தனித்தனியே துவம்பதார்த்தமென்பர் சார்வாகர்களுள் ஏகதேசிகள்; சக்ஷுவாதிகளின்



62. சத்தோடு சித்தா நந்தஞ் சமந்திரஞ் சாட்சி யேக
நித்தியம் வியாபி யான்மா நீயது வாவ றிந்து
பொத்தோடு சடந்துக் காதி பொருந்துபே தங்க ளான
குத்திர பஞ்ச கோசக் குகைவிட்டு வெளியி லாவாய்.

சீ-வி௫:—பஞ்ச கோசங்களுள் ஒன்றும் யானல்லவாயின், இவற்றிற்கு விலட்சணமாக வெவ்வாறுளன்? அதனைத் தேவரீர் திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்.

கு-விடை:—அன்பனே! நீ சச்சிதாநந்தமாய், சமமாய், ஸ்திரமாய், சாட்சியாய், ஏகமாய், நித்தியமாய், வியாபகமாய், பஞ்சகோசங்கட்காதாரமாயுள்ள பிரத்தியகான்மாவே யாவாய். ஆகையால், அத்தன்மையதான பிரத்தியகான்மாவாகவே யுன்னை யுள்ளவாறறிந்து, அநிர்த(மித்தை), ஜட, துக்கமுதலிய வடிவமாகப் பொருந்தித்தம்முள் வேற்றுமை யுடையனவா யிருக்கின்ற † பஞ்சகோசக் குகைகளிலுள்ள ஆத்மப்பிராந்தியை யொழித்து அவற்றிற்கு விலட்சணமாகக் கடவாய்.

சமுதாயமே துவம் பதார்த்தமென்பர் சிலர்; மனமென்பர் சிலர்; பிராணனென்பர் சிலர்; க்ஷணிக விஞ்ஞான மென்பர் சுகதர்கள் (யோகாசாரர்); சூன்யமென்பர் மாத்தியமிகர்கள்; தேகேந்திரியங்களினும் வேறாகத் தேக பரிமாண முள்ளவனென்பர் திகம்பரர் (சமணர்);சர்த்தா போக்தா ஜடன் விபு வென்பர் வைசேஷிகர், தார்க்கிகர் (நையாயிகர்), பிரபாகரர்; ஜடன் போதசொரூபனென்பர் பாட்டர்கள்; போக்தாவும் (கர்த்தா வல்ல) கேவல போத சொரூபனுமா மென்பர் சாங்கியர், யோகியர்; அவித்தையினால் கர்த்திருத்துவ முதலிய தர்மங்களுடன் கூடினவனும் பரமார்த்தத்தில் தர்மமற்றவனும் பரமானந்தபோத சொரூபனுமா மென்பர் வேதாந்திகள்" என்பது சித்தாந்தபிந்து.

† மலைக்கணுள்ள வைந்து கதவினையுடைய வாயிலோடுகூடிய குகையிலிருக்கு மிரத்தினம் அக்குகையால் மறைந்திருப்பதுபோல, அவ்வியாகிருதத்துள்ள பஞ்சகோசங்களிலிருக்கும் பிரத்தியகாத்மா அக்கோசங்களால் மறைந்திருத்தலின் அவை குகையென்று கூறப்படுகின்றன வென்க. அம்மலைக்காவலனது அனுக்கிரகத்தால் திறவுகோல் வாயிலாக அவ்வைந்து கதவினையுந்திறத்தலால் அவ்விரத்தினத்தின் அபரோட்சஞான முண்டாவதுபோல, பஞ்சகோச விலட்சணமாய் விளங்குஞ் சற்குருவினனுக்கிரகத்தால் பஞ்சகோசவிவேக மென்னுந்திறவுகோல்வாயிலாகப் பஞ்சகோசங்களின் ஆவரணமாகிய கதவினைத்திறத்தலால் பிரத்தியகான்மாவின் அபரோட்சஞான முண்டாகின்றதென்க.

பஞ்சகோச விவேகஞ் செய்வதால் (1) அன்னமயகோசம் நானன்று, என்னுடையது மன்று; இது ஸ்தூலதேகவடிவமாம். இதையறியும் ஆத்மாவாகிய நான் இதனிலும் வேறாயிருக்கிறேன் என்பதும், (2) பிராணமய

63. பஞ்சகோ சமும்விட் டப்பாற் பார்க்கின்ற பொழுது பாழே
விஞ்சிய ததுவல் லாமல் வேறொன்றுந் தெரியக் காணே
னஞ்சன விருளை யோநா னகமென வநுப விப்பேன்
வஞ்சமில் குருவே யென்ற மகன்மதி தெளியச் சொல்வார்.

சீ-வினா:—பரமாசிரியரே! தமியேன் அன்னமய முதலிய பஞ்சகோசங்களுள் ஒவ்வொன்றையும் முறையே இது நானல்ல, இது நானல்லவென்று தாங்களுபதேசித்த யூகத்தினால் நேதித்து அப்பால் பார்க்கின்றபோது சூனியமே (பாழே) எஞ்சிநின்றது. அஃதன்றி வேறொரு பதார்த்தமுந் தோன்றக் கண்டேனில்லை. ஆதலால், அடியேன் காரிருள்போன்ற † சூனியத்தையா நானென்பதன் பொருளென்று பாவனைசெய்வேன்; எனக்குத் தெளிவுண்டாம் வண்ணம் உபதேசித்தருளல் வேண்டும். (63)

கோசம் நானன்று, என்னுடையதுமன்று; இது சூக்குமதேகவடிவமாம். இதையறியும் ஆத்மாவாகிய நான் இதனினும் வேறாயிருக்கிறேன் என்பதும், (3) மனோமயகோசம் நானன்று, என்னுடையதுமன்று; இது சூக்குமதேகவடிவமாம். இதை யறியும் ஆத்மா வாகிய நான் இதனிலும் வேறாயிருக்கிறேன் என்பதும், (4) விஞ்ஞானமயகோசம் நானன்று, என்னுடையது மன்று; இது சூக்குமதேகவடிவமாம். இதையறியும் ஆத்மாவாகிய நான் இதனிலும் வேறாயிருக்கிறேன் என்பதும், (5) ஆநந்தமயகோசம் நானன்று, என்னுடையது மன்று; இது காரணதேகவடிவமாம். இதையறியும் ஆத்மாவாகிய நான் இதனிலும் வேறாயிருக்கிறே னென்பதும் பெறப்படுமாறறிக.

பஞ்சகோசங்களு மாத்மா வன்றென் றறியப்படினும் திடஞானத்தின் பொருட்டு ஆத்மா தேகத்திரயதிருஷ்டாவென்றும், அவஸ்தாத்திரய சாட்சி யென்றும் அறிதற்பாற்றும். இவற்றை விசாரசந்திரோதயத்திற் காண்க.

† சூனியத்தை நானெனல் யுக்திக்கியையா திருத்தலின், சூனியத்தை நா னென்பதன் பொருளென்றல் எங்ஙனமாமென்று வினவினை னென்க. கடத்தையறிபவன் கடத்திற்கு வேறாகவிருத்தல் போன்று, சூனியத்தையறிபவன் சூனியத்திற்கு வேறாகவிருத்தல் வேண்டுமாதலின் ஆன்மா சூனியவடிவ மன்றாம்.

"என்னவா சானை நோக்கி யேதமில் சீடன் சொல்வான்
சொன்னவிப் பஞ்ச கோசஞ் சுத்தமா மித்தை யென்றே
யுன்னினு னாகத் தாலே யொதுக்கிய பின்ன ரையா
மன்னுசூ னியமே யன்றி மற்றேது மிங்குக் காணேன்". என்பது விவேக சூடாமணி.



64. முன்புக றசமன் புத்தி மோகத்தா லெண்ணி யெண்ணி
யோன்பது பேரைக் கண்ட வொருவனுந் தனைக்கா ணாத
பின்பவ னிடையிற் கண்ட பெரியபா ழவனோ பாரா
யன்புள மகனே காண்ப தடங்கலுங் காண்பா னீயே.

கு-விடை:—அன்புள்ள மகனே! முன்னர்க்கூறிய தசமன் புத்தி மயக்கத்தினால் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பதென அடிக்கடி யெண்ணி ஒன்பதுபேரைக் கண்ட ஒருவனாகிய தன்னைத் தசமனாகக் காணாத பிறகு அவன் (தசம னில்லை, இருந்தான் றேன்றுவன், ஆதலா லில்லையென்று) தன்னிடத்திற் கண்ட சூனியம் அவனோ? (அறிபடுபொருள் அறிவானுக்கு வேறென்பது கடத்தைக் காண்பவனுக்குக் கடம் வேறாகவிருப்பதால் விளங்கவில்லையா?) † நனவில் தசேந்திரியங்களின் நாட்டியத்தையும், கனவில் மனக்கூத்தையும், உறக்கத்தில் இவற்றின் சூனியத்தையும் காண்பானாகிய நீயே மாறாதிருக்கின்றனை. உன்னாற் காணப்படும் அம்மூன்றும் ஒன்றிலொன்று மாறிப்போகின்றன. * இவற்றை யூகித்துப் பார்க்கக் கடவாய். (64)

சீ-வினா:—பரமபிதாவே! நான் மாறாதவனென்பதனையும், என்னாற் காணப்படுவன மாறிப்போவன வென்பதனையும் சிறிது விளக்கமாகக் கூறியருளல் வேண்டும்.

கு-விடை:—அன்பனே! ‡ ஸ்தூல சூட்சும காரண மென்னுஞ் சரீ

† "நனவிற் றசேந்திரிய நாட்டியங்கள் பார்ப்போங், கனவின் மனக்கூத்துங் காண்போ - நினைவில், சுழுத்தியிலே யில்லாத சூனியக் கூத் தாடி, விழுப்பொருளாய் நாமிருப்போமே" என்பது சொரூபசாரம்.

* விரிவகங் கார மாதி விகாரமற் றவற்ற பாவ
மிருமையா மிவற்றை யெல்லா மிங்கியா துணரு மியாதை
யொருபொரு ளுணரா தந்த வுணர்வுரு வான சாட்சிப்
பொருளினை மிகவு நுண்மைப் புத்தியா லுணர்தி மைந்தா.
என்பது விவேக சூடாமணி.

‡ (1) பஞ்சீகிருத பஞ்சபூதங்களாலாயதும், கருமத்தாற்றோன்றியதும், சுகதுக்காதி போகத்திற் கிடமாயிருப்பது மாகிய பிறத்தல், இருத்தல், வளர்தல், திரிதல், குறைதல், கெடுதலென்னும் சட்பாவ விகாரமுமுடைய இச்சரீரம் ஸ்தூலசரீரமாம்.

(2) அபஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களாலாயதும், கருமத்தாற் றோன்றியதும், சுகதுக்காதி போகத்திற்குச்சாதனமாயதுமாய் ஞானேந்திரியமைந்து, கன்மேந்திரியமைந்து, பிராணாதிவாயு வைந்து, மனம் புத்தியென்னுமிரண்டென்னு இப்பதினேழு கலையோடுங் கூடியிருப்பது சூட்சும சரீரமாம்.

65\. தூலசூக் குமவஞ் ஞானந் தோன்றுமுன் றவத்தை தாமுங்
காலமோர் மூன்றுஞ் சன்மக் கடலெழுங் கல்லோ லங்கள்
போலவே வந்து வந்து போனவெத் தனையேன் பேறு
ளுலமர் கடவு ளாணை யவைக்கெலாஞ் சாட்சி நீயே.

66\. எல்லாங்கண் டறியு மென்னை யேதுகொண் டறிவே னென்று
சொல்லாதே சுயமாஞ் சோதிச் சுடருக்குச் சுடர்வே றுண்டோ
பல்லார்முன் றசமன் றன்னைப் பார்ப்பதுந் தனைக்கொண் டேதா
னல்லாமற் பதினொன் றொரு மவனிடத் துண்டோ பாராய்.

ரத்திரயமும், அவற்றைப்பற்றி யுண்டாகின்ற ‡ சாக்கிர சொப்பன சுழுத்தியென்னும் அவஸ்தாத்திரயமும், இவற்றால்·வியவகரிக்கப்படுகின்ற இறப் பெதிர் நிகழ்வென்னுங் காலத்திரயமும் கடலிற் றோன்றியெழுந்தழியும் அலைகளைப் போல (எவ்வளவோ) உன்னிடத்திற் றோன்றித்தோன்றி யெழுந்தழிந்தன, அவற்றையா னெவ்வளவென்று வரையறுத்துக் கூறுவேன்; (கடல்மணலை யெண்ணி யளவிட்டாலும் அளவிடலாம், அவற்றை யெண்ணி அளவிடல்முடியாது ஆதலால்) தட்சிணாமூர்த்திமே லாணைப்படி அவ்வெல்லாவற்றிற்கும் நீயே † சாட்சியாகின்றனை ? [இதில் ஐயமொன்றுமில்லை; இதனால் நீ மாறாதிருத்தலும் அவை மாறிப்போதலும் நன்கு விளங்கும்.] (65)

சீ-வினா:—தேசிகரே ! தேகத்திரயம், அவஸ்தாத்திரயம், காலத்திரய மென்னு மெல்லாவற்றையும் சாட்சியாக நின்று கண்டறிகின்ற என்னை வேறெந்தஞானத்தினால் அறிவேன். அதனைத் திருவாய்மலர்ந்தருளல் வேண்டும்.

---

(3) அநிர்வாச்சியமாய் அவித்தியாவடிவமாய் ஸ்தூலசூட்சும மென்னுஞ் சரீரமிரண்டற்குங் காரணமாத்திரமாயிருக்குஞ் சுவ(தனது)சொரூப அஞ்ஞானமாகிய நிர்விகற்ப வடிவம் காரணசரீரமாம்.

‡ (1) சுரோத்திரமுதலிய இந்திரியங்களால் சப்தாதி விஷயங்கள் அறியப்படுங்காலம் சாக்கிராவஸ்தையாம்.

(2) ஜாக்கிராவஸ்தையில் பார்க்கப்பட்டவற்றாலும் கேட்கப்பட்டவற்றாலு முண்டாகிய வாசனையால் நித்திராகாலத்தில் எதில் பிரபஞ்சம் தோன்றுகின்றதோ அது சொப்பனாவஸ்தையாம்.

(3) யாதொன்று மறியேன், நித்திரையென்னாற் சுகமாயனுபவிக்கப்பட்டது என்னும் நினைவிற் கேதுவாய அநுபவகாலம் சுழுத்தியவஸ்தையாம்.

† விகாரமின்றி யுதாசீனமா யிருந்து புத்தி முதலியவற்றை விளக்குஞ் சேதனம் சாட்சியாம்.



67\. அறிவுக்கு மறிவு செய்யு மறிவுவே றுண்டேன் றெண்ணு
மறிவற்ற குதர்க்க மூடர்க் கனவத்தை பலமாய்த் தீரு
மறிபடும் பொருணீ யல்லை யறிபடாப் பொருணீ யல்லை
யறிபொரு ளாகு முன்னை யநுபவித் தறிவாய் நீயே.

கு-விடை:—அன்பனே ! † சொப்பிரகாச மாகிய ஞானத்திற்கு (பிரகாசஞ் செய்யும்) வேறு சொப்பிரகாச முண்டோ? (சொப்பிரகாச மாகிய ‡ சூரியன், நட்சத்திரம், தீப முதலியவற்றைப் பிரகாசஞ் செய்வதற்கு வேறு சொப்பிரகாசப்பொருள் எங்ஙனம் வேண்டப்படுவதில்லையோ அங்ஙனமே சொப்பிரகாசமாகிய ஞானத்தைப் பிரகாசஞ் செய்வதற்கு வேறு சொப்பிரகாசப் பொருள் வேண்டப்படுவதில்லை; ஆதலால்) அங்ஙனம் கூறாதே. (முன்னர்க்கூறிய தசமன்கதையில்) தசமன் ஒன்பதின்மர் முன்னே தன்னைத் தசம (பத்தாமவ) னென்றறிந்ததுந் தன்னாலேயாம்; அங்ஙனமன்றி அவனிடத்துப் பதினொன்றாவது புருஷன் அவனுக்குவேறாக விருக்கின்றானோ ? இல்லையல்லவா? (எங்ஙனம் தசமன்தன்னைத் தசமனென் றறியுமிடத்து அவனுக்கு வேறாக வோரு புருஷன் வேண்டப்படுவ தின்றாயிற்றோ அங்ஙனமே நீ யுன்னையறிவதற்கு வேறொரு பிரகாசம் வேண்டப்படுவதில்லை) ஆதலால் இதனை நீ ஊகித்துணரக் கடவாய். (66)

சீ-வினா:—அங்ஙனமாயின், ஒருஞானம் மற்றொருஞானத்தினால் பிரகாசிக்கின்றதென்று கூறுவதிலுள்ள தோஷம் யாது ?

கு-விடை:—ஆன்மா சொப்பிரகாச வடிவமென்னும் ஞானமில்லாத தார்க்கீகர் ¶ (கடாதிகளையே யன்றிக் கடாதி) ஞானத்திற்கும் பிரகாசஞ்செய்யும் வேறு ஞானமுண்டென்று கூறுகின்றனர். அவ்வாறு

---

† தனது பிரகாசத்தில் அந்நியப் பிரகாசத்தின் அபேட்சையின்றியதாய்ச் சர்வத்தையும் பிரகாசிக்கச் செய்வது சொப்பிரகாசமாம். இது ஸ்வப்பிரகாச மென்றும், ஸ்வயம்பிரகாசமென்றும் சொல்லப்படும்.

‡ வியவகார திருஷ்டியால் சூரியன் முதலியன சொப்பிரகாசப் பொருள்களென்று கூறப்பட்டது.

¶ இது ஞானத்தினது பிராமாணியம் (பிரமாத்தன்மை) ஞானத்தைக் கிரகிக்கும் பிரமாணத்திலும் வேறாகிய (அனுமானப்) பிரமாணத்தினால் கிரகிக்கப் படுகின்றதென்னுந் தர்க்கமத கண்டனமாம்.

கூறும் விபரீத வுணர்ச்சியுடைய அம்மூடர்க்கு † அநவஸ்தாதோஷமே பிரயோசனமாக முடியும். (ஆதலால் அவ்விபரீத வுணர்ச்சியினின் றகலக் கடவாய்).

சீ-வி:—*அங்ஙனமாயின், ஆத்மா ஒன்றானு மறியப்படாததோ.*

து-விடை:—* அன்பனே ! அறிபடு பொருளும் நீயன்று; அறிபடாப்

---

† *தார்க்கிகர்:* (1) நேத்திரமுதலியபிரமாணங்களாலுண்டாகும் ஞானம் வியவசாயஞானமாம். இதற்கு வடிவம் இதுகடம் என்பது போல்வதாம். (2) மனவடிவப் பிரமாணத்தா லுண்டாகும் ஞானம் அநுவியவசாய ஞானமாம். இதற்கு வடிவம் கடத்தையானறிகின்றே னென்பது போல்வதாம். வியவசாய ஞானத்திற்கு விஷயம் விஷய(கட)மும், அநுவியவசாய ஞானத்திற்கு விஷயம் விஷய (கட) மும் அதன் ஞானமுமாம். ஞானத்தின்ஞானம் அநுவியவசாயஞானமாம். அஃதாவது திரிபுடிகோசர ஞானமாம். காண்பான், காட்சி, காணப்படும் பொருளென்னு மிவற்றின் சமுதாயம் திரிபுடியெனப்படும். வியவசாயஞானத்தின் பிரகாசம் அநுவியவசாயஞானத்தாலும், அதன் பிரகாசம் இரண்டாவது அநுவியவசாயஞானத்தாலும் இங்ஙன முறையே யுண்டாகின்றதென்பது நியமமென்பர்.

முன் முன் உள்ளவொன்று பின் பின் உள்ளமற்றொன்றை அபேக்ஷிப்பது அநவஸ்தையாம். அஃதாவது முதலாவதற்கு(வியவசாய ஞானத்தின் பிரகாசத்திற்கு) இரண்டாவது (அநுவியவசாய ஞானமு)ம், இரண்டாவதற்கு (அவ்வநுவியவசாய ஞானத்தின் பிரகாசத்திற்கு) மூன்றாவது (இரண்டாவது அநுவியவசாய ஞானமு)ம், மூன்றாவதற்கு (இரண்டாவது அநுவியவசாய ஞானத்தின் பிரகாசத்திற்கு) நான்காவது (மூன்றாவது அநுவியவசாயஞானமு)ம் காரணமாமெனக் காரணத்தினெல்லையின்மையைக் கூறலாம். இதுபற்றி விரிவானகண்டனம் விருத்திப்பிரபாகரத்தின் ஏழாவது பிரகாசத்திற் காண்க.

(விருத்திரூப) ஞானமு மதன்பிராமாணியமும் (பிரமாத்தன்மையும்) தோஷாபாவத்தோடு கூடிய சாக்ஷியினால் கிரஹிக்கப்படுகின்றனவென்பது ஈண்டுச் சித்தாந்தமாம். வேதாந்தபரிபாஷை பிராமாணியவாதத்தில் “அவ்விருத்திஞானத்தைக் கிரஹிப்பது சாக்ஷிஞானம் ; விருத்தி ஞானம் கிரஹிக்கப் படும்போது அதன் பிராமாணியமுங் கிரஹிக்கப் படுகின்றது” என்று கூறுவதறிக.

* “அறியாப்பொருள் காரண மாயைகுறித், தறியும்பொருள் காரியமாமுலகிந், நெறியாற்றிகழ் நான்மறை யந்தமெலாம், நீயன்றென வோதுநிரந்தரமே”. “அறியும்பொருளன் றறியாப் பொருளன் றறிவாகிய நீயெனு மப்பொருடான், பொறியின் வழிநின் றறியும்பொருளோ, போதக்கண் விழித்தறி யும்பொருளே” என்பது சிவர்ணபோதம்.



68. மதுரமாங் கட்டி சுட்ட மாப்பணி யார மெல்லா
மதுரமாக் கியவ தற்கு மதுரந்தான் சுபாவ மன்றோ
† வதுவிது வெனுஞ்ச டங்க ளறிவாக வறிவைத் தந்தே
யதுவிது விரண்டு மாகா வகம்பொரு ளறிவாய் நீயே.

69. இந்தநீ துவம்ப தத்தி னிலட்சியப் பொருளா மென்றும்
பந்தமில் பிரம மேதற் பதந்தனி லிலட்சி யார்த்த
மந்தமாஞ் சீவ னீச னவர்களே வாச்சி யார்த்தஞ்
சந்ததம் பேத மாவார் தமக்கயிக் கியங்கூ டாதே.

---

பொருளும் நீயன்று. (எங்ஙனம் அறிபடும்பொருள் நீயன்றோ அங்ஙனமே அறிபடாப்பொருளும் நீயன்று).

சீ-வி:—*ஐயனே! யானிவ்விரண்டு மன்றாயின், பின் எத்தன்மையனா யிருக்கின்றேன்.*

து-விடை:—நீ இவ்விரண்டிற்கும் வேறாய் அறிபொருளா (நிர்விசேஷ சின்மாத்திரமா) யிருக்கின்றனை.

சீ-வி:—*அவ்வாறிருத்தல் விளங்கவில்லையே?*

து-விடை:—அது கர்த்துரு கர்மபாவங் கழன்ற அநுபவத்திலிருந்தால் விளங்கும். அவ்வாறாய அநுபவத்தி லிருந்து உன்னை (உனது நிஜ வடிவை) நீயே அறியக்கடவாய். (67)

சீ-வி:—*ஐயனே? என்னையா னநுபவித் தறிவது எப்படி? ஒன்றை யானநுபவிப்பதுபோல என்னைப் பிறிதொன் றல்லவா அநுபவிக்கவேண்டும்.*

து-விடை:—வெல்லக்கட்டி சேர்த்து மாவினாற் செய்த பணியாரங்க ளெல்லாவற்றையும் மதுரத்தை யுடையனவாகச்செய்த வெல்லத்திற்கு மதுரமானது சுபாவமாயிருக்கின்றதே யல்லாமல் அதற்கு மதுரம் பிறிதோன்றால் வந்ததல்ல, அதுபோல ‡ அறிபடுபொருள் அறிபடாப் பொருள் என்னு மிவ்விரண்டு ஜட வஸ்துக்களும் விளங்கும்படியாக விளக்கத்தைத் தந்து அவ்விரண்டு மாகாத அறிவாகிய நீயே அகம்பத (துவம்பத) லட்சியார்த்தமாய் இருக்கிறாய். (வெல்லம் மதுர சுபாவமாயிருத்தல்போன்று நீ ஞான சொரூபமா யிருக்கின்றாய் ஆதலால் உன்னை அநுபவித்தற்குப் பிறிதொருபொருள் வேண்டியதில்லை. ஆதலின் இப்படிப்பட்ட உன்னை சமாதி வாயிலாக) அநுபவித் தறியக் கடவாய். (68)

---

† *அது—அறிபடாப்பொருள், இது—அறிபடுபொருள்.*

‡ “ஆனதா லறிபொ ருட்கு மறிபடாப் பொருளி னுக்கு, மேனிலையறிவே மெய்யாய் மேவிய வான்மா நீயே” என்பது விவேகசூடாமணி.

70. பேதமா னதுவுங் கேளாய் பெயராலு மிடங்க ளாலு
மோதரு முபாதி யாலு முடலாலு முணர்வி னாலும்
பாதலம் விசும்பு போலப் பலதூர மகன்று நிற்ப
ராதலா லிவர்க்கெந் நாளு மயிக்கியமென் பதுகூ டாதே.

சீ-வினா:—பரமகுருவே! முன்னர்க்கூறிய வாச்சியார்த்த லட்சியார்த்தங்களுள் யான் அகம்பத லட்சியார்த்தமென்பது இப்பொழுது விளங்கியது. ஆதலால் அவ் வாச்சியார்த்த லட்சியார்த்தங்களையெல்லாம் விளக்கமாக அருள் புரியுமாறு பிரார்த்திக் கின்றேன்.

த-விடை:—(1) சரீரத்திரய விலட்சணமாய், பஞ்சகோசத்திற்கப் பாற் பட்டதாய், அவஸ்தாத்திரய சாட்சியாய், அகம் பதத்தின் லட்சியார்த்தமாயுள்ள நீயே துவம்பத லட்சியார்த்தமாம்.

(2) எக்காலத்தும் மாயாரகிதமாயுள்ள பிரஹ்மமே தத்பத லட்சியார்த்தமாம்.

(3-4) துவம்பதம் தத்பதமென்னு மிரண்டிற்கும் முறையே ஜீவனு மீசனும் வாச்சியார்த்தமாவர். அன்பனே! இவற்றை நன்று யூகித்தறியக்கடவாய்.

சீ-வினா:—இவற்றுள், யாருக்கு ஐக்கியம் சம்பவியாது?

த-விடை:—ஈசனுஞ் ஜீவனும் எஞ்ஞான்றும் பேதமுடையவரா யிருத்தலின், அவர்களுக்கு ஐக்கியம் சம்பவிப்பதில்லை. (69)

சீ-வினா:—அவர்களுக்கெக்காரணத்தால்பேதமுண்டாயிற்று.

த-விடை:—ஜீவேசுவரர் என்னும் பெயராலும், பிண்டாண்ட மென்னு மிடத்தாலும், காரிய காரணவடிவ வுபாதியாலும், வியஷ்டி சமஷ்டி என்னும் தேகாபிமானத்தாலும், கிஞ்சிஞ்ஞத்துவ சர்வஞ்ஞத் துவமென்னு முணர்வினாலும் ஜீவேசுவரர்களுக்குப் பேத முண்டாயிற்று. அதனால் அவர்கள் பாதாளலோகமும் விண்ணுலகமும் போல வேது தூரம் வேறுபட் டிருக்கின்றனர். இங்ஙனம் வேறுபட் டிருப்பதால் இவர்களுக்கு எக்காலத்திலும் ‡ ஐக்கியம் சம்பவிப்பதில்லை. இதனை யாராய்ந்தறியக் கடவாய். (70)

‡ பெயர்முதலிய வற்றால் ஜீவேசுவரர்கட்கு ஐக்கியம் சம்பவிப்ப தில்லை யென்பதனால், அப்பெயர் முதலியவற்றை விட்டு அவ்விருவரிடத்து மனுசூதமாயுள்ள சேதனத்தை மாத்திரம் விடாது கொண்டால் அவர்கட்கு ஐக்கியஞ் சம்பவிக்குமென்பதாம். அது கடாகாச மேகாகாசமென்புழிக் கடம் மேகமென்னு முபாதி நோக்கத்தை விட்டு ஆகாசத்தை மாத்திரம் விடாது கொள்ளுமிடத்து அவ்விரண்டிற்கும், கங்காஜலம் கடஜலமென் புழி ஆறு கடமென்னு முபாதிநோக்கத்தை விட்டு ஜலத்தை மாத்திரம் விடாது கொள்ளுமிடத்து அவ்விரண்டிற்கும் ஐக்கியம் சம்பவிப்பது போலவாம்.



சீ-வினா:—கூடஸ்தப் பிரஹ்மங்கட்கு ஐக்கியம் சம்பவிப்பது எவ் விலட்சணையால்? இலட்சணை யென்றால் என்ன? இவற்றைத் தேவரீர் கருணைகூர்ந்து திருவாய்மலர்ந் தருளல்வேண்டும்.

த-விடை:—அறமுதற் பொருளைக் காண்டற்குக் கருவியாகிய விலக் கண நூலையும் தருக்க நூலையும் நன்குணர்ந்துள்ள வடமொழிப் புலவர் சுருதி ஸ்மிருதி முதலியவற்றுள் தாமெடுத்துக்கூறும் வாக்கியார்த்தங் கள் பொருந்தாது விரோதப்படுமாயின், அவை விரோதமின்றி அர்த்தமா கும்படி ¶ இலட்சணா விருத்தியினால் பொருள்கொள்ளுகின்றனர். அது வும் ‡ விட்ட லட்சணை, விடாதலட்சணை, விட்டுவிடாத லட்சணை யென்று மூன்று வகைத்தாம். (70)

¶ வாக்கியத்தில் தாற்பரியானுபபத்தி (தாற்பரியவுணர்வு நிகழாமை) யே இலட்சணைக்குப் பீஜமாம். சக்கியத்தின் சம்பந்தம் இலட்சணையாம். கங்கையிலிடைச்சேரி யென்புழிக் கங்கையென்னும் பதத்தின் சக்கியம் தேவநதிப் பிரவாகமாம். அதற்கு அதன்கரையோடுள்ள சம்பந்தம் இலட்சணையாம்.

‡ (1) யாண்டு வாச்சியார்த்தத்தைவிட்டு அதன் சம்பந்தியையுணர்த் துவது சம்பவிக்கின்றதோ ஆண்டு விட்ட விலக்கணையாம். கங்கையி லிடைச்சேரி யென்புழிக் கங்கையென்னும் பதம் தனது வாச்சியார்த்த மாகிய தேவநதிப் பிரவாகத்தை விட்டு அதன் சம்பந்தியாகிய கரையை யுணர்த்துவதறிக. ஈண்டுக் கங்காபதத்தின் வாச்சியார்த்தத்திற்கு அதன் கரையோடுள்ள சையோகசம்பந்தம் இலட்சணாவிருத்தியாம்; அதனாலறி யப்படுங் கரை இலட்சியார்த்தமாம். தேவநதிப் பிரவாகத்தில் இடைச்சேரி யிருப்பது அசம்பவமாதலின் அது விடப்பட்டதென்க.

(2) யாண்டு வாச்சியார்த்தத்தை விடாது அதன் சம்பந்தியையு முணர்த்துவது சம்பவிக்கின்றதோ ஆண்டு விடாத விலக்கணையாம். செகப்போடுகின்றது என்புழிச் செகப்பென்னும் பதம் தனது வாச்சியார்த்தமாகிய செந்நிறத்தை விடாது அதன் சம்பந்தியாகிய குதிரை அல்லது மாடு முதலியவற்றையு முணர்த்துவதறிக. ஈண்டுச் செகப்பென்னும் பதத்தின் வாச்சியார்த்தமாகிய செந்நிறமென்னும் பண்பிற்கு அதன் குணியோடுள்ள தாதாத்மிய (கற்பிதபேத வாஸ்தவ அபேத) சம்பந்தம் இலட்சணா விருத்தியாம். அதனாலறியப்படுங் குணி இலட்சியார்த்தமாம். பண்பிற்குத் தொழில் சம்பவியாமையின் அதனோடு பண்பியுங் கொள்ளப்பட்டது; கறுப்பு நிற்கின்றது என்றற் றொடக்கத்தனவற்றிற்கு மிவ்வாறே கொள்க.

(3) யாண்டு வாச்சியார்த்தத்தின் விரோதமுடைய ஒரு பகுதியை விட்டு விரோதமில்லாத மற்றொருபகுதியை விடாதுணர்த்துவது சம்பவிக்கின்றதோ ஆண்டு விட்டுவிடாத விலக்கணையாம். சோயந் (அவன் இந்த) தேவதத்த னென்புழி இறந்த காலமும் தூரதேசத்துள்ள தேவதத்தனது உடம்பும் அவனென்னும் பதத்தின் வாச்சியார்த்தமாம். நிகழ்கால

மும் சமீபதேசத்துள்ள தேவதத்தனது உடம்பும் இவனென்னும் பதத்தின் வாச்சியார்த்தமாம். இங்கு இறந்த காலத்திற்கும் நிகழ் காலத்திற்கும் தூரதேசத்திற்கும் சமீபதேசத்திற்கும் ஒருமையுணர்ச்சியில் விரோதமிருத்தலின் அவற்றைவிட்டு ஒருமை யுணர்ச்சியில் விரோத மில்லாத தேவதத்தனது. உடம்பை விடாது அபேதமாகச் சோயந் தேவதத்தனென்னும் வாக்கிய முணர்த்துவதறிக.

ஈண்டு வாச்சியார்த்தத்தின் அவிரோத பாகமாகிய சரீரத்திற்குலட்சியார்த்தமாகிய சரீரத்தோடுள்ள தாதாத்மியசம்பந்தமும், வாச்சியார்தத்தின் விரோதபாகமாகிய தேசகாலங்கட்கு லட்சியார்த்தமாகிய சரீரத்தோடுள்ள சையோகசம்பந்தமும் லட்சணாவிருத்தியாம். அதனாலறியப்படும் இலட்சியார்த்தம் தேவதத்தசரீரமாம்.

முன்னர்ப்பார்த்த தொன்றைப் பின்னும் பார்க்குமிடத்து 'அதுதானிது' என்னும் ஞானமுண்டாம். அங்ஙனமுண்டாகும் ஞானம் பிரத்தியபிஞ்ஞாரூபப் பிரத்தியட்ச மெனப்படும். சோயந் தேவதத்தனென்னும் ஞானமும் பிரத்தியபிஞ்ஞாரூபப் பிரத்தியட்சமாம்.

இம்மூன்று லட்சணைகளுள், விட்டலட்சணை "அந்நம் பிரஹ்மம்" என்றற்றொடக்கத்து அவாந்தரவாக்கியங்களிலும், விடாதலட்சணை "சத்தியம் ஞானம் அநந்தம் பிரஹ்மம்" என்றற்றொடக்கத்து அவாந்தரவாக்கியங்களிலும், விட்டு விடாதலட்சணை "தத்துவமசி" என்றற்றொடக்கத்து மகா வாக்கியங்களிலும் பயன்படுவனவாம். 'அந்நம் பிரஹ்மம்' என்புழி அந்நபதம் தனது வாச்சியார்த்த மாகிய வுணவைவிட்டு அதனது தாதாத்மிய சம்பந்தமுடைய சேதனத்தையும், 'சத்தியம் ஞானம் அநந்தம் பிரஹ்மம்' என்புழிச் சத்தியமுதலிய பதங்கள் தமது வாச்சியார்த்தமாகிய வுண்மை முதலியவற்றை விடாது அவற்றின் தாதாத்மிய சம்பந்தமுடைய சேதனத்தையு முணர்த்துவதறிக. விட்டுவிடாத லட்சணை கீழ்க் கூறப்படும்.

மகாவாக்கியத்தில் விட்ட விலட்சணையைக் கொண்டால் 'தத்துவம்' பதங்களின் வாச்சியார்த்தத்திலுள்ள சேதனபாகமும் விடுபட்டுப் போதலின் அது பொருந்தாது. விடாத விலட்சணையைக் கொண்டால் வாச்சியார்த்தத்தின் ஒருபகுதியும் விடப்படுவதன்றி யிருத்தலின் அதுவும் பொருந்துவதன்று. விட்டலட்சணையில் சேதனத்தையும் விடுதலும், விடாத லட்சணையில் சேதனத்தோடு ஜடத்தையுங் கொள்ளுதலும் சம்பவித்தலின் இவ்விரண்டாலும் ஜீவப்பிரஹ்ம வைக்கியம் சித்தியாமை காண்க.

"விட்டவிலக் கணையாலு மைக்கியந் தோன்று விடாதவிலக் கணையாலு மைக்கியந் தோன்று, திட்டமதா முபயவிலக் கணையொன் றாலே யிலங்குபர சிவையிக்கிய மிலங்கும்." என்பது ரிபுகீதை.

விட்டலக்கணை தனையும்விட்டு விடாதலக்கணை தனையுநீ, விட்டுவிட்டு விடாதலக்கணை யால்விளங்கும் விளங்கவே. என்பது சசிவர்ணபோதம்.



71. வடநூல்வல் லவர்கள் சொல்லும் வாசகப் பொருள்சே ராம
லிடராகிற் பொருளாம் வண்ண மிலக்கணை யுரையாற் கோள்
திடமான வதுவு மூன்றுச் செப்புவார் விட்ட தென்றும் [வார்
விடலிலா தென்றும் விட்டு விடாததென் றும்பே ராமே.

72. கங்கையிற் கோஷ மென்றுங் கறுப்புச்சேப் போடு தென்றுந்
தங்கிய சோயந் தேவ தத்தனென் றுஞ்சொல் வார்க
ளிங்குதா ரணங்க ளாக்கி யிந்தமூன் றுரைக ளாலே
துங்கநூல் விரோத மான சொல்லெலாம் பொருளாந் தானே.

(1) கங்கையிலிடைச்சேரி என்பது விட்டலட்சணைக்கும் (2) கறுப்பு நிறக்கச் சிகப் போடுகின்றது என்பது விடாத லட்சணைக்கும் (3) சோயம் (அவன் இவன்) தேவதத்தன் என்பது விட்டுவிடாத லட்சணைக்கும் உதாரணங்களாம்.

இம்மூவகை இலட்சணா விருத்தியினாலே சாஸ்திரங்களி லுள்ள விரோதார்த்த வாக்கியங்களெல்லாம் விரோதமின்றித் தாமே பொருள் படும். (இம்மூன்று இலட்சணைகளுள் விட்டுவிடாத லட்சணையே ஈண்டுக் கொள்ளத்தக்கதாம்). (72)

முற்கூறிய சோயந் தேவதத்த னென்னும் வாக்கியத்துள் சோயம் (சஃ அயம்) என்னும் பதங்களின் வாச்சியார்த்தம் தூரதேசம் சமீபதேசம், இறந்தகாலம் நிகழ்காலம், அந்தத் தேவதத்தன் இந்தத் தேவதத்த னென்பனவாம். இவை பரஸ்பரம் விரோதமுடையனவா யிருத்தலின், இவ்விரோததருமவாச்சியார்த்தங்களை யெல்லாம்விட்டு அவற்றை அனுசரித்துள்ள இலட்சியார்த்த (தேவதத்த பிண்ட)த்தைவிடாது ஆலோசித்துப் பார்த்தால், அவ்வாக்கிய மானது விரோதமின்றித் தேவதத்த னென்னு மொருபுருடனைப் பிரத்தியட்சமாய்க் காட்டாநிற்கும். (73)

அதுபோல, † தத்துவமசி மகாவாக்கியமானது தத் (அது) துவம் (நீ) பதங்களின் பேததர்மங்களையுடைய வாச்சியார்த்த பாகமான மாயை அவித்தைகளை விட்டு, (பேததர்மங்களின்றிய) பிரஹ்மமாயும்

† இது (சாமவேதத்தின் சாந்தோக்கிய வுபநிஷத்தினது ஆறுவது பிரபாடகத்தில்) சுவேதகேதுவென்னும் புத்திரனுக்கு அவனது பிதாவாகிய உத்தாலகமுனிவர் ஒன்பதுமுறை யுபதேசித்த மகாவாக்கியமாம்! சீவேசுவர பேதநிவிர்த்தி பூர்வகமாகிய வர்த்தங்களை யுணர்த்தும் வாக்கியம் ஈண்டு மகாவாக்கியமெனப்படும்.

தத்துவமசி மகாவாக்கியத்தில் சர்வஞ்ஞத்துவாதி தர்ம முடைய மாயையோடுகூடிய பிரஹ்மசேதனவடிவ வீசுவரன் தத்பதத்தின் வாச்சியார்த்தமாம்; கிஞ்ஞிஞ்ஞத்துவாதி தர்மமுடைய அவித்தை அல்லது புத்தி

73. பன்னிய சோய மென்னும் பதங்களின் வாச்சி யார்த்த
மன்னிய தேசங் கால மவனிவ னென்ப வெல்லாஞ்
சொன்னவிவ் விரோதம் விட்டுத் தொடரிலக் கியம்வி டாம
லுன்னிடிற் றேவ தத்த ஞெருவனை வெளியாக் காட்டும்.

யோடு கூடிய கூடஸ்த சேதனவடிவ ஜீவன் துவம்பதத்தின் வாச்சியார்த்தமாம். இங்குச் சர்வஞ்ஞத்துவாதி தர்மமுடைய மாயைக்கும் கிஞ்ஞிஞ்ஞத்துவாதி தர்மமுடைய அவித்தை அல்லதுபுத்திக்கும் பரஸ்பரம் விரோதமிருத்தலி னவற்றைவிட்டு விரோதமில்லாத (பிரஹ்ம கூடஸ்த) சேதனங்களை விடாது அபேதமாக அம் மகாவாக்கிய முணர்த்துவதறிக. மகாவாக்கியத்தினல் சிஞ்ஞாசுகளுக்கு அகண்டப் பிரஹ்மத்தின் ஞானமுண்டாகுகவென்பது ஈசுவரனது அநாதி தாற்பரியமாமாதலி னுண்டுள்ள லட்சணை நிரூடலட்சணையாம். இலட்சியார்த்தமான கூடஸ்தப் பிரஹ்மங்களுக்கு ஐக்கியமேயன்றி,வாச்சியார்த்தமானசீவேசுவரர்களுக்கைக்கியமின்று மென்பதொருதலையாம். விட்டுவிடாத லட்சணையில் வாச்சியார்த்தத்தின் ஏகதேசபாகம் இலட்சியார்த்தமாம். இங்கு விரோதமில்லாத வாச்சியார்த்தம் கூடஸ்த பிரஹ்மங்களாம். ஈண்டு வாச்சியார்த்தத்தின் அவிரோதபாகமாகிய சேதனத்திற்கு இலட்சியார்த்தமாகிய சேதனத்தோடுள்ள தாதாத்மிய சம்பந்தமும்,வாச்சியார்த்தத்தின் விரோதபாக மாகிய ஜடத்திற்கு இலட்சியார்த்தமாகியசேதனத்தோடுள்ள அதிஷ்டானத்தன்மைச் சம்பந்தமும் இலட்சணவிருத்தியாம்; அதனாலறியப்படும் இலட்சியார்த்தம் சேதனமாம். இதனது விரிவு வருமாறு:—

தத் என்பதன்பொருள் சர்வசத்திமானும், சர்வஞ்ஞனும், விபுவும், சுதந்திரனும், பரோட்சனும், மாயியும், பந்தமோக்ஷ மின்றியவனுமாய ஈசனும். அஃதாவது தத்பதத்தின் வாச்சியார்த்தம் ஈசனுமென்பது.

துவம் என்பதன்பொருள் அற்பசக்திமானும், அற்பஞ்ஞனும், பரிச்சின்னனும், அநீசனும், கர்மாதீனனும், அவித்தியா மோகிதனும், பந்தமோக்ஷ முடையவனும், பிரத்தியட்சனுமாய சீவனும். அஃதாவது துவம்பதத்தின் வாச்சியார்த்தம் சீவனுமென்பது. அசியென்பதன் பொருள் ஐக்கியம், அல்லது இருக்கின்றாய் என்பது.

இங்குத் தத்துவமசி(அது நீயாயிருக்கிறாய்)என் றுரைப்பதினால் ஈசுவர ஜீவர்களின் அபேதம், வாச்சியார்த்தத்தால் விளங்குகின்றது; விளங்கினும் அது பொருந்தாது; ஏனெனின், தம்முள் மாறுன தர்மமுள்ள (மாயையைச் சுவாதீனத்தில் வைத்துள்ள) ஈசனும், (அவித்தியா மோகிதனான) சீவனுமாய இருவரும் ஒன்றெனக் கூறுவது ஆகாயம் கனத்திருக்கின்றது, நெருப்பு குளிர்ந்திருக்கிறது என்றுரைப்பதற் கொப்பாயிருத்தலின், விரோதப்படுகின்ற வாச்சியார்த்தங்களைவிட்டு விரோதப்படாதவாச்சியார்த்தங்களைக் கொண்டு அவற்றிற்கு அபேதங்கூறல் வேண்டுமென்பது.



தத்துவமசி மஹாவாக்கியத்தில் தத்துவம் பதங்கள் சமான (ஒரே முதல்) வேற்றுமையின் வலியால் பிரஹ்மாத்மாவி னொருமையையுணர்த்துதலை அசிபதம் நிலைப்பூட்டு கின்றதென் றிங்கறியத் தக்கதாம். (அகம் பிரஹ்மாஸ்மி என்றற்றொடக்கத்து மகாவாக்கியங்களிலுள்ள அஸ்மி முதலிய பதங்கட்கு மிவ்வாறே கொள்க).

இங்ஙனமே, ஒவ்வொரு வேதத்திலும் தலைமையாக வொவ்வொரு மகாவாக்கியமுண்டு. ருக்வேதத்தின் ஐதரேய வுபநிஷத்தின் மகாவாக்கியம் **பிரஞ்ஞானம் (அறிவு) பிரஹ்மம்** என்பது. யசுர்வேதத்தின் பிருகதாரணியகவுபநிஷத்தின் மகாவாக்கியம் **அகம் பிரஹ்மாஸ்மி**(நான்பிரஹ்மமாயிருக்கிறேன்) என்பது. அதர்வணவேதத்தின் மாண்டூக்கிய உபநிஷத்தின் மகாவாக்கியம் **அயமாத்மா (இந்த ஆன்மா) பிரஹ்ம** மென்பது.

இம் மகாவாக்கியங்களுள் பிரஞ்ஞானம் அகம், ஆத்மா வென்னும் பதங்களுக்கு வாச்சியார்த்தம் சீவனும் லட்சியார்த்தம் கூடஸ்தனுமாம். பிரஹ்மபதங்களுக்கு வாச்சியார்த்தம் ஈசுவரனும் லட்சியார்த்தம் சுத்தப் பிரஹ்மமுமாம். தத்துவமசி முதலிய இந்நான்கு மகாவாக்கியங்களுள் தத்துவமசி என்பது உபதேச மகாவாக்கியமும், பிரஞ்ஞானம் பிரஹ்மமென்பது சம்மதி மகா வாக்கியமும், அயமான்மாப் பிரஹ்மமென்பது அப்பியாச மகாவாக்கியமும், அகம் பிரஹ்மாஸ்மி யென்பது அநுபூதி மகாவாக்கியமுமாம்.

"சுயமதுவாந் தத்வமசி யென்னும் வாக்யஞ்
சொல்லுமுப தேசமகா வாக்ய மாகு
மியலுமகம் பிரமாஸ்மி யென்னும் வாக்ய
மிலகுமநு பூதிமகா வாக்ய மாகு
மயன்மருவாப் பிரஞ்ஞானம் பிரம வாக்ய
மனனத்தி னப்பியாச வாக்ய மாகு
மயமான்மாப் பிரமமென வறையும் வாக்ய
மதற்கெல்லாஞ் சம்மதமாம் வாக்ய மாமே".

"ஆதலினாற் றத்வமசி வாக்கி யத்தா
லருளியவா றகண்டார்த்த மறிந்து கொண்டு
பேதமறப் பிரஞ்ஞானம் பிரம மென்று
பேசுமகா வாக்கதனல் மனனஞ் செய்து
வாதகமி லயமான்மாப் பிரம மென்னும்
வாக்கதனாற் சரியெனவே சம்ம தித்திங்
கோதுமகம் பிரமாஸ்மி வாக்கி யத்தா
லுரைத்தவகண் டார்த்தத்தை யநுப விப்பாய்".

என்பது ரிபுகீதை.

"உரைத்தவையுட் சிறந்ததுநற் சாமமறை புகலு மொங்குதத்தொ மசி மகா வாக்கியமங் கதற்குப், பரத்தலுறு தற்பதந்தொம் பதமொடசி பதமா

ய்ப் பதமூன்ருஞ் சிவமுயிரங் கவற்றயிக்க முறையே, யருத்தமென லாம்
பதமே பதார்த்தமொடு வாக்கி யார்த்தங்க டமக்குச்சம் பந்தமுறை மூன்
ரும், விரிக்கிலவை தாஞ்சாமா ஞதிகர ணம்பின் விசேடவிசே டியமிலக்
கணமொடிலக் கியமாம்'' என்று வேதாந்த சூளாமணி கூறுவதால் தத்துவ
மசி மகாவாக்கியத்துள் சாமாஞதிகரணிய சம்பந்தமுதலிய சம்பந்தத்திரயங்
களு மறியத்தக்கனவாம். அவை வருமாறு:—

'' சாமாஞதிகரணியம் விசேஷணவிசேஷியபாவம் இலக்ஷியலக்ஷண
பாவமென்னு மிம்மூன்று சம்பந்தங்களும் மாகாவாக்கியத்திற்குச் சககாரிக
ளாம். தத்துவமஸி என்னும் வாக்கியத்திலுள்ள தத்துவம் என்னுமிரு
பதங்கட்கும் பரஸ்பரம் சாமாஞதி கரண்ய சம்பந்தமும் இவ்விரு பதங்களி
னர்த்தங்கட்குப் பரஸ்பரம் விசேஷண விசேஷியபாவ சம்பந்தமும், இவ்
விரு பதங்கட்கும் அல்லது இவ்விருபதங்களி னர்த்தங்கட்கும் அகண்ட
சைதன்யத்தோடு இலக்ஷியலக்ஷணபாவ சம்பந்தமும் உளவாம்.

(1) பின்னபின்னமாய பிரவிருத்திக்கு நிமித்தங்களாய சப்தங்கட்கு
எவ்வேகார்த்தத்தில் பிரவிருத்தி யுண்டோ அதுவே இச்சப்தங்கட்குப்
பரஸ்பரம் சாமாஞதிகரண்ய சம்பந்தமாம்.

ஸோயம் தேவதத்தஃ என்புழி, ஸஃ-சப்தமோ அத்தேசகாலவிசிட்ட
தேவதத்தனது வாசகமாம்; அயம்-சப்தமோ இத்தேசகாலவிசிட்ட தேவ
தத்தனது வாசகமாம்; ஆண்டு ஒரே தேவதத்தனிடத்து ஸஃ - சப்தத்தின்
பிரவிருத்திக்கு நிமித்தம் அத்தேசகால விசிட்டத்தவமும், அயம்-ஸப்தத்
தின் பிரவிர்த்திக்கு நிமித்தம் இத்தேசகால விசிட்டத்துவமுமாம். இவ்
விரு சப்தங்களும் பாகத்யாக இலக்ஷணையால் அத்தேசகால விசிட்டத்வ
இத்தேசகால விசிட்டத்வ அம்சங்களைப் பரித்யாகஞ்செய்து ஒரேதேவதத்த
பிண்டத்தைப் போதிப்பனவாம். இதுவே ஸோயம் என்னும் இரு சப்தங்
கட்கும் பரஸ்பரம் சாமாஞதிகரண்ய சம்பந்தமாம்.

(2) முற்கூறிய வாக்கியத்திலேயே இரு சப்தங்களின் அர்த்தங்கட்கு
முள்ள பரஸ்பர விரோதத்தை நிவிர்த்திப்பது விசேஷண விசேஷியபாவ
சம்பந்தமாம். ஆண்டு, ஸஃ - சப்தத்தினர்த்தம் விசேஷியமும், அயம்-சப்தத்
தினர்த்தம் விசேஷணமும், ஸோயமென்னும் வாக்கியப் பிரயோகத்தி
லாம். அயம - சப்தத்தினர்த்தம் விசேஷியமும், ஸஃ - சப்தத்தினர்த்தம்
விசேஷணமும், அயம் ஸஃ - என்னும் பிரயோகத்திலாம்.

(3) முற்கூறிய வாக்கியத்தின்கண்ணுள்ள இருசப்தங்களின் பாகத்தி
யாகலட்சணையால் அத்தேசகால விசிட்டத்வ இத்தேசகால விசிட்டத்வங்க
ளாய இருவிரோதி யம்சங்களைப் பரித்தியாகஞ்செய்து அவிருத்த தேவ
தத்த பிண்டமாத்திரம் அவ்வாக்கியத்தாற் போதிப்பிக்கப்படுகின்றது. ஆத
லால், தேவதத்த பிண்டமாத்திரமே ஸோயம் வாக்கியத்திற்கு இலக்ஷியார்



த்தமாம். இவ்வாறு வாக்கியார்த்தரூப லக்ஷிய தேவதத்தனேடு ஸோயம்
என்னும் இருபதங்கட்கும் பதார்த்தங்கட்கும் இலக்ஷியலக்ஷணபாவ சம்
பந்தமாம்.

ஈண்டு அறிவிப்பது இலட்சணமும் அறிய யோக்கியமாயது இலக்ஷி
யமுமாம். ஸோயம் என்னும் இருபதங்களால் அல்லது இருபதங்களி
னர்த்தங்களால் அத்தேவதத்த பிண்டம் அறியப் படுவதாம். ஆதலால்
பதங்களும் அர்த்தங்களும் இலக்ஷணமாம், அத்தேவதத்த பிண்டம் இல
க்ஷியமாம்.

(1) அங்ஙனமே,தத்துவமஸி என்னும் மகாவாக்கியத்திலுள்ள தத்ப
தமோ பரோக்ஷத்வ சர்வஞ்ஞத்வாதி தர்மவிசிட்ட ஈசுவர சைதன்யத்தின்
வாசகமாம்; துவம்பதமோ அபரோக்ஷத்வ அற்பஞ்ஞத்வாதி தர்மவிசிட்ட
ஜீவசைதன்யத்தின் வாசகமாம். ஆண்டுத்தற்பதத்தின் பிரவிருத்திக்கு நிமி
த்தம் பரோக்ஷத்வாதி தர்ம விசிட்டத்தன்மையாம். துவம்பதத்தின் பிர
விருத்திக்கு நிமித்தம் அபரோக்ஷத்வாதி தர்ம விசிட்டத்தன்மையாம். ஆத
லால், தத்துவம் என்னும் இருபதங்களின் பிரவிருத்திக்கு நிமித்தம் பிந்ந
பிந்நங்களாம். இவ்விருபதங்கள் பாகத்தியாக இலக்ஷணையால் ஒரு அகண்
டசைதன்யத்தின் போதகமாம். இதுவே அப்பதங்களின் பரஸ்பரம் சாமா
ஞதிகரணிய சம்பந்தமாம். (2) தத்பதார்த்தரூப ஈசுவர சைதன்யத்திற்கும்
துவம்பதார்த்தரூப ஜீவசைதன்யத்திற்கும் பரஸ்பரம் பேதப்பிராந்தியை
நிவிர்த்தி செய்வதாயுள்ளது விசேஷணவிசேஷியபாவ சம்பந்தமாம். தத்
துவமசியென்னும் வாக்கியப் பிரயோகத்தில் தத்பதார்த்தம் விசேஷிய
மாம்; துவம்பதார்த்தம் விசேஷணமாம். துவந்தத்தசியென்னு மிவ்வாருய
வாக்கியப்பிரயோகத்திலோ துவம்பதார்த்தம்விசேஷியமாம்;தத்பதார்த்தம்
விசேஷணமாம். இங்ஙனம் தத்துவம் பதார்த்தங்கட்குப்பரஸ்பரம் அபேத
ரூபத்தால் விசேஷண விசேஷியபாவம் செய்வதால் இரண்டின் பேத
மயனீங்கும். [தத்பதார்த்தத்தில் பரோக்ஷத்தன்மையின் மயக்கம் நீக்கத்
தத்பதார்த்தத்தை யுத்தேசித்துத் துவம்பதார்த்தத் தன்மை விதேயமாம்;
துவம் பதார்த்தத்தில் பரிச்சின்னத்தன்மையின் மயக்கம் நீக்கத் துவம்
பதார்த்தத்தை யுத்தேசித்துத் தத்பதார்த்தத்தன்மை விதேயமா (அமைக்
கப்பட்டதா)ம்.] (3)தத்துவம் என்னும் இருபதங்கட்கும்அவ்விருபதங்களி
னர்த்தரூபமான ஈசுவர ஜீவர்கட்கும் வாக்கியார்த்தபூத அகண்ட சைதன்
யத்தோடு இலட்சிய இலக்ஷணபாவ சம்பந்தமாம். அவ்விரு பதங்களும்
பதார்த்தங்களும் பரோக்ஷத்வ அபரோக்ஷத்வாதி விருத்தாம்சங்களைப்
பரிகரித்து அவிருத்த அகண்ட சைதன்யமாத்திரத்தையே அறிவிப்ப
தாம். ஆதலால் அப்பதங்களிலும் அவ்வர்த்தங்களிலுமோ இலக்ஷணரூபத்
தன்மையும் அவ்வகண்ட சைதன்யத்தில் லக்ஷியரூபத்தன்மையும் உள
வாம்.'' —தத்வானுசந்தானம்.

74. தத்துவ மெனும்ப தங்கள் பிரமமாய்ச் சாட்சி யான
வத்துவை விடாமற் பேத வாச்சியார்த் தத்தை விட்டு
நித்தமு மதுநீ யாகு நீயது வாகு மென்னு
மத்தமு மகண்ட மென்றே யசிபத வைக்கியங் காட்டும்.

சாட்சியாயுமுள்ள சேதன பாகமான லட்சியார்த்தத்தை விடாமல், எப்போதும் † (தத்துவமசி) பிரஹ்மமேகூடஸ்தனும், (துவந்தத்தசி) கூடஸ்தனே பிரஹ்மமாம் என்னும் அசிபதத்தின் அர்த்தமும் ஏகமே என்று ஐக்கியத்தை அறிவிக்கின்றது. (74)

† பிரஹ்மமே கூடஸ்தனும், கூடஸ்தனே பிரஹ்மமாம் என்று ஓதப்புரோத பாவமாகக் கூறியது தத்பத லட்சியார்த்தத்தில் பரோட்சத்துவப் பிராந்தியும், துவம்பதலட்சியார்த்தத்தில் பரிச்சின்னத்துவப் பிராந்தியும் நீங்குதற் பொருட்டாம்.

தத்துவம் (அது, நீ) என்பதனால் தத்பதலட்சியார்த்தத்திற்கு நித்திய அபரோக்ஷமாயுள்ள துவம்பத லட்சியார்த்தத்தோடு அபேதம் சித்தித்தலால் தத்பத லட்சியார்த்தத்தின் பரோட்சத்தன்மைப் பிராந்து நீங்குகின்றது.

துவம் தத் (நீ, அது) என்பதனால் துவம்பத லட்சியார்த்தத்திற்கு வியாபகமான தத்பதலட்சியார்த்தத்தோடு அபேதஞ்சித்தித்தலால் துவம்பத லட்சியார்த்தத்தின் பரிச்சின்னத்துவப் பிராந்தி நீங்குகின்றது. இங்ஙனமே பிரஹ்மம் பிரஞ்ஞானம், பிரஹ்மம் அகம், பிரஹ்மம் ஆத்மா என்று கூறுவதால் பரோக்ஷத்துவப் பிராந்தியும் பிரஞ்ஞானம் பிரஹ்மம், அகம் பிரஹ்மம், ஆத்மா பிரஹ்மம் என்றுகூறுவதால் பரிச்சின்னத்துவப் பிராந்தியும் கெடுவனவாம்.

பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின் ஐக்கியம் ஓதப்புரோதபாவ மெனப்படும். இஃது அந்வயமென்றும், வியதிகாரமென்றும், குறுக்கு நெடுக்கு என்றும் கூறப்படும். பரஸ்பரம் - ஒன்றற்கொன்று. தத்துவம் பதார்த்த சோதனத்திற்குப்பின்னர் விசாரித் தறிந்த பிரஹ்மாத்மாக்களிலோ மாயை அவித்தை சம்பவியாவாயினும், மகாவாக்கியத்தின் அர்த்தமாகிய பிரஹ்மாத்மவைக்கியம் எதுவோ அது செவ்வையாய் அறியப்பட்டதாகாது. அறியப்படாததாம். அவ் வைக்கியத்தில் மாயை அவித்தை நிலைத்திருந்து பரோக்ஷத்தன்மை வடிவமும் பரிச்சின்னத்தன்மை வடிவமுமாகிய பிராந்தியை உண்டு பண்ணுகின்றன. அந்தப் பிராந்தியை நீக்குதற்பொருட்டு ஓதப் புரோதபாவம் செய்யத்தக்கதாம். ஓதப்புரோதபாவம் செய்ய ஐக்கியத்தின் செவ்வையான ஞானமுண்டாம்; உண்டாகவே, மாயைஅவித்தைகளின் நிவிருத்தி வாயிலாகப் பரோக்ஷத்தன்மை பரிச்சின்னத்தன்மை வடிவப் பிராந்தியின் நிவிருத்தி யுண்டாமென்க.



75. கடநீரின் மேகநீரிற் கண்டவா னிரண்டும் போய்யே
குடவானும் பெரிய வானுங் கூடியோன் றுமேப் போது
மிடமான பிரமஞ் சாட்சி யிரண்டுமேப் போது மேகந்
திடமாகச் சுவாநு பூதி சிவோகமேன் றிருந்தி டாயே.

சீ-வினா:—தேவரீர் இப்போது யான் அப்பியசிக்கத்தக்கதைக் கூறும்படி பிரார்த்திக்கின்றேன்.

கு-விடை:—அன்பனே! கடஜலத்திலும் மேகஜலத்திலும் பிரதிபிம்பித்துள்ள ஜலாகாசம் மேகாகாசம் என்னும் இரண்டும் உபாதியினாற் கற்பிதமாயிருத்தலின், மித்தையேயாம்; கடாகாசம் மகாகாசம் என்னும் இரண்டும் எப்போதும் ஒன்றேயாம். அதுபோல, புத்தி அல்லது அவித்தையில் பிரதிபிம்பித்துள்ள ஜீவனும் மாயையில் பிரதிபிம்பித்துள்ள ஈசனும் உபாதியினாற் கற்பிதமாயிருத்தலின் மித்தையேயாம். பிரஹ்மம் சாட்சி யென்னும் இரண்டும் எப்போதும் ஒன்றேயாம். ஆதலின் இவ்வொன்றென்னும் அனுபவம் சந்தேகவிபரீதமின்றித் திடமாதற்பொருட்டுச் சிவோஹம் ‡ (சிவமே நான்-நானே சிவம்) என்று நிதித்தியாசனஞ்செய்து நிதித்தியாசனத்தின் பரிபாகமான சுவானுபவத்தில் (தான் அறிவானந்தமென்னும் அநுபவத்தில்) பிறழா திருக்கக்கடவாய். இதுவே உன்னால் என்றும் இடைவிடா தப்பியசிக்கத் தக்கதாம். (75)

‡ சிந்தனை புறஞ்செலாச் சிவோகம் பாவனை
சந்தத முஞற்றிடிற் சமாதி வந்துறு
மந்தநற் சமாதியா லறிவு மேவிடு
மிந்தநன் னிலையிலே யிருக்கற் பாலையே.

என்று சிவஞானவள்ளலார் கூறுவதால் சமாதிக்கேது 'சிவோகம் பாவனை என்பதும், தத்துவ ஞானத்திற்கேது சமாதிஎன்பதும் பெறப்படுதலின், தத்துவஞானத்தை யடைய விரும்புவோர் வேறுசிந்தனை யின்றிச் செய்தற்குரியது சிவோகம்பாவனையா மென்பது தெள்ளிதின் விளங்குமென்க. சிந்தனை புறஞ்செலாச் சிவோகம் பாவனை சவிகற்ப சமாதியும் அதனாலுண்டாகும் சமாதி நிருவிகற்ப சமாதியுமாம். சிவோகம் பாவனை செய்யுங் கிரமத்தினை ஸ்ரீசங்காபூஜ்ய பகவத்பாதாசாரிய சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியுள்ள தசகத்திலும், சட்கத்திலுங்காண்க.

"நீசிவமா யோரிமைப்பு நிற்பை யெனிற், காலனுங்கை கூப்பி நிற்பன் காண்" என்றும், "சிவோகஞ் சிவோகஞ் சிவோகமென, வந்தி பிறப்பறு மாணு" என்றும், "சிவோகம் பாவித்தலால், ஆய்ந்தவனே யாமா றறி" என்றும், "சிவன்வேறு சீவன்வே றென்றிரண்டாச் செப்பு, மவன்சிவனை யென்று மறியான்" என்றும், "தானே சிவமல்லாற் றனிச்சிவம் வேறில்லை'

76. தஞ்சமாங் குருவுஞ் சொன்ன தத்துவ வழிதப் பாமற்
பஞ்சகோ சமுங்க டந்து பாழையுந் தள்ளி யுள்ளிற்
கோஞ்சமா மிருப்பும் விட்டுக் கூடத்தன் பிரம மென்னு
நெஞ்சமு நழுவி யோன்ருய் நின்றபூ ரணத்தைக் கண்டான்.

சீடன் நிட்டைகூடித் தனது நிசவடிவத்தைத் தரிசித்தல்.

வினு:—பிறகு அச்சீடன் யாது செய்தான்?

விடை:—வேதாந்தசாஸ்திரமே யன்றி அதற்கிணக்கமாய்த் தனக்குப் பெருந்துணையாயுள்ள குருவுங்கூறிய வுண்மைநெறி தவறது

என்றும் சிவஞான வள்ளலார் பலவிடத்தும் வற்புறுத்திக் கூறுதலால் அப்பாவனையின் பய னினிது விளங்குமென்க.

"பிரமமே யான ஞானி பின்னரிச் சம்சா ரத்தை, மருவிடா ஞதலாலே மாசற முமுட்சு வானேன், பிரமநான் பிரம மேநான் பிரமமே நானென் றிங்ஙன், றிரமதாய்ப் பிரமந் தன்னைத் தினமுமே யறிய வேண்டும்."—"திருசியத் தோற்றந் தன்னைத் திருக்குமாத்திரமே யாகப்,பிரவிலாபித்து நின்னைப் பிரமமாய்ப் பார்த்திருந்திங், கரியனே வெளியி லுள்ளிலாவது சமாதி பெற்றுக், கருமபந் தம்வரைக்குங் காலநீ தள்ளு வாயே" என்று விவேகசூடாமணிகூறுவதும், "சித்த சாந்தஞ் சிதம்பரமாத் தானேதிகழு மனுபவத்தைச்,சித்த சாந்த முளமேலோர் சிவோகம் பாவித் தடைகின்ருர்" என்று சொருபானுசந்தானங் கூறுவதும், "சற்குரு வருட,த் துவமசி வாக்கிய, வழியே தனைத்தா னுணர்ந்தமா யோகி, சிவோகம் பாவித் திடுபெருந் திறத்தால், ......நிறைபரி பூரண னித்தியா னந்தன்" என்று சொருபலட்சணுவிருத்தி கூறுவதும். "அங்கமுத லணுவுமிலா தகண்டாகார மாகியுள வத்துவித பரசிவத்தைச், சங்கமறச் சந்ததமுஞ் சிவோக மென்னுஞ் சலியாத பாவனையாற் பூசை செய்து, துங்கபர சிவகருணை திடமாய்ப் பெற்றுத் தொடருமனே விகற்பமெலா முடனே தீர்ந்து, பங்கமிலாப் பரமசிவ போதங் கூர்ந்து பரமசிவ பத்தனுநா ஞனே னையா." என்று ரிபுகீதை கூறுவதும்.,

"மன்னிய சோகமா மாமறை யாளர்தஞ்
சென்னிய தான சிவோகமா மீதென்ன
வன்னது சித்தாந்த மாமறை யாய்பொரு
டுன்னிய வாகம நூலெனத் தோன்றுமே."

"ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசங், கழிந்தேன் கடவுளு நானுமொன் ருனேன்" என்று திருமந்திரங் கூறுவதும், பிறவுமிங்கூன்றியறியத் தக்கனவாம்.



† பஞ்சகோசங்களுள் ஒவ்வோன்றையும் இது நானல்ல இது நானல்லவென்று நேதித்து (கழித்து) அவற்றிற்கு விலட்சணமாய், அதற்குமேல் காணப்படுகின்ற பஞ்சகோசங்களின் அபாவவடிவ பாழையு (சூனியத்தையு)ம் தானல்லவென்று நேதித்து, பின்பு அகத்தில் அச்சூனியத்தைக் காணுநிற்கும் அநுபவ வடிவமான சாட்சி தானேன்றுள்ள சூக்குமமான

† வாழைமரத்திலுள்ள தண்டையெடுத் தனுபவிக்க விரும்புவோர் அதன் பட்டைகளைப் பிரித்து ஒவ்வொருபட்டையையும் இது தண்டல்ல இது தண்டல்லவென்று நேதித்து (தள்ளி) மிஞ்சிநின்ற தண்டையெடுத் தனுபவிப்பதுபோல, பஞ்சகோசங்களிலுள்ள ஆத்மாவையும் பிரித்தறிந் தனுபவிக்கவேண்டுமென்பதாம்.

(1) கோசபஞ்சகத்துள் ஒவ்வொன்றை நானெனக்கொள்ளல் துவித விருத்தியாம். (2) அவற்றுள், ஒவ்வொன்றையும் யுக்தியால் இது நானல்ல இது நானல்ல வென்று நேதித்து எஞ்சிநின்ற ஆத்மாவை (சாட்சியை) நானெனக்கொள்ளல் சாட்சிவிருத்தியாம். (3) அகம்பிரஹ்மாஸ்மி யென்னும் விருத்தி அகண்டாகாரவிருத்தியாம். இம்மூன்றனுள், துவித விருத்தி பந்தத்திற் கேதுவாயும், சாட்சிவிருத்தி சர்வதுக்கநிவிர்த்தி பரமாநந்தப்பிராப்திவடிவ மோட்சத்திற்குச் சாட்சாத்சாதனமன்ருயும், அகண்டாகாரவிர்த்தி அம்மோட்சத்திற்குச் சாட்சாத் (நேர்) சாதனமாயு மிருத்தலின், அதிதீவிரபரிபாகிகள் முன்னுள்ள விரண்டை யகற்றிப் பின்னுள்ளவொன்றைக் கொள்ளல் வேண்டுமென்க.

இம்மூன்று விருத்திகளைப்பற்றி ரிபுகீதை "தேகமுத லுனென்ன துவித விர்த்தி திகழ்சாட்சி நானென்னல் சாட்சி விர்த்தி, யேகபர நானென்ன லகண்ட விர்த்தி யிம்மூன்று விருத்திகளி லிரண்டைத் தள்ளி, யாகுமகண் டாகார விருத்தி தன்னை யநவரத மாதரவா யப்பியா சித்துச், சோகமுறுஞ் சித்தவிகற் பங்க ளர்த்துச் சொன்னவகண் டேகரச சொருபமாவாய்" என்று கூறுவதறிக.

(1) அகண்டாகாரவிருத்திமாத்திரமா யிருத்தல் சம்பிரஞ்ஞாத (சவிகற்ப) சமாதியாம். (2) அவ்விருத்தியும் நீங்கித் தான்மாத்திரமாக நிற்றல் அசம்பிரஞ்ஞாத (நிர்விகற்ப) சமாதியாம்.

சாட்சி விருத்தி மோட்சத்திற்குச் சாட்சாத் சாதனமன்றென்பது "தொம்பதத்தி லுபாதிகெடச் சொருபதா மதுபோற்றென்மையதாந் தற்பதசோ தனைசெயவும் வேண்டுந், தம்பவுடன் மூன்றினுக்குஞ் சீவனுக்கு முதலாஞ் சாற்றுதன்மாத் திரைப்பகுதி தானுமிருப் பதனு, னம்பரிபூரணமறைந்து ஞானமின்றி முனம்போ னுடுமுயி ராதலினு னுதனருட் படியே, யிம்பருபா தியும்போய்நிரு பாதிகமா மதனு லெப்பொருளப் பொருளாகி யிருப்பதுதன் னியல்பே." என்று உபநிடதங் கூறுவதால் நன்கு விளங்கும்.

77. அநுபவா நந்த வெள்ளத் தழுந்தியே யகண்ட மாகித்
தனுகர ணங்க ளாதி சகலமு மிறந்து சித்தாய்
மனதுபூ ரணமாய்த் தேக மானசற் குருவுங் காண
நனவினிற் சுழுத்தி யாகி நன்மகன் சுபாவ மானான்.

சங்கற்பத்தையு மகற்றி, அப்பால் கூடஸ்தன் பிரஹ்மமென்னும் (அகம் பிரஹ்மாஸ்மி - நான் பிரஹ்மமா யிருக்கிறேனென்னும்) அகண்டாகார விருத்தியும் நிதித்தியாசனத்தின் பரிபாக வசத்தால் † உறங்கினோன் கைப்பொருள்போல நீங்கப்பெற்று, அகண்டைகாரசமாயுள்ள பரிபூரண வடிவப் பிரஹ்மத்தைத் தரிசித்தனன் (பிரஹ்மவடிவமாக விளங்கினான்).

சீடனது சுவானுபவம்.

அவ்வாறு பிரஹ்மவடிவாக விளங்கிய சீடன் அனுபவவடிவான பிரஹ்மாநந்த சமுத்திரத்தில் மூழ்கி, அகண்டாகாரமாய் (பேதமின்றி), தேகேந்திரியமுதலிய நாமரூபவடிவ வுபாதிகளெல்லாம் நீங்கப்பெற்று, ‡ (கடலிலழுந்திய வுப்பாற் செய்தபிரதிமை போலச் சித்திற் கரைய) சின்மாத்திரமாகி, விருத்தியற்று மனது பிரஹ்மாகாரமாய்ப்போக, திருவருளே திருமேனியாகவுடைய சற்குருவுங் காணுமாறு ¶ நனவிற் சுழுத்தியை யடைந்து தனது சுபாவவடிவமானான். (77)

சீடன் சமாதியினின்றும் விழித்துத் தனதனுபவமுரைத்தல்.

† அறிவாநந்த சித்தியார் "குலங்குணங் காலந்திக் காசனங் கொள்கை குறிநெறிசீர், நலந்தருஞ் சீலந் தவஞ்செபந் தியானநண் ஞமனண்ணித், தலந்தனில் வாழ்பவர் போலத் துயில்பவர் தங்கள்கையிற், புலன்கொள் பதார்த்த மெனவாய்மை நின்றிடப் போமற்றதே" என்று கூறுவதறிக.

‡ சுழுத்தியில் விருத்தியோடுகூடிய அந்தக்கரணத்தின் அபாவமுண்டா கின்றதேயன்றி, அந்தக்கரணத்தின் விருத்தி பிரஹ்மாகாரமாவதில்லை. நிர்விகற்ப சமாதியிலோ பிரஹ்மாகாரமான அந்தக்கரண விருத்தி ஜலத்திற்கரைந்த உப்புப்போன்று விளங்காதிருக்கின்றதேயன்றி யில்லாமற் போவதில்லை. இதனால் சுழுத்திக்கும் நிர்விகற்ப சமாதிக்குமுள்ளபேதம் பெரிதும் விளங்கும். நிர்விகற்ப சமாதியில் அந்தக்கரண விர்த்தியின்றாயின், அச்சமாதி செய்பவனது உடம்பு தூங்குவோனது உடம்பு போன்று விழவேண்டும்; விழாதிருக்கின்றமையின், நிர்விகற்ப சமாதியில் அந்தக்கரணவிருத்தி சலத்திற் கரைந்தவுப்பைப் போன்று புலனாகாதிருக்கின்றதென்பது.

¶ "அறிபொருளை விட்டகன்று லழியுஞ் சித்த மந்தநிலை வியாபாரமனைத்து மில்லாச், செறிநனவிற் சுழுத்தியாம்" என்பது ஞானவாசிட்டம். இந் நனவிற்சுழுத்தியை நடுநிலையென்பர் பெரியார்.



78. அளிமக னெடும்போ திவ்வா றுனபின் மனது மெள்ள
வெளியில்வந் திடவு ணர்ந்தான் விமலதே சிகனைக் கண்டான்
றளிவிழி சொரியப் பாதந் தொழுதுவீழ்ந் தெழுந்து சூழ்ந்தான்
குளிமுகச் சுவாமி கேட்கக் கும்பிட்டு நின்று சொல்வான்.

79. ஐயனே யெனதுள் ளேநின் றநந்தசன் மங்க ளாண்ட
மெய்யனே யுபதே சிக்க வெளிவந்த குருவே போற்றி
யுய்யவே முத்தி நல்கு முதவிக்கோ றுதவி நாயேன்
செய்யுமா றேன்றுங் காணேன் றிருவடி போற்றி போற்றி.

இங்ஙனம் அவன் தனது சுபாவ வடிவமாகப் பிறழ்ச்சியின்றி வெகுநே மிருந்தபின்னர்ப் பிரஹ்மசொரூபமாய் விருத்தியற்றிருந்த மனம் பிராரத்த கன்மவசத்தால் பையப் பையப் பகிர்முகமாகச் சமாதியினின்றும் விழித்துத் தனது குருவைத்தரிசித்துக், கண்கள் ஆநந்த பாஷ்பம் சொரியாநிற்க அவரது திருவடியில் தண்டம்போல விழுந்து தொழு தெழுந்து பிரதட்சணஞ் செய்து கைகூப்பிக்கொண் டெதிரே நின்று, (78)

ஐயனே ! எனது சித்தத்தின்கண் ணெழுந்தருளி யிருந்து கீழ்ப்போன வளவிறந்த பிறவிகளில் கர்மோபாசனைகளைச் செய்யுமாறுவிச் சித்தத்தின் மல (பாவ), விட்சேப(கலக்க)தோஷங்களையொழித் தடிமை கொண்டருளிய ஈசனே ! எனது சொரூபாவரணம் அகலுமாறு உபதேசிக்க மானிடச்சட்டைசாற்றி வெளிவந்த சற்குருமூர்த்தியே! நமஸ்காரம். அடியேன் கடைத்தேறத் தத்துவஞான வாயிலாக எனக்கு ஜீவன் முத்தியைத் தந்தருளிய வுபகாரத்திற்குப் பிரதியுபகாரம் நாயினுங் கடையான யான் செய்யும்வண்ணம் யாதொன்றுங்காணேன். உனது திருவடிக்கு நமஸ்காரம் நமஸ்காரம் என்று கூறினான். (79)

ஆசிரியர் நீ யெனக்குச் செய்யு முதவி யிதுவெனல்.

இவ்வாறு கூறிய சீடனைச் ¶ சற்குருவானவர் மகிழ்ச்சியோடு கடைக்கண்ணால் பார்த்து அன்பனே ! இங்கேவாவென் றழைத் தருகே யிருக்கச்செய்து (ஜீவப்பிரஹ்ம ஐக்கிய அபரோட்சஞானத்தையுங் கெடுக்கவல்லனவாகிய) தடை (பிரதிபந்தங்)கள் மூன்றும் அடையாதபடி

¶ சிவஞானவள்ளலார் "பொன்னைப் பொருளைப் புகழைக் குறியாது, தன்னை யளிப்பவனே சற்குருவா—மின்னமின்னம், பொன்னீ பொருளீ யென் றேதுங் குருவெல்லா, மன்னியனே சற்குருவன் றாம்." என் கூறுவதறிக.

80. சிட்டனிவ் வாறு கூறத் தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்
கிட்டவா வெனவி ருத்திக் கிருபையோ டருளிச் செய்வார்
துட்டமாந் தடைகண் மூன்றுந் தொடராமற் சொரூப ஞான
நிட்டனா யிருக்கி னீதே நீசெயு முதவி யாமே.

† சொரூபஞானநிட்டனாய் (நனவிற்சுழுத்தியுடையவனாய்) பிறழாதிருப்பாயானால் இதுவே நீயெனக்குச் செய்யும் பிரதியுபகாரமாகுமென்று கருணையோடு கூறினார். (80)

தடைகளால் அபரோட்சஞானம் நீங்குமோவெனல்.

சீ-வினா:—பரமகுருவே! தற்பதலட்சியார்த்தமான நீ (பிரஹ்மம்) துவம்பதலட்சியார்த்தமான நான் (கூடஸ்தன்) என்னு மிரண்டு விகற்பமுமின்றி ‡ நிராபேட்சிக வியாபகமாய் எவ்விடத்தும்

† சொரூபஞான நிட்டையாவது அநாத்மாவில் உறக்கமும் ஆத்மாவில் விழிப்புமா யிருத்தலாம்.

"உலகெலா முணர்ந்த விடத்திலே யுறங்கி யுறங்கிய விடத்திலே யுணர்வ, ருலகிலெப் பொருளுந் தம்மினுந் தம்மை யுலகினெப் பொருளினுங் காண்ப, ருலகிலெப் பொருளு மன்றியே தம்மை யன்றியொன் றின்றியே யிருப்ப, ருலகமு முயிரும் பரமுமாய் நிகழ்ந்த வொருபொருளுணர்ந்தவுத் தமரே."—என்பது தத்வாமிர்தம்.

"யாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மிருள்போற் காணா
வோதரு ஞானி யத்தை யுளங்கையிற் கனிபோற் காணு
மியாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மென்றுங் காணுங்
காதலின் ஞானி யத்தைக் கண்ணினாற் றெரியக் காணான்."—என்பது
பகவற்கீதை.

‡ i. வியாபகம் ஆபேட்சிகம் நிராபேட்சிகமென விருவகைத்தாம். எந்த வஸ்து எப்பதார்த்தத்தை யபேட்சித்து வியாபகமாக விருக்கின்றதோ, எப்பதார்த்தத்தை யபேட்சித்து வியாபகமாக வில்லையோ அஃது ஆபேட்சிக வியாபக முடையதாம். எங்ஙனம்: பிருதிவி முதலியவற்றை யபேட்சித்து மாயை வியாபகமா யிருக்கின்றது; சேதனத்தை யபேட்சித்து அங்ஙனமில்லை; ஆகையால் மாயை ஆபேட்சிகவியாபக முடையதாம்.

ii. எந்தவஸ்து எல்லாவற்றையும் அபேட்சித்து வியாபகமாக விருக்கின்றதோ அது நிராபேட்சிக வியாபகமுடையதாம். எங்ஙனம்: பிருதிவி முதலிய வெல்லாவற்றையும் அபேட்சித்துச் சேதனம் (பிரஹ்மம்) வியாபகமா யிருக்கின்றது; ஆகையால், அது நிராபேட்சிகவியாபக முடையதாம்.

சேதனத்திற்கொப்பாகவாவது உயர்வாகவாவது வேறொன்றும்வியாபகமாக வின்மையின், அதுவே எல்லாவற்றினும் வியாபக முடையதா மென்பதிங் குணரத்தக்கதாம்.



81. நீநானென் றிரண்டி லாம னிறைந்தபூ ரணமா யெங்கு
நானாகத் தெளிந்த ஞான நழுவுமோ குருவே யென்றான்
றானாகும் பிரம ரூபஞ் சற்குரு நூலாற் றோன்று
மானாலுந் தடைக ளுண்டே லநுபவ முறைத்தி டாதே.

82. தடையேவை யெனிலஞ் ஞான சந்தேக விபரீ தங்கள்
படர்செயு மிந்த மூன்றும் பலசன்மப் பழக்கத் தாலே
யுடனுடன் வரும்வந் தக்கா லுயர்ஞானங் கெடுமி வற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்த றெளித லாலே.

சிதாநந்தவடிவமான யானேயுளனென்பதாக அனுபவமாம்படி தெளிந்தறிந்த ஞானமும் நீங்கிப்போமோ? அதனைக் கிருபைசெய்து கூறும்படி பிரார்த்திக்கின்றேன்.

து-விடை:—அன்பனே சுபாவமாகத் தன்மயமாயுள்ள பிரஹ்மானுபவமானது சற்குருவினுபதேசத்தாலும் வேதாந்தசாஸ்திர விசாரத்தாலும் தோன்றும்; அவ்வாறு தோன்றுவதாயினும், † தடைகளுண்டாயினவ்வனுபவம் ஸ்திரப்படாது. (81)

பிரதிபந்தத் திரயம்.

சீ-வினா:—தேசிக மூர்த்தியே! அத்தடைக ளெவை?

து-விடை:—அவை அஞ்ஞானம், சந்தேகம், விபரீத மென்பனவாம்.

சீ-வினா:—இவை யுண்டாவதற்குக் காரணம் யாது?

து-விடை:—துன்பத்தைச் செய்வதையே யியல்பாகவுள்ள இம்மூத்தடைகளும் கீழ்ச்சென்ற அளவிறந்த பிறவிகளிற் பழகிவந்த பழக்கத்தினாலே அடிக்கடி யுண்டாகின்றன.

சீ-வினா:—அவ்வாறுண்டானாற் குற்றமென்ன?

து-விடை:—அவையுண்டாவதினாற் ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானம் மோக்ஷஹேதுவாகாமற் கெட்டுப்போம்; ஆதலின், இவற்றை யவசியங் கெடுத்தல்வேண்டும்.

சீ-வினா:—இவற்றை யெவ்வாற்றால் கெடுத்தல்வேண்டும்.

† "தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால்" என்னுங் குறளுக்கு விசேடவுரை பரிமேலழகர் "நிலைபெற்ற ஞானமில்லாதவன் இடையே மெய்ப்பொருளை யுணர்ந்தால் அதனைத் தன் ஞான மின்மையால் தானே யழித்து விடும்" என்று கூறியிருப்பதிங் குணரத்தக்கதாம். இதுபற்றி விரிவாக விசாரசாகரம் ஐந்தாவது தரங்கத்தின் பார்ச்சுவின் கதையிற் காண்க.

83. அக்கினிக் கட்டுப் பட்டா லற்பமுஞ் சுடமாட் டாது
மக்கின ஞானத் தாலே வந்தபந் தமும்வே வாது
சிக்கெனப் பழகிக் கேட்டல் சிந்தித்த றெளித லாலே
விக்கின மடஞ்சந் தேகம் விபரீதம் போக்கு வாயே.

த-விடை:—அன்பனே ! அஞ்ஞானத்தைச் ‡ (1) சிரவணத்தாலும், சந்தேகத்தை (2) மனனத்தினாலும், விபரீதத்தை (3) நிதித்தியாசனத்தினாலும் பிரயத்தன பூர்வகமாகக் கெடுப்பாயாக. (82)

சீ-வினா:—தடையுள்ளபோது தத்துவஞானம் மோட்சத்திற் கேதுவாகாதென்பதைத் திருஷ்டாந்தவாயிலாகக் கூறியருளும்படி வேண்டுகின்றேன்.

‡ (1) யுக்தியினால் வேதாந்தவாக்கியத்தின் தாற்பரியத்தை நிச்சயஞ் செய்தல் சிரவணமாம். (2) ஜீவப்பிரஹ்மங்களின் அபேதத்திற்குச்சாதகமான யுக்திகளாலும் பேதத்திற்குப் பாதகமான யுக்திகளாலும் அத்விதீயப் பிரஹ்மத்தைச் சிந்தனைசெய்தல் மனனமாம். (3) அநாத்மாகார (நாமரூப வடிவ) விருத்தியின் மறைப்பின்றிய பிரஹ்மாகாரவிருத்தியின் ஸ்திதி நிதித்தியாசனமாம். இதனது பரிபாக அவஸ்தை சமாதியெனப்படும். "இருக்கிறது" என்னும் வியவகாரத்திற் கேதுவான அவித்தை அல்லது அந்தக்கரணத்தின் பரிணாமம் விருத்தி யெனப்படும்.

(1) சிரவணத்திற் கேது தீவிரதரமுமுட்சுத்துவம்; அத்வைத ஆத்ம சொரூபத்தைக் கூறும் வேதாந்த வாக்கியங்களை இடைவிடாது கேட்டல் சொரூபம்; ஆத்மாவின்றென்னும் அசத்துவாபாதக வாவரண மொழிவது காரியம்; ஒழிந்துபோய அவ்வாவரணம் மீண்டும் வாராதிருக்கும் பரியந்தம் அவ்வாக்கியங்களைக் கேட்பது அவதி; ஆத்மாவின் திட பரோட்சஞானம் பலம்.

(2) மனனத்திற் கேது நித்தியாநித்திய வஸ்துவிவேகம்; அத்வைத ஆத்மதத்துவத்தை விசாரிப்பது சொரூபம்; ஆத்மாவின் அபாநுபாதக வாவரணமொழிவது காரியம்; ஒழிந்துபோய வவ்வாவரணம் மீண்டும் வாராதிருக்கும் பரியந்தம் அவ்வாத்ம தத்துவத்தைச் சிந்திப்பது அவதி; அவ்வாத்மாவின் அபரோட்ச ஞானம் பலம்.

(3) நிதித்தியாசனத்திற் கேது சாதன சதுஷ்டயத்துடன் கூடியவதிபரியந்தஞ் செவ்வையாக வனுஷ்டிக்கப்பட்டுள்ள சிரவண மனனங்கள்; சிவோகமென்றிடைவிடாது தியானஞ்செய்வது சொரூபம்; அகமும் புறமும் விடயக்காட்சியின்றித் தியான மாத்திரமா யிருப்பது காரியம்; பாலிற்கூடிய நீர்போன்று பிரஹ்மத்தில் ஏகரசமாதல் அவதி; ஆத்மாவின் பிரதிபந்தரகித அபரோட்சஞானம் பலம்.



84. பிரமபா வனையை மூடிப் பேதங்காட் டுவதஞ் ஞானங்
குரவன்வாக் கியநம் பாமற் குழம்புவ தாஞ்சந் தேகந்
திரமறு சகமெய் யென்றுந் தேகநா னென்று முள்ளே
விரவிய மோகந் தானே விபரீத மென்பர் மேலோர்.

த-விடை:—எங்ஙனம் தனது தாக(சுடும்) சக்தி மணிமந்திர ஔஷதங்களால் கட்டுப்பட்ட விடத்து அக்கினியானது சிறு துரும்பையும் தகிக்க யோக்கிய மாவதில்லையோ அங்ஙனமே † அஞ்ஞான சந்தேக விபரீதங்களாலே வன்மை குறைந்துள்ள தத்துவஞானத்தினால் அநாதியாகத் தொடர்ந்து வருகின்ற ‡ அவித்தை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபிநிவேசமென்னும் பஞ்சக்கிலேசவடிவ பந்தமும் நாசமாவதில்லை. ஆதலால் அன்பனே ! நீ வெகுகாலம் நிரந்தர விசுவாசத்தோடு கூடியப்பியாசஞ்செய்து சிரவண மனன நிதித்தியாசனங்களாலே முறையே மோட்சப்பிரதிபந்தமாயுள்ள அஞ்ஞான சந்தேக விபரீதங்களை நீக்கக் கடவாய். (83)

சீ-வினா:—அஞ்ஞான முதலியவற்றின் சொரூபத்தைக் கூறியருளல்வேண்டும்.

† ஜீவப்பிரஹ்ம ஐக்கியஞானம் அதிடம் திடமென விருவகைத்தாம். (1) அஞ்ஞான சந்தேக விபரீதங்களோ டுண்டாகும் ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானம் அதிடஞானமாம். (2) அஞ்ஞான சந்தேக விபரீதங்களின்றியுண்டாகும் ஜீவப்பிரஹ்ம ஐக்கியஞானம் திடஞானமாம். அதிடஞானமுள்ளவரவும் சிரவணாதிகள் செய்யத்தக்கனவாம். திடஞான முண்டாய பிறகு சிரவணாதிகளுள் ஒன்றுஞ் செய்யத்தக்கதன்றாம். திடஞானம் சற்குருவாயிலாகக்கேட்ட மகா வாக்கியார்த்தத்தின் சிரவண மனன நிதித்தியாசனங்களா லுண்டாம்.

‡ (1) விசாரிக்கு மிடத்துத் தனக்கெனச் சொரூபமில்லா தொழிவது அவித்தையாம். அது மூலாவித்தை, தூலாவித்தையென் றிருவகைத்தாம். சுத்த சேதனத்தை மறைக்கு மஞ்ஞானம் மூலாவித்தை; கடாதியவச்சின்ன சேதனத்தை மறைக்கு மஞ்ஞானம் தூலாவித்தை; மூலாவித்தையும் காரியகாரண வேறுபாட்டா லிருவகைத்தாம். ஆவரண விட்சேப சத்திகளுடன் அநாதி பாவவடிவமாயிருப்பது காரணாவித்தை. ஒன்றில் மற்றொன்றன் புத்திவடிவத்தோற்றம் காரியாவித்தை. அக்காரியாவித்தையும் அநாத்மாவில் ஆன்மபுத்தி, அநித்தியத்தில் நித்தியபுத்தி, துக்கத்தில் சுகபுத்தி, அசுத்தத்தில் சுத்தபுத்தியென நால்வகைத்தாம்.

(2) புத்தி யான்மாக்களின் அபேதஞானம் அஸ்மிதை (சாமானிய வகங்காரமாம்).

(3) இராகம்-திடவாசை (பேராசை).

(4) துவேஷம்-குரோதம் (வெகுளி).

(5) அபிநிவேசம் - மரணபயம்.

து-விடை:—† (1) அகம் பிரஹ்ம மென்னும் பாவனையைமறைத்து யான்பிரஹ்மமல்லனேன்னும் பாவனையையுண்டுபண்ணுவது அஞ்ஞான

† நீயே பரப்பிரஹ்ம மென்றறிந்து சிவோஹமென்று பாவித்து நிச்சயத்தினல் சுகியாய் மோக்ஷமடைவா யென்னும் ஆராய்ச்சியுள்ள குருவினுபதேசத்தைக் கொண்ட சீடன் பிரஹ்மத்தின் தர்மங்களான சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றைத் தன்னிற்காணுதவனுய் யான் பிரஹ்மமல்லன் என்று பாவிப்பதே அஞ்ஞானம் (அசம்பாவனை).

விட்டுவிடாத லக்ஷணையினல் தத்துவமஸிமுதலிய வாக்கியார்த் தங்களைத் தெரிந்தும் விசுவாசக் குறைவால் 'யான் பிரஹ்ம மாவனே? அல்லனே ?' என்று சந்தேகிப்பதே சம்சயபாவனை.

சுருதியுக்திகளால் யான் பிரஹ்மமாவேனுயினும், எனக்கு இன்னும் ஜீவத்துவம் நீங்கவில்லையாகலின், யான் ஜீவனே யென்றறிவதே விபரீத பாவனை.

ஆப்தவசனத்தினல் ஆசௌசத்தினைக் கேட்கவே தான் சூதகமுடையவனென்று திடதரமாய் நம்புவதுபோலப் பிரத்தியகாத்மாவும் பிரஹ்மமும் ஒன்றென்னும் உபநிஷத்துவாக்கிய தாற்பரியத்தினைக்கொள்ளுவதே சிரவணமெனப்படும். இதனல் அசம்பாவனை நீங்கும்.

அவ்வாறு கேட்ட வேதாந்தார்த்தத்தினை நல்ல யுக்தி நல்ல தர்க்கங்களால் சிந்தித்தலே மனன மெனப்படும். இதனுல் சம்சயபாவனை நீங்கும்.

அச்சிரவணமனனங்களால் திடதரமாய் நிச்சயிக்கப்பட்ட அர்த்தத்தினை நிச்சலசித்தமாயிருந்து அநுசந்தித்துப் பிரஹ்மாகார அந்தக்கரணமுடையவனுயிருப்பதே நிதித்தியாசனமெனப்படும். இதனுல் விபரீத பாவனை நீங்கும்.

இங்குச் சிரவணத்தினு லுண்டாகிய ஞானத்தினல் ஆத்மசாக்ஷாத்காரமுண்டாவதாகலின், சிரவணமே முக்கியமான அங்கி யெனப்படும். இத்தன்மைய சிரவணஜந்நிய பிரஹ்மஞானம் திடதரமாய் வஸ்துசாக்ஷாத்காரமாவதற் குபயோகியாய் அதற்குச் சககாரிகளாயிருக்கும் சிரவண மனன நிதித்தியாசனங்கள் அங்கங்களாம்.

கடாதிவஸ்துவின் பிரத்தியட்சத்திற்குக் கண் கரணமாயினும் இருளில் நிஷ்பிரயோசனமாம். அதற்கு ஆலோகம் (ஒளி) சககாரி காரணமாவதுபோலச் சிரவணம் தத்துவ ஞானத்திற்குச் சககாரியாம்.

மனனமோ பொருளை விளக்கும் தீபஞ் சலித்தால் காரியம் நிகழாமையின், அச்சலனத்திற்குக் காரணமான வாயுசஞ்சாரத்தைத் தடுக்கும் திரையினைப்போலச் சககாரியாம்.

நிதித்தியாசனம் அத்தீபத்தின் ஒளிமழுங்குங்கால் திரியினைத் தூண்டுகோலால் தூண்டிப் பிரகாசிக்கச் செய்வதுபோலச் சககாரியாம்.



85. தத்துவ வநுபோ கந்தான் சாதித்தல் கேட்ட லென்பா
ரோத்துள பொருளு கத்தா லுசாவல்சிந் தித்த லென்பார்
சித்தமே காந்த மான தெரிசனந் தெளித லென்பார்
நித்தமிப் படிசெய் தக்கா னிருவாணம் பெறுவாய் நீயே.

86. எத்தனை நாண்ஞா தாவு ஞானமு மிருக்கு முன்பா
லத்தனை நாளும் வேண்டு மப்பாலோர் செயலும் வேண்டா
நித்தமும் வெளிபோற் பற்று ஞேயமாத் திரமாய்ச் சீவன்
முத்தரா னவர் விதேக முத்திபெற் றிருப்பா ரேன்றும்.

மாம். (2) நினைவரிய வோரு பிரஹ்மம் நீயே யென்றருளிய சற்குருவின் வாக்கியத்தைச் சத்தியமாக நம்பாது யான் பிரஹ்மமோ அல்லனே என்று மனங்கலங்குதல் சந்தேகமாம். (3) நிலையின்றிய உலகத்தை நிலையுடையதென்றும் (ஜகத்சத்தியமென்றும்) அநாத்மாவாகிய தேகத்தை ஆன்மாவென்றுங்கருதும் மோகமே விபரீதமாம். (84)

சீ-வினு:—சிரவண முதலியவற்றின் சொரூபத்தையுந் திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்.

து-விடை:—(1) அகண்டாகார விருத்தியை மகா வாக்கியார்த்த விசாரத்தினல் நிலைபெறச் செய்தல் † சிரவணமாம். (2) சிரவணத் திற்கோத்துள்ள ஜீவப்பிரஹ்மங்களின் அபேதத்தை யுக்தியினலாராய் தல் மனனமாம். (3) சித்தம் அகண்டாகாரமாத்திரமாயிருந்து மனுபவம் நிதித்தியாசனமாம். நாடோறு மிவ்வாறு இம்மூன்றையும் அப்பியாசஞ் செய்து வருவாயானல் அம்மூத்தடைகளு நீங்கப்பெற்று நீ தவறது நிருவாணத்தை (மோட்சத்தை) யடைவாய். (85)

சிரவணதிகளி னவதியைக் கூறல்.

சீ-வினு:—விகிதகுருவே ! எவ்வளவுகாலபரியந்தஞ் சிரவணதிகள் செய்தல் வேண்டும் ?

து-விடை:—அன்பனே ! உன்னிடத்து எவ்வளவு காலபரியந்தம் ஞாதாவும் (ஞானத்தின் கர்த்தாவான அந்தக்கரணமும்) (அந்தக்கரணத்தின் விருத்திவடிவ) ஞானமு மிருக்கின்றனவோ அவ்வளவு காலபரியந்த மும் நீ (அஞ்ஞான சந்தேக விபரீதங்களின் விரோதியான) சிரவணதிகள் செய்தல் வேண்டும். ஞாதா ஞானமென்னும் விகற்பங்களற்று ஜீவப்

† அங்கி (பல) சிரவணம் அங்க (சாதன) சிரவணமென்னு மிரண்டனுள் இஃ தங்கசிரவணமாம். (1) சற்குருகூறும் மகாவாக்கியத்திற்கும் சீடனது சுரோத்திரத்தி (காதி) ற்கு முள்ள சம்பந்தம் அங்கிசிரவணமாம். (2) அவ்வாக்கியார்த்தத்தின் விசாரவடிவ சிரவணம் அங்கசிரவணமாம்.

87. ஞானமார் சீவன் முத்தர் நால்வகை யாவர் கேளாய்
வானிகர் பிரம வித்து வரன்வரி யான்வ ரிட்ட
னனவர் நாம மாகு மவர்களிற் பிரம வித்தின்
னுனமு மற்றை மூவர் தாரதம் மியமுஞ் சொல்வேன்.

பிரஹ்ம ஐக்கிய ஞானத்திற்கு விஷயமான சிதாநந்தமாத்திரமாய் நின்ற பின்னர்ச் † சிரவணாதிசாதனங்களுள் ஒன்று முனக்குவேண்டுவதில்லை.

சீ-வினா:—பாவனாதீதப்பரமகுருவே! அஞ்ஞான முதலியன வின்றிச் சிதாநந்த மாத்திரமாய் மிஞ்சிநின்றவ ரெவ்வாறிருப்பர்?

த-விடை:—காண்டற்கினிய கண்மணியே! அவர் எப்போதும் ஆகாயம்போல் ஒன்றோடும் பற்றாது ‡ ஜீவபாவமுதலியன விறந்து சின்மாத்திரமாயிருப்பர்; அங்ஙனமிருத்தலே ¶ ஜீவன்முத்தியாம். பிராரத்தகன்ம நாசத்தின் பிறகு எப்போதும் அவர் § விதேகமுத்திபெற்றிருப்பர். (86)

சீ-வினா:—ஆத்மஞானத்தை அகங்கை நெல்லிக் கனிபோ லுபதேசிக்கும் அருட்குருவே! ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானத்தால் தமது நிஜவடிவில் பிறழாது நிலைத்திருக்கும் () ஜீவன்முத்தர் ஒரு திறத்தாராயிருப்பரோ? பலதிறத்தாராயிருப்பரோ?

† "ஆடவர் செய்தொழின் மூவகை யாது மவித்தை வசத்துறுநா
ளோடணை மமதை யகந்தை யுளார்க்கே யிகபர விவகாரம்
வீடணு குவமெனு மிச்சையு ளார்க்கே வித்தை படிப்பதெலாம்
பாடன் மிகுந்தொழி லாற்பல னுண்டோ பரிபூரணமானால்"
என்று மேல்வருவது மிங்கூன்றி யுணரத்தக்கதாம்.

‡ கர்த்திருத்துவ போக்திருத்துவ முதலிய பந்தம் நீங்குதல் ஜீவன்முத்தியின் சொரூபமாம்.

¶ தேகாதிப் பிரபஞ்சந் தோற்றிக்கொண்டிருக்கப் பிரஹ்மசொரூபமாக நிலைத்தல் ஜீவன்முத்தியாம்.

§ பிராரத்தகன்ம நாசத்தால் தேகாதிப் பிரபஞ்சத்தின் தோற்றம் நீங்கப்பெற்று நிர்விசேஷ நிராவரண பரிபூரண பரப்பிரஹ்மசொரூபமாக நிலைத்தல் விதேகமுத்தியாம். "பின்னமிலாச் சருவான்ம சொரூப மாகிப் பிரிவற்ற பரசாந்த சொரூப மாகித், துன்னியிடும் பந்தமிலாச் சொரூப மாகித் தொடர்மோட்சந் தானுமிலாச் சொரூப மாகி, யுன்னுமொரு வடிவமிலாச் சொரூப மாகி யுண்மையுணர் வானந்த சொரூப மாகி,மன்னுபரி பூரணமாம் பிரமரூப மாத்திரமா யிருப்பவனே விதேக முத்தன்" என்பது ரிபுகீதை.

() ஜீவன் முக்தன்: திடப்பிரக்ஞன், பகவத்பத்தன், குணாதீதன், பிராமணன், அதிவர்ணாசிரமி என்றற் றொடக்கத்து நாமங்களால் ஆண்டாண்டுக் கூறப்படுவன்.



88. தீரராய்ப் யிரம வித்தாய்த் தெளிந்தவர் தெளியு முன்னம்
வாரமா யிருந்த தங்கள் வருணமாச் சிரமஞ் சொன்ன
பாரகா ரியமா னாலும் பலர்க்குப கார மாக
நேரதாச் செய்வர் தீர்ந்த நிலைவிடார் சீவன் முத்தர்.

த-விடை:—ஆசிரிய சேவையினடைவினையறிந்த அன்பனே! அவர் *பிரஹ்மவித்து,பிரஹ்மவரன்,பிரஹ்மவரியான், பிரஹ்மவரிஷ்டனென நான்கு திறத்தாராயிருப்பர். அவர்களுள், பிரஹ்மவித்தின் அநுபவநிலையையும், ஏனைய மூவரது தாரதம்மியத்தையும் கூறுகின்றேன்; கவனமாய்க் கேட்பாயாக. (87)

சீ-வினா:—பரமகுருவே! அவற்றினைக் கூறியருளல்வேண்டும்.

(1) பிரஹ்மவித்தி னிலக்கணம்.

த-விடை:—† மனவுறுதியுடையவராய்ப் பிரஹ்மஞானிகளாகி யான் யார்? இப்பிறவி யெனக்கேன்வந்தது? இது யாரால் நீங்கும்? என்னுங் கலக்கத்தினின்றுந் தெளிந்தவர் சீவன்முத்தராவ ரென்பது ஜீவன்முத்தரின் பொதுவிலக்கணமாம். அவர்களுள், ஜீவன்முத்தியடைதற்கு முன்னர் உரிமையாகவிருந்த தங்களது வருணாசிரமங்களுக்கியைந்த கிரியைகள் மிகப் பெரியனவா யிருப்பினும் அவற்றை (மந்திரலோபம், கிரியாலோபம் திரவியலோபமின்றிச்) சாஸ்திரோக்தமாய் உலகோபகாரமாகச் செவ்வையாகச் செய்து ‡ தீர்ந்தநிலையில் (அஞ்ஞானசந்தேக

* "பிரஹ்மவித்து, பிரஹ்மவித்வரன், பிரஹ்மவித்வரியான், பிரஹ்மவித்வரிஷ்டன் என்னுமிவர்களுள் பிரஹ்மவித்வரிஷ்டனே விதேகமுத்தன் (விதேகமுத்தன் போன்று பிரபஞ்சநோக்கு சிறிது மில்லாதவன்). இவ்வரிஷ்டனே எவ்விஷயத்திலும் விருத்தியற்றவன்; அவனுக்குத்தான் விதிவிலக்கில்லை. ஏனைய மூவர்க்குமோ ஞானப்பிரபாவத்தினாலே விதிவிலக்கில்லை; இல்லையாயினும் விருத்திசூன்யமும், வியவகாரவபாவமு மில்லாமையின் (அவர்கள்) உலகாநுக்கிரகத்தின் பொருட்டுச் சதாசாரத்திலேயே இருப்பர்." என்பது வாசுதேவமனனம்.

† நான் மனிதனென்றற் றொடக்கத்தனவாய்த் திடமாயுண்டாகும் தேகாத்மஞானம் போன்று, அத்தேகாத்ம ஞானத்தைப் பாதித்து நான் பிரஹ்மமென்னும் ஞானமெவனுக்குத் திடமாயுண்டாகிறதோ அவனே ஜீவன்முத்தனாவன்.

‡ "காயத்தின் வேறாகத் தன்னைக் கண்டோன் காயமீறினுமறியான் கன்னற் கட்டி தீயிற்கா யினுமரிந்த போது மின்பந் தீராதவாறுபோற் றெளிந்த ஞானி, மாயத்தின் மோகத்தான் பேதமாகான்' மணந்தபர புருடன் மேன் மனஞ்சேர் மங்கை, நேயத்தான் மனைத்தொழில்கள் செய்யு மாபோ னிகழ்தொழிற்செய் யினும்பரத்தி னிலைமை நீங்கான்" என்பது ஞானவாசிட்டம்.

89. காமமா திகள்வந் தாலுங் கணத்திற்போ மனத்திற் பற்றுர்
தாமரை யிலைத்தண் ணீர்போற் சகத்தோடுங் கூடி வாழ்வார்
பாமர ரெனக்காண் பிப்பார் பண்டிதத் திறமை காட்டார்
ஊமரு மாவா ருள்ளத் துவகையாஞ் சீவன் முத்தர்.

---

விபரீதமின்றித் தமது நிசவடிவில்) பிறழா தொருதன்மைத்தா யிருப்
பவரே பிரஹ்மவித்தெனப்படுவர். இவர் பெரும்பான்மையும் இல்லற
ஞானிகளாயிருப்பர். (88)

சீ-வி௫:—இன்னுமவ ரெப்படியிருப்பர் ?

கு-விடை:-அந்தக்கரணத்தின்கண் தடையற்ற வாநந்தத்தையுடைய
அவர் † காமக் குரோத லோப மோக மத மற்சர ஈரிஷை அசூயை டம்
பம் தர்ப்பமென்றற்றொடக்கத்தன பிராரத்தகன்மவசத்தால் ஏகதேசமா
யந்தக்கரணத்திலெழுமாயினும் அவை முயற்சியின்றி யெழும் திடவைராக்
கிய உபாதிகளின் சுத்தவாசனையால் க்ஷணநேரத்திற்குள் நாசமாய்
விடுதலின் அவற்றின் உற்பூத சம்ஸ்காரம் அந்தக் கரணத்தின்கண் (எவ்
வாற்றனும்) பொருந்தப்பெறர்; தாமரையிலையில் நீர் கூடியும் அதனே
டு பற்றிருப்பதுபோல உலக வியவகாரத்திற் கூடியும் அதனேடு பற்
றது வாழ்வார்;இவர் ‡ பாமரரென்றுகருதும்படி தம்மைப் பிறர்க்குத்

---

† "குணமென்னுங் குன்றேறிநின்றர் வெகுளி, கணமேயுங்காத்தலரி
து" என்னுங்குறளின் விசேடவுரையில் பரிமேலழகர் "அநாதியாய் வருகி
ன்றவாறுபற்றி யொரோவழி வெகுளி தோன்றிய பொழுதே அதனை மெய்
யுணர்வு அழிக்குமாதலின் 'கணமேயும்' என்றும்" கூறியிருத்தலிங்குணரத்
தக்கதாம். முமுட்சுகட்குப் பிரியமுண்டாதற் பொருட்டுத் தியானுதிகளைப்
புரிதலாகிய காமமும், அசத்விடயத்தை வெறுத்தலாகிய குரோதமும்,
அநதிகாரிக்குப் பிரஹ்மவித்தையைக் கூருதிருப்பதாகிய உலோபமும்,
பிறர்க்குபகாரஞ் செய்யவேண்டு மென்பதனுல் துக்கமுடையார்பாலுண்
டாகுங் கருணையாகிய மோகமும், அசத்விடயங்களைக் கொள்ளாது சுத்
தமா யிருப்பதாகிய மதமும், இந்திரியங்களின் வன்மையைக் கெடுப்பே
னென்பதாகிய மாற்சரியமும் ஞானிகள்பால் பற்றின்றியே நிகழுமென்க.

‡ இகத்தில் விதிவிலக்காயுள்ள போகங்களில் விருப்புடையராய்ச்
சாஸ்திரவாசனை யின்றியுள்ள புருஷர் பாமரரெனப்படுவர். இவருள்
(1)சாஸ்திரவுணர்ச்சியுடையவராயிருந்தும்இகலோகபோகத்தில்விருப்புடை
யவர் உத்தம பாமரராவர்; (2) சாஸ்திரமுணராதும் பிறர்கூறும் சாஸ்தி
ரார்த்தங்களில் விசுவாசம் வையாதும் இகலோகபோகத்தில்விருப்புடைய
வர் மத்திமபாமரராவர்; (3) சிறிதுஞ் சாஸ்திர வாசனையின்றி யிகலோக
போகத்தில் விருப்புடையவர் கனிஷ்டபாமரராவர்.



90. பேதகன் மத்தால் வந்த பிராரத்த நாநா வாகு
மாதலால் விவகா ரங்க ளவரவர்க் காவ வாகும்
மாதவஞ் செயினுஞ் செய்வார் வாணிபஞ் செயினுஞ் செய்வார்
பூதலம் புரப்பா ரையம் புகுந்துண்பார் சீவன் முத்தர்.

---

காட்டினுங்காட்டுவர்; † தமக்குள்ள வித்வத் சாமர்த்தியத்தினைப் பிறர்க்
குக் காட்டாதுவிடினும் விடுவர்; மௌனவிரத முடையவரா யிருப்பினு
மிருப்பர் ; (இன்னும் பலதிறத்தராயு மிருப்பர்). (89)

சீ-வி௫:—இவரிவ்வாறிருத்தற்குக் காரணமென்ன ?

கு-விடை:—பல்வேறுபாடுடைய சஞ்சித கர்மத்தா லுண்டான
‡ பிராரத்தகன்மம் பலவேறுபாடுடையதா யிருத்தலின், பாமரரெனக்
காட்டல் பண்டிதத்திறமை காட்டாமை முதலிய வியவகாரங்களுள் சிற்
சில பிராரத்த கன்மத்திற் கேற்றவாறு அவரவர்க்குப் பொருந்துவன
பொருந்துகின்றன. அதனுல், ஜீவன்முத்தர்கள் மகாதவத்தைச் செய்யி

---

† "வல்லனென் றிருப்பினு மிருக்கும் வன்மையோன்
றில்லனென் றிருப்பினு மிருக்கு மெள்ளுறப்
புல்லனென் றிருப்பினு மிருக்கும் புண்ணிய
நல்லனென் றிருப்பினு மிருக்கு ஞானியே.—என்பது பிரபு
விங்கலீலை.

‡ வேதாந்த சாஸ்திரங்கள் பேதகர்மத்தால் வந்த பிராரத்தம் பல
வகைப்படு மென்று கூறுகின்றன. அவை பிராரத்தபஞ்சகம், பிராரத்த
சதுஷ்டயம், பிராரத்தத்திரய மென்பனவாம்.

(1) பிராரத்த பஞ்சகம்.

பிராரத்தம்: உத்தமம், மத்திமம், கனிஷ்டம், அதமதரம், அதமதமம்
என வைவகைத்தாம்.

அவற்றுள்: (i.) பிறப்புமுதல் இறப்புவரைநிவிர்த்திக்கேதுவான பிரா
ரத்தம் உத்தம பிராரத்தமாம். அது சுகர், வாமதேவர், ஸநகாதியர் முத
லியோரது பிராரத்தம் போல்வதாம். சுகாதியோரது பிராரத்தம் சிறிது
போகத்திற் கேதுவாயிருந்தது. அவர்கட்குப் போகத்தில் அருவருப்பு
எப்போது மிருந்ததெனச் சாஸ்திரங்களால் அறியப் படுகின்றமையின்
அவர்களிடத் தெப்போதும் பிரவிர்த்தியின் அபாவமே கூறப்படுகின்றது.

(ii.) முன்னர்ப் பிரவிர்த்திக்கும் பின்னர் நிவிர்த்திக்குமேதுவாயுள்ள
பிராரத்தம் மத்திம பிராரத்தமாம். அது யாஞ்ஞவல்கியர் முதலியோரது
பிராரத்தம் போல்வதாம். யாஞ்ஞவல்கியர் முன்னர்க் கிருகஸ்தா
சிரமத்தை யங்கீகரித்து வாதசபையில் வெற்றியடைந்து பொருளைச் சேக
ரிக்கும் பிரவிர்த்தியிலிருந்து பின்னர்த் தீவிரவைராக்கியத்தோடு வித்வத்

னுஞ்செய்வர்; வர்த்தகஞ் செயினுஞ் செய்வர்; பூமியைப் பரிபாலனஞ் செய்யினுஞ்செய்வர்; பிச்சையெடுத்துண்பினுமுண்பர். [பிராரத்தகன்ம

---

சந்நியாசத்தை யங்கீகரித்தமை சாஸ்திரங்களிற் பிரசித்தமாயிருத்த லறிக. சந்நியாசம் (நிவிர்த்தி): விவிதிஷை, வித்வத் என்றிருவகைத்தாம். ஜீவப்பிரஹ்ம ஐக்கியஞானமடைதற்கு முன்னர் நாமரூபங்களின் தோஷதிருஷ்டியினா லுண்டாகும் தீவிரதர வைராக்கியத்தினாற் பெறும் சந்நியாசம் விவிதிஷை சந்நியாசமாம்; ஜீவப்பிரஹ்ம ஐக்கியஞான மடைந்தபின்னர் நாமரூபங்களின் தோஷ திருஷ்டியினாலும் மித்தியா திருஷ்டியினாலு முண்டாகும் தீவிரதர வைராக்கியத்தினாற் பெறும் சந்நியாசம் வித்வத் சந்நியாசமாம்.

(iii.) எப்போதும் பிரவிர்த்திக் கேதுவாயுள்ள பிராரத்தம் கனிஷ்ட(அதம) பிராரத்தமாம். அது ஜநகராஜன் முதலியோரது பிராரத்தம் போல்வதாம். ஜனகராஜனது பிராரத்தம் எப்போதும் ராஜ்யபரிபாலனத்தை யங்கீகரித்தலாகிய பிரவிர்த்திக்கேதுவா யிருந்தமை யறிக.

(iv.) முன்னர் நிவிர்த்திக்கும் பின்னர்ப் பிரவிர்த்திக்குமேதுவாயுள்ள பிராரத்தம் அதமதர பிராரத்தமாம். அது (வாசிட்டமுதலிய சாஸ்திரங்களிற் கூறப்படும்) சிகித்துவஜன், அலர்க்கன், பிரியவிரதன் முதலியோரது பிராரத்தம் போல்வதாம். அவர்களது பிராரத்தம் முன்னர் வைராக்கிய பூர்வகமாய் நிவிர்த்திக் கேதுவாயிருந்து பின்னர்ப் போகவிச்சைப் பூர்வகமாக ராஜ்யாதிகளை யங்கீகரித்த லாகிய பிரவிர்த்திக் கேதுவா யிருந்தமை யறிக.

(v.) விரும்பியவாறு நடத்தல், புசித்தல், பேசுதலென்னும் பிரமாதத்திற் கேதுவாயுள்ள பிராரத்தம் அதமதமப் பிராரத்தமாம். அது விசுவாமித்திரர் முதலியோரது பிராரத்தம் போல்வதாம். விசுவாமித்திரர் பசியினாற் றன் புற்றுச் சண்டாள னிடத்திருந்த நாயின் முழங்கால் மாமிசத்தை வாங்கிப் புசித்தாரென்பதும் பிறவும் மனுதர்மசாஸ்திர முதலியவற்றிற் காண்க.

“ நறவங் குடித்தாலு நாயிறைச்சி தின்றாலுங்
குறவருடன் கூடிக் குளித்தாலு—மிறைவனே
தானென்னுந் தன்மை சலியா ருலகர்க்கு
நானென்று சொல்லிநடிப் பார் ” என்பது சிவஞானவள்ளலார்.

அதமமாயுள்ள ஒன்றைவிட அதமமாயுள்ளது அதமதரமாம்; அதமங்களியாவற்றிலும் அதமமாயுள்ளது அதமதமமாம்.

(2) பிராரத்த சதுஷ்டயம்.

பிராரத்த கர்மஸம்ஸ்காரம்: தீவிரம், மத்திமம், மந்தம், சுத்தமென நால்வகைத்தாம். (i.) ஐயந்திரிபின்றிய ஞானியாயிருப்பினும் போகத்திலேயே தற்பர (கருத்துள்ளவ) னாய்ப் பசுவைப்போன்று ஆத்மப்பிரீதி மாத்திரமாயிருப்பதே தீவிரமாம். (ii.) சிறந்தபோகத்திற் பொருந்தியவனாயினும்



91. சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்மு
னின்றது புசிப்பார் வெய்யி னிலவாய்விண் விழுது வீழ்ந்து
பொன்றின சவம்வாழ்ந் தாலும் புதுமையா வொன்றும் பாரார்
நன்றுதீ தென்னார் சாட்சி நடுவான சீவன் முத்தர்.

---

பேதத்தால் அவ்வியவகார பேதமாத்திரம் அவர்க்குச் சம்பவிக்கின்றதன்றி ஞானபேதமும் அதன் பலமான மோட்சபேதமும் சம்பவிப்பதில்லை]. (90)

சீ-வினா:—பிராரத்தகன்ம பேதத்தால் வியவகார பேதம் சம்பவிப்பதாயின், அப்போது ஞானிக்கும் அஞ்ஞானிக்கு முள்ள வேறுபாடு யாது? வியவகாரபேதம் பிராரத்த கன்மபேதத்தால் சம்பவிக்கின்ற தென்பது நியமமல்லவா?

கு-விடை:— ‡ ஜீவன்முத்தர்க்குச் ¶ சோகமோகங்க ளின்மை

---

எப்போதுந் தான் ஆத்மதற்பரனாய்ப் பாலனைப் போன்று விநோதமாத்திரமாயிருப்பதே மத்திமமாம். (iii.) போகதாற்பரியத்தில் உன்மத்தனைப்போன்று சிந்தையின்றி யிருப்பதே மந்தமாம். (iv) வியாபாரஞ் சிறிதுமின்றி நிருபாதிகவாத்மாவி (சுத்தசேதனத்தி)ற் றற்பரனாயப் பர (விதேக) முத்தனைப் போன்று பரமசுகத்திருப்பதே சுத்தமாம்.

(3) பிராரத்தத்திரயம்.

(i.) தனக்கு அபத்தியம், சேவகமுதலியவற்றால் துன்பமுண்டாமென் றறிந்த விடத்தும் இச்சையின் மிகுதியால் விடாதவற்றைச் செய்வித்தல் இச்சாப்பிராரத்தமாம். (ii.) தான் செய்யக்கூடாதென்றிருப்பினும் ராஜாக்கினையைப்போன்று பலாத்காரமாக இம்சை முதலியவற்றைச் செய்விப்பது அநிச்சாப் பிராரத்தமாம். (iii.) தனக்கு இச்சை அநிச்சைகளி னில்லாதிருப்பினும் பர (அன்னிய) ரது தாட்சண்ணியத்தின் பொருட்டுச் சுகதுக்கங்களை யனுபவிக்கச் செய்வது பரேச்சாப் பிராரத்தமாம்.

‡ வைதிடினுங் கொய்திடினும் வாழ்த்திடினு மாயமெலாஞ், செய்திடினு மன்னர் செறுத்திடினுந் - தெய்வநிலைப், பூத மயக்கிடினும் புரந்தரன்போர் செய்திடினு, மேதுமயங் கான்ஞானி யெண் ” என்றார் சிவஞான வள்ளலார்.

¶ இஷ்டவஸ்து நீங்கியகாலத்து அது மீண்டுங் கிடைத்தற்குரியதாகாமையை யுணர்தல் சோகமாம். விபரீதஞானம் - மோகமாம். சென்றது கருதுதல் சோகமும், சேர்வது நினைத்தல் மோகமுமாம்.

92. பின்னைமு வரிலி ரண்டு பேர்களுஞ் சமாதி யோகந்
தன்னையுற் றிருப்பார் தேக சஞ்சார நிமித்தந் தானு
யுன்னுவோன் வரன்வேற் றேரா லுணர்பவன் வரியா னுதி
மன்னியர் தம்மாற் றன்னு லறியாதோன் வரிட்ட னாமே.

பின் அவர் அஞ்ஞானிகளைப் போன்று ‡ இறந்தகாலத்தில் தம்மிடத்தினின்று நீங்கிய பொன்பெண்முதலியவற்றைப் பற்றிச் சிந்தித்து வருந்துதலும் எதிர்காலத்தில் கிடைக்கக்கூடிய பொருள் புகழ்முதலியவற்றைப் பற்றிச் சிந்தித்து மகிழ்தலுஞ் செய்யாது நிகழ்காலத்தில் பிராரத்தகன்மவசத்தால் தங்கண்ணெதிரே வந்து கிட்டிய உண்டி உறையுள் முதலியவற்றை யனுபவிப்பர்; சூரியகிரணமானது சந்திரகிரணம் போன்று சீதளமுடையதாகி ஆலமரத்தின் விழுதுபோல ஆகாயத்தினின்றும் விழுது விட்டிறங்கினாலும் மரித்துப்போன வுடல் மீண்டும் பிழைத்தாலும் (இன்னும்வேறெவ்வித அற்புதங்கள் நிகழ்ந்தாலும் அவற்றுளொன்றையும் வியப்பாக நோக்கார் ¶ ஒன் றமென்றும் மற்றென் றகாதென்றும் கூறார்; இவ்வாறிருத்தலே சாட்சி மாத்திரமாய் நினைவிறந்து நின்ற விடமென்னும் நடுநிலையிலிருக்குஞ் ஜீவன் முத்தாது செயலாம். (91)

பிரஹ்மவான், பிரஹ்மவரியான், பிரஹ்மவரிஷ்ட னென்னு
மூவரினிலக்கணம்.

பிரஹ்மவான், பிரஹ்மவரியான், பிரஹ்மவரிஷ்ட னென்னு மேனைய மூவருள் பிரஹ்மவான் பிரஹ்மவரியானென்னு மிருவரும் சமாதிசெய்வதிற் பொருந்தியிருப்பர்; (பிரஹ்ம வரிஷ்டனென்னும் மற்றவன் சமாதியிலதீதமா யிருப்பன்).

சீ-வினா:—இவர்களின் றன்மையை விரித் துரைக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு-விடை:—(1) பாகியகருமங்க ளியாவற்றையும் விட்டு ஏகாந்த நிஷ்டையிலே யிருப்பவனாய்த் தேக நிலைத்தற் பொருட்டு தானாகவே நிஷ்டைகலைந்து, உணவு கொள்ளக் கருதுஞ் ஜீவன்முத்தன் பிரஹ்மவானவன். (2) பாகியகருமஞ் சிறிதுமின்றி யேகாந்த நிஷ்டையிலே யிருப்பவனாய்ப் பிறாது பிரயத்தனத்தினால் சமாதியினின்றும்விழித்து உணவு கொள்ளுஞ் சீவன்முத்தன் பிரஹ்ம வரியானவன், பிரஹ்மவானைப் போலத் தன்னாலுணர்தலும் பிரஹ்ம வரியானைப்போலப்பிறரா லுணர்தலு மின்றிக் காட்டலோட்டம் போன்று எப்போதும் அசம்பிரஞ்ஞாத சமாதியி லிருக்கும் ஜீவன்முத்தன் † பிரஹ்ம வரிஷ்டனாவன். ‡ இவனுணவு கொள்வது சிறு குழந்தைக ளுறங்கிக் கொண்டே உணவு கொள்வதுபோ லிருக்கும். (92)

‡ “பூதகா லத்தி றந்த பொருளினைச் சிந்தியாமை, யோதிய வருகாலத்தி லுறுமொரு ளோர்ந்தி டாமை, யேதுமே நிகழ்கா லத்தி லெய்தினு மதிலு பேட்சை, யீதெலாஞ் சீவன் முத்த னிலக்கண மாக்கு மைந்தா.” என்பது விவேக சூடாமணி.

“மற்று நல்லோர் சென்றபொருட் கிரங்கார் வருவ மதித்தெண்ணார், முற்று நிகழ்கா லப்பொருளை முறையா லெய்திக் கைக்கொள்வார்.” என்பது ஞானவாசிட்டம்.

¶ “நன்றென்றுந் தீதென்று நானென்றுந் தானென்று, மன்றென்று மாமென்று மாகாதே - நின்றநிலை, தானதாந் தத்துவமாஞ் சம்பறுத்தார் யாக்கைக்குப், போனவா தேடும் பொருள்” என்பது நல்வழி.



93. அரிதாகு மிவர்க ளிவ்வா றநேகரா னுல முத்தி
சரியாகும் பாடு பட்ட சமாதிக்குப் பலனே தென்றால்
பெரிதான திருஷ்ட துக்கம் பிரமவித் தநுப விப்பன்
வரியானும் வரனு மற்றை வரிட்டனுஞ் சுகமாய் வாழ்வார்.

வித்து, வரன், வரியான், வரிஷ்டனென நாநாவாயுள்ள ஜீவன் முத்தர்கட்கு ஜீவன்முத்திச் சுகத்திற் றாதம்மிய மிருக்கின்றதன்றி விதேகமுத்தியிற் றாதம்மிய மின்றெனல்.

¶ “திரிவித் வுலகத் தரிதொரு ஞானி” என்றவாறு சுவர்க்கமத்திய பாதாள மென்னு மூவுலகத்திலுங் கிடைத்தற் கருமையாயுள்ள விச்சீவன் முத்தர்கள் வித்து, வான், வரியான், வரிஷ்டனென் றிவ்வாறு பிராரத்த கன்மவசத்தால் பல்வேறு வகைத்தாய வியவகார முடையவாயிருப்பினும் ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானத்திற் றாதம்மிய மின்மையின், அதன் பயனான மோட்சம் அவர்கட்கோரு தன்மைத்தாகவே யிருக்கும்.

† செவியாதி யிந்திரியங்கள் அஞ்ஞானத்தி லிலயமடையாது தத்தங் கோளகங்களி லிருத்தலால் ஜாக்ராவஸ்தை யடைந்தும் பகிர்முகமாகும் அந்தக்கரணவிருத்தி யில்லாமையால் சுழுத்தி யவஸ்தை யடைந்தும் சொரூபத்தில் பிறழா திருப்பவன் பிரஹ்மவரிஷ்டனாவன்.

“நிலைபெறு ஞான முற்று நிரந்தர வின்பம் பெற்று
வலைவுறு சகம றந்திங் கமர்ந்தவன் சீவன் முத்தன்
சலமென விருத்தி கெட்டுஞ் சாக்கிர முற்றே னாகி
யிலகுசாக் கிரமு மின்றி யிருப்பவன் சீவன் முத்தன்.” என்பது
[விவேகசூடாமணி.

‡ வரிஷ்டனது சரீர வியவகாரம் அவனது முயற்சியினால் நடைபெறுவதின்றாதலின், அவ்வியவகாரம் பரமேசுவரனா லேவப்பட்ட பிராணவாயுவினால் நடைபெறுகின்றதென்பது சிலர் கொள்கை.

¶ “திரிவித வுலகத் தரிதொரு ஞானி தேர்விடத் தென்றுமோரொன்றை, யுரைசெயிற் பிரம வித்தையொத் தரிதோ வென்றுமிவ் வுலகுரைப் பதனால்” என்பது வைராக்கியதீபம்.

சீ-வினா:—பகவானே! அங்ஙனமாயின், வரன் முதலியோர் வருத்தமுற்றடைந்த †ஞானசாத்திய ராஜயோகம் அல்லது சகஜ சமாதியென்னும் நிர்விகற்ப சமாதிக்குப் பிரயோஜனம் யாது?

கு-விடை:—அன்பனே! பிரஹ்மவித்து முதலிய நால்வருள், பிரஹ்மவித்து, பிராரத்தகன்மவசத்தாற் சம்பவிக்கும் (சற்சீடர்கட் குபதேசித்தல், ஞானஸாஸ்திர மியற்றல், உலகமின்புற உபந்நியாசம் புரிதல் முதலிய) ‡ பெரிதாகியபிரத்தியட்ச துக்கத்தையனுபவியா நிற்பன்; ஏனைய பிரஹ்மவரன், பிரஹ்மவரியான், பிரஹ்மவரிஷ்ட னென்னு மூவரும் (பிராரத்த கன்மவசத்தாற் சம்பவிக்கும் லௌகிக வைதிக வியவகாரங்கள் பெரிதுமின்மையாற் பெரிதும்) ஜீவன்முத்தி § விலட்சணாநந்த அனுபவ முடையவராய் வாழாநிற்பர். (இவ் வேறு பாட்டினை யூகித்துணர்வாயாக). (93)

¶ முத்தனுக்கும் (பிரஹ்மவித்திற்கும்) பெத்தனு (அஞ்ஞானி) க்கு முள்ளவேறுபாட்டினைக் கூறல்.

சீ-வினா:—ஞானாசிரியரே! பிரஹ்மவித்துக்களும், (பிறத்தற்

† சுத்தாந்தக்கரண முடையவன் சாஸ்திர விசாரத்தினாலும் தேசிக மூர்த்தியின னுக்கிரகத்தினாலும் பிரஹ்மாத்மவைக்கிய நிச்சயமாகியதத்துவ ஞானத்தையடைந்து, ஜீவன் முத்திவிலட்சணாநந்தவநுபவத்தின்பொருட்டுப் பிரவிருத்திகளையெல்லாம்விட்டு, ஏகாந்த ஸ்தலத்திருந்து, பிரஹ்மாகாரவிருத்தியை யாவிர்த்தி செய்வதனாற் சித்திக்கும் நிருவிகற்பசமாதி ஞானசாத்திய ராஜயோகமாம்.

“ நிர்விகாரத் தன்மை விருத்தியினால் மீண்டும் பிரஹ்மாகாரத்தன்மையாகச்செவ்வனே தியேயாகாரவிருத்தி சூனியமாயிருத்தல் (துவைதாநுசந்தான மின்மை) எதுவோ அது ஞானமெனப் பெயரிய சமாதியாம்” என்பது அபரோட்சாநுபூதி.

‡ பாகியப்பிரவிருத்தி ஜீவன் முத்திக்கு விரோதியாகாது ஜீவன்முத்தியின் விலட்சணாநந்தத்திற்கு விரோதியாமென்பதிங் குணர்தற்பாற்றாம்.

§ நிராவரணமாய்ப் பரிபூரணமாய் விருத்தியோடு கூடியதா யுண்டாகு மாநந்தம் விலட்சணாநந்த மெனப்படும்.

¶ “முத்தரையும் பெத்தரையு முகக்குறியா னகக்குறியான் முழுதுந் தேரின், மெத்தெனவா கியமொழியு மானந்த பரவசத்தான் மிகுந்த சோர்வுஞ், சித்தநிலை திரியாத செல்வமுமா யிருப்பர் நல்லோர் தீயோ ரெல்லா, மித்தகைமை யோர்களையு மிகழ்ந்துபுகழ்ந் தோர்க்குறவா யிருப்பர்தாமே.” என்பது உபநிடதம்.



94. பிரமஞா னிகளுங் கர்மப் பேதையர் போலே வாழ்ந்தாற்
றிரமுறு மஞ்ஞா னம்போய்ச் சேனியாத வழியே தென்றால்
பரவுமா காச மொன்றிற் பற்றுறு மற்றை நான்கும்
விரவின தோடுங் கூடும் விதமிரு வோரு மாவார்.

95. சீவன்முத் தரைச்சே வித்தோர் சிவனய னேமோ லான
மூவரு மகிழ நோன்பு முழுவதுஞ் செய்து சன்ம
பாவன மானா ரென்று பழமறை முழங்கு மிப்பான்
மேவருஞ் சீவன் முத்தர் விகேகமுத் தியுங் கேளாய்.

கேதுவான † அவித்தை காம) கர்மங்களையுடைய அஞ்ஞானிகளைப்போல லௌகிக வியாபார முடையவராய் ஜீவித்திருப்பின் (அப்பிரஹ்ம வித்துக்கள் ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானத்தாலன்றி வேறொன்றினாலும் கடத்தற்கரிய) வன்மை பொருந்திய (காம கர்மங்களோடு கூடிய) அஞ்ஞானமகன்று மீண்டும் பிறவாதிருத்தற்குரிய மார்க்கம்யாது? (அதனைக் கருணைபுரிந் தியம்பல்வேண்டும்).

கு-விடை:—ஞான சமாதியைப்பெற்ற நன்மாணாக்கனே ? (பஞ்ச பூதங்களுள்) வாயுவாதி நான்குபூதங்களிலும் அவற்றின் காரியங்களிலும் வியாபித்துள்ள ¶ ஆகாயம் அவற்றுளொன்றிலும் சம்பந்தியாதிருத்தல் போன்று பிரஹ்மஞானிகள பூரணமாகு மென்மேற் புவனங்கள்தோன்று மென்னும் தாரணை யுடன் அசங்கமா யிருத்தலால் அவர்களது வியாபாரம் உண்மையில் வியாபார மாவதின்றாம்; அங்ஙனமிருத்தலால் அவர்கள் பிறத்தற்கேது சம்பவியாது. ஏனைய வாயுமுதலிய நான்கு பூதங்களும் தம்மோடு கலவாநிற்கும் பொருள்களோடு சம்பந்தித் திருத்தல் போன்று அஞ்ஞானிகள் இருவினைவசத்தாற் றம்மையடையும் மனைவி மக்கள் அர்த்தங்களோடுகூடி அவித்தை, காம, கர்மங்களுடையவராய்ச் சுகதுக்கங்களால் வதையாநிற்பர். (இவ்வாறிருத்தலே முத்தனுக்கும் பெ (94)
த்தனுக்கு முள்ள வேறுபாடாம்).

† அவித்தை - சொரூபாவரணம்; காமம் - அநுகூல பதார்த்தத்தில் விருப்ப முடைமை; கர்மம் - சுகதுக்கவேதுவான இருவினை.

¶ எப்பதார்த்தம் சையோக சம்பந்தத்தினாலாவது சமவாய சம்பந்தத்தினாலாவது ஒன்றினு மிருப்பதின்றோ அஃதவிர்த்தி (அசங்கம்) எனப்படும். ஆகாயத்திற் பிற பதார்த்த மிருக்கின்றதேயன்றிப் பிறபதார்த்தத்திலாகாயமிருப்பதில்லை யென்பது ஈண்டைத் தாற்பரியமாம்.

96. பஞ்சினை யூழித் தீப்போற் பலசன்ம விவித வித்தாஞ்
சஞ்சித மெல்லா ஞானத் தழல்சுட்டு வெண்ணீ ருக்குங்
கிஞ்சிதா காமி யந்தான் கிட்டாமல் விட்டுப் போகும்
விஞ்சின பிராரத் தத்தின் வினையநு பவித்துத் தீரும்.

ஜீவன் முத்தரின் மகாத்மியங் கூறல்.

(இப்படிப்பட்ட) ஜீவன் முத்தர்களைச் † சேவித்தவர் அரனயனரியென்னு மும்மூர்த்திகளும் மகிழுமாறு(மனுமுதலிய நூலிற்கூறப்படும்) கிரிச்சிரம் சாந்தராயணமுதலிய விரதங்களெல்லாவற்றையுந் துறைவறச் செய்து பிறப்பின் றூய்மை (முத்தியடைதற்துரிய பிறவி) யுடையவராயினரென்று செய்யாமொழியென்னும் வேதம் கூறுகின்றது. (ஆதலால் அவரது ‡ மகிமையை யளவிட்டுரைத்தல் முடியாது). இனிப் பிறரடைதற்கரிய மகிமையையுடைய அச்சீவன்முத்தர்களது விதேககைவல்லியத்தையுங் கூறுகின்றேம். அன்பனே! கவனமாகக்கேட்கக்கடவாய். ()

சீ - வினு:—கவனமாய்க் கேட்கின்றேன்; திருவாய்மலர்ந்தருளல் வேண்டும்.

† "திடஞானி தரிசனமே தீர்த்த மாடல் திடஞானி தரிசனமே தேவ பூசை, திடஞானி தரிசனமே செபத பங்கள் திடஞானி தரிசனமே செயுமறங்கள், திடஞானி தரிசனமே சிவத்தைக் காணல் திடஞானி தரிசனமே சிவத்தின் சேவை, திடஞானி தரிசனமே மேவு தற்குத் திரிவிதமா முலகத்து மரிதா மியார்க்கும்".

"வரமான ஞானிக்கு மகிழ்வி னோடே வளமான போசனமே யளிப்பதாலும், திரமான ஞானிக்குத் தேவை யான திரவியமே சிரத்தையொடு கொடுப்ப தாலும், பரமான ஞானிக்குப் பத்தி யோடே பலவிதமாம் பணிவிடையே செய்வ தாலும், அரிதான மோட்சசுக மெளிதே யாக வடைந்திடலா மனுவுமிதி லையமில்லை".

"ஞானியுடை யருச்சனையே செய்வ தாலே ஞானபல மடைந்ததனுற் சீவன் முத்தி, யானபர மானந்த மடைய லாகு மதன்பின்பு பரமான விதேகமுத்தி, தானுமதா லடைந்திடலா மாத லாலே தளர்வுதரும் பவபீதி யனைத்துந் தள்ளி, யானியிலா முத்திநிலை யடைய வேண்டி லறிஞனுடை யருச்சனையே செய்ய வேண்டும்".

"ஞானிபத தீர்த்தத்தாற் ஞனஞ் செய்வோன் ஞானகன வடிவான பரமே யாவ, னனவெகு சன்மத்தி லனுட்டிப் புற்ற வறங்களெலாம் பரிபாக மான வர்க்கே, யீனமிலா ஞானியுடைத் தரிச னுதி யெளிதாக விச்சன்மந் தன்னி லெய்தும், ஊனமிலா ஞானியுடைத் தரிச னுதி யுறுவோர்க்குப் பவபீதி மீண்டு முண்டோ." என்பது ரிபுகீதை.

‡ "அல்ல தங்கவர் பெருமையை யருமறை மொழிய, வல்ல தன்றரன் முகுந்தனும் பிரமனு மாட்டார்" என்பது மோகவதைப்பரணி.



கர்மத்திரய வொழிவு கூறல்.

கு-விடை:—பருத்திப் பஞ்சுமுதலிய வற்றை ஊழித்தீ (பிரளயகாலாக்கினி) (அடைந்தால்) எங்ஙனம் மிகவெளிதாக வெரித்துச்சாம்பராக்குமோ அங்ஙனமே அநேகவித ஜன்மங்களுண்டாவதற்கு அநேகவித பீஜமாயுள்ள † சஞ்சித கர்மங்களனைத்தையும் ஜீவப்பிரஹ்ம ஐக்கிய

† (1) சென்ற ஜன்மங்களிற் செய்யப்பட்டுப் பலனுக்கு வாராதுள்ள கர்மம் சஞ்சிதமாம்; (2) எதிர்காலத்திற்செய்யப்படும் கர்மம் ஆகாமியமாம்; (3) சென்ற ஜன்மங்களிற் செய்யப்பட்டு வர்த்தமான (நிகழ்கால) சரீரத்திற்கு ஏதுவாயுள்ள கர்மம் பிராரத்தமாம். எந்தப் பிராரத்தகன்மம் ஞானியின் சரீரத்தை யாரம்பிக்கச்செய்ததோ அது சரீரஸ்திதிக்குக் காரணமான பிரவிர்த்தியை யுண்டாக்குகின்றமையின் போகத்தாலன்றிப் பிறிதொன்றுனும் நாசமடைவதில்லை யென்றுணர்க. பிராரத்த வினைக்கு ஆசிரயம் அஞ்ஞானத்தின் விட்சேபசத்தியாம். விட்சேபசத்தியென்னும் அவித்தியாலேசம் தத்துவஞானத்தின் சம்ஸ்காரத்தால் நாசமாகின்றதென்பது சாஸ்திர சம்மதமாம். தத்துவ ஞானத்தால் அஞ்ஞானத்தின் ஆவரணசத்தியும், தத்துவ ஞானத்தின் சம்ஸ்காரத்தால் அஞ்ஞானத்தின் விட்சேப சத்தியும் நாசமடைகின்றனவென்பது "பூயச்சாந்தே விசுவமாயா நிவிர்த்திः - முடிவில் மறுபடியும் தேகாதிகாரியமாகிய விசுவமாயாநிவிர்த்தி யுண்டாகின்றது" என்னுஞ் சுருதியா லூகித் தறியத்தக்கதாம்.

"விழித்த பின்னர்ச் சொப்பன மில்லாமைபோலத் தத்துவ ஞானமுதயமான பின்னர்த் தேகாதிகள் அசத்தாமாகலின் பிராரத்தமில்லை" என்னும் அபரோட்சாநுபூதியின் வாக்கியத்தை யாதாரமாகக் கொண்டு சிலர் ஞானிக்குப் பிராரத்தமுமில்லை யெனக் கூறுகின்றனர்; அது பொருந்தாது. ஞானியின் திருஷ்டியால் ஆத்மாவில் கர்மம் அதன் பலம் என்பவற்றின் சம்பந்தமின்றாம். அதுபற்றி ஆத்மாவில் சகலகர்மமு மில்லையென்னும் அபிப்பிராயத்தால் அபரோட்சாநுபூதி ஞானிக்குப் பிராரத்த மின்றென்று கூறியதேயன்றி ஞானத்திற்கு முன்செய்த பிராரத்தத்திற்கு ஞானியின் சரீரத்தில் போகமுண்டாகா தென்னு மபிப்பிராயத்தால் அஃதின்றென்று கூறவில்லை யென்க.

(1) சன்மாந்தரங்களிற் செய்துள்ள ஆகாமிய கர்மங்கள் (அதிருஷ்டம் - தருமாதருமம்) அந்தக்கரண வுபகித சாட்சியின்கண் கற்பனையாயுள்ள அவித்தையின் ஆவரணசத்தியி லிருக்கின்றன. அங்ஙன மிருக்கும் அவை சஞ்சிதவினையாம்.

(2) ஈசுவரனது இச்சையினுல் அச்சஞ்சிதவினைகளினின்றுஞ் சமயபேதத்தால்பரிபக்குவமாகியவொருதர்மம் இவ்வர்த்தமான சரீரத்திற்காரம்பகமாய்த் தன்னுலாகிய சுகதுங்களினுல் போகவடிவ பயனைத் தருகின்

† ஞானக்கினி (அடைந்தால்) மிகவெளிதாக வெரித்துச் சாம்பராக்கும்.

---

றது; அத்தர்மம் பிராரத்தவினையாம்; அதற்காசிரயம் அவித்தையின் விட்சேபசத்தியாம்.

(3) பிராரத்தகர்மத்தாலாயபோகத்தை (சுகதுக்கங்களை) யனுபவிக்கும்போது நிகழ்கால எதிர்கால போகங்களைச் சம்பாதித்தற்பொருட்டு, இவ்வர்த்தமான தேகத்திற் செய்யுங்கர்மம் ஆகாமியகர்மமாம்; அதற்காசிரயம் பிரமஜதாதாத்மியம், சகஜதாதாத்மியம், கர்மஜதாதாத்மியமென்னு மூன்றனுள் பிரமஜதாதாத்மியமாம். (i) அகங்காரத்திற்குச்சாட்சியினோடுள்ள தாதாத்மியம் (ஒருமைப்பாடு) பிரமஜதாதாத்மியமாம். (ii) அகங்காரத்திற்குச் சிதாபாச(ஜீவ)னோடுள்ளதாதாத்மியம் சகஜதாதாத்மியமாம். (iii) அகங்காரத்திற்கு ஸ்தூலதேகத்தோடுள்ளதாதாத்மியம் கர்மஜதாதாத்மியமாம்.

வறுத்தவிதை யுணவிற்குமாத்திரம் உபயோக மாவதன்றி முளையுண்டாவதற்குக் காரணமாகாமைபோல ஞானக்கினியால் தகிக்கப்பட்ட கன்மமும் பிராரத்தபோகத்தோ டொழிவதன்றி வேறுஜன்மத்திற்குக் காரணமாவ தில்லையென்ப தீண்டுணர்தற் பாற்றும்.

அதிகாரி புருடருக்குப் பிராரத்த வினை பல ஜன்மத்திற்கும் எனையோர்க் கொரு ஜன்மத்திற்கு மேதுவாமென்பது "அறைந்தநகர் வினையதுதா னுலோகயாத் திரைக ளதிகரியா துறுநரர்க்கே யோருடம்பு தன்னிற், செறிந்துநுகர் வாமவற்றி னதிகிருத ராகிச் சிறந்தமா புருடர்க்குத் தசசங்கை யுடம்பி, னுறைந்தலது தீர்ந்திடா தெனினுமறைப் பின்றி யுறுதலா லொருவனுக்கிங் கிளைமைமுதற் பேதம், பிறந்திடினு மவனுக்கோருடம்பேயாய் நின்ற பெற்றிபோ லாகுமென வுணர்ந்திடுக தெரிந்தே" என்று வேதாந்தசூளாமணி கூறிவதாலறிக.

" சஞ்சிதந் திருநோக் காற்போம் பிராரத்தந் தனுவோ டேகும், விஞ்சுமா காமி யந்தான் விளங்குஞா னத்தி னாற்போம், செஞ்சயான் செய்த வெல்லாஞ் சிவன்செய்த வென்று ணர்ந்தான், மஞ்சனே வினைத்தி றங்கள் வந்துனைச் சந்தி யாவே " என்று வள்ளலார் கூறுவர்.

† " எறியாவெரி வருகானிடை யெரியாதன வெவைதா
மறியாவறி வுடையோர்களு மறிவாரது விதுபோற்
குறியால்வரு குணஞானமெய் யனலேகொள விடுமேற்
பொறியால்வரு வினையானவை பொடியாமிதொர் பொருளே."
என்பது பகவற்கீதை.

"சச்சிதா னந்த மான சாந்தமாம் பிரமத் தியி
லிச்சட வுபாதிப் பஞ்சு யாவையு மெரித்துப் பின்பிவ்
வுச்சமாய்ப் போதா னந்த வுண்மையாய்த் தூய்தாய் நின்ற
துச்சமில் பிரம மாகத் துலங்குவன் ஞானி யென்றும்." என்பது
[விவேகசூடாமணி.



97. பொறுமையாற் பிராரத் தத்தைப் புசிக்குநாட் செய்யுங் கர்ம
மறுமையிற் றொடர்ந்தி டாமன் மாண்டுபோம் வழியே தேன்
சிறியவ ரிகழ்ந்து ஞானி செய்தபா வத்தைக் கொள்வா [ருல்
ரறிவுளோ ரறிந்து பூசித் தறமெலாங் கைக்கொள் வாரே.

(தத்துவஞானத்தால் அஞ்ஞானத்தின் ஆவரணசத்தி கெடுகின்றபோது அதன்கண் ணுள்ள சஞ்சிதகர்மமுங் கெடுகின்றது. அதனுல் சஞ்சிதகர்மத்தின் பலன் ஞானிக்குச் சித்திப்பதில்லை). ஞானிக்கு ஆத்மாவின்கண் கர்த்திருத்துவாதிப்பிராந்தியின்றகலின் சிறிதும் ஆகாமியகர்மம் அவனையடைவதில்லை. † பிராரத்த கர்மமோ அனுபவிக்கத் தொலையும். (96)

ஞானியின் ஆகாமியகர்ம மகலும் வகை கூறல்.

சீ-வினு:—சீவன் முத்தர்கள் (இராப்பகல்போல் மாறி மாறி வருஞ் சுகதுக்கங்களை ஒப்பக்காண்டலால்) பொறுமையாகவிருந்து பிராரத்த கன்மத்தின் பயனுன சுகதுக்கங்களை யனுபவிக்குங் காலத்திற் செய்யும் நல்வினை தீவினைகள் மறுமையிற் றொடராது நசிக்கும் மார்க்கம் எங்ஙனம்?

கு-விடை:—அன்பனே! ‡ அச்சீவன்முத்தர் செய்த தீவினையை அறிவினர் தோஷ திருஷ்டியால் நிந்தித்துக் கொள்ளுகின்றனர்; அறி

---

† "சாஸ்திர (விசார) த்தினுல் உலகம் உண்மையென்னும் ஞானம் நசிக்கின்றது; (ஆத்ம) அபரோட்சஞானத்தினுல் (உலக) வியவகாரயோக்கியத்துவம் நசிக்கின்றது; பிராரத்த நாசத்தினுல் உலகத்தோற்றம் நசிக்கின்றது. மாயையிங்ஙனம் மூவிதமாகநாசத்தையடைகின்றது. தனக்குள்ளே பிரஹ்மபாவத்தைக்கொள்ளாதுவிடின் ஜீவபாவம்நீங்குவதில்லை. உண்மையான அத்வைதம் அறியப்படின் (விஷய) வாசனை நீங்கும்; (வாசனை நீங்கின்) பிராரத்தம் போயபிறகு தேகம் வருவதில்லை. இவ்வாருக மாயை முற்றும் நசித்துப்போதல் நிச்சயம்". வராகோபநிஷத்-உ-அத்தியாயம்.

‡ "ஞானியின் புத்திரர்கள் தாயத்தை யடைகின்றனர்; மித்திரர்கள் புண்ணியத்தையடைகின்றனர்; சத்துருக்கள் பாவத்தையடைகின்றனர்" என்பது சுருதி. தாயம் - பிராசீனமானசொத்து.

ஈண்டிது இரகசியமாம். ஆத்மாவின்கண் ஞானிக்குக் கர்த்திருத்துவாதிப் பிராந்தியின்மையின், அவன் கர்மகர்த்திருவன்றும்; கர்மகர்த்திருவாகாமையின் கருமமே செய்வதின்றும். ஞானியின்பால் வினையே நிகழாமையின், அதனைப் பாகிப்ப தெங்ஙனமாம்? ஞானி அந்தக்கரண முதலியவற்றுல் நிகழுங் கருமங்கட்கும் அவற்றிற்குஞ் சாட்சிமாத்திரமாய் விளங்குகின்றுனாகலின், அவன் கருமஞ்செய்பவனல்லன். ஞானியினுடைய நல்வினையைப்பூசிப்பவரும், தீவினையைத் தூஷிப்பவரும் பங்கிட்டுக்கொள்ளு

98. அரியமெய்ஞ் ஞானத் தீயா லவித்தையா முடனீ ருகும்
பெரியதூ லமுங்கா லத்தாற் பிணமாகி விழுமந் நேர
முரியசூக் குமச ரீர முலையிரும் புண்ட நீர்போற்
றுரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தி லிறந்து போமே.

---

வுடையார் ஞானி சிவசொரூபமே யென்றறிந்து பூசித்து அவர் செய்த நல்வினையையெல்லாங் கொள்ளு கின்றனர். (அங்ஙனங் கொள்ளுதலால் சீவன்முத்தரது ஆகாமிய கர்மம் மறுமையிற்றொடாது நசித்துவிடுகின்றதென்க). மறுமையென்றது ஈண்டு விதேகமுத்திதசையை. ()

சரீரத்திரய வொழிவுகூறல்.

சீ-வினு:—ஜீவன்முத்தனுக்கு ஸ்தூல சூட்சும காரணசரீரங்கள் நீங்குங் கிரமத்தைக் கூறியருளுமாறு பிராத்திக்கின்றேன்.

கு-விடை:—அன்பனே ! ஜீவன்முத்தனது அவித்தை யென்னுங் காரண சரீரம் தத்துவஞானத்தினுற் கெடுகின்றது. † ஸ்தூலசரீரமோ அதற்கு நியமித்த காலத்தில் (பிராரத்த கர்மபோகமுடிவில்) பிணவடிவ மாகின்றது. அவ்வாறு ஸ்தூல சரீரம் பிணவடிவ மாகின்றபோது

---

கின்றனரென்பது அர்த்தவாதமாம். அஞ்ஞானியினுேக்கத்திற்கு ஞானி கர்ம கர்த்தாபோன்று விளங்குதலின், அதுபற்றி ஞானி செய்யுங்கர்மம் அகர்த்தாவாகிய வவனையடுத்தற் கிடம்பெறுமையின், அதற்கொரு வழி விடவேண்டி ஞானியின் நல்வினையைப் பூஜிப்பவரும், தீவினையைத் தூஷிப்பவரும் அடைகின்றன ரென்று கூறப்படுகின்றதென்க. ஈண்டு ஞானியைப்பூசிப்பவர் அளவிடற்கரிய புண்ணியத்தையும் தூஷிப்பவர்அளவிடற்கரிய பாவத்தையும் அடைகின்றார்களென்பது தாற்பரியமாம்.

† ஜீவன்முத்தனது ஸ்தூலசரீரம் பிணவடிவமாகின்றதென்று கூறியதனுல் சிலர் ஞானியரதுசரீரம் பிணவடிவமாய்விழுதல்கூடாதென்று கூறுதல் பொருந்தாதவாருயிற்று. குமாரதேவர் சுத்தசாதகத்தில் ஸ்தூல சரீரம் பிணவடிவமாய் விழுந்தால் பிறவியகலாதென்று கூறியது வியர்த்தமாய் விடுமேயெனின், அப்பெரியார் நகுலீசபாசுபத மதத்தை யனுசரித்து அவ்வாறுகூறினுரேயன்றித் தமது சித்தாந்தமாகக்கூறவில்லை. அவர் தமது சித்தாந்தத்தை “ முத்தி யாதோ வெனவெண்ணி முயங்க வேண்டா மிஃதறுதி, முத்தி யுளதேற் பந்த முண்டா முத்தியொருகா லையுமில்லை, முத்தி தானுஞ் சகம்வேறின் மோக மதிற்காண் பதைப்போக்கின், முத்தி யாகுமிந்நிலையை முயன்று வருந்தி நிலைகொள்வாய் ” என் றத்துவிதவுண்மையிற் கூறுவதறிக.

அவர் ஸ்தூலசரீரம் பிணவடிவமாய் விழுந்தால் பிறவியகலாதென்று கூறியதற்குக் காரண மியாதெனின், தேகாத்மப்பிராந்தி யுள்ளவர்கட்குத்



தேகத்தில் உவர்ப்புத்தோன்றுமை நியமமாயிருத்தலின், அதுபற்றி அவர்கட் கதுவாயிலாகவே தத்துவஞான முண்டாகுமாறு ஸ்துதியர்த்த வாதமாக அங்ஙனங் கூறினுரென்க.

“பிராரத்தகன்மம் முடிவுபெறும் பரியந்தம் அரவின்றேல் (அரவுதானுரித்ததோலி லபிமானமற் றிருப்பது) போன்று (வேருகக்கண்டதன் சரீரத்திலபிமானமற்று) வியவகரிக்கின்றுன். இத்தன்மைத்தாய சரீரத்தையுடைய முத்தன் இருப்பிடமின்றி (தன்னுலொருவருக்குந்துன்பமுண்டாகாவாறு) சந்திரனைப்போன்று சஞ்சரிக்கின்றுன். (புண்ணியநதி புண்ணியக்ஷேத்திர முதலிய) தீர்த்தங்களிலாவது சண்டாளர்களது இல்லத்திலாவது (இன்னவிடத்து உடலைவிடவேண்டுமென்னும் நியமங்கருதாது) உடம்பைவிட்டுக் கைவல்ய (மோட்ச)த்தை யடைகிறுன் (ஜீவன் முத்தன் விட்ட) அவ்வுடம்பைத்திக்பலிகொடுத்தல்வேண்டும்; அல்லது புதைத்தல் வேண்டும் ” என்று பைங்களோபநிடதங்கூறுவதும், “ அந்தமின் ஞானியருளை யடைந்தக்கால், அந்த வுடறுன் குகைசெய் திருத்திடிற், சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரும், அந்தமி லின்ப வருள்பெறு வாரே ” என்று திருமந்திரங் கூறுவதும் பிறவும் உய்த்துணர்வார்க்கு ஞானியின் சரீரம் பிணவடிவ மாகாதென்பது அசங்கதமாமென்க.

ஞானியின் சரீரம் பிணமாய் விழுங்காலத்து அவனுக்குத்தேசகால ஆசனுதிகளின் அபேட்சையில்லை. ஆனுல், உபாசகனுக்கு அவற்றி னபேட்சையுண்டு. ஜகத்சத்தியம், பிரஹ்மத்திற்குமெனக்குமுள்ள பேதம் வாஸ்தவம், நான் ஜனனமரணுதி தர்மமுடையவனென்னும் பிராந்தி ஞானிக்குமறந்துமின்மையின் அவன் உத்ராயணமுதலிய புண்ணிய காலங்களிலாவது தட்சிணுயணமுதலிய பாபகாலங்களிலாவது காசி முதலிய பவித்திர தேசங்களிலாவது இலங்கைமுதலிய அபவித்திர தேசங்களிலாவதுஉத்தமமான சித்தாசனத்திருந்தாவது அதமமானசவாசனத்திருந்தாவதுபிரஹ்மமேநானென்று சாவதானமாய்ச் சிந்தனைசெய்து கொண்டாவது ராமராம அல்லது சிவசிவ என்று கூறிக்கொண்டாவது வியாதியினுல்மிக்க வியாகூலமடைந்து ஆ ஆ, ஐயோ ஐயோ, அப்பா அப்பா, அம்மா அம்மா, சாமி சாமி என்று புலம்பிக்கொண்டாவது இறப்பினும் அவற்றுலவனுக்கு இலாப நஷ்டமொன்றுமில்லை. ஒருவன்நாடோறுமத்தியயனஞ்செய்யும் வேதத்தைச்சொப்பனுவஸ்தையிலும் சுழுத்தியவஸ்தையிலும் மறந்தாலும் மறுநாள் அவ்வேதத்தை அவன் அத்தியயனஞ் செய்யாதவனுகான் (அத்தியயனஞ் செய்வன்), அதுபோல ஞானிக்கு மரணகாலத்தில் தத்வானுசந்தான வடிவப் பிரஹ்மாத்ம ஐக்கிய ஸ்மரணமில்லை யாயினும் அவனது ஞானத்திற்குக் கேடின்றும். “ஞானியின் தேகம் காசியில் விழுக; அல்லதுசண்டாளன் வீட்டில்விழுக; ஆனுல் ஞானமடையுங்காலத்துப் பந்தப்பிராந்தி நிவிர்த்தியாதலின் அந்த ஞானி சர்வமுகத்தாலும் முத்தனே” என்பது வேதாந்தசம்பிரதாயவாக்கியமாம்.

98. அரியமெய்ஞ் ஞானத் தீயா லவித்தையா முடனீ றாகும்
பெரியதூ லமுங்கா லத்தாற் பிணமாகி விழுமந் நேர
முரியசூக் குமச ரீர முலையிரும் புண்ட நீர்போற்
றுரியமாய் விபுவாய் நின்ற சொருபத்தி லிறந்து போமே.

வுடையார் ஞானி சிவசொருபமே யென்றறிந்து பூசித்து அவர் செய்த நல்வினையையெல்லாங் கொள்ளு கின்றனர். (அங்ஙனங் கொள்ளுதலால் சீவன்முத்தரது ஆகாமிய கர்மம் மறுமையிற்றொடராது நசித்துவிடுகின்றதென்க). மறுமையென்றது ஈண்டு விதேகமுத்திதசையை. ()

சரீரத்திரய வொழிவுகூறல்.

சீ-வினா:—ஜீவன்முத்தனுக்கு ஸ்தூல சூட்சும காரணசரீரங்கள் நீங்குங் கிரமத்தைக் கூறியருளுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு-விடை:—அன்பனே! ஜீவன்முத்தனது அவித்தையென்னுங் காரண சரீரம் தத்துவஞானத்தினாற் கெடுகின்றது. † ஸ்தூலசரீரமோ அதற்கு நியமித்த காலத்தில் (பிராரத்த கர்மபோகமுடிவில்) பிணவடிவமாகின்றது. அவ்வாறு ஸ்தூல சரீரம் பிணவடிவ மாகின்றபோது

கின்றனரென்பது அர்த்தவாதமாம். அஞ்ஞானியினேக்கத்திற்கு ஞானி கர்ம கர்த்தாபோன்று விளங்குதலின், அதுபற்றி ஞானி செய்யுங்கர்மம் அகர்த்தாவாகிய வவனையடுத்தற் கிடம்பெறாமையின், அதற்கொரு வழிவிடவேண்டி ஞானியின் நல்வினையைப் பூஜிப்பவரும், தீவினையைத் தூஷிப்பவரும் அடைகின்றன ரென்று கூறப்படுகின்றதென்க. ஈண்டு ஞானியைப்பூசிப்பவர் அளவிடற்கரிய புண்ணியத்தையும் தூஷிப்பவர் அளவிடற்கரிய பாவத்தையும் அடைகின்றார்களென்பது தாற்பரியமாம்.

† ஜீவன்முத்தனது ஸ்தூலசரீரம் பிணவடிவமாகின்றதென்று கூறியதனால் சிலர் ஞானியரது சரீரம் பிணவடிவமாய்விழுதல்கூடாதென்று கூறுதல் பொருந்ாதவாறாயிற்று. குமாரதேவர் சுத்தசாதகத்தில் ஸ்தூல சரீரம் பிணவடிவமாய் விழுந்தால் பிறவியகலாதென்று கூறியது வியர்த்தமாய் விடுமேயெனின், அப்பெரியார் நகுலீசபாசுபத மதத்தை யனுசரித்து அவ்வாறுகூறினாரேயன்றித் தமது சித்தாந்தமாகக்கூறவில்லை. அவர் தமது சித்தாந்தத்தை "முத்தி யாதோ வெனவெண்ணி முயங்க வேண்டா மிஃதறுதி, முத்தி யுளதேற் பந்த முண்டா முத்தியொருகாலையுமில்லை,முத்திதானுஞ் சகம்வேறின் மோக மதிற்காண் பதைப்போக்கின், முத்தி யாகுமிந்நிலையை முயன்று வருந்தி நிலைகொள்வாய்" என்றத்துவிதவுண்மையிற் கூறுவதறிக.

அவர் ஸ்தூலசரீரம் பிணவடிவமாய் விழுந்தால் பிறவியகலாதென்று கூறியதற்குக் காரண மியாதெனின், தேகாத்மப்பிராந்தி யுள்ளார்கட்குத்



தேகத்தில் உவர்ப்புத்தோன்றாமை நியமமாயிருத்தலின், அதுபற்றி அவர்கட் கதுவாயிலாகவே தத்துவஞான முண்டாகுமாறு ஸ்துதியர்த்த வாதமாக அங்ஙனங் கூறினாரென்க.

"பிராரத்தகன்மம் முடிவுபெறும் பரியந்தம் அரவின்றோல் (அரவுதானுரித்ததோலி லபிமானமற் றிருப்பது) போன்று (வேறாகக்கண்டதன் சரீரத்திலபிமானமற்று) வியவகரிக்கின்றான். இத்தன்மைத்தாய சரீரத்தையுடைய முத்தன் இருப்பிடமின்றி (தன்னாலொருவருக்குந்துன்பமுண்டாகாவாறு) சந்திரனைப்போன்று சஞ்சரிக்கின்றான். (புண்ணியநதி புண்ணியக்ஷேத்திர முதலிய) தீர்த்தங்களிலாவது சண்டாளர்களது இல்லத்திலாவது (இன்னவிடத்து உடலைவிடவேண்டுமென்னும் நியமங்கருதாது) உடம்பைவிட்டுக் கைவல்ய (மோட்ச)த்தை யடைகிறான் (ஜீவன் முத்தன் விட்ட) அவ்வுடம்பைத்திக்பலிகொடுத்தல்வேண்டும்; அல்லது புதைத்தல் வேண்டும்" என்று பைங்களோபநிடதங்கூறுவதும், "அந்தமின் ஞானியருளை யடைந்தக்கால், அந்த வுடறான் குகைசெய் திருத்திடிற், சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரும், அந்தமி லின்ப வருள்பெறு வாரே" என்று திருமந்திரங் கூறுவதும் பிறவும் உய்த்துணர்வார்க்கு ஞானியின் சரீரம் பிணவடிவ மாகாதென்பது அசங்கதமாமென்க.

ஞானியின் சரீரம் பிணமாய் விழுங்காலத்து அவனுக்குத்தேசகால ஆசனாதிகளின் அபேட்சையில்லை. ஆனால், உபாசகனுக்கு அவற்றினபேட்சையுண்டு. ஜகத்சத்தியம்,பிரஹ்மத்திற்குமெனக்குமுள்ள பேதம் வாஸ்தவம், நான் ஜனனமரணாதி தர்மமுடையவனென்னும் பிராந்தி ஞானிக்குமறந்துமின்மையின் அவன் உத்ராயணமுதலிய புண்ணிய காலங்களிலாவது தட்சிணாயணமுதலிய பாபகாலங்களிலாவது காசி முதலிய பவித்திர தேசங்களிலாவது இலங்கைமுதலியஅபவித்திர தேசங்களிலாவதுஉத்தமமான சித்தாசனத்திருந்தாவது அதமமானசவாசனத்திருந்தாவதுபிரஹ்மமேநானென்று சாவதானமாய்ச் சிந்தனைசெய்து கொண்டாவது ராமராம அல்லது சிவசிவ என்று கூறிக்கொண்டாவது வியாதியினால்மிக்க வியாகூலமடைந்து ஆ ஆ, ஐயோ ஐயோ, அப்பா அப்பா, அம்மா அம்மா, சாமி சாமி என்று புலம்பிக்கொண்டாவது இறப்பினும் அவற்றாலவனுக்கு இலாப நஷ்டமொன்றுமில்லை. ஒருவன்நாடோறுமத்தியயனஞ்செய்யும் வேதத்தைச்சொப்பனாவஸ்தையிலும் சுழுத்தியவஸ்தையிலும் மறந்தாலும் மறுநாள் அவ்வேதத்தை அவன் அத்தியயனஞ் செய்யாதவனாகான் (அத்தியயனஞ் செய்வன்), அதுபோல ஞானிக்கு மரணகாலத்தில் தத்வானுசந்தான வடிவப் பிரஹ்மாத்ம ஐக்கிய ஸ்மரணமில்லை யாயினும் அவனது ஞானத்திற்குக் கேடின்றாம். "ஞானியின் தேகம் காசியில் விழுக; அல்லதுசண்டாளன் வீட்டில்விழுக;ஆனால் ஞானமடையுங்காலத்துப் பந்தப்பிராந்தி நிவிர்த்தியாதலின் அந்த ஞானி சர்வமுகத்தாலும் முத்தனே" என்பது வேதாந்தசம்பிரதாயவாக்கியமாம்.

99. கடமெனு முபாதி போனுற் ககனமோன் றுனுற் போல
வுடலெனு முபாதி போன வுத்தரஞ் சீவன் முத்த
ரடிமுடி நடுவு மின்றி யகம்புற மின்றி நின்ற
படிதிகழ் விதேக முத்திப் பதமடைந் திருப்ப ரேன்றும்.

† சூட்சுமசரீரம் கோல்லனுலையிற் காய்ந்த இரும்புண்ட நீர்போலத் துரியமாயும் வியாபகமாயுமுள்ள ஆன்ம சோருபத்தி லிலயமாகின்றது. [இவ்வாறு மூன்று சரீரமும் ஒழித்லால் ஜீவன் முத்தனுக்குப் புனராவிர்த்தி (மீண்டும் பிறத்தல்) உண்டாகின்ற தில்லை. எவனது சூக்தும சரீரம் மாணகாலத்தில் வெளியிற் செல்லுகின்றதோ அவனுக்கே புனராவிர்த்தி யுண்டேன்பது நியமம்].

விதேகமுத்தியி னியல்பு கூறல்.

சீ-விஞ:—எனது பரமதந்தையே! ஜீவன்முத்தர்க்கு ஸ்தூல சரீரம் நீங்கியபின்ன ருண்டாகும் நிலைமை யாது?

கு-விடை:—‡ கடமென்னு முபாதி நீங்கியபின்னர்த் தாமதமின்றிக் கடாகாசம் மகாகாசத்தோடொன்றனுற்போலச்சரீரத்திரயமென்னு முபாதி நீங்கியபின்னர்த் தாமதமின்றிச் சீவன் முத்தர் ஆதிமத்தியாந்தரகிதமா யுள் வெளியின்றி யெப்போதுந் தானிருந்தபடியே விளங்தும் ¶ விதேகமுத்திப் பதத்தை யடைந்திருப்பர். [கடோபாதி நீங்கிய

† ஞானியின் ஸ்தூலசரீரம் பிணவடிவமாய் விழுகின்ற காலத்து அவனது சூட்சுமசரீரம் அஞ்ஞானியின் சூட்சுமசரீரம்போன்று வேறுலகத்திற்காவது இவ்வுலகத்தின் வேறு சரீரத்திலாவது போகாது காய்ச்சிய விரும்பிற் றெளித்த நீர் சொரூபமில்லாது கெடுவதுபோல ஆன்ம சொருபத்தி லிலயமாய்க் கெடுகின்றதென் றீண்டறியத்தக்கதாம்.

சூக்குமசரீரம் நிர்விகாரவடிவப்பிரஹ்மத்தில் இலயமாதல் சம்பவியாமையின், பிருதிவியின் காரியமான விரும்பில் நீர்த்துளி இலயமடையாது அதனேடு கூடிய நெருப்பில் இலய மடைவதுபோல, சூக்குமசரீரம் சுத்தசேனத்தில் இலயமடையாது, அதனேடு கற்பிதமாகக்கூடியுள்ள அவித்தையில் இலயமாகின்றதென்று கொள்க. ஈண்டு ஆதேயத்தில் இலயமாகுஞ் சூக்குமசரீரத்தை ஆதாரத்தில் இலயமாவதாகக் கூறியது உபசாரவழக்காம்.

‡ "படியில் வந்த பரம குரவனுற், றடைய றும்படி தன்னை யறிந்தவ, னுடல்வி டும்பொழு தொன்றெரு மண்மயக், கடமு டைந்தவா காய நிகர்ப்பனுல்" என்பது பிரபுலிங்கலீலை.

¶ தத்துவஞானத்தால் அஞ்ஞானம் நிவிர்த்தியாகிப் பிராரத்தபோகத்திற்குப் பின்னர் ஸ்தூல சூக்கும சரீராகாரமான அஞ்ஞானம் சேதனத்



100. சோல்லிய மகனே யெங்குஞ் சூழ்வெளி யிருக்க மண்ணைக்
கெல்லிய பின்பு தோன்றுங் கிணற்றி னு காசம் போலே
யொல்லையாம் பிரமனு லா லுற்றது போலே தோன்று
மெல்லையி னுமேப் போது மேகமேன் றிருந்து வாழ்வாய்.

விடத்துக் கடாகாசம் மகாகாசத்தோ டேகமாவதுபோலச் சரீரத்திரயவுபாதி நீங்கியவிடத்துச் சீவன்முத்தர் பிரஹ்மத்தோடேகமாய் அஃதாவது பிரஹ்ம மாத்திரமாகவே விள்ங்து கின்றனர். அப்போதவர் விதேகமுத்தரெனப் படுகின்றனர்]. [விதேகம்—தேகமின்மை].

பிரஹ்மப்பிராப்தி யெந்நான்றுமுள்ளதேனல்.

சீ-விஞ:—சின்மயாநந்த குருவே! இப்போதுகூறிய பிரஹ்மப் பிராப்தி யொருகாலத் துண்டாவதா யிருத்தலி னஃதனித்தியமாகுமல்லவா?

கு-விடை:—எனதுபதேசத்தாற் சித்தித்த அனுபவத்தை ஐயந்தீர அவ்வப்போது வினவிவந்த ஞானபுத்திரா! வாயுவாதி நான்கு பூதங்களிலும் அவற்றின் காரியங்களிலும் வியாபகமாயுள்ள ஆகாயம் எப்போதும் தானிருந்தபடியேயிருக்க, பூமியை யகழ்ந்தபின்ன ரப்போதுண்டானதுபோல அறிவிலிக்குத் தோன்றும் கிணற்றுகாசம் போலச் சுபாவசித்தமாயுள்ள பிரஹ்மம் குருபதேசத்தாலும் சாஸ்திர விசாரத்தாலும் அப்போது நூதனமாகஅடையப் பட்டதுபோலத் தோன்றுகின்றது; அவ்வாறு தோன்றினும் அஃதுண்மை யன்மையின், முடிவற்ற கூடஸ்தப் பிரஹ்ம சோருபமாகிய யாம் (உண்மையில் கூடஸ்தனுகிய நீயும் உண்மையில் பிரஹ்மமாகியநானும்) எப்போதும் ஏகவடிவமேயென்று பிறழாது வாழக் கடவாய்.

திருக்கு யதார்த்தப் பொருளேன்றும் திருசியம் கற்பிதப்
பொருளேன்றும் வற்புறுத்திக்கூறல்.

சீ-விஞ:—தத்துவரத்தினமே! இதுகாறுங் கூறிய அர்த்தத்

தில் (தெளிந்தவிடத்துக் கயிற்றி லரவுபோல்) இலயமாதல் விதேகமோக்ஷமெனப்படும். அஃதாவது சீவன்முத்தர் தேகாதிப் பிரபஞ்சம் மித்தையாகவேனுந் தோற்றுதலின்றி (சரீரத்திரயமும் நீங்கி)ப் பிரஹ்மசொருபமாகவே நிலைத்தலாம்.

"இங்குமிக வரிதான விதேக முத்த னிலக்கணமே நிதாகனினக் கியம்பக் கேளாய், தங்குமினை வனைத்தையுமே தவிர்ந்து சுத்த தற்பரனே தானுகிச் சாந்த னுகிச், துங்கசுக கனமாகிச் துச்சருபத் தொடர்பின்றி மகாமௌன நிலைபெற் ருேனுய், மங்கலிலா வுணர்வுருவாம் பிரமரூப மாத்திரமா யிருப்பவனே விதேக முத்தன்." என்பது ரிபுகீதை.

101 கானனீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்க ணூர்
வானமை கயிற்றிற் பாம்பு மலடிசேய் முயலின் கோடு
பீனமாந் தறிபு மானிற்;பிரபஞ்ச மெல்லாம்;பொய்யே
ஞானமெய் மகனே யுன்னை நம்மாணை மறந்தி டாதே.

ைதச் சங்கிரகித்துத் திருவாய் மலர்ந்தருளும்படி பிரார்த்திக்கின்றேன்.

த-விடை:—புத்திர சிகாமணியே! † பிரபஞ்சம் அநுபாதானகாரண

† பிரபஞ்சமும் அதன் உபாதானகாரணமான அவித்தையும் மித்தை; பிரஞ்ஞானகனப்பிரஹ்மமே சத்தியம்;அந்தப் பிரஞ்ஞானகனப் பிரஹ்மமே நீயென்று கூறுவதால் சர்வம் மித்தை, சர்வம் பிரஹ்மம், சர்வம் நான் என்னும்வேதாந்தத்தின் இரகசிய சித்தாந்தம் பெறப்பட்டவாறறிக.

சர்வமும் மித்தையாய் விளங்கினாலன்றிச் சர்வமும் பிரஹ்மமாய் விளங்குதலும் சர்வமும் பிரஹ்மமாய் விளங்கினாலன்றிச் சர்வமும் நானாக விளங்குதலு மில்லையாம்.

ஈண்டுக்கூறிய திருஷ்டாந்தம் ஒன்பதனுள் மலடிமகனும் முயற்கோடும் சொன்மாத்திரமாயுள்ள அசத்பதார்த்தமாம்; ஏனையவை சொல்லுந் தோற்றமுமாயுள்ள மித்தியா பதார்த்தமாம். கந்தர்ப்ப நகரமாவது மேக படலத்திற்றோற்றும் நகரவடிவம், அல்லது, ஆகாயத்தி லிந்திரஜாலக்காரனாலாக்கப்பட்டநகரம்; அல்லது மரணகாலத்திற் றோற்றும் நகரமாம்.

வேதாந்த சாஸ்திரங்கள் ஜகத்மித்தை யென்பதற்குப் பல திருஷ்டாந்தங்கள்கூறுதல் ஜிஞ்ஞாசுவின் மனத்தில் ஜகத்மித்தையென்பது நன்றாய்ப்பதிதற்பொருட்டாம். வேறு வேறு உவமானங்கள் உரைப்பது பற்றித் தத்துவ வாதம் கூறுவது வருமாறு:—

“உகலமொன்றேயுளது, அஃதழிவ தில்லை யென்னும் மாணக்கனை நோக்கி, உலகம் காரியமேயன்றிக் காரணமல்லவென்றும், காரணமாவது எங்கும் பரிபூரணமான பரவஸ்துவேயென்றும், தாயினிடத்துப் பிள்ளை எப்படிப் பிறந்ததோ அப்படியே பரவஸ்துவின்கண் உலகு உதித்தது என்றும் ஆசிரியர் கூற, மேலே மாணக்கனுக்கும் ஆசிரியர்க்கும் நடக்கும் சம்பாஷணையாவது:—

மாணக்கன்: தாயினிடத்துப் பிள்ளை பிறந்ததுபோல் பரவஸ்துவின்கண் உலகுதிக்குமாயின் தாய் வேறுபொருள், பிள்ளை வேறுபொருள்; அன்றி, இரண்டுங் கண்டப்பொருள்கள். இவ்வுவமானப்பிரகாரம் உவமேயத்தைப் பார்ப்போமானால் பரவஸ்துவும் உலகமுங் கண்டப்பொருளாகின்றன. இது பரவஸ்து பரிபூரணமென் றுரைத்ததற்கு விரோதமாகின்றதே.

ஆசிரியர்: உலகமே பொருளென்றும், அதற்குக்காரணம் பிறிதொரு பொருளில்லையென்றும் கூறும் சித்தாந்தத்தை மறுக்கவேண்டி, இதற்கு



மேல் பொருளொன் றுண்டெனத் தாய் பிள்ளை யுவமானங் கூறினதேயன்றி, அதுவே சித்தாந்தமன்று. பின்னை, பால் தயிராவதுபோல் பரிணாமமாம். தாயும் பிள்ளையும் வேறானமையின் உண்டாகும் பரிபூரணதோஷம் பாலே தயிராவதான பரிணாமத்தில் இல்லை. இவ்வுவமானத்திற்கு உவமேயம் பரவஸ்துவே உலகமாம்.

மாணக்கன்: ஆசிரியரே! நீருரைத்த தோஷமில்லாவிடினும் வேறு பெருந்தோஷமுண்டாகின்றது. அஃதியாதெனின், பாலே தயிராவதில் பால்கெட்டுத் தயிராகின்ற தென்பதாம். இவ்வுவமானப்படி பரம் கெட்டுலகாகின்றது. அதனோ டொழியவில்லை. பால்கெட்டுத் தயிரானால் தயிர் தயிராகவே யிராது; அதுவுங்கெட்டு வேறும், அதுவுங்கெட்டுப் பிறிதொன்றுமாகி, முடிவில் இன்ன நிலைமைத்தென்றுரைக்க இயலாமற் போம். அங்ஙனமே பரங்கெட்டு உலகாகி, அதுவுங்கெட்டு வேறாகி, அதுவுங்கெட்டு மற்றொன்றாகி ஈற்றில் இன்னநிலைமைத்தென்று கூற முடியாமற்போம்.

ஆசிரியர்: அஃதுண்மைதான். நாம் பரிபூரணதோஷம் வாராமற்பொருட்டும், இரண்டுபொருள்களல்லவென்பதற்கும் பால் தயிரென்னும் உவமானங் கூறினதே யன்றி அதுவே சித்தாந்த மன்று. பின்னை மண்கடம்போல் காரண காரியமாம். மண் கெடாமல் கடமாவதுபோல் பரவஸ்து கெடாமல் உலகாகின்றது.

மாணக்கன்: இதிலும் தோஷமில்லாது போகவில்லை. மண் விகாரப்பட்டன்றோ கடமாகின்றது ? அங்ஙனமே பரம் விகாரப் பட்டன்றோ உலகாகவேண்டும்? நிர்விகாரமான பரத்திற்கு விகாரத்துவங் கற்பிப்பது நியாயமன்றே.

ஆசிரியர்: உண்மைதான். பால் கெட்டுத் தயிராவதுபோல் மண் கெட்டுக் கடமாவதில்லை யென்பதற்கும், தயிர் மீண்டும் பாலாகாமற்போவது போலன்றிக் கடம் மீண்டும் மண்ணாகுமென்பதற்கும் இவ்வுவமானமேயன்றி மற்றப்படியல்ல. இனி விகாரப்படாதவுவமான முரைக்கின்றோம். அஃதாவது சூரியனும் பிரதிபிம்ப சூரியனும்போலவாம். சூரியன் விகாரப்படாமல் எப்படிப் பிரதிபிம்பிக்கின்றானோ அப்படியே பரமும்விகாரப்படாமல் பிரதிபிம்பிக்கின்றது.

மாணக்கன்: இதிலும் சங்கையில்லாமற் போகவில்லை. பிம்பப்பொருள் பிரதிபிம்பிக்கிறதற்கு ஆதாரமொன்று வேண்டும். சூரியன் பிரதிபிம்பிப்பதற்கு ஜலம் எப்படி ஆதாரமோ, அப்படியே பரம்பொருள் பிரதிபிம்பிப்பதற்கு ஆதாரமொன்று வேண்டும். எது மற்றொரு ஆதாரத்தில் பிரதிபிம்பிக்கின்றதோ,அஃது அபரிபூரணப்பொருளாயிருக்கவேண்டுமேயன்றி ஓர்போதும் பரிபூரணப்பொருளாகாது. ஜலத்தில் பிரதிபிம்பிக்கும் சூரியனும், கண்ணாடியிற் பிரதிபிம்பிக்கும் நமது முகமும் பரிபூரணப்பொருளாமா? சூரியனும் நமது முகமும் ஒரு இடத்திலும்,ஜலமும் கண்ணாடியும்

பிறிதொரு இடத்திலும் இருக்கின்றமையின், பிம்பப்பிரதிபிம்ப வுவமானம் அபரிபூரணப் பொருளுக்கே பொருந்து மென்றவாறாயிற்று. இவ்வுவமானப் பிரகாரம் பரம் அபரிபூரணப்பொருளாகின்றது.

ஆசிரியர்: பிம்பப்பிரதிபிம்ப திருஷ்டாந்தம் பரவஸ்து விகாரப்படுவதில்லை யென்பதற்கு மாத்திரமே. இனிப் பரிபூரண தோஷமில்லாமைக்கு வேறு திருஷ்டாந்த முரைக்கின்றோம்? அது கயிற்றிற்பாம்பும் கிளிஞ்சிலில் வெள்ளியும் எப்படித்தோற்றுகின்றனவோ, அப்படியே பரத்தினிடத்துச் சிற்சடவடிவான வுலகு தோற்றுகின்றது.

மாணுக்கன்: இதிலும் வினு நிகழ்கின்றது. கயிற்றைத்தவிரப் பாம்பில்லையெனத் தெளியின் பின்னர்ப் பாம்பு தோற்றுவதில்லை. உலகு காரணத்தையன்றி யில்லையென் றுணரினும் மீண்டுந்தோற்றுகின்றது. மண்ணையன்றிக் கடமென்னும் பொரு ளின்றென ஆய்ந்தறியினும் பெயர்த்தும் தோற்றுவதைப் பார்க்கின்றோ மன்றோ?

ஆசிரியர்: உலகம்பொருளல்லவென்பதற்கு மாத்திரம் கயிற்றிற்பாம்பும் கிளிஞ்சிலின்கண் வெள்ளியும் திருஷ்டாந்தமே யன்றி முற்று மல்ல. இனி அத்தோஷமும் வாராமற் பரிகரிக்கின்றோம். அஃதியாதெனின், கானனீராம். கனலையன்றி நீர் மூக்காலத்து மின்றெனத் துணியினும் மீண்டுந் தோற்றிக்கொண்டே யிருக்கின்றது. அதுபோல் உலகம் அசத்தெனத் துணியினும் தோற்றிக்கொண்டேதா னிருக்கும்.

மாணுக்கன்: கானலினிடத்து நீரில்லையென்று தெளிந்த பின்னர்த் தோற்றினும் அஃதநுபவத்திற்கு வருவதில்லை; அஃதாவது நீரை அருந்த வுதவுவதில்லை. உலகோ அவ்வாறன்று; சத்த ஸ்பரிச ரூப ரச கந்தங்கள் அநுபவிக்கப்படுகின்றன. ஆகலின் இத்திருஷ்டாந்தம் பொருத்தமுறாது.

ஆசிரியர்: உலகம், அசத்தென்றுணரினும் பெயர்த்தும் தோற்றும் என்னுமளவும் கானனீர் திருஷ்டாந்தமாம். மற்றப்படி (ஐம்புலனுக்கும்) அநுபவ மாகின்றமைபற்றி வேறு திருஷ்டாந்தம் கூறுவோம்; அஃதாவது சந்நிபாத தோஷத்திற்காணு முலகும், சொப்பனவுலகும், பிறவும் போலுமாம். சந்நிபாததோஷ முதலியவற்றாற் காணும் உலகு தோற்றமேனும் அனுபவத்தோடுங்கூடிய தோற்றமாம்".

உலகவடிவ காரியத்தோடு கூடியமாயை சிரௌதம் (சுருதிசம்பந்திஞானம்), யௌத்திகம்(யுக்தி சம்பந்திஞானம்), லௌகிகம் (லோகசம்பந்திஞானம்) என்னும் பேதத்தால் முறையே துச்சை, அநிர்வசநீயை, வாஸ்தவி யென மூவகைத்தாம்.

(1) " இந்தப்பிரஹ்மத்தில் நாநாவென்பது சிறிது மில்லை " என்றற்றொடக்கத்துச் சுருதிவாக்கியங்களால் உலகவடிவ காரியத்தோடு கூடிய மாயை மலடிமகன், வான்மலர், முயற்கோடு முதலியன போல முக்காலத்து மின்றெனப் பெறப்படுதலால், அது துச்சையாம் (அசத்தாம்).



மான அஞ்ஞானமாகிய வனைத்தும் † கானல் நீர், கிளிஞ்சில் வெள்ளி, கந்தர்ப்ப நகரம், சொப்பனவுலகம், ஆகாய நீலம், கயிற்றரவு, மலடிமகன், முயற்கோடு, ஸ்தாணுபுருஷன் என்பவற்றைப் போன்று மித்தையாம். ‡ பிரஞ்ஞானகனப் பிரஹ்மமே சத்தியமாம். (நீ பிரஞ்ஞானகனப் பிரஹ்மவடிவமா யிருத்தலின் உன்னிடத்துச் சகத்தும் அதனுபாதான காரணமான அவித்தையும் மித்தையாயிருக்கின்றன. அவ்வாறிருக்தும்) உன்னை நமதாணைப்படி மறவாதிருக்கக் கடவாய்.

---

(2) கானனீர், கிளிஞ்சில் வெள்ளி, கந்தர்ப்பநகர், சொப்பனவுலகு, வானமை, கயிற்றரவு, கட்டையிற்கள்ளன் முதலிய உவமானமும், உலகவடிவ காரியத்தோடு கூடியமாயை மித்தை; திருசியமாயிருத்தலின்; யாது திருசியம் அது மித்தை, கயிற்றரவு போல, யாதுமித்தையன்று அது திருசியமன்று ஆன்மாப்போல என்னும் அநுமானமும் பிறவுமாகிய பிரமாணசகித யுத்தியினுல் அம்மாயை அநிர்வசநீயையாம் (சத் அசத்விலட்சணமாயிருத்தலால் பாதயோக்கிய சொரூபமுடையதாம். பாதம் - பொய் யென்று நிச்சயித்தல்).

(3) ஆத்மாநாத்மவிசாரமின்றிய பாமர விஷயிகளது சித்தத்தில் அம்மாயை (ஆன்மாப்போல) நித்திய வஸ்துவாகத் தோன்றுதலின் வாஸ்தவியாம் (யதார்த்தமாம்). ஈண்டு இம்மூன்று பேதமு மறியத்தக்கனவாம்.

† " கயிற்றர விப்பி வெள்ளி குற்றியிற் கள்வன் மிக்க
வெயிற்படு கானற் றெண்ணீர் விண்ணிற்கந் தருவ வூர்போ
லியற்படு நித்த சச்சி தாநந்த சிவத்தின் கண்ணே
செயப்படு பொருளாய்த் தோன்றுஞ் செப்பிய வுலக மன்றே."
என்பது சித்தாந்தசிகாமணி.

‡ மண்ணொன்றே நாமரூபத்தால் கடாதி பேதமானாற்போலும், பொன்னொன்றே வாசாரம்பண (வாக்கின் காரிய) த்தாற் கடக மகுடாதியாபரண மானாற்போலும், நீரொன்றே வாயுவசத்தால் நுரை குமிழி அலைமுதலிய சமுதாய மானாற்போலும், தீபமொன்றே கடத்தின் துவாரபேதத்தாற் பல ரூபமானாற்போலும், காற்றொன்றே வேணுரந்திரத்தால் மந்தர மத்திம தாரமானாற்போலும், சுரமொன்றே பாடுவான் குறிப்பால் நாநா ராகமானாற்போலும், ஆகாயமொன்றே கிருகாதி யுபாதியால் அநேகமானாற்போலும், வாழையிலையைத் துண்டித்தலாற் கரிதுரகாதி நாநா பேதமானாற்போலும், தொனியொன்றே வாத்தியாதிபேதத்தால் அநேக மானாற்போலும், சூரியனொன்றே ஜலகும்பாதி வசத்தால் நாநாவித மானாற்போலும், முகமொன்றே கண்ணாடி பேதத்தாற் பலவானாற்போலும், இலக்கமொன்றே பிந்துபேதத்தாற் பத்து நூறு ஆயிரமுதலியன வானாற்போலும், சித்தொன்றே உபாதிபேத கற்பனையால் முற்கூறிய ஜீவேசுராதி பேதவிகாரகற்பனையாய் விளங்குகின்றமையின், அஃதே உண்மைப்பொருளாமென்க.

உலகம்மித்தை யெனற்கும், பிரஞ்ஞானகனப் பிஹ்மமே சத்தியமெனற்கும் கானனீர் முதலியவற்றை யுவமான மாகக் கூறுவது பற்றித் திருப்போரூர் ஸ்ரீ சிதம்பரசுவாமிகள், ஸ்ரீ குமாரதேவர் நெஞ்சுவிடுதூதின் கண்கூறியது இன்றியமையா தீண்டறியத்தக்கதாம். அதுவருமாறு:—

"சுகசொருப
மொன்றென்றே சொன்னா லுலகமே தென்றிடவே
நின்ற பழுதையிடை நீளரவ - மன்ற
வுதிக்குமா றப்பொருளி லுண்டாமென் றோத
விதித்த பழுதை விளங்கின் - மதித்தபாம்
பேகு மதுபோ லெழிற்சிவங்கண் டும்முலக
மோகாதி தோன்ற லெனையென்ன - மோகமறக்
கானலினீ ரில்லையெனக் கண்டுநீர் தோன்றுதல்போ
லீனமில்பொய் யாத்தோற்று மென்றிசைப்ப - வான
பழுதையினிற் பாம்பும் பகர்கான னீரு
மெழுமோர் தகையா யிவைதாங் - குழுமியே
நானாவா யோர்பொருளி னண்ணுவதே தென்றிசைப்ப
வானாத பொன்மண்ணி லாபரண - நானா
கடமாதி தோன்றுமொரு காரணம்போற் றோன்றுந்
திடமாநீ காணென்று செப்பத் - திடவா
னொருவன் றொழிலா லுளவா மிவைதா
மருவுமிவை யாவரால் வந்த - துரையெனவே
விண்ணினிடைப் பீலி வெயிற்குஞ்சங் தோன்றுவபோ
னண்ணா மெனவே நயந்துரைப்ப - வெண்ணாமவை
பற்பலவா னாலும் பகருருவொன் றாமிவைதாந்
துப்புடைநா னாவுருவாய்த் தோற்றுவதென் - செப்புகெனக்
காந்தரு மாநகர்போற் காணெனவே யந்நகர்தான்
போந்தவிவ காரமின்றாய்ப் பொய்யாகு - மேய்ந்த
விவற்றுள் விவகார மெய்வதெவ னென்னக்
கவற்றுள் கனவுவிவ கார - நவிற்றுதல்போ
லாமென் றுரைப்ப வதுநினைவின் வாதனையாந்
தோமுறுபொய் வாதனைதான் றாய்தாய - சேமப்
பொருட்கே தெனவந்தப் பூரணத்திற் றோன்றுந்
தருக்கா நினைவாகுந் தானென் - றுரைப்ப
வதற்கு நினைவெழுமோ யாதென்று கேட்பக்
கதித்த கனவிலை கண்டா - யிதைப்பொய்யென்
றுன்னாது கேட்டி யுளஞ்சற் றசைந்தக்கால்
முன்னாம் பரமுயிர்கண் மொய்த்தெழுந்த - மன்னா
வுலகமிவை தோன்று முளமிறந்தா லிந்தக்



கலகமெலாம் பொய்யாய்க் கனதை - யிலகியதோர்
மெய்யொன்றே யாகு மிளிரு முளத்துருவ
னையா வுருவமொடு நாமமாம் - பொய்யுளந்தா
னுன்னினைவு தீதென்றே யூகத்தா னோக்குமிடத்
தந்நினைவு நாமவுரு வாகுங்கா - ணந்நினைவு
கோடி கணத்திற் குதித்தெழலா லிவ்வுலகு
நாடற் கருவுருவ நாமமாய்ப் - பீடுபெறத்
தோற்று நினைவைத் துணித்தாற்சற் சிற்சுகமே
மாற்றற் கரிதாய் வயங்கலுறுஞ் - சாற்றுமிதா
லுள்ளமே யிவ்வுலகா மிவ்வுலகே யுள்ளமா
முள்ளமலா தேயுலக மொன்றில்லை - யுள்ளே
மதுரந் தருஞ்சாத்தன் வன்கோயின் முன்னே
சதுரங்க மாபலமாத் தங்குங் - குதிரைகரி
தேரா ளெனும்பெயருஞ் செப்பியபேர் கொள்ளுருவு
நேராது பொய்யென்று நீக்கியே - தேருமிடத்
துற்றிடுமுக் காலத்து முள்ளமண்ணே மற்றெல்லாம்
வெற்றவெறும் பொய்யாய் விடுமிவைபோற் - சொற்ற
பெயருருவ மானவெலாம் பேணாது நீக்கிற்
செயிராறுசித் தொன்றே திகழும்."

முதலாவது

தத்துவ விளக்கப்படலம்

முற்றிற்று.

---

ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணேநம:

# கைவல்லிய

# நவநீதவசனம்,

## வினு விடை.

இரண்டாவது

§ சந்தேகந் தெளிதற் படலம்.

1. நரர்குழி பறித்து மெள்ள நாட்டிய நெடிய கம்பம்
உரமுறக் குத்திக் குத்தி யுறைப்பிக்கு முபாயம் போலப்
பரமசிற் சொரூபந் தன்னிற் பற்றிய மனோவி ருத்தி
திரநிலை பெறச்சந் தேகந் தெளிதலை மொழிகின் றேனே.

முற்கூறிய தத்துவத்திற்றேன்றும் ஆசங்கையை நிவிர்த்தித்தற்
பொருட்டு இது கூறுகின்றேனெனல்.

* ஸ்தூணநநநியாயம்போல (உலகத்திலே மக்க ளொருபயன் கருதிக் குழிதோண்டி அதில் மெல்லவெடுத்து நிறுத்திய பெரிய ஸதம்பமானது அசைவின்றி ஸ்திரமாக நிற்றற்பொருட்டுக் கல்மண்ணிட்டுக் கெட்டித்துக் கெட்டித்து அதனைப் பலப்படுத்தும் வகைபோல)ச் சர்வோத் கிருஷ்ட மான சிதாநந்த வடிவப் பிரஹ்மத்தில் நான் பிரஹ்மமென் றபேதமாகப் பொருந்திய மனோவிருத்தியானது அதனிடத்துச் சலனமின்றி நிற்றற் பொருட்டுச் சந்தேகந் தெளிதலை யானிப்போது கூறுகின்றேன். 1.

§ "தடையெவை யெனிலஞ் ஞான சந்தேக விபரீ தங்கள்" என்னும் ஞானப் பிரதிபந்த மூன்றனுள், சீடன் சந்தேகத்தினின்றும் நீங்குதல் அஞ் ஞானத்தினின்றும் நீங்குவதற்கும் விபரீதத்தினின்றும் நீங்குவதற்கும் கார

ணமாயிருத்தலின், சீடனைச் சந்தேகத்தினின்றும் நீக்குதல் ஆசிரியரது முக்கியக் கடமையாம்; அதனுல், சந்தேகந் தெளிதற் படலங் கூறுவது அத்தியாவசியகமாயிற்றென்க. “அஞ்ஞான விபரீதங்கள் மோட்சமாத்திரத்தைக் கெடுக்கும்; சந்தேகம் போக மோட்ச மிரண்டையுங் கெடுக்கும்.” என்று ஜீவன் முத்திப் பிரகரணம் கூறுகின்றது.

“குரவன்வாக் கியநம் பாமற் குழம்புவ தாஞ்சந் தேகம்” என்று தத்துவ விளக்கப் படலம் கூறுவதால், சந்தேகத்தின் சொரூபம் விளங்குவதாம்.

இதனது விரிவை விருத்திப்பிரபாகரம் 7-வது பிரகாசம் 283—4 பக்கங்களிற் காண்க.

“சொல்லரு ஞானப் பொருடெரி யாரெது சொன்னுலும், அல்லவிதாமென் றையுறு வாரங் கன்பில்லா, ரில்லவ ராவா ரிகபர மில்லா ரிவர் கண்டாய், தொல்லறி வாலே யையுற வற்ருேர் துறவுற்ருேர்” என்று பகவற்கீதை கூறுவதும், ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின், வானநணிய துடைத்து” என்று திருக்குறள் கூறுவதும், “சூசகனும் விவேகத்தால்” என்னுஞ் செய்யுளில் “ஐயந்தவிர்த்து நிலைத்த வாசகலு முத்தியருள்பவன் விகித குருவாம்” என்று வேதாந்த சூடாமணி கூறுவதும் இங்குணர்தற் பாலனவாம்.

* ஸ்தூணு - கம்பம், கநநம் - புதைத்தல், நியாயம் - திருஷ்டாந்தம்.

“ஸ்தூணு என்பது குதிரை முதலியவற்றைக் கட்டுவதற் குரிய கம்பம்; அதன் கநநமென்றுலதனைத் திட அதிடத்தைப் பரீக்ஷித்த (அசைத்த)லோடு பூமியில் நாட்டுதல்; அஃதாவது அசைந்தால் அதிடமாம்; அதை மறுபடியும் கட்டபாரை முதலியவற்றைக் கொண் டிடித்தலால் திடமாம்; இந்த நியாய (திருஷ்டாந்த)த்தால் அஃதாவது இக்கம்பம் நாட்டுதலைப்போல மனமென்னும் சலன முள்ள குதிரையைக் கட்டுதற்கு (நிறுத்துதற்குரிய) இடமாகிய அத்வீதிய சத்தாகிய கம்பத்தைத் திடம் (நிச்சயிக்கப்பட்டது) அதிடம் (சந்தேக முடையது) என்று பரீக்ஷித்தலோடு முமுக்ஷுவின் மதியாகிய பூமியில் நாட்டுதலாம் (சங்கை சமாதானங்களால் நிச்சயித்தலாம்). அது பூர்வபக்ஷமாகிய அசைப்பால் அசையுமாயின் (சந்தேகத்தோடு கூடியதாயின்), மறுபடியும் பூர்வபட்ச நிராகரண (சமாதான) மென்னும் கட்டபாரை முதலியவற்றைக் கொண்டு இடித்தலால் திடமாகின்றது” என்று பஞ்சதசி - பஞ்சமகா பூத விவேகத்தின் குறிப்புரையி லெழுதப்பட்டிருக்கின்றது.



2. நற்கருத் துடையோ ஞகி ஞானவா ஞகி நின்றேன்
மர்க்கட நியாயம் போல மகாபூத விகாரந் தொட்டு
நிர்க்குண விதேக முத்தி நிலைபரி யந்தஞ் சொன்ன
சற்குரு வினைவி டாமற் சந்தத மநுச ரித்தான்.

3. சந்ததம் புருடன் றன்னைச் சாயைபோல் விடாம லன்பாம்
மைந்தனை நோக்கிச் சாட்சி மாத்திர மாய்நின் றுயோ
சிந்தையி லைய மெல்லாந் தீர்ந்தவோ தெளிவி னுள்ளே
அந்தரங் கலந்த துண்டோ வநுபவ முரைசெய் வாயே.

சர்வம்மித்தை, சர்வம் பிரஹ்மம், சர்வம் நானேன்பதை மறவாதிருத்தல்வேண்டுமென்னு முபதேசத்தைக் கேட்ட சீடன் தனதுதுருவை யனுசரித் திருந்த வகையினைக் கூறல்

(அஹிம்சை, பரோபகாரம், சௌசம், தபசு, சத்தியம், சாந்தி, தாந்தி, திதிட்சை, தயை, தாட்சண்யம், மிருதுத்துவம், விரக்தி, புண்ணியம், விவேகம், சுத்தம், சிரவணுதிசாதனம், தீனத்துவ மின்மை முதலியவற்றிந் கேதுவாய) சத்துவகுணமிக்க அந்தக்கரணத்தை யுடையவனுய் அதனுல் நான் பிரஹ்மமென்னும் ஜீவப்பிராஹ்ம ஐக்கியஞான முடையவனுய் நின்ற சீடன் † (மார்ச்சால நியாயம்போ லாகாமல்) மர்க்கட நியாயம்போலப் பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களின் காரியமான ஸ்தூலதேக முதற்கொண்டு யாதொரு குணமுமின்றிப் பிரஹ்மசொருப மாத்திரமாய் நிற்கும் விதேக முத்தி பதவி பரியந்த முபதேசித்தருளிய சற்குருவினை விட்டகலாது எப்பொழுதும் வழிபாடுசெய் தொழுகுவானுனன். 2.

ஆசிரியர் சீடனை யனுபவம் வினுதல்.

அவ்வாறொழுகிப் புருடனை எப்போதும் விட்டுநீங்காத * நிழலைப்

† மார்ச்சால நியாயமாவது:—தாய்ப் பூனை தன் குட்டிகளிருக்குமிடத்தைத் தானே தேடிச்சென்று (வாயிற்) கௌவி எடுத்துக்கொண்டுபோய்க் காப்பாற்றலாம். மார்ச்சாலம் - பூனை.

மர்க்கட நியாயமாவது:—குரங்குக் குட்டி தன்றாய்க் குரங்கு எங்கேதாவினும் தானதனை விடாது பற்றி யிருத்தலாம். மர்க்கடம் - குரங்கு. “மங்கிக்குருளை (குரங்குக்குட்டியை) யொத்தேனில்லை” என்று பட்டினத்தடிகள் கூறியிருப்ப திங்குணர்தற்பாலதாம்.

* “அழலி னீங்கா னணுகா னஞ்சி, நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமோ, டெத்திறத் தாசா னுவக்கு மத்திறம், அறத்திற் றிரியாப் படர்ச்சி வழிபாடே” என்பது நன்னூற் சூத்திரம்.

4. எனவுரைத் தருளு மாசா னிருபதம் வணங்கி யெந்தாய்
சனனவன் காட்டின் மோகத் தமத்தெழு பேதப் பேய்கள்
உனதரு ளுதய வெற்பி லுபதேச வருக்கன் றேன்றி
மனவிழி தெரிய ஞான வான்கதிர் பரந்தா லுண்டோ.

போன்று ஒருகண நேரமும் நீங்காது தம்மிடத்தன்பாயுள்ள சீடனைச் சற்றுருவானவர் அன்போடு நோக்கி, மைந்தனே ! நீ ஞாதா ஞானங்க ளகலப் பேற்று ஞேய வடிவமான † சாட்சி மாத்திரமாக நின்றனையா ? உனதந்தக் கரணத்தின்கண் பிரமாணகத சம்சயம் பிரமேயகத சம்சயமென்னும் § அசம்பாவனைகளெல்லாம் அகன்றனவா? உனது புத்தியினிடத்துப் பேதப் பிராந்திவந்து பொருந்தினதுண்டோ? இவற்றை யனுசரித்து உனதனுபவத்தைக் கூறுவர்யென்று வினவினர். 3.

சீடன் தேவரீரது அருளால் தடையற்ற அனுபவமடைந்தே னென்று கூறி யின்னும் வினவத்தக்கன உண்டெனல்.

இவ்வாறு வினவிய தேசிகரது உபயபாதங்களையும் வணங்கி (எழுந்தெதிரே கைகூப்பி நின்று) எனது பிதாவே ! சனன மாணுதி வடிவ வன்மையுடைய சம்சார வனத்திலே அஞ்ஞான விருளிலே யெழுகின்ற ‡ பேதப் பசாசங்கள் தேவரீரது அருளென்னு முதயகிரியிலே பிரஹ்மோபதேசமென்னும் சூரியனுதித்து அகக்கண் விளங்கும்படி ஞானமென்னும் பெரிய கிரணங்களை பாவச் செய்தால், அச்சூரியன் முன் உள்ளனவாக நிற்குமோ ? இல்லாதழிந்தன. 4.

† அந்தக்கரணத்தை யுபாதியாக வுடைய சேதனம், அல்லது அதனை உதாசீனமாய்ச் சமீபத்திருந்தறிவதாகிய சேதனம், அல்லது அந்தக்காணத்திலும் அதன் விருத்தியிலுமுள்ள சேதன மாத்திரம் சாக்ஷியாம்.

§ அசம்பாவனை யெனக் கூறப்பட்டதாயினும், இனம்பற்றி விபரீத பாவனையுங் கொள்க.

வேதாந்தம் ஜீவப் பிரஹ்மங்களின் பேதத்தைக் கூறுகின்றதா ? அபேதத்தைக் கூறுகின்றதா? என்னும் சந்தேகம் பிரமாணகத சம்சயமாம்; ஜீவப் பிரஹ்மங்களின் பேதம் சத்தியமா ? அபேதம் சத்தியமா ? என்னும் சந்தேகம் பிரமேயகத சந்தேகமாம்.

ஜீவப் பிரஹ்மங்களின் பேதமும் சத்தியம், தேகாதிப் பிரபஞ்சமும் சத்திய மென்னும் விபரீத நிச்சயம் விபரீத பாவனையாம். இதுவும் பிரமாணகத விபரீத பாவனை, பிரமேயகத விபரீத பாவனையென் றிருவகைத்தாம். இவ்விரண்டன் தன்மையையும் விரிவாக வேதாந்த சஞ்ஞையி லறியலாம்.

‡ பேதப் பசாசங்கள்—ஜீவேசுவரபேதம், ஜீவர்களின் பரஸ்பர பேதம், ஜீவஜடபேதம், ஈசுவர ஜடபேதம், ஜடஜட பேத முண்டென்னும் பிராந்தியாம். இது பேதப் பிராந்தி யெனப்படும். இனம்பற்றிக் கருத்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தி, சங்கப்பிராந்தி, விகாரப்பிராந்தி, பிரஹ்மத்திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப்பிராந்தி யென்பனவுங் கொள்க. அதிரகசியம் "நித்தனன் றுரைத்த வாக்கியப் படியே நிகழ்த்துவன் பிராந்தியைந் தினையும், சத்திய மிந்த வுலகெனல் கருவி தணந்திடா துடலைநா னென்னல், கத்த போத்தாவு நானென றுனுங் கடவுளும் வேறெனக் கருதல், சித்துரு வாகி யிருந்துநா னுகேன் சிவனெனல் சிதடர் பா லறியே" என்று கூறுவதறிக.



பிம்பப் பிரதிபிம்பங்களின் பேதம் மித்தையாதல்போன்று ஜீவேசுவர பேதமும், பல கடாகாசங்களின் பரஸ்பரபேதம் மித்தையாதல்போன்று ஜீவர்களின் பரஸ்பரபேதமும், சொப்பன ஜீவர்கட்கும் சொப்பன கடாதிகட்குமுள்ள பேதம் மித்தையாதல் போன்று ஜீவஜடபேதமும், கயிற்றிற்கும் அதிற்கற்பனையாயுள்ள அரவிற்கு முள்ளபேதம் மித்தையாதல்போன்று ஈசுவர ஜட (ஜக) பேதமும், கயிற்றிற் கற்பனையாயுள்ள மாலை தண்டம் அரவு முதலியவற்றின் பேதம் மித்தையாதல் போன்று ஜட ஜட (கட படாதிகளின்) பேதமும் மித்தையாம்.

(1) அந்தக்காணத்தின் தர்மமாய கருத்திருத்துவ போக்திருத்துவங்கள் ஆத்மாவின்கண் தோற்றுதல் கருத்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தியாம். (2) ஆன்மாவிற்குத் தேகாதிகளில் யானென்பதும் கிருகாதிகளிலெனதென்பதுந் தோற்றுதல் சங்க (கூட்ட)ப் பிராந்தியாம். (3) பாலின் விகாரம் தயிராதல் போன்று பிரஹ்மத்தின் விகாரம் உலகுயிரெனல் விகாரப் பிராந்தியாம். (4) ஜகத் பிரஹ்ம பின்னமாம்; அது பொய்யன்றென்னும் புத்தி சகத்தின் சத்தியத்துவப் பிராந்தியாம்.

(1) ஸ்படிகத்தில் செந்நிறவாடையின் செந்நிறம் தோற்றுந் திருஷ்டாந்தத்தால் கருத்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தியும், (2) கடாகாச திருஷ்டாந்தத்தால் சங்கப்பிராந்தியும், (3) கயிற்றரவு திருஷ்டாந்தத்தால் விகாரப்பிராந்தியும், (4) கனககுண்டல (பொன்னுலாகிய குண்டலத்தின்) திருஷ்டாந்தத்தால் பிரஹ்மத்திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப் பிராந்தியும் நிவிர்த்தியாமென்க.

5. மந்திர மூர்த்தி தன்னுன் மாற்றிய பேய்போ ஞலும்
எந்திர மெழுதிக் கட்டி யினிவரா வகைசெய் வார்போல்
முந்தியுன் னுபதே சத்தான் மோகம்போ ஞலு மையா
புந்திநின் றுறைக்க வின்னம் புகலும்விண் ணப்ப முண்டே.

6. ஆகமப் பிரமா ணத்தா லறியென்றும் வாக்குக் கெட்டா
தேகமாம் பிரம மென்று மிதயத்தா லுணர்வா யென்றும் [னீர்
சோகமா மனத்திற் கெட்டாச் சுயஞ்சோதி யென்றுஞ் சொன்
மோகமா மிரண்டு சங்கை முளைத்தன பறித்தி டீரே.

---

மந்திரவாதியால் பேய்பிடித்தவளினின்றும் நிக்கிய பேயானது அவளுடம்பைவிட்டு நீங்கிப்போயினும் மந்திர சக்கர (குளிச) மெழுதி யவளுடம்பிற் கட்டி மீண்டு ம்ப்பேய் அவளிடத்து வாராதவாறு செய்கின்றவரைப் போல, முன்னரே தேவரீரது உபதேசத்தினல் (பேதப்பிராந்தி, கருத்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தி, சங்கப்பிராந்தி, விகாரப்பிராந்தி, ஜகத் சத்தியத்துவப் பிராந்தி யென்னும்) மோகமானது நீங்கிப்போயினும் பரமாசிரியரே! எனது புத்தியானது ஆத்மாநுபவத்தில் பிறழாது நின்றழுந்தும்படி இன்னுமடியேன் வினவத்தக்க விண்ணப்பங்களு மிருக்கின்றன; உத்தரவாயின், அவற்றைக் கூறுகின்றேன். 5.

குருமொழி:—கூறக்கடவாய்.

சீடன் பிரஹ்மம் மனோவாக்கிற் கெட்டும், எட்டாததென்பது பற்றி
ஆசங்கைசெய்து வினவுதல்.

சீடன் வினு:—தேவரீர் முன்னர் * ஏகாகாரமாய் விளங்கும் (நினது நிஜவடிவமான) பிரஹ்மத்தை யாகம (சுருதி)ப் பிரமாணத்தால் நீ அறியக்கடவாயென்றும், அஃதாகமப் பிரமாணத்திற்கு விஷயமாகாதென்றும், அவ்வத்வைதப் பிரஹ்மத்தை மனதினுலறியக்கடவா யென்றும், அது சோக (மோக) மோடுகூடிய மனதிற்கு விஷயமாகாத சொப்பிரகாச வடிவமென்றும் உபதேசித்தருளினீர். (பிரஹ்மம் சுருதிக்கு விஷயமாம், விஷயமாகாது; மனத்திற்கு விஷயமாம், விஷயமாகாது என்றிங்ஙன முபதேசித்ததனுல் அடியேனுக்குப் பிரஹ்மம் சுருதிக்குவிஷயமா அன்று? மனத்திற்கு விஷயமா அன்று? என்னும்) மயக்கமாகிய விருவகைச் சந்தேகங்களுண்டாயின; அவற்றை நீக்கியருளுவீராக. 6.

---

* *தத்துவவிளக்கப் படலத்துள் "நீநானென் றிரண் டிலாம னிறைந்தபூரணமா யெங்கும், நானுகத் தெளிந்த ஞான நழுவுமோ குருவே யென்றான், தானுகும் பிரம ரூபஞ் சற்குரு நூலாற் றென்றும், ஆனுலுந் தடைக*



7. மற்றைமுப் பிரமா ணத்தால் வத்துநிண் ணயங்கூ டாதே
உற்றதோர் விடயம் பூத முபயமன் றுத லாலே
குற்றமாங் குணவி சேடங் கூடாம லிருக்கை யாலே
இற்றது வாக்குக் கெட்டா தென்பது மறிவாய் நீயே.

---

பிரஹ்மம் சுருதிக்கு விஷயமா? அன்று? என்னும்
முதற் சங்கைக்கு உத்தரங் கூறல்.

குரு விடை:—நிர்விசேஷ சின்மாத்திரமான பிரஹ்மம் சுரோத்திராதி யிந்திரியங்களுடனே சம்பந்தப்படுவனவாயுள்ள சப்தாதி விஷயங்களுள் ஒன்றன்றதலாலும், பூதமன்றதலாலும் (அனுமிதிப்பொருள்களுள் ஒன்றன்றதலாலும்), உபயமன்றதலாலும் (உவமிதிப்பொருள்களுள் ஒன்றன்றதலாலும்), (ஆகமப்பிரமாணத்தாலே யன்றி) ஏனைய பிரத்தியட்சம்-அனுமானம்-உவமானமென்னு மூன்று பிரமாணங்களாலும் அறியப்படுவதன்றும்; ஆதலால், $ அந்தப் பிரமாணங்களால் பிரஹ்ம நிச்சயம் சம்பவி

---

*ளுண்டே லனுபவ முறைத்தி டாதே" என்றுள்ள செய்யுளில் "தானுகும் பிரம ரூபஞ்சற்குரு நூலாற் றென்றும்" என்றிருப்பது (1) 'ஆகமப்பிரமா ணத்தாலறி' என்று கூறியதாம்; 'ஆனுலுந் தடைக ளுண்டே லனுபவ முறைத்தி டாதே' என்றிருப்பது (2) 'வாக்குக் கெட்டாது' என்று கூறியதாம்; "பூச்சியவீசன்" என்றுள்ள செய்யுளில் 'உன்னை யறிந்துநீ பிறிந்து கொள்ளோ' என்றிருப்பது (3) 'இதயத்தா லுணர்வாய்' என்று கூறியதாம்; "எல்லாங்கண்டறியு மென்னை யேதுகொண் டறிவே னென்று, சொல்லாதே சுயமாஞ் சோதிச் சுடருக்குச் சுடர்வே றுண்டோ" என்றிருப்பதும், "அறிவுக்கு மறிவு செய்யு மறிவுவே றுண்டென் றெண்ணும், அறிவற்ற குதர்க்க மூடர்க்குனவத்தை பலமாய்த் தீரும், அறிபடும் பொருணீ யல்லை யறிபடாப் பொருணீயல்லை, அறிபொரு ளாகு முன்னை யனுபவித்தறிவாய் நீயே" என்றிருப்பதும், (4) "சோகமா மனத்திற் கேட்டாச் சுயஞ்சோதி" என்று கூறியனவாம்.*

*தத்துவவிளக்கப் படலத்துள், "தத்துவ மெனும்ப தங்கள் பிரமமாய்க் காட்சி யான, வத்துவை விடாமற் பேத வாச்சியார்த் தத்தை விட்டு, நித்தமுமதுநீ யாகு நீயது வாகுமென்னும், அத்தமு மகண்ட மென்றே யசிபத மைக்கியங் காட்டும்" என்றுள்ள செய்யுள் 'ஆகமப் பிரமாணத்தா லறி' என்று கூறியதற்கு முக்கிய வாதாரமாம்.*

$ பிரமாண நிருபணம்.

*சூத்திர பாஷ்யகாரர்கள் பிரமாண சங்கையைக் குறிப்பிட் டெழுதினுரில்லை யாகலின், இந்நூலாசிரியர் நியாய தரிசனத்தை (தர்க்க சாஸ்திரத்தை)*

யர்து; (சம்பவிக்குமேனின், அதற்கு இந்திரியத்திற்கு விஷயமாதல், ஏது வுண்மை, சாதிருசியமுடையது, ஜாதி - குண - கிரியை - சம்பந்தங்கள் இன் மையின்,) அது பிழையாம். (பிரஹ்மம் ஆகமப்பிரமாணத்தா லறியப்படு கின்றதேன்பதிற் பிழை யாதுளதேனின், குண விசேடமுடையதே வாக் கிற்கு (சத்தத்திற்கு) விஷயமாமென்பது நியமமா யிருத்தலின், அது † குண விசேஷ முடையதாயின்,வாக்கிற்கு விஷயமாம். உண்மையில்) குண விசேஷத்தோடு சம்பந்தப்படா திருத்தலின், இந் நிர்விசேஷ சின்மாத்திர வடிவப் பிரஹ்மம் வாக்கிற்கு (சுருதிக்கு) விஷயமாகாதேன்பதையும் நீயே அறியக்கடவாய். 7.

---

யனுசரித்துப் பிரத்தியட்சம், அனுமானம், உவமானம், சப்தம் எனப் பிரமா ணம் நான்கெனக் கூறினர். சூத்திரகாரர்-வியாசர்; பாஷ்யகாரர்-சங்கரர். பின்வந்த வேதாந்தாசிரியர் பட்டாது மதத்தை யனுசரித்துப் பிரமாண மாறெனக் கூறினர். அந்நான்கோடு அருத்தாப்பத்திப் பிரமாணத்தை யும் அனுபலப்திப் பிரமாணத்தையுஞ் சேர்க்கப் பிரமாணம் ஆறும்.

இந்த ஆறு பிரமாணங்களுள், சார்வாகர் பிரத்தியட்சப் பிரமாண மொன்றையே யங்கீகரித்திருக்கின்றனர் ; கணாத-சுகதர்கள் அதனோடு அனு மானப் பிரமாணத்தையும்,சாங்கிய சாஸ்திரத்தின் கர்த்தாவாய கபிலர் அவற் றோடு சப்தப் பிரமாணத்தையும், நியாய சாஸ்திரத்தின் கர்த்தாவாய கௌத மர் அவற்றோடு உவமானப் பிரமாணத்தையும், பூர்வ மீமாஞ்சையி னேக தேசியாகிய பட்டாது சிஷ்யராய பிரபாகரர் அவற்றோடு அருத்தாப் பத்திப் பிரமாணத்தையும், பட்டரும் வேதாந்திகளும் அவற்றோடு அனுபலப்திப் பிரமாணத்தையு மங்கீகரித்திருக்கின்றனர்.

பிரமையின் கரணம் பிரமாணமாம் ; பிரமை - பிரமாணத்தா லுண்டா கும் ஞானமாம் ; கரணம் - சிறந்த காரணமாம்.

(1) பிரத்தியட்சப்பிரமாணம்:—பிரத்தியட்சப் பிரமையின் கரணம் பிரத்தியட்சப் பிரமாணமாம். கடமுதலியவற்றைக் காணுமிடத்து நேத்திர முதலிய இந்திரியங்கள் பிரத்தியட்சப் பிரமாணமாம். இது கடமென் றறியுமிடத்து நேத்திரேந்திரியம் பிரமாணமாம்; கடம் பிரமேயமாம்; அதன் ஞானம் பிரமையாம். சிலவிடத்துச் சத்தமும் பிரத்தியட்சப் பிரமாண மாம்.

(2) அனுமானப்பிரமாணம்:—அநுமிதிப் பிரமையின் காணம் அநு மானப் பிரமாணமாம்; இலிங்க ஞானத்தாற் றோன்றும் ஞானம் அநுமிதி யாம். மலையில் புகையின் பிரத்தியட்ச ஞான முண்டானவிடத்துத் தீயின் ஞான முண்டாகின்றது. ஈண்டுப் புகையின் ஞானம் இலிங்க ஞானமாம். அஃது அநுமானப் பிரமாணமாம்; அதனாலுண்டாகும் வன்னியின் ஞானம் அநுமிதியாம். அவ்வநுமாநம் பிரதிஞ்ஞை, ஹேது, திருஷ்டாந்த மென்னும் மூன்று அவயவங்களை யுடையதாம். அது வருமாறு:—இம்மலை தீயுடைத்து; புகையுடைமையால்; அடுக்களைப்போல வென்பது.



(3) உவமானப்பிரமாணம்:—உவமிதிப் பிரமையின் கரணம் உவமா னப் பிரமாணமாம். நகரத்தில் கோவியக்தியை (ஆவின் பிண்டத்தை)க் காண்பவன் வனத்திற்சென்று கவயத்தை (காட்டுப் பசுவை)க் காணுமிடத்து அவனுக்கு இப்பசு ஆவை யொத்ததென்னும் பிரத்தியட்ச ஞான முண்டா கின்றது; அதன்பின் என் ஆ இப்பசுவை யொத்ததா மென்னும் ஞான முண்டாகின்றது. ஈண்டுக் கவயத்தில் ஆவொப்புமையின் ஞானம் உவ மானப் பிரமாணமாம்; ஆவில் கவயத்தின் சாதிருசிய ஞானம் உவமிதியாம். பேத சகித சமான தருமம் சாதிருசிய மெனப்படும்.

(4) சப்தப்பிரமாணம்:—சாப்திப்பிரமையின் கரணம் சப்தப் பிர மாணமாம். யதார்த்தத்தினைக் கூறுவோன் வாக்கியம் சப்தப் பிரமாண மாம் ; அதனாலுண்டாகும் ஞானம் சாப்திப் பிரமையாம். ஈண்டு ஈசுவரனாற் சொல்லப்பட்ட வேதங்களும் அவற்றை மூலமாகவுடைய சாஸ்திரங்களும் பிறவும் சப்தப் பிரமாணங்களாம். "வஜ்ஜிரஹஸ்தன் புரந்தரன்" என்பது வைதிகவாக்கியமும், "ஆற்றங்கரையிலிரண்டு பழங்களுள" என்பது லௌ கிக வாக்கியமுமாம்.

(5) அர்த்தாபத்திப்பிரமாணம்:—அர்த்தாபத்திப் பிரமையின் கரணம் அர்த்தாபத்திப் பிரமாணமாம். உபபாதக கற்பனைக்கேதுவாகிய உபபாத் தியஞானம் அர்த்தாபத்திப் பிரமாணமாம் ; உபபாதகஞானம் அர்த்தாபத் தப் பிரமையாம். எஃதின்றி எது சம்பவியாதோ அதற்கு அஃது உப பாத் திய மெனப்படும். இராத்திரி போஜனமின்றிப் பகலுண்ணாப் புருடனிடத் துப் பருமை சம்பவியாதாகலின், இராத்திரி போஜனத்தின் உபபாத்தியம் (சம்பாத்தியம்) ஸ்தூலத் தன்மையாம். எதன் அபாவத்தால் எதன் அபாவ முண்டாகின்றதோ அஃது அதன் உபபாதகமாம். இராத்திரி போஜனத் தின் அபாவத்தால் பகலுண்ணாதானுக்கு ஸ்தூலத் தன்மையின் அபாவ மிருத்தலின், இராத்திரி போஜனம் ஸ்தூலத்தன்மையின் உபபாதக (சம்பா தக) மாம். இங்ஙனம் உபபாத்தியத்தின் அனுபபத்தியின் ஞானத்தால் உப பாதகத்தைக் கற்பித்தல் அர்த்தாபத்திப் பிரமையாம்; உபபாதக கற் பனைக்கேதுவான உபபாத்தியத்தின் அனுபபத்தி (பொருந்தாமை) யின் ஞானம் அருத்தாபத்திப் பிரமாணமாம். அர்த்தாபத்தி என்பது அர்த்தஸ்ய கற்பனை ஆபத்தி எனப் பிரிபடும் ; அதன் பொருள் அர்த்தத்தின் கற்பனை யென்பதாம்.

(6) அநுபலப்தி (அபாவ)ப் பிரமாணம்:—அபாவப் பிரமையின் காரணம் அநுபலப்திப் பிரமாணமாம். அபாவத்தின் யதார்த்தஞானம் எதனுலுண்டாகின்றதோ அஃது அநுபலப்திப் பிரமாணமாம். ஈண்டுக் கடமில்லையென்னுமிடத்து அதற்குக் கடம் விளங்காமையே அநுபலப்திப் பிரமாணமாம். உபலப்தி—விளக்கம்; அநுபலப்தி—விளங்காமை.

இந்த ஆறு பிரமாணங்களின் நிரூபணம் மிகு சுருக்கமாகச் சொல்லப்பட்டது; இவற்றின் விரிவை வேதாந்த பரிபாஷை முதலியவற்றிற் காண்க.

ஆத்ம வடிவப்பிரஹ்மம் உபநிஷத்துப் பிரமாணங்களாலன்றி ஏனைய பிரமாணங்கட்கு விஷயமாகாதென்பது சுருக்கமாக வருமாறு:—

(1) சப்த ஸ்பரிச முதலிய குணங்கள் பிரஹ்மத்தின்கணின்மையின், அது கடபடம் போன்று பிரத்தியட்சப் பிரமாணத்திற்கு விஷயமன்றாம்; (2) குணங் குறி முதலியனவின்றிய ஆத்மாவிற்குக் காரிய லிங்கமின்மையின், அஃதநுமானப் பிரமாணத்திற்கும் விஷயமன்றாம்; (லிங்கம்-ஏது). (3) சாதிருசியமின்மையின், உவமானப் பிரமாணத்திற்கும் விஷயமன்றாம்; (4) ஜாதி-குணம்-கிரியை-சம்பந்தங்களின்மையின், சப்தப் பிரமாணத்திற்கும் விஷயமன்றாம்; (5) உபபாதக தர்ம மின்மையின், அர்த்தாபத்திப் பிரமாணத்திற்கும் விஷயமன்றாம்; (6) யதார்த்தபாவ வடிவமா யிருத்தலின், அநுபலத்திப் பிரமாணத்திற்கும் விஷயமன்றாம்.

பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களுள் வேதாந்த வாக்கியமாகிய சத்தப் பிரமாணத்திற் கன்றி மற்றைய வற்றிற்குப் பிரஹ்மத்தில் பிரவிர்த்தியில்லையென்பது சித்தாந்தமா மாகலின், பிரத்தியட்ச முதலிய பிரமாணங்கள் பிரஹ்மத்தை யறிதற்குச் சுதந்தரமாகப் பிரமாணமாவனவன்றாம்; ஆயினுமவை வேதாந்த வாக்கியத்திற்குப் பிரதிகூலமாகாவிடத்துப் பிரமாணமாம்; அவற்றுள், சில வருமாறு:—

(1) பிரத்தியட்சப் பிரமாணம்.

"சிலவிடத்துச் சப்தத்தாலும் அபரோட்ச (பிரத்தியட்ச) ஞானமேயுண்டாகின்றது; எங்ஙனம் நீ பத்தாமவனென்னும் வாக்கியத்தால் அவனுக்குத் தனது அபரோட்ச ஞானமேயுண்டாகின்றதோ அங்ஙனமே தத்துவமசி முதலிய வாக்கியங்களாலும் இவ்வதிகாரிக்கு ஆத்மாவின் அபரோட்ச ஞானமே யுண்டாகின்றது." என்று தத்துவாநு சந்தானம் இரண்டாவது பரிச்சேதத்திற் கூறுகின்றது. ஈண்டு நீ பத்தாமவனென்னும் வாக்கியமும் தத்துவமசி முதலிய வாக்கியங்களும் பிரத்தியட்சப் பிரமாணமாம்.



(2) அநுமானப் பிரமாணம்.

"சீவன் பிரஹ்மாபின்னம்; சேதனத் தன்மையால்; யாண்டு யாண்டுச் சேதனத்தன்மை யுண்டோ ஆண்டாண்டுப் பிரஹ்மா பேத முண்டு; பிரஹ்மம் போல" என்று விருத்திப்பிரபாகரம் இரண்டாவது பிரகாசத்திற் கூறுகின்றது.

(1) "சீவேசுவர பேதம் மித்தை,; அவித்தியா மாயாவடிவ உபாதிகளாற் கற்பிக்கப்பட்டிருத்தலின்; கடாகாச மடாகாசங்களின் பேதம்போல.

(2) சீவர்களின் பரஸ்பரபேதம் மித்தை; ஆபாச சகித அந்தக்கரண வடிவ வுபாதிகளாற் கற்பிக்கப்பட்டிருத்தலின்; நாநா கடாகாசங்களின் பேதம்போல.

(3) ஜடங்களின் பரஸ்பர பேதம் மித்தை; நாம ரூப வடிவ வுபாதிகளாற் கற்பிக்கப்பட்டிருத்தலின்; கயிற்றிற் கற்பிதமாயுள்ள சர்ப்பதண்ட முதலியவற்றின் பேதம்போல.

(4) ஜீவ ஜட பேதம் மித்தை; சாபாச அந்தக்கரண நிராபாச நாம ரூப வடிவ வுபாதிகளாற் கற்பிக்கப்பட்டிருத்தலின்; சொப்பனத்திலுள்ள சராசரங்களின் பேதம்போல.

(5) ஈசுர ஜடபேதம் மித்தை; சாபாச மாயை நாம ரூப வடிவ வுபாதிகளாற் கற்பிக்கப்பட்டிருத்தலின்; சாட்சி சொப்பனப் பிரபஞ்சங்களின் பேதம்போல.

(6) அநாத்மா மித்தை; திருசியமா யிருத்தலின்; இப்பி வெள்ளி போல.

(7) வியாவகாரிகப் பிரபஞ்சம் மித்தை; ஞானத்தால் நிவிர்த்தியாதலின்; கயிற்றரவு போல.

(8) பிரஹ்ம பின்னம் மித்தை; திருசியமா யிருத்தலின்; கானனீர் போல.

(9) சாக்கிரப் பிரபஞ்சம் மித்தை; அநாத்மாவா யிருத்தலின்; சொப்பனப் பிரபஞ்சம் போல" என்று நாநாசீவவாதக் கட்டளைச் சங்கை நிராகரணம் கூறுகின்றது.

(3) உவமானப் பிரமாணம்.

"கடாகாசம் ஜலாகாசம் மகாகாசம் மேகாகாசமென்னும் நான்காகாசங்களுள், ஜலாகாசத்திற்கும் மேகாகாசத்திற்கும் அபேத மில்லையாயினும் கடாகாசத்திற்கும் மகாகாசத்திற்கும் பரமார்த்தமாகப் பேதமின் றென்றாற் போன்று, கூடஸ்தன், சீவன், பிரஹ்மம், ஈசுரனென்னும் நான்கு சேதனங்

களுள், சீவனுக்கும் ஈசானுக்கும் அபேதமில்லையாயினும் அவற்றி னதிஷ்டானமாய கூடஸ்தனுக்கும் பிரஹ்மத்திற்கும் பரமார்த்தமாகப் பேத மின்றென்பதாம்" என்று மோட்சசாதன விளக்கம் கூறுகின்றது.

"இப்பிவெள்ளி, சொப்பனப் பொருள் முதலியவற்றில் மித்தியாத் தன்மையின் துணிவுகொண்டு, ஆகாசமுதலிய பிரபஞ்சத்தின் சொரூபத்தை யறிய விருப்பங்கொண்ட அதிகாரி இப்பிரபஞ்சம் இப்பி வெள்ளிபோல மித்தையாமென்னுங் குருவின் வசனத்தைக் கேட்டுத் தனியிடத்திருந்து, இப்பிரபஞ்சத்தின்கண் இப்பிவெள்ளி முதலியவற்றின் மித்தியாத் தன்மையாகிய சாதிருசியத்தை (ஒப்புமையை) யனுபவிக்கின்றான். அஃதாவது இவ்வாகாய முதலிய பிரபஞ்சம் இப்பிவெள்ளி முதலியவற்றைப்போல மித்தையேயா மென்னு மனுபவம் அவ்வதிகாரிக் குண்டாகின்றது." என்று தத்துவாநு சந்தானம் இரண்டாவது பரிச்சேதத்திற் கூறுகின்றது.

(4) சத்தப் பிரமாணம்.

"பொறிகளை யடக்கித் தன்னைப் புலப்பட வறிந்தா னாயின், உறுதுயிற் கனவு தன்னி னுற்றிடும் படைக ளெல்லாம், செறிதுயி னீங்கிற் பொய்யாந் திகழ்பவ னொருவன் றான்போல், நெறியுறு முபாதி நீங்கு நிறைந்ததோ ரறிவாய் நிற்பன்." (பாகவதம்)

"சீவ னென்னச் சிவனென்ன வேறிலை, சீவ னார்சிவ னாரை யறிகிலார், சீவ னார்சிவ னாரை யறிந்தபின், சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே", (திருமந்திரம்) என்றற் றொடக்கத்தன சப்தப் பிரமாணங்களாம்.

(5) அருத்தாப்பத்திப் பிரமாணம்.

"மகா வாக்கியங்கள் கூறும் ஜீவப் பிரஹ்மங்களின் அபேதம் யாதோ அது தோற்றப்படுகின்ற பேதத்தின் மித்தியாத் தன்மையின்றிப் பொருந்தாததாய் ஜீவப் பிரஹ்மங்களினது பேதத்தின் மித்தியாத் தன்மையைக் கற்பிக்கின்றது." என்பது விசாரசாகரக் குறிப்புரை.

"சுழுத்தியில் அறிவுண்டென்பதற்குச் சுழுத்தியினின் றெழுந்த காலத்தில் நானொன்று மறியாது சுகமாய்த் தூங்கினே னென்னும் நினைவு அனுபவ மின்றி யுண்டாகாதென்னு மருத்தாப் பத்திப் பிரமாணத்தால் சுழுத்தியில் ஆத்மா———உண்டென்றே சித்திக்கின்றது." என்று வேதாந்த பரிச்சேதங் கூறுகின்றது.

(6) அனுபலப்திப் பிரமாணம்.

"சாக்கிர சொப்பனங்களில் உபாதிகளிருத்தலால் ஜீவப்பிரஹ்மங்களின் பேதம் விளங்குகின்றது; சுழுத்தியிலவை யின்மையால் அவற்றின்



8. வாக்கியந் தனக்கேட் டாது வத்துவேன் றுரைத்த வேதம்
வாக்கிய விருத்தி யாலவ் வத்துவைக் காட்டிற் றன்றே
வாக்கியங் களிலே மான மாவதே தென்று யாகில்
வாக்கிய மிரண்டு மெய்யே மறைகள்போய் யாது கேளாய்.

9. தன்பதி யல்லாப் பேர்க டமையல்ல னல்ல னென்றாள்
அன்பனைக் கேட்ட நேர மவள்வெட்கி மோந மானாள்
என்பது போல நீக்கி யிதன்றிதன் றெனச்சே டித்த
பின்பரப் பிரமந் தன்னைப் பேசாமற் காட்டும் வேதம்.

நிர் விசேஷ சின்மாத்திர வடிவப் பிரஹ்மம் (வேத வாக்கியம் உலக வாக்கிய மென்னும் மிருவகை வாக்கியத்துள் யாதொரு) வாக்கியத்திற்கும் விஷயமாகாதென்று கூறிய வேதமானது தத்துவமசி முதலிய மகா வாக்கியங்களின் தத்துவம் முதலிய பதங்களின் இலட்சணா விருத்தியினாலே அந்தப் பிரஹ்மத்தைத் தெரிவித்ததல்லவா? (ஆதலால், பிரஹ்மம் மகா வாக்கியத்திற்கு விஷயமாம். இதனை நீ யாராய்ந் துணரக் கடவாய்)

சீ—வினா:—பிரஹ்மம் வாக்கியத்திற்கு விஷயமாகாது, வாக்கியத்திற்கு விஷயமாகு மென்னு மிருவகை வாக்கியத்துள், பிரமாணமாகக் கொள்ளத்தக்கது யாது? அதனைத் திருவாய்மலர்ந்தருளல் வேண்டும்.

கு—விடை:—சுருதிகள் அசத்தியங் கூறாவாகலின், அவ்விருவகை வாக்கியமு முண்மையேயாம். அதுபற்றி யான் திருஷ்டாந்த வாயிலாகக் கூறுவதைக் கவனமாய்க் கேட்கக் கடவாய். 8

சீ—வினா.—கவனமாய்க் கேட்கிறேன்; கூறியருளல் வேண்டும்.

கு—விடை:—(மணவினை புரிந்து தனது நாயகனோடு மருவின் பொருட்டுத் தன் தாய் வீட்டிற்கு வந்த ஒருத்தியை நோக்கி மற்றொருத்தி இங்

பேதம் விளங்குகின்றதின்று. (ஆதலால், சீவப்பிரஹ்மங்களின் பாரமார்த்திக அபேதம் விளங்குகின்றது.) என்று மோட்சசாதனவிளக்கங் கூறுகின்றது.

இவ்வாறுள்ள பிரமாணங்கள் விருத்திப் பிரபாகரம், தத்துவானுசந்தானம், வேதாந்த பரிபாஷை முதலிய வேதாந்த சாஸ்திரங்களில் விரிவாயெழுதப்பட்டிருக்கின்றன. அவற்றை யாண்டுக் காண்க.

† குண விசேஷம்=ஜாதி, குணம், கிரியை, சம்பந்தமென்பனவாம். இவை சப்தப் பிரவிர்த்திக்கு நிமித்தங்களாம்; சப்தப்பிரவிர்த்திக்கு நிமித்தமாய அவை பிரஹ்மத்தின்க ணின்மையின், அதன்கண் சப்தப் பிரவிர்த்தியின்றென்ப திங்குணர்தற் பாலதாம்.

10. முந்திய சங்கைதீர மொழிந்ததை யறிந்து கொள்வாய்
பிந்திய சங்கை தீரப் பேசுமுத் தரநீ கேளாய்
இந்தியங் களுக்கி ராச னிதயமா மதினெண் ணங்கள்
புந்தியு மனமு மென்றே புறத்தகத் துலாவி யாடும்.

துள்ளாருள் உன் கணவன் இவனு? இவனு? என்று ஒவ்வொருவராகச் சுட்டி வினவ, அதற்கு அவள்) தனது கணவனல்லாதவர்களை இவனல்ல இவனல்லவென்று தன்னை வினவியவளுக்கு விடை கூறிவந்தாள்; அவ்வாறு வினவி வந்தவள் தனது கணவனைச் சுட்டி வினவியபோது அம்மணமகள் நாணமடைந்து மௌனங்கொண்டாள் (இவனெனது கணவனெனக் கூறுமலே கூறினுள்) என்னும் நியாயம்போல, பிரஹ்மத்திற்கு அன்னியமா யிருப்பன வெல்லாம் ஜடபதார்த்தங்களாகலின் அவற்றை வேதம் † இது பிரஹ்ம மல்ல இது பிரஹ்மமல்லவென்று ஒவ்வொன்றாக நிஷேதித்துப் பின்னர் அல்லவென்று நிஷேதித்தற்கிடம் பெறுமலெஞ்சி நின்ற பிரஹ்மத்தை இது பிரஹ்மமெனக் கூறுமற் கூறிற்று. 9.

இதனுல், பிரஹ்மம் ஆகமப் பிரமாணத்திற் கெங்ஙனம் விஷயமா மென்றுநீ சங்கித்த முதற் சந்தேகம் நீங்குமாறு யான்கூறிய விடையை யறிந்துகொள்ளக் கடவாயாக.

† வேதம் இது பிரஹ்மமல்ல இது பிரஹ்மமல்ல என்றிருமுறை மாயாப் பிரபஞ்சத்தை நிஷேதித்தமைக்குக்காரணம் பிரஹ்மம் கடபடாதிகளாகிய பாவ பதார்த்தமுமல்ல, அவற்றினின்மையாகிய அபாவ பதார்த்தமுமல்ல வென்பதுணர்த்துதற் பொருட்டாம். இங்ஙனம் தெரிவித்தல் அதத்வியா விருத்தி யிலக்கணமாம். தேகாதி யநாத்ம வர்க்கங்களை யுக்தியால் நேதித்து நின்ற ஆத்மாவை யறிவிப்பதே அதத்வியா விருத்தி லட்சணமாம்" என்று வேதாந்த பரிச்சேதம் கூறுகின்றது.

"பஞ்சபூ தங்க ளன்று பகருஞா னேந்தி யங்கள், அஞ்சுமன் றுரைத்த கன்மேந் தியங்களோ ரைந்து மன்றும், எஞ்சலில் சத்த மாதி வாக்காதி யிவைகளன்று, செஞ்சவே மனுதி யன்று திகழுமவ் வியத்த மன்றே" உழிதரு பிராண னன்று கருத்தனன் றுண்போ னன்று, தழைபிர கிருதி யன்று புருடனு மன்று சால, விழைவுறு மாயை யன்று விளங்கிய வான்மாயாரும், தொழுதரு மறைக ளேத்துஞ் சுத்தசை தன்ய மாமால்" "இதுவன்று நின்ற திதுவன்று நின்ற தெனவோத லன்றி மறையும், இதுவென் றுரைக்க முடியாது நின்ற வெரிதும்மு வெய்யமழுவோய்" என்று கூர்மபுராணம் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.



11. உன்முகம் போற்கண் ணுடிக் குள்ளொரு முகங்கண் டாற்போல்
சின்மய வடிவின் சாயை சித்துப்போற் புத்தி தோன்றும்
நின்மனே விருத்தி யந்த நிழல்வழி யாயு லாவும்
தன்மநன் மகனே யித்தைத் தானன்றே ஞான மென்பார்.

இரண்டாஞ் சங்கைக் குத்தரங் கூறல்.

சீ—வினு:—பிரஹ்மம் மனத்திற்குவிஷயமாம்; மனத்திற்கு விஷயம் ஆகாதென்னுஞ் சந்தேகத்தையு மொழித்தருளல் வேண்டும்.

கு—விடை:—இவ்விரண்டாஞ் சங்கையு மொழியும்படி யான் கூறும் விடையைக் கேட்பாயாக.

சீ—வினு:—கூறல் வேண்டும்.

கு—விடை:—தர்மசொருபியாய் விளங்கும் சிறந்த புத்திரனே! (மன்னவர்க் கமைச்சர்போல அந்தக்காணங் கருதியதை யிந்திரியங்க ளியற்றுதலின்) சுரோத்திராதி சர்வேந்திரியங்கட்கும் அரசன் அந்தக்காணமாம்; அவ்வந்தக்காணத்தின் விருத்திகள் ‡ புத்தியும் ¶ மனமுமெனத் தேகத்திற்குப் புறத்திலும் அகத்திலுஞ் சஞ்சரித்துலாவும். 10

உனது முகம்போல (உன் முகத்திற் கெதிரேயுள்ள) கண்ணுடியில் மற்றொரு முகம் பிரதிபலித்தாற்போல், சித்ருபமான கூடஸ்தனுடைய சாயையும் மற்றொரு சேதனம் போலப் புத்தி வடிவ அந்தக்காணத்திற் பிரதிபிம்பியா நிற்கும்;

‡ ஜாக்கிராவஸ்தையில் நகநுனிமுதல் சிகைவரையிலும் சரீரத்தில் வியாபித்துக் கர்த்தாவடிவமா யிருப்பது புத்தியாம்;

தேகத்தில் யானென்பதையும் வீடு முதலியவற்றில் எனதென்பதையும் செய்துகொண்டு இந்திரிய வாயிலாக வெளியே செல்வதாய்க் காணவடிவமா யிருப்பது மனமாம்.

அந்தக்காணத்தின் பரிணுமமாகிய புத்தி மனமென்னும் விருத்தி யிரண்டனுள், புத்தி ஞானத்திற் காசிரய கர்த்தாவாம்; மனம் அதற்குக் காணமாம்.

¶ "அந்தக்காணத்தி னவஸ்தையை மனமென்பர்; அது பிரத்தியட்ச ஞானத்திற் காசிரயமா யிருத்தலின், கர்த்தாவாம்; யாது கர்த்தாவாமோ அது காணமாகாது; ஆகலின், மனம் இந்திரியமன்று"-என்று விருத்திப் பிரபாகரம் முதற்பிரகாசத்திற் கூறுகின்றது. இதனை விரிவாய் வேதாந்த பரிபாஷை-பிரத்தியட்ச பரிச்சேதத்திற் காண்க.

12. உருக்கிய தராநீர் நாநா வுருவங்க ளானுற் போல
விருத்திகள் கடப டாதி விடயமாய்ப் பரிண மிக்கும்
அருப்பல விடய மெல்லா மாபாசன் ரேற்று விக்கும் [ணுதே.
இருட்டினில் விளக்குங் கண்ணு மில்லாமற் பொருள்கா

உனது $ மனே விருத்தியானது அச்சிற்சர்யையை அனுசரித்ததாய் விஷய தேசங்களிற் சென்று சஞ்சரியா நிற்கும். இவ்விருத்தியே ஞான மென்று சொல்லப்படும். 11

திருசிய பதார்த்தங்களில் † விருத்தி வியாப்தி-பலவியாப்தியென்னு
மிரண்டு முண்டேனல்,

மூசையிலிட் டுலையில்வைத் துருக்கிய ‡ தராநீரானது § அச்சுக் கருவிகளில் வார்த்தபோது அவ்வச்சுக் கருவிகளுக்குச் சமானமாய்ப் பல வுருவங்களானுற் போல, தேக மத்தியினின்றும் நேத்திராதி யிந்திரியங்களின் வாயிலாக வெளிப்படு மந்தக்காண விருத்திகளும் கடபடாதி விஷயங்களின் சமானகாரமாய்ப் பரிணமத்தை யடைகின்றன. (அஃதாவது அந்தக்காண விருத்திகள் தமது விஷயங்களின் சமானகாரமாய்ப் பரிணமத்தை யடைந்து அவற்றி னவாணத்தைக் கெடுக்கின்றன.) அளவிடற் கருமையாய்ச் சுகதுக்காதி வடிவப்பயனைத் தருவதற் கேதுவாயுள்ள அக் கட படாதி விஷயங்களை யெல்லாம் ஆபாசன் பிரகாசிக்கச் செய்கின்றான்.

சீ—வின:—விருத்தி விஷயத்தின் ஆவாணத்தைக்கெடுக்கின்றது; ஆபாசன் அதனைப் பிரகாசிக்கச் செய்கின்று னென்பதைத் திருஷ்டாந்த வாயிலாக விளக்கிக் காட்டுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு—வி:—அன்பனே! எங்ஙனம் ¶ அந்தகாரத்திலுள்ள கடாதி பதார்த்தங்கள் விளக்கும் நேத்திரேந்திரியமு மின்றிக் காணப்படாவோ, அங்ஙனமே திருசிய பதார்த்தங்களும் விருத்தியும் ஆபாசனு மின்றிக் காணப்படுவதில்லையாம். 12

$ "(1) தேகத்தின் மத்தியிலுள்ள அந்தக்கரணத்தால் வளைபட்ட சேதனம் பிரமாதாவாம்; (2) அவ்வந்தக்கரணமே நேத்திராதி யிந்திரியங்களின் வாயிலாக வெளிப்பட்டு எது வரையிலும் கடாதி விஷயங்களிருக்கின்றனவோ அது வரையிலும் நீண்ட பரிணமத்தை யடைகின்றது; பின்னர் விஷயங்களாகிய கடாதிகளோடு கூடிக் கடாதிகளின் னகார மெப்படியோ அப்படியே அந்தக்காணத்தி னகாரமுண்டாகின்றது. தடாகத்திலுள்ள நீர் மடைவழியாய் வெளிப்பட்டு நீண்ட வாய்க்காலின் னகார (வடிவ) மடைந்து வயலிற் செல்லுகின்றது; வயலிற் பாய்ந்து வயலாகாரத்தை யடைகின்றது.



அதுபோல, அந்தக்காணமும் இந்திரியமாகிய துவாரத்தின் வாயிலாக வெளிப்பட்டுச் சென்று விஷய ரூபமான வயலை யடைகின்றது. ஆண்டுச் சரீரமுதல் கடாதி விஷயபரியந்தமுள்ள அந்தக்கரணத்தின் வாய்க்கால் போன்ற நீண்ட பரிணம மெதுவோ அது விருத்திஞான மெனப்படும். அவ்விருத்தியால் வளைபட்ட சேதனம் பிரமாணசேதன மெனப்படும்; (3) விருத்திஞான வடிவ அந்தக்கரணத்தின் பரிணமம் பிரமாண மெனப்படும்; வயலிற் பாய்ந்த நீர் வயலாகாரமாவதுபோலக் கடாதி விஷயங்களிற் சென்ற விருத்தி கடாதிகளின் சமானகாரத்தை யடைகின்றது. இச்சமானகாரத்தால் வளைபட்ட சேதனம் பிரமா சேதன மெனப்படும்; (4) ஞானத்திற்கு விஷயமான கடாதிகளால் வளைபட்ட சேதனம் விஷய சேதனம் அல்லது பிரமேய சேதனம் எனப்படும்" என்று விசார சாகரங் கூறுவதறிக.

† விருத்திவியாப்தி=விருத்திக்கு விஷயமாதல்; பலவியாப்தி - சிதாபாச(சீவ)னுக்கு விஷயமாதல்.

"தத்துவானுசந்தான முதலிய நூல்களில் விளக்குவதாகிய (ஆவரணத்தை நிவிர்த்திப்பதாகிய,) மாயை அந்தக்காணங்களின் பரிணமம் (திரிபு) விருத்தி யென்று கூறப்பட்டிருக்கின்றது; விருத்திப்பிரபாகரத்தில் இருக்கிறதென்னும் வியவகாரத்திற் கேதுவான அவித்தை அந்தக்காணங்களின் பரிணமம் விருத்தியென்று கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால், மாயை அந்தக்காணங்களின் ஞான வடிவ பரிணமமே விருத்தி யென்னுஞ் சொல்லிற்குப் பொருளாம்; பரிணமமாத்திரமன்று." என்று பஞ்சதசிக் குறிப்புரையி லெழுதப்பட்டிருக்கின்றது.

‡ தரா=பொன் முதலிய லோகங்களு ளொன்று.

§ இந்திரியத்திற்கும் கடத்திற்கும் சையோக முண்டாம்போது இந்திரிய வாயிலாக அந்தக்கரணத்தின் விருத்தி வெளியிற் சென்று, கடத்தின் சமானகாரத்தை யடைகின்றது. இரும்பினுலாவது மண்ணினுலாவது செய்த கருவியில் உருக்கிவிட்ட தாம்பிரம் அக்கருவியின் சமானகாரத்தை யடைவதுபோல, அந்தக்காண விருத்தியும் கடத்தின் சமானகார மாகின்றது. அந்த விருத்தி யாபாசமின்றி யுண்டாகின்றதில்லை; ஆபாச சகிதமாகவே யுண்டாகின்றது; விருத்திபாகமோ கடத்தி னவரணத்தை (மறைப்பை)ப் போக்குகின்றது; ஆபாசபாகம் கடத்தைப் பிரகாசிப்பிக்கின்றதென்பதிங் குணர்தற்பாலதாம். இதன் விரிவை விசாரசாகாம் நான்காந் தரங்கத்திற் காண்க.

¶ இருளால் மறைக்கப்பட்டுள்ள கடம் பட முதலிய பொருள்கள் அவ்விருட்டைப் போக்கும் விளக்கும் தம்மை அறியும் நேத்திரேந்திரியமுமின்றி விளங்காமை போல, அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டுள்ள திருசிய பதார்த்தங்களும் அவ்வஞ்ஞானத்தைப் போக்கும் விருத்தியும் தம்மை

13. எரிகின்ற விளக்காற் கண்ணு லிருட்பொருள் காணல் வேண்டும்
தெரிகின்ற பரிதி காணச் சென்றிடிற் கண்ணே போதும்
விரிகின்ற சகத்தைக் காண விருத்தியும் பலமும் வேண்டும்
புரிகின்ற விருத்தி யொன்றே போதுமெய்ப் பொருள்காண்
போர்க்கே.

திருக் பதார்த்தத்தில் விருத்தி வியாப்தி யன்றிப்
பல வியாப்தி யின்றெனல்.

§ அந்தகாரத்திலுள்ள கடாதி விஷயங்கள் விளக்கினாலும் நேத்திரேந்திரியத்தாலும் அறியப்படுகின்றன; அவ்விரண்டனுள், ஒன்று குறைந்தால் அவை யறியப்படுவதில்லையாம்; ஆனால், சூரியனை யறிய வேண்டுமிடத்தோ கண்ணொன்றே போதும்; விளக்கு வேண்டியதில்லையாம்; அதுபோல, நாமரூப வடிவமாய் விரிந்துள்ள உலகத்தை யறியுமிடத்து விருத்தியும் பலமும் (ஆபாசனும்) வேண்டும்; அவற்றுளொன்று குறைந்தால் அது விஷயமாகாது; ஆனால், ஆத்மாவை யறியுமிடத்தோ பிரஹ்மாகார வடிவ விருத்தி யொன்றே போதும்; ஆபாசன்வேண்டிய தில்லையாம். 13

யறியும் ஆபாசனு மின்றி விளங்குவதில்லையா மென்பதிங் குணர்தற் பாலதாம்.

"இருளில் ஒருசட்டியால் மண்ணால் அல்லது இரும்பினாற் செய்த ஒரு வஸ்து மூடப்பட்டிருக்கின்றது; அங்குத் தடியால் அந்த மட்பாத்திரத்தை யுடைத்தாலும் பின் தீப மில்லாமலுள்ளே யிருக்கும் பொருள் பிரகாசிக்கின்ற தில்லை; ஆனால், தீபத்தினால் அது பிரகாசிக்கின்றது. அதுபோல, அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட கடத்தின் ஆவரணத்தை விருத்தி நாசஞ் செய்தாலும் கடம் பிரகாசிக்கின்ற தில்லை; ஏனெனின், கடமும் சொரூபமாக ஜடமாம்; விருத்தியும் ஜடமாம்; அதற்காவரணத்தைக் கெடுத்தல்மாத்திரம் பிரயோஜனமாம்; அதனாற் பிரகாச முண்டாகின்றதில்லை; ஆதலால், கடத்தைப் பிரகாசிப்பிப்பது ஆபாசனும்" என்று விசாரசாகரம் நான்காந் தரங்கத்திற் கூறுகின்றது.

§ இருட்டிலுள்ள கடத்தை யறிவதற்கு விளக்குங் கண்ணும் வேண்டும்; சூரியனை யறிவதற்குக் கண்ணொன்றே போதும்; அதுபோலக் கடாதி அப்பிரகாச விஷயங்களை யறிவதற்கு அவற்றி னஞ்ஞானத்தைப் போக்கு விருத்தியும் அவற்றையறியச் சிதாபாசனும் (சீவனும்) வேண்டும்; சொப்பிரகாசமான பிரஹ்மத்தை யறிவதற்கு அதன் அஞ்ஞானத்தை (மறைப்பை) போக்க (அகம் பிரஹ்மாஸ்மி யென்னும் அகண்டாகார) விருத்தியொன்றே போதும்; (சிதாபாசன் வேண்டியதில்லை). சிதாபாசன் கடாதி



வடிவ விருத்திகளி லிருப்பதுபோலப் பிரஹ்மாகார விருத்தியிலு மிருந்தாலும், மத்தியான வெயிலிலுள்ள தீபப்பிரபை தனது விளக்க மின்றி யிருப்பதுபோலத் தனது விளக்கமின்றிப் பிரஹ்மத்தோடேகமா யிருப்பதுபோல விருக்கின்றா னென்பதிங்குக் கவனித்துணர் தற்பாலதாம். இதனை விரிவாய்ப் பஞ்சதசி திருப்திதீப வுரையிற் காண்க.

"'எந்தப் பிரஹ்மத்தை மனதினா லுலக மறிகின்றதில்லையோ' என்றற்றொடக்கத்துச் சுருதிகளில் எங்ஙனம் மானச ஞானத்திற்கு (பிரஹ்மம்) விஷயமாதல் நிஷேதிக்கப்பட் டிருக்கின்றதோ அங்ஙனமே 'வாக்குகள் மனதோடு அடையாது எதனினின்றும் நிவிர்த்தியாகின்றனவோ' என்றற்றொடக்கத்துச் சுருதிகளில் (பிரஹ்மம்) சப்தத்திற்கு விஷயமாதலும் நிஷேதிக்கப்பட் டிருக்கின்றது. ஆதலால், (தத்துவமசி முதலிய) மகா வாக்கியங்களைப் பிரஹ்மப் பிரமைக்கு (பிரஹ்ம ஞானத்திற்கு)க் காரணமென்று கூறுதல் விருத்தமாம்; அங்ஙனமாயினும், சப்தம் பிரஹ்ம ஞானத்திற்குக் காரணமாகாதென்னும் பொருளில் சுருதிக்குத்தாற்பரியமுளதாயின், 'அந்தவுபநிஷத்தினாலறியப்படும்புருஷனையான் கேட்கின்றேன்' என்னுஞ்சுருதியினால் பிரஹ்மத்திற்குஉபநிஷத்தினாலறியப்படுந்தன்மைவடிவஔபநிஷதத்தன்மை கூறுதல் அசங்கதமாம்; ஆதலால், சத்தி விருத்தியால் பிரஹ்மத்தின் ஞானம் சப்தத்தினா லுண்டாகின்ற தில்லை; லட்சணா விருத்தியினால் பிரஹ்ம கோசர ஞான முண்டாகின்றது. ஆதலால், சத்தி விருத்தியினால் சப்தம் பிரஹ்ம ஞானத்திற்குக் காரணமாதலின் நிஷேதமும், லட்சணாவிருத்தியினால் சப்தம் பிரஹ்ம ஞானத்திற்குக் காரணமாதலு முண்டு. ஆதலால், லட்சணா விருத்தி ஜன்னிய ஞானத்தின் விஷயமா யிருத்தலின், பிரஹ்மத்திற்கு ஔபநிஷதத்தன்மை சம்பவிக்கின்றது. லட்சணாவிருத்தி ஜன்னிய ஞானத்திலும் சிதாபாசவடிவ பலத்தின் விஷயம் பிரஹ்மமன்று; ஆனால், ஆவரணபங்கவடிவ விருத்திமாத்திரத்தின் விஷயத்தன்மை பிரஹ்மத்திலுளது. எங்ஙனம் சப்த ஜன்னிய ஞானத்திற்கு விஷயமாந் தன்மை முற்றும் நிஷேதிக்கப்படுகிறதில்லையோ, அங்ஙனமே மானச ஞானத்திற்கு விஷயமாந் தன்மையும் முற்றும் நிஷேதிக்கப் படுகின்ற தில்லை; ஆனால், சமதமாதி சம்ஸ்காரமின்றிய விக்ஷிப்த மனத்திற்குப் பிரஹ்ம ஞானத்தில் ஏதுவாதலில்லை; மானச ஞானத்தில் எந்தச் சிதாபாச அம்சமுளதோ அதற்கு விஷயமாந்தன்மை யில்லை. ஆதலால், பாஷியகாரர் கிரமப்படி பிரஹ்மப் பிரமைக்கு முற்கூறிய மனம் சககாரியும், சப்தம் காரணமுமாம். இவ்வாற்றால் மகா வாக்கியங்கள் பிரஹ்மப் பிரமைக்குக் காரணமாமென்று கூறுதலில் யாதும் விரோதமில்லை" என்று விருத்திரத்நாவலி 5-வது ரத்நத்திற் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

14. விருத்தியும் பலமுங் கூடும் விகாரமே மனமென் பார்கள்
கருத்தெழு விருத்தி வேண்டுங் கணக்கினான் மனத்திற் கெட்டும்
வருத்திய பலமா மிந்த மனத்திற்கெட் டாது கண்டாய்
அருத்தமிப் படியென் றைய மகன்றுநீ தெளிந்தி டாயே.

15. வஞ்சகமில் பரமார்த்த குருவே சொன்ன வழிகளறிந் தேனினி யோர் வசனங் கேளீர், சஞ்சலமற் றகண்டபூ ரணமாய்ச் சித்தந் ததாகார மாவதன்றோ சமாதி யோகம், உஞ்சலையொத் தலைவது தன் சுபாவமாகி யொருகணத்திற் பலவுலகா யுதிக்கு மிந்த,நெஞ் சகம்வத் துவிலசையா நிவாத தீப நிலையடைவ தெப்படியோ நீர் சொல் வீரே.

---

அந்தக்கரண விருத்தியும் ஆபாசனுஞ் சேரும் பரிணாமமே மன மென்று சொல்லப்படும். ¶ பிரஹ்மமானது சற்குரு சற்சாஸ்திரக் கிரமத்தை விரும்பும் வகையால் அந்தக்கரணத்தினின் றெழாநிற்கும் பிரஹ்மாகார விருத்திக்கு விஷயமாம்; ஆபாசனோடு கூடிய விம்மனத்திற்கு விஷய மாகாது. பிரஹ்மம் மனத்திற்கு விஷயமாம்; மனத்திற்கு விஷயமாகாதென் றுயான் கூறியதற் கர்த்த மிங்ஙனமாமென் றதனை நீ துணிவாக வறிந்து ஐய மகன்று தெளியக் கடவாய். 14

சீடன் மனோலயஞ் செய்யுமாறு வினவுதல்.

சீ—வினா :—சாதன மல்லாததைச் சாதனமென் றுரைக்கும் வஞ்சகக் குணமின்றிய பரமார்த்த குருவே! பிரஹ்மம் இந்த வகையால் வாக்கிற்கும் மனத்திற்கும் விஷயமாம்; இந்த வகையால் ஆகாதென்று தாங்கள் திருவாய் மலர்ந்தருளிய காரணங்களைச் சந்தேக விபரீத மின்றி யறிந்தனன். இப்போதடியேன் கூறும்

¶ பிரஹ்மம் ஜாதி, குணம், கிரியை, பெயர், சம்பந்த முதலிய சகல தருமங்களுமின்றியதா யிருத்தலின், மனத்திற்கும் வாக்கிற்கும் விஷய மாகாததாம்; பிரஹ்மத்தைச் சாஸ்திரம் இலட்சணையினாலே (ஆகுபெய ராலே) கூறுகின்றது; மகாத்மாக்களோ விருத்திவியாப்தியினா லறிகின் றனர். சைதன்னியத்தின் ஆவரணத்தின் நிவிர்த்தியே யிங்கு விருத்திக்கு விஷயமாந்தன்மை (விருத்திவியாப்தி) யாம் என்பதிங்குணர்தல்வேண்டும்.

யானெனதென்னும் சீவபோதத்தோடு கூடிய மனத்திற்குப் பிரஹ் மம் விஷயமாகாது; அப்போதத்தோடு கூடாத மனத்திற்கு விஷயமா மென்பதாம்.



16. கருதுமனோ குணமூன்று மூன்றி லொன்று கதித்தெழுந்தான் மற றிரண்டுங் கரந்துநிற்கும்,தருமமிகுஞ் சத்துவமே லானபோது சன் மார்க்க மானதெய்வ சம்பத் துண்டாம், மருவுரசோ குணமாகி லுலக தேக வாதனையாஞ் சாத்திரவா தனையு மாகும்,அருமகனே தமோகுணமே லான போதி லசுரசம்பத் துண்டாகு மறிந்து கொள்ளே.

---

வார்த்தையைத் தயவு செய்து கேட்டருளல் வேண்டும். சித்த மானது சப்தாதி விஷயங்களி லிந்திரிய வாயிலாகச் செல்லும் சலன மற்று அகண்டாகார விருத்தி யுடையதாகிப் பிரஹ்மாகார மாவ தல்லவா ¶ சமாதி யோக மென்று சொல்லப்படுவது? அவ்வா றாகாது ஊசலைப்போ லலையா நிற்பதே தன தியற்கையாகி யொரு க்ஷணப்பொழுதில் நானா வுலகாகத் தோன்றுகின்ற எனது இச் சித்தமானது நிர்விசேஷ சின்மாத்திர வடிவப் பிரஹ்மத்தில் சலன மின்றி நிவாத (காற்றின்றிய) தீபத்தின் ஸ்திதியை யடைவ தெவ்வாறோ? அதனைத் தேவரீர் கூறி யருளல் வேண்டும். 15

சற்குரு மூர்த்தி மனத்தின் குணபேதங்களையும் அவற்றலாம் பயனையும் கூறல்.

கு—விடை :—புத்திர சிகாமணியே! § சப்தாதி விஷயங்களைக் கருதா நிற்கும் மனத்தின் குணங்கள் சத்துவம், இராசசு, தமசென மூவகையாம்; அம்மூன்று குணங்களுள், ஒரு குணம் அதிகரித் தெழுமாயின், ஏனைய விரு

¶ தியானிப்பவன் தியான மென்னு மிரண்டையுங் கிரமமாக விடுவத னால் தியானிக்கப்படும் வஸ்து ஒன்றனையே விஷயஞ் செய்யும் காற்றில்லாத தீபம்போன்ற சித்தம் சமாதி யோகமாம்; அல்லது, எழும்பிய சம்ஸ்காரத் தின் (உலக வெண்ணத்தின்) நீக்கத்தையும் ஒடுங்கிய சம்ஸ்காரத்தின் (பிரஹ்மசிந்தனையின்) வெளிப்படுதலையும் முன்னிட்ட சித்தத்தி னேகாக் கிரத்தன்மை வடிவ பரிணாமம் சமாதி யோகமாம்.

§ முக்கூறுடைய நெரிஞ்சி முள்ளி னொருகூறு மேற்பட்டிருக்கும்போது மற்றை யிருகூறும் கீழ்ப்பட்டிருப்பது போல, மனத்தின் முக்குணங்களில் ஒரு குணம் மேற்பட்டிருக்கும்போது மற்றை யிரு குணமுங் கீழ்ப்பட்டிருக்கு மென்க. "வாழுஞ் சத்துவ மற்றைய விரண்டையு மறைத்துத், தாழு மற் றைய விரண்டுமத் தமோகுணந் தழைப்பின், வீழுஞ் சத்துவ தமங்களவ் விராசதம் விளைவி, னூழின் மற்றிவை யிரண்டுந்தாழ்ந் தொன்றுமிக் குள தாம்." என்று பகவத்கீதை கூறுகின்றது.

துணமும் கீழ்ப்பட்டிருக்தும். சத்துவ துணம் மேலிட்டபோது ‡ தெய்வ சம்பத்துச் சித்திக்தும்; இரசோ துணம் மேலிட்டபோது $ லோக வாசனை, தேக வாசனை, சாஸ்திர வாசனை யென்னு மூவகை வாசனையும் சித்திக்தும்; தமோ துணம் மேலிட்டபோது † அசுர சம்பத்துச் சித்திக்தும். இவற்றை நீ கவனமா யறிந்துகொள்ளக் கடவாய். 16

‡ தெய்வ சம்பத்தாவது (1) விவேகம் (நித்தியா நித்திய வஸ்து விசாரம்), (2) சமம் (மனவடக்கம்), (3) தமம் (இந்திரிய வடக்கம்), (4) உபரதி (விட்டவிஷயத்தில் விருப்ப மின்மை), (5) திதிட்சை (சிதோஷ்ண முதலிய துவந்துவங்களைப் பொறுத்துக்கொள்ளல்), (6) சிரத்தை (சற்குரு-சற்சாஸ்திர வசனங்களில் திட விசுவாசங் கொள்ளல்), (7) சமாதானம் (சத்ரூபப் பிரஹ்மத்தில் சித்தம் ஒருமுகமாக விருத்தல்), (8) முமுட்சுத்துவம் (மோட்ச விருப்பம்), (9) தவம் (தனது தருமத்திலிருத்தல்), (10) சத்தியம் (சமதரிசனம்), (11) தயை (பிறர் துக்கத்தை நீக்க விருப்புதல்), (12) ஸ்மிருதி (முன் பின் விசாரித்தல்), (13) துஷ்டி (கிடைத்தது கொண்டு மகிழ்தல்), (14) தியாகம் (பரோபகாரமாகத் திரவியத்தைச் செலவுசெய்தல்), (15) சுவநிர்விருத்தி (ஆன்மாவின்கண் பிரியம்), (16) மானமின்மை (தன்குணத்தைப் புகழாமை), (17) இடம்ப மின்மை (தனது தர்மத்தை வெளியிடாமை), (18) அஹிம்சை (பிறர்க்குத் துன்பஞ் செய்யாமை), (19) க்ஷமை (செய் காரியங்களில் பொறுமை), (20) ஆர்ஜவம் (நேர்மையான நடை) என்பனவாம். இவற்றின் விரிவைப் பகவத்கீதை 13-வ தத்தியாயத்திற் காண்க.

$ லோகவாசனையாவது என்னை யுலகம் நிந்தித்தல் கூடாது; யாவரும் என்னைத் துதித்தல் வேண்டுமென்னும் ஆக்கிரகத்தின் திட சம்ஸ்காரமாம்.

தேக வாசனையாவது ஸ்தூல சூட்சும தேகங்களின் ரோகாதி ரூப அல்லது பாவ ரூப மலங்களை ஔஷதாதிகளாலாவது அல்லது தீர்த்த யாத்திரையினாலாவது முற்றும் நீக்குவேன்; மேலும், அவற்றின்கண் புஷ்டி அழகு முதலிய வடிவ அல்லது புண்ணிய வடிவ குணத்தைச் சம்பாதிப்பே னென்னும் ஆக்கிரகத்தின் திட சம்ஸ்காரமாம்.

சாஸ்திர வாசனையாவது சகல சாஸ்திரங்களின் பாடத்தையாவது அர்த்தத்தையாவது அல்லது அவை கூறிய ஆசாரணத்தை (ஒழுக்கத்தை) யாவது யான் மேற்கொள்வேனென்னும் ஆக்கிரகத்தின் திட சம்ஸ்காரமாம். இம்மூன்றும் மலின (அசுத்த) வாசனையாம்.

திடபாவனையோடு முன் பின் ஆராயாது விஷயங்களைக் கொள்வது வாசனையாம்; அல்லது, திடபாவனையால் முன்பின்னொன்றையும் வீசாரியாமலுண்டாகும் குரோதாதி விர்த்திகளுக்கேதுவாய சித்தத்தின் சூட்சுமாவஸ்தையாகிய சம்ஸ்காரம் வாசனையாம். சுத்தவாசனை - மைத்திரி - கருணை - முதிதை - உபேட்சை - தியான முதலியவற்றா லுண்டாவதாம். இவ்விரண்டனுள் முன்னது சன்மம் பெருகுதற்குக் காரணமாம்; பின்னது அது சுருங்குதற்குக் காரணமாம். ஜயந்திரிபற்ற சீவப்பிரஹ்ம ஐக்கிய ஞான முடையவாது சித்தத்தின்கண் அவர்தம் உடல் வாழ்க்கையின்பொருட்டுமாத்திர முபயோகமாவதாய், இடம்பம் கருவ முதலிய அசுர சம்பந்தத்தை யுண்டாக்காததாய், ஜன்மாந்தரத்திற் கேதுவாகாததாயுள்ள வாசனை சுத்த வாசனையாம்.



17. மனதுசத் துவசோருப மற்றிரண்டும் வந்துகலந் தனவவற்றை
மாற்றி ஞற்போம், தனதுசன்மார்க் கத்தைவிடா திருந்த போது
தமோகுணமும் ரசோகுணமுஞ் சமிக்கும் பின்னைக், கனபரிஞ
மஞ்சலனம் போம்போ னக்காற் களங்கமற்று நின்றவா காசம்
போலும், நினதுளமப் படியாமப் பிரமத் தோன்றுய் நிருவிகற்ப
சமாதியிலே நிற்குந் தானே.

மனோலயமுண்டாம் வகையினைக் கூறல்.

("சத்துவ துணத்திற் றேன்றுந் தயங்குமுட் கரண நர்ன்தும்" என்றவாறு) மனது சத்துவதுணத்தின் காரியமா யிருத்தலின், பொன்னினின்று முண்டாகிய கடகம் பொன் சொருபமாகவே யிருப்பதுபோல அதனது சொருபம்

இவ்வாசனைகளின் விரிவைச் சீவன்முத்திப் பிரகரணத்திற் காண்க.

† அசுர சம்பத்தாவது (1) யாக முதலிய வியாபாரம், (2) மதம், (3) போராசை, (4) கர்வம், (5) பொருள் முதலியவற்றை விரும்பிக் கடவுளைப் பிரார்த்தித்தல், (6) நான்வேறு கடவுள்வேறு என்னும் பேதபுத்தி, (7) விஷயானுபவம், (8) மதத்தால் போர் முதலியவற்றைச் செய்யத் தொடங்கல், (9) புகழை விரும்புதல். (10) பிறரைப் பரிகசித்தல், (11) தன்பிரபாவத்தைப் பிறரறியச்செய்தல், (12) பொருள்முதலியவற்றை விரும்பி மேற்கொண்ட காரியத்தை முடிக்கப் பலமாக முயற்சி செய்தல், (13) விஷய சுகத்தை விரும்புதல் (14) வேறு காரியத்திலுள்ள பிரியத்தால் தானவசியஞ் செய்தற்குரிய காரியத்தைச் செய்யாமை, (15) பெருந்தூக்கங் கொள்ளல், (16) அவிவேகம், (17) முயற்சியின்மை, (18) திரவியத்தைச் செய்யவேண்டிய வளவில் செலவு செய்யாமை, (19) பொய்பேசல், (20) பிறரைவருத்தல், (21) வீணே சிரமமடைதல், (22) அற்ப விஷயத்திலும் சித்தங்கலங்கல், (23) இழந்த பொருளைப்பற்றி யேக்கங் கொள்ளல், (24) தன்னைத்தானே வருத்திக்கொள்ளல், (25) திருப்தியின்மை, (26) மரண பயம் முதலியனவாம். இவ்வசுர சம்பத்து மலினவாசனையின் காரியமாம். முற்கூறிய தெய்வ சம்பத்தோ சுத்த வாசனையின் காரியமாம். அசுர சம்பத்தின் விரிவைப் பகவத்கீதை 16வ தத்தியாயத்திற் காண்க.

18. களங்கமற்ற கண்ணடி தன்முன் வேறோர் களங்கமற்ற கண்
ணடி காட்டும் போது,விளங்கியதன் மயமாகி யபேதமாகி விகற்ப
மின்றி நிருவிகற்ப மானற் போல, அளந்தறியப் படாவிபுவாய்ச்
சத்தாய்ச்சித்தா யாநந்தமாம்பிரமத்தைக்கியமான,உளந்தெளிந்த
படியிருந்தா லுலக மெங்கே யுலேவெங்கே யென்றுசங்கை யொ
ழித்தி டாயே.

---

சத்துவ குணமேயாம்; $ ஏனைய விருகுணங்களும் அம்மனத்தினிடத்து இடையே வந்து கலந்திருப்பனவாமாகலின், அவற்றை நீக்கினல், அவை நீங்கிப்போம்.

சீ—வின:—*அவை யெவ்வாற்றல் நீங்கும்?*

கு—வி:—அன்பனே ? ¶ மனத்தின தியற்கை வடிவமான சத்துவ குணத்தாலுண்டாகுஞ் சன்மார்க்கமாகிய தெய்வ சம்பத்தை விடா தனுஷ்டித்திருக்கும்போது விஷய வடிவமாகப் பரிணமித்தற்கேதுவான தமோ குணமும், சலனத்திற் கேதுவான இராசோகுணமும் நாசமாகும்; அவை நாசமானபின்னர், விஷயவடிவமாகப் பரிணமித்தலும் ஓயாது சலனப்படுதலும் அம்மனத்தினின்று மொழிந்துபோம்; அவை யொழிந்துபோகவே, உனது மனம் மேகபடலம் நீங்கி நின்ற சரத்காலத் தாகாயம்போலத் தன் இயற்கை வடிவமாக விளங்கும். ‡ அவ்வாறு விளங்கும் மனம் அச்சரத்காலத் தாகாயம்போல எந்நான்றும் தன தியற்கை வடிவமாக விளங்கும் பிரஹ்மத்தினிடத் தேகரசமாய் நிருவிகற்ப சமாதியி லசையாது நிற்கும். 17

---

*$ "கருதுமனே குணமூன்றும்" என்று முன்னர்க் கூறப்பட்டிருத்தலின், அசுப வாசனையால் மனத்தின்கண் சத்துவகுண மடங்கும்போது இராசத குணமும் தாமதகுணமு மெழுந்தோங்கி யிருத்தலே அவை மனத்தின்கண் இடையே வந்து கலத்தலாமென் றிங்குணர்தல்வேண்டும். 'சத்துவ குணத்திற் றென்றுந் தயங்குமுட் கரண நான்கும்' என்பதற்கு இராசத குணமும் தாமதகுணமு மடங்கிநிற்கவுள்ள சத்துவகுணத்தில் அந்தக்கரணம் நான்கும் தோன்றுவனவாம் என்று பொருள் கொள்க.*

*¶ "சருவமும் பிரம மென்னுஞ் சத்துவா தனைவளர்ந்தால், மருளகங் காரமாதி மலினவா சனையடங்கும், கருமையா யெவ்வி டத்துங் கலந்துள வந்த காரம், அருணனின் காந்தி தோன்று மளவிலே யழியு மாபோல்" என்ற விவேக சூடாமணி கூறுவதிங் குணர்தற் பாலதாம்.*

*‡ விஷயாகாரமாகப் பரிணமித்தலும் அதனுற் சலனப்படுதலு மின்றிய மனம் பகிர்முகப்படுதற்கு நிமித்த மின்மையின், அது பிரயத்தனமில்லாமலே அந்தர்முகமாய்ச் சொரூபத்தில் நிருவிகற்பமா யிருக்கு மென்பது ஈண்டுத் தாற்பரியமாம்.*



19. ஏகமாய் மனமிறந்தாற் சீவன் முத்த ரிருக்குமட்டும் பிராரத்த
மேதனு லுண்பார், போகமா னதுபுசித்துத் தொலைப்ப தன்றே
புசிப்பதென்றன் மனந்தானும் போன தன்றே, சோகமா மன
மிறந்தாற் போக மில்லை தோன்றுமெனின் முத்தரென்று
சொலக் கூடாதே, மோகமா மிதுதெளியக் குருவே நன்று மொ
ழிந்தருள்வாய் தெளிந்ததன்றே முத்தி தானே.

---

முற்கூறிய மனோலய வடிவ நிர்விகற்ப சமாதியை யுவமான வாயிலாக விளக்கிக் கூறல்.

களங்கமின்றியதோர் கண்ணடியினெதிரே மற்றொரு களங்க மின்றிய கண்ணடியைக் காண்பிக்கும்போது அஃதக் களங்கமின்றிய கண்ணடியின் மயமா யபேதமாகி யாதொரு விகற்பமு மில்லாமல் நிர்விகற்ப வடிவமாயி னற்போல, § இவ் வளவினை யுடையதென்று அளவையால் (பிரமாணங்களால்) அளந்தறியப்படாத (நிரபேட்சிக) வியாபகத்துவ சச்சிதாநந்த வடிவப் பிரஹ்மத்தினிடத் தேகாசமான மனம் (அந்தப் பிரஹ்மாகாரமாய் அபேதமாகி யாதொரு விகற்பமு மின்றி நிர்விகற்பவடிவமாய்) தான் தெளிந்தபடியே யிருக்குமாயின்,(அதனிடத்து விகற்பத்திற் கேதுவான) கடாதி யுலக வடிவமாகப் பரிணம முண்டாதலும் அதுபற்றிச் சலன முண்டாதலு மில்லையாமென்று நிச்சயஞ் செய்து சமாதி யெவ்வா றுண்டாதுமென்னுஞ் சந்தேகத்தை நீ யொழிக்கக் கடவாய். 18

போக சாதனமான மனமிறந்த சீவன்முத்தர்க்குப் போக முண்டாவ தெங்ஙனமெனச் சீடன் வினவுதல்.

சீ—வின:—*பரமாசிரியரே! ("ஆறுகடல் கண்டுவர வாதரித்த தும்மொருவன், வீறுபுலி கண்டுவந்த வீரமுங் கூறியிடில், உப்புக் கடலாடி யோடிவந்த தும்மொக்குஞ், செப்புசிவங் கண்டுதிரும் பல்" என்ற வாறு) மனமானது ஏகமேவாத்துவிதீய மென்னும் பிரஹ்மாகாரமாகி நசித்து விடுமாயின், ஜீவன் முத்தர்கள் தேகமுள்ளவளவும் பிராரத்த கரும போகங்களை யெச்சாதனங்கொண் டனுபவிப்பார்? போகங்களை யனுபவித் தல்லவா தொலைத்தல் வேண்டும்? போகங்*

---

*§ "தோன்றி விளங்கும் பொருளெல்லாந் தொல்வே தாந்த விசாரணையில், ஊன்றி நோக்கி யனுதினமு மூக மதனிற் பரிசயித்தால், தோன்றி விளங்கு மறிவொன்றே சொன்மாத் திரமாய் விடுமுலகம், ஊன்றி நோக்கா தவர்கட்கே யுளது போலத் தோன்றியிடும்" என்று அத்துவித உண்மை கூறுவதிங் குணர்தற் பாலதாம்.*

20. மனநாசஞ் சோரூபமென்று மரூப மேன்றும் வகுத்துரைப்பா ரிருவகையா வருமி வற்றில், வினவாத சீவன்முத்த ரிடத்தி லோன்றும் விதேகமுத்த ரிடத்திலோன்று மேவுங் கண்டாய், தனதான சத்துவமாய் மனஞ்சே டித்துத் தமசுரச சுகணசித்தல் சோரூப நாசம், அனகாசத் துவந்தானு மிலிங்க தேக மடங்கும் போ தடங்குதலே யரூப நாசம்.

---

களை யனுபவித்துத்தான் தொலைக்கவேண்டுமென்றால், போக சாதன மான மனது நசித்ததாகாதே? சோகத்திற் (கும் மோகத்திற்) கு மேதுவான மனம் நசித்து விடுமாயின், சுழுத்தியிற் பிரளயத்திற் போலப் பிராரத்தகரும போகானுபவ மில்லையாகுமல்லவா? மனம் நசியாது தோன்றுமாயின், அஃதுடையவரை ஜீவன் முத்தரென்று கூறலாமா? மயக்கத்திற் கேதுவான விச்சந்தேக மகலும்படி தெளிவாக வுத்தரங் கூறியருளல் வேண்டும். ஐயத்தினீங்கித் தெளிதலல்லவா ஜீவன்முத்தி ஸ்திதி யென்று கூறப்படுவது? 19

சற்குருமூர்த்தி சீடன் வினவிற்கு விடை கூறத்தொடங்கி மனோநாச மிருவகைத்தாமெனல்.

கு—விடை :—பாபமற்ற அன்பனே! அறிவுடையோர் மனத்தினாசம் உருவம்அருவமென விருவகைத்தாமென்று வகுத்துக்கூறுவர். இவ்விரண்டனுள், மனத்தின் உருவ நாசம் அசம்பாவனை (அஞ்ஞானம்), சம்சய பாவனை, விபரீதபாவனை யுற்றுத் தெளிதற் பொருட்டு அவற்றுள் யாதுபற்றியுஞ் சற்குருவினிடத்து வினவுதற் கிடம்பெறாது தீர்ந்த நிலையிலுள்ள சீவன் முத்தரிடத்தும், மனத்தின் அருவநாசம் விதேக முத்தரிடத்தும், பொருந்துவனவாம். † தனதியற்கை வடிவமான சத்துவ குணமாய் மனமானது சேடித்து நிற்கத் தமோ குணமும் இராசோகுணமும் நசித்துவிடுதல் மனத்தி னுருவ நாசமாம்; அச்சத்துவகுணமும் சூக்கும சரீரம் உலையிரும்புண்டநீர்போல் துரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தில் நசிக்கும்போது நசித்துவிடுதலே மனத்தி னருவ நாசமாம். 20

---

† சீவன் முத்தி தனிலுருவ நாசஞ் சித்தந் தனக்குளதாம், தாவி லுடல்தீர் முத்திதனிற் சாற்று மருவ நாசமுறும்" என்று ஞானவாசிட்டம் உபசாந்திப் பிரகரணத்திற் கூறுகின்றது.



21. சுத்தமாஞ் சத்துவமே யுண்மை யாகுந் துகளிருள்போ ஞன் மனமேன் சொல்லும் போம்போம், வர்த்தமா னத்தில்வந்த வுணவை யுண்பார் வருவதும்போ வதுநினைந்து மகிழார் வாடார், கர்த்தரா மகந்தையைவிட் டகர்த்த ராகிக் கரணவிருத் திகளவத்தை காண்பா ராகி, முத்தரா யிருக்கலுமாம் புசிப்புங் கூடு முட்டிலையென் றறிந்துசங்கை மோசிப் பாயே.

---

அருவமன மிருத்தலின், ஜீவன் முத்தர்க்குப் போகானுபவம் பொருந்துமெனல்.

சத்துவகுண காரியமாயிருத்தலின், சத்துவ குணமே அருவ மனத்தின் யதார்த்த வடிவமாம்; அதனால், இராசோகுணமும் தமோகுணமும் தத்துவ ஞானப்பியாசத்தினா லொழிந்து போனால் உருவ மனமென்னும் வார்த்தையு மொழிந்துபோம். ஜீவன் முத்தர் உருவ மனமொழிய அருவமன முடையவரா யிருத்தலா லவர் நிகழ்காலத்தில் பிராரத்த கருமத்தால் நேரிடுகின்ற வுணவை யுண்ணுவார்; அஞ்ஞரைப்போன்று (முன் வந்ததும் போனதும்) இனி வருவதும் போவதுமான விஷயங்களை யெண்ணி யெண்ணி மகிழ்ச்சியுங்கொள்ளார், வாட்டமுங் கொள்ளார்; இதற்கு யாம் கர்த்தாவென்னு மகம்பாவத்தை நீக்கி, அகர்த்தாவாய், அந்தக்கரணத்தின் சாந்த கோர மூடவிருத்திகளையும் அவற்றிற்காதாரகாலமாயுள்ள சாக்கிராதி யவஸ்தாத்திரயங்களையுஞ் சாட்சியா யிருந்து காண்பர். அவ்வாறிருத்தலின், அவர் ஜீவன் முத்தரா யிருத்தலும் கூடும்; போகத்தை யனுபவிப்பதும் கூடும். அவரிவ்வா றிருத்தற்குத் தடை யாதுமில்லையாம். சீடனே! ஜீவன் முத்தர் அருவ மனத்தால் போகத்தை யனுபவிப்பவராயிருத்தலின், அவர் போகத்தை யெவ்வா றனுபவிப்பரென்னு மையத்தினின்றும் நீ நீங்குவாயாக. 21

ஜீவன்முத்தர் வியவகாரத்தோடிருப்பினும் அதனாலவர்க்குக் கேடின்றென்பதைத் திருஷ்டாந்தத்தோடு கூறல்.

சீ—வினா :—ஐயனே? § வர்த்தமான (நிகழ்கால)த்தில் நேரிட்ட வுணவினை யுண்டல் முதலிய வியவகாரம் நிகழுங்கால மியாவும் ஜீவன் முத்தர்க்குச் சமாதியா மென்று கூறினால், அவ்வியவகாரம் அவர்க்கு விகற்பமாகாதோ! அவ்விகற்பத்தினால் அவரது மனம்

---

§ புறத்திருசியானுவித்தம், புறச்சத்தானுவித்தம், புறநிருவிகற்பம், அகத்திருசியானுவித்தம், அகச்சத்தானுவித்தம், அகநிருவிகற்பமென்னும் சமாதி "இவ்வாறானுந், தங்கலற வொழுகும்யோ கிக்குமன மெங்குச் சரிக்குமாண் டாண்டெலாஞ் சமாதியென லாகும்" என்று வேதாந்த சூடாமணி கூறுகின்றது.

22. விவகார வேளையெலாஞ் சமாதி யென்றால் விகற்பமன்றே
மனமலைந்து விடாதோ விட்டால், அவதான நழுவுமன்றே
வென்று யாகி லதற்கொருதிட் டாந்தங்கே ளாசை கொண்டு,
நவமாகப் பரபுருடன் றன்னைக் கூடி நயந்தசுக மநுபவித்த
நாரிநெஞ்சந், தவமான மனைத்தொழில்கள் செய்யும் போதுந்
தழுவியநு பவித்தசுகந் தனைவி டாதே.

23. தேகத்த னலனுகி யகர்த்த னுகிச் சீவனின்றிப் பிரமமாய்த்
தெளிந்த முத்தன், போகத்தை யுண்பனேனென்றுற் கருத்தா வாமே
பூரணமா மகர்த்தனுக்குப் போக முண்டோ, சோகத்தை யறுத்
தருளுங் குருவே யிந்தத் துகளறுக்க வேண்டுமென்று சொன்னு
யாகில், மாகர்த்தன் மாபோகி மாத்தியாகி வகைமூன்று யவரிரு
க்கு மகிமை கேளாய்.

---

*ஊசல்போன் றலையுமல்லவா? அவ்வா றலையுமானுல், அவரது அந்தக் கரணத்தினுள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்கிய பாவனை நழுவிப்போகு மல்லவா? இதற்கு விடை கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.*

கு—விடை :—அன்பனே! அதற்கொரு திருஷ்டாந்தங் கூறுகின்றேன்; அதனை நீ கேட்கக்கடவாய். ¶ எங்ஙனம்காமத்தினுல்புதுவதாகச்சோர நாயகனை யின்புற்றுப் புணர்ந்து தான் விரும்பிய விஷயாநந்தத்தை யனுபவித்த பெண்ணின்மனமானது தவஞ் செய்வதற்கேதுவான இல்வாழ்க்கைக்குரிய செயல்களைச் செய்யுங்காலத்தும் முன்னர்ச் சோரநர்யகனைத் தழுவி யனுபவித்த விஷயாநந்தத்தை மறவாதிருக்குமோ, அங்ஙனமே ஜீவன் முத்தரது மனமும் வியவகார வேளையிலும் ஜிவப் பிரஹ்ம ஐக்கிய பாவனையினை மறவாதிருக்கும். ஆதலால், ஜீவன் முத்தர்க்கு வியவகாரத்தினுல் யர்தொரு கெடுதியு முண்டர்காது. 22

ஜீவன் முத்தர்க்குக் கர்த்திருத்துவு மின்றெனல்.

சீ—வினு :—*சோகத்தை யொழிக்குஞ் சற்குருவே! தேகத்திரய விலட்சணனுப், அகர்த்தாவாய், ஜீவபாவமிறந்தொழியத்தன்னை நிர்விசேஷ சின்மாத்திரப் பிரஹ்மமாக வுள்ளவாறு தெளிந்துணர்ந்த ஜீவன்முத்தன் விஷய போகங்களை யனுப்பவிப்பானென்று கூறினுல், அவன் கருத்தாவாய்விடுவனல்லவா? பிரஹ்மமே தானுக விருந்த*

---

*¶ "எத்தொழிலைச் செய்தாலு மேதவத்தை பட்டாலு, முத்தர் மனமிருக்கு மோனத்தே—வித்தகமாய்க், காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலுந், தாதிமன நீர்க்குடத்தே தான்." என்று பட்டினத்தடிகள் கூறுவதறிக.*



24. செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்குங் காந்தச் சிலைமலைமுன்
னிரும்புகள்சேட் டிக்கு மாபோல், செய்கையுஞ்செய் விக்கையு
மற் றிருக்கு மென்முன் சேடமான வுலகமெலாஞ் சேட்டை
செய்யும், மெய்கலந்த விந்திரிய விகாரரூப விவகார விருத்திக்கும்
விருத்தி தானு, மெய்கலந்த சமாதிக்குஞ் சாட்சி யோனான் வெயில்
போலேன் றுறைத்தவனே விபுமா கர்த்தன்.

---

*லால் பரிபூரணமாயிருக்கும் அகர்த்தாவாகிய ஜீவன்முத்தனுக்குப் பிராரத்த கன்மபோகம் எப்படி சம்பவிக்கும்? இச்சந்தேகத்தை நிவிர்த்திக்கும்படி பிரார்த்திக்கின்றேன்.*

கு—விடை :—சற்சீடனே! ஜீவன்முத்தர் மாகர்த்தன், மாபோகி, மாத்தியாகி யென மூத்திறத்தராவர்; அவரது மகிமையினைக் கூறுகின்றேன்; நீ கேட்பாயாக? 23

சீ—வினு.—*ஆண்டகுருவே! அருளல் வேண்டும்.*

மாகர்த்தனி னியல்பு கூறல்.

கு—விடை :—‡ ஒன்றைச் செய்தலும் பிறிதோன்றைச் செய்வித்தலுமின்றியுள்ள காந்தக்கல் மலையின் முன்னே அயத்துண்டுகள் சலிக்குமாறு போல, ஒன்றைச் செய்தலும் பிறிதோன்றைச் செய்வித்தலுமின்றியுள்ள எனக்குமுன்னே உண்மையில் ஜடமயமாயுள்ள பிரபஞ்ச மியாவும் தத்தம் வியாபாரங்களைச் செய்கின்றன. உலக வியாபாரத்திற்கும் அதனபாவத்திற்கும் சாட்சிமாத்திரமர்யிருக்கும் சூரியனைப்போல, சரீரத்தோடு கூடிய சுரோத்திராதி யிந்திரியங்களால் விகாரவடிவமான கேட்டல் முதலிய வியவகாரங்களையுடைய மனோவிருத்திக்கும், மனோவிருத்தி பிரத்யகாத்ம அபின்னமாயுள்ள பிரஹ்மத்திற் பொருந்திய சமாதிக்கும், நான் சாட்சிமாத்திரமா யுளனென் றழுந்திய அனுபவமுடையவனேவியாபகமாயுள்ள மாகர்த்தனுவன். 24

மாபோகியி னியல்பு கூறல்.

(அப்பியாச காலத்தில் மயக்கத்தை யுண்டாக்குவதற் கேதுவாய பழையதும் மூசியதும் மாமிசாதிகளுமாகிய தாமத பதார்த்தங்களையும், மமதையை யுண்டாக்குவதற் கேதுவாய கடினமும் உறைப்பும் காரமும் புளிப்பும் உப்பும் சூடர்னதுமாய இராசத பதார்த்தங்களையும் விலக்கி, மயக்கத்தையும் மமதையையும் நீக்கித் தத்துவஞானத்தை யுண்டாக்குவதற் கேது

---

*‡ மாயையைக் கடிந்த வான்மா மாயையாஞ் சகத்தை நாளும், ஓய்வற நடத்தே னென்னை யின்றிமற் றதுவு மொல்லா, தாயவை யென்கொ லென்னிற் காந்தமுன் னுடு மூசி, யேயுற வென்மு னிந்த விருஞ்சக நடக்கு மன்றே" என்று கூர்ம புராணம் கூறுகின்றது.*

25. அறுசுவையின் குணங்குற்ற மசுத்தஞ் சுத்த மபத்தியம்பத் திய
மேனவு ணுய்ந்திடாமல், பொறுமையுடன் கிட்டினதைக் காட்
டுத் தீப்போற் போகங்கள் புசிப்பவன்மா போகி யாகும், சிறிது
பெரி துகடனதந் நியங்க ணன்மை தீமைகள்சே ரினும்படிகச்
செயல்போற் சித்தம், வெறிதிருக்கு மவனேமாத் தியாகியாவன்
விரதமிம்மூன் றுடையவரே வீடு ளோரே.

---

வாய தித்திப்பாய ரசவஸ்து அன்ன முதலியனவாகிய சாத்வீக பதார்த்தங்களையுண்டுவந்த நியமத்தை விட்டுத்) தித்திப்பு, புளிப்பு, கார்ப்பு, காழ்ப்பு, கைப்பு, துவர்ப்பு என்னுஞ் சட்ரசங்களை யுடைய வுணவுகளுள் இது குணமானது, இது குற்றமானது, இது சுத்தமுடையது, இஃதசுத்தமுடையது, இது பத்தியபதார்த்தம், இஃதபத்திய பதார்த்தமேன அவற்றைப் பகுத்து நோக்காது பொறுமையுடன் நேரிட்ட மாமுதலியவற்றைப்புசித்து(எரித்து)ங் காட்டுத்தீப்போன்று நேரிட்ட போஜனுதி போகங்களை யனுபவிப்பவனே மாபோகியாவன்.

மாத்தியாகியி னியல்பு கூறல்.

இது கிடைத்தற்கெளிய சிறிய பொருள், இது கிடைத்தற் கரிய பெரிய பொருள், இது தன்னுடைய பொருள், இது அன்னியருடைய பொருள், இது நல்வினை, இதுதீவினை யென்னுமிவற்றுள்.யர்தாவதொன்று தன்னைவந்தடையினு மதனலொரு சிறிது மாறுபாடடையாது தன்னை யடுத்த பதார்த்தங்களினுருவத்தை யடையாத படிகத்தின் றன்மையைப்போன்று பற்றற்றுள்ள சித்தமுடையவனே மாத்தியாகியாவன்.

§ மாகர்த்தன், மாபோகி, மாத்தியாகி யென்னு மிம் மூன்று விரதமுமுடையவரே ஜீவன்முத்தராவர். இவ்வாறுள்ள அவர் போகானுபவத்தால் கர்த்தராவ தெப்படி? அன்பனே! அதனை நீயே யாராய்ந்து பார்? 25

ஞானி கருமகர்த்தாவர்கவிருக்க, அவனைக் கிருதகிருத்திய னேன்ப
தெவ்வாறென்னும் சீடனது வினுவிற்குக் குரு விடை கூறல்.

சீ—வினு:—யான் வெகுகாலமாக விரங்குதற் கேதுவான பிறவித் துன்பத்தை நீக்கியருளிய பரமாசிரியரே! தேவரீரருளிச் செய்தவாறடியேன் ஞானி அகர்த்தாவென்ப தெப்படி யென்பதாராய்ந்து பார்த்தேன்; அவ்வாறு பார்க்குமிடத் தெனக்கொன்று புலப்படுகின்றது; உத்தரவானுல், அதனைக் கூறுகின்றேன்.

---

§ மாகர்த்தன் முதலிய மூன்று விரதங்களின் விரிவை ஞானவாசிட்டம் விரதசூயை கதையி லறிக.



26. மெய்யுங் கொண்டு பிராரத் தந்தரு விதிவழி நின்றிடவும்
உய்யுங் கர்மிக ளுக்கநு குணமா வுறுதொழில் செய்திடவும்
செய்யும் செய்கை முடிந்தவ னென்றுரை செப்புவ தெப்படியோ
னையுந் துன்ப மகற்றிய குருவே நலமா வருள்வீரே.

27. ஆடவர் செய்தொழின் மூவகை யாகு மவித்தை வசத்துறுநாள்
ஏடணை மமதை யகந்தையு ளார்க்கே யிகபர விவகாரம்
வீடணு குவமெனு மிச்சையு ளார்க்கே வித்தை படிப்பதெலாம்
பாடன் மிகுந்தொழி லாற்பல னுண்டோ பரிபூ ரணமானல்.

---

கு—விடை:—கூறுவாயாக.

சீ—வினு:—தேகத்தோடு கூடிநின்று பிராரத்த கர்மத்தால் நேரிடுகின்ற நியதிமார்க்கத்தி லொழுகியும், உயிர்க்குறுதி தருவனவற்றை யாமறிந் துய்யவேண்டுமென்னுங் கருமகாண்டிகட் கநுகூலமாகக் கருமோபாசனைகளைச் செய்தும் வருகின்ற ஞானியைக் கிருதகிருத்திய (செய்யுஞ் செய்கை முடிந்தவ)னென் றெவ்வாறு கூறலாம்? தேவரீர் இதற்கு விடை செவ்வையாகக் கூறியருளல் வேண்டும். 26

கு—விடை:—(தத்துவஞான மடைதற்கு முன்னே) அஞ்ஞானத்தின் வசமாயொழுகுங் காலத்தில் இஷ்டப்பிராப்தி அநிஷ்ட நிவிர்த்தியின்பொருட்டுப் புருஷர்கள் செய்யத்தக்க கிருத்தியம் உழவர்தி, யஞ்ஞாதி, சிரவணுதியென மூவகைத்தாம்; அவற்றுள், போகத்திலிச்சையும், குடும்பத்தி லேனதென்னு மபிமானமும், தேகத்தில் யானெனென்னுமபிமானமு முடையவர்க்கே இகலோக போக சாதனமான உழவர்தி வியவகாரமும், பரலோக போக சாதனமான யஞ்ஞாதி வியவகாரமும் செய்யத்தக்கனவாம்; யாம் மோட்சமடையக்கடவோமென்னு மிச்சையுள்ளாராகிய முமுட்சுகட்குச் சிரவணுதி சாதனமனைத்தும் செய்யத்தக்கனவாம். முமுட்சுக்கள் தத்துவ ஞானத்தினல் பிரஹ்ம வடிவமாய்ப் பரிபூரணமாய் விளங்குவாராயின், அவர்க்கு இகலோக பரலோக போக சாதனமான உழவாதி யஞ்ஞாதிகளாலும், மோட்ச சாதனமான சிரவணுதிகளாலும், யாதொரு பயனு மில்லையாம்; இல்லாமையின், ஞானிகள் † கிருதகிருத்தியரே யாவர். இதனை நீ யூகித்துணரக்கடவாய்.

---

† "அவ்விவேகிக்குத் தத்துவ ஞான முண்டாதற்குமுன் இகலோக சம்பந்தமான இஷ்டப் பிராப்தி அநிஷ்ட நிவிர்த்தியின் பொருட்டுக் கிருஷி வாணிச்சியாதிகளும், சுவர்க்காதி சித்தியின்பொருட்டு யாகோபாசனுதிக

28. குரவர் சிகாமணி யேகே ளீர்நீர் கூறின வழியோக்கும்
பரமுட னிகமு மிழந்தவ ரன்றே பழகுவர் மெய்ஞ்ஞானம் [டார்
விரவு முயற்சியின் மீண்டவ ரதையினி வேண்டுவ ரோவேண்
சிரவண மனனு திகள்வேண் டாவோ சித்த முறைத்திடவே.

29. கிளர்மக னேகேள் தத்துவ மறியார் கேட்டல் செயக்கடனே
தளர்வறு சிந்தித் தலின்முயல் வார்சிலர் சந்தே கங்களுளார்
தெளிதலி னிற்பார் விபரீ தப்பேய் தீரா வாதனையோர் [டோ.
வெளியுரு வாயறி வாய்நிறை வாயினர் வேண்டுவ தொன்றுண்

சீ—வினு :—தேசிக சிரோரத்தினமே! எனது விண்ணப்பத்தைக் கருணை கூர்ந்து கேட்டருளல் வேண்டும். ஜீவன்முத்தர் கிருத கிருத்தியரே யென்று தேவரீரருளிச் செய்தவழி யொப்பத்தக்கதேயாம். இகாமுத்திரார்த்த பல போக விராக முடைய விவேகிகளல்லவா தத்துவ ஞானுப்பியாசஞ் செய்வர்? உழவாதி, யஞ்ஞாதி, சிரவணுதி யென்னும் வியவகாரத்தினின்றும் நீங்கிய சீவன்முத்தர் அவ்வியவகாரத்தை விரும்பாரென்பது சத்தியமேயாம்; அவ்வாருயினும், சித்தமானது ஆன்மாவினிடத்துப் பிறழாது நிற்றற்பொருட்டு அவர்க்குச் சிரவணுதிகள் வேண்டாமா? அவையில்லாவிடின், அவரது சித்தம் சொரூபத்தில் நில்லாது பிறழ்ந்துவிடுமல்லவா? இவ்வையத்தைத் தேவரீர் தீர்த்தருளல் வேண்டும்? 28

த—வி :—திருசிய பர்வம் நீங்கப்பெற்றுத் திருக்பர்வமாய் விளங்கா நின்ற புத்திரனே! யான்கூறும் விடையினைக் கவனமாய்க் கேட்கக்கடவாய். நிர்விசேஷ சின்மாத்திரமாயுள்ள பரப்பிரஹ்மத்தைத் தமது நிஜவடிவ ஆத்மாவாக வறியாதவர் சிரவணஞ் செய்தல் வேண்டும்; நினைவரிய ஒரு பிரஹ்மம்

ளும்,மோட்ச சாதன ஞான சித்தியின் பொருட்டுச் சிரவணுதிகளுமாகிய மூவகைக் கர்த்தவ்வியமு மிருந்தன; தத்துவ ஞான முண்டானபின், சம்சார புத்தியோடு இகபோக விச்சையில்லாமையால், கிருஷிமுதலான வியாபாரமுமில்லை; சாளரத்தின் வழியுட் புகுந்த சூரிய கிரணத்தில் காணப்படும் பரமாணுக்கள் வெளியிலுள்ள பிரகாசத்திற் காணப்படாமைபோல, அஞ்ஞானிக்கு விஷயமாங் கர்ம மெல்லாம் ஞானியினிடத்துத் தோன்ருமையால், யாகோபாசனுதிகளும் அனுஷ்டிக்கத்தக்கனவாகவில்லை; பிரஹ்மானந்த சாட்சாத்கார மிருத்தலால் (அவனுல்) சிரவணுதிகள் செய்யப்பட்டனவேயாம். இதுவே கிருத கிருத்தியத்துவம்" என்று வேதாந்த பரிச்சேதங் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.



30. ஐயா கேளீர் தத்துவ ஞானியு மஞ்ஞா னிகள்போலச்
செய்யா நின்றேன் கண்டே னுண்டேன் சென்றே னெனலாமோ
பொய்யாம் விபரீ தங்க ளவர்க்குப் போயின வென்றீரே
மெய்யாம் பிரம விசார மிதன்றே வெளியா வுரையீரே.

நீயேயென்றுபதேசித்த சற்குருவினது வாக்கியத்தை நம்பாது யான் பிரஹ்மமோ அன்றே என்னும் ஐய முடையவர் மனனஞ் செய்தல்வேண்டும்; ஜகத் சத்தியம், தேகமே ஆத்மாவென்னும் விபரீதப்பேயுடையவர் நிதித்தியாசனஞ் செய்தல்வேண்டும். அசம்பாவனை, சம்சயபாவனை, விபரீதபாவனை யென்னு மூன்று மின்றிச் சச்சிதாநந்த பரிபூரண வடிவமாய் விளங்கும் ஜீவன் முத்தர்கள் சிரவண மனன நிதித்தியாசனங்களுள் விரும்பிச் செய்யத்தக்கது யாதொன்று மில்லையென் றறிவாயாக. 29

சீ—வினு :—தேசிக மூர்த்தியே! தேவரீர் யான் கூறுவதைக் கருணை கூர்ந்து கேட்டருளல் வேண்டும். ஜீவன்முத்தர்கள் விரும்பிச் செய்யத்தக்கது யாதொன்று மின்ருயின், அவர்களும் அஞ்ஞரைப்போல யான் ஸ்நானமுதலியவற்றைச் செய்கிறேன், இப்பொருளைக் கண்டேன், இவ்வுணவை யுண்டேன், இவ்வூருக்குச் சென்றேனென்று கூறலாமா? மித்தியா வடிவமான அசம்பாவனை, சம்சய பாவனை, விபரீத பாவனைகள் அச்சீவன்முத்தர்க்கு நீங்கினவென்று முன்னரருளிச்செய்தீரல்லவா? அவர்கட்குரிய தத்துவ வடிவ பிரஹ்ம விசாரத்தின் பயன் இஃதல்லவே? அதனை வெளிப்படையாக அருளிச் செய்தல் வேண்டும். 30

த—வி :—அன்பனே! § சற்குரு முன்னிலையில் ஆத்மாநாத்மாக்களைச் செவ்வையாக விசாரித்து, ஆத்மா தனது யதார்த்த வடிவமென்றும்

§ எங்ஙனம் இலவண னென்னு மரசன் யான் சொப்பனத்தில் புலையனுகிப் பலவிதமாக வருந்தி யிறக்கத் துணிந்தேனென்று மந்திரிகளிடத்திற் கூறினும் அவன் புலையனுகாது அரசனுகவே யிருந்தானே, அங்ஙனமே ஞானியும் அஞ்ஞானியைப்போல வியவகரிக்கினும் அவன் அஞ்ஞானியாகாது ஞானியாகவே யிருக்கின்ருனென்ப தீண்டறியத்தக்கதாம். ஞானவாசிட்டம் சித்தன் கதையைப் பார்க்க.

"சிங்கா தனத்தில் வீற்றிருக்குஞ் சிறப்பா ரரசுங் கனவடைந்து
மங்காப் புலைத்தன் மையைமேவி வருந்து வோன்றன் னனவுணரின்
அங்காஞ் சோக மோகமெலா மந்தக் கணமே நீங்குமதின்
இங்காஞ் சீவத் துவமோக மிரியுந் தனைத்தேர்ந் தக்கணமே"

என்று அத்துவித வுண்மை கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

31. ஓய்ந்த கனவிற் கண்ட பழங்கதை யோதுவன் வாதனையால்
ஆய்ந்தறி வுற்றவ னப்படி செப்புவ னுபா சனுமாகான்
மாய்ந்ததன் னுடல்வே மளவும் விண்ணவன் மநுட னெனப்படு
வீய்ந்தசிதாபா சன்போ மளவும் விவகாரந் தொடரும். [வான்

32. ஆனா லையா குருவே காண்ப தசத்திய மென்றாலும்
நானா விவகா ரந்துய ரலவோ ஞான சுகந்தருமோ

அநாத்மா தனது கற்பித வடிவமென்றும் அவற்றை யுள்ளவா றறிந்த ஜீவன்முத்தன் ஒருவன் தான் சொப்பனத்திற் கண்ட வியாபாரங்களைச் சாக்கிரத்தி லெங்ஙனம் பூர்வ வாசனையாற் கூறுவனோ அங்ஙனமே பூர்வ வாசனையால் யான் செய்யா நின்றேன், கண்டேன், உண்டேன், சென்றேனென்று வியவகரிக்கின்றான்; அவ்வாறு வியவகரிக்கினும், அவன் சீவபாவ முடையவனல்லன். இதனை நீ செவ்வையாக வோர்ந் துணர்வாயாக.

சீ—வின :—ஆண்டவனே! இவ்வியவகாரம் ஞானியை யெதுகாறுந் தொடர்ந்து நிற்கும்?

கு—விடை :—¶ வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதனால் தேவனுயிருப்பவன் இறந்த தனதுடல் வெந்து சாம்பராமளவும் மனிதனென்று பிறராலெங்ஙனம் வியவகரிக்கப்படுகின்றனே, அங்ஙனமே தத்துவ ஞானத்தினால் அஞ்ஞானம் நீங்கப்பெற்றுத் தனது நிஜவடிவமான பிரஹ்மமாகவே விளங்கும் ஜீவன்முத்தனுந் தத்துவஞானத்தால் தனக்கெனச் சொரூபமில்லா தொழிந்த சிதாபாசன் நீங்குமளவும் (விதேக முத்தி பெறுமளவும்) பிறரால் ஜீவனென்று சொல்லப்படுவான். அதுகாறும் அவனிடத்து யான்செய்யாநின்றே னென்றற் றொடக்கத்து வியவகாரந் தொடர்ந்து நிற்கும். 31

சீடன், இவ்வியவகாரம் ஞானியின் நிஷ்டைக்கு விரோதமன்றேவென்று
வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வின:—பரமகுருவே! ஞானியினிடத்து வியவகாரம் அவனது விதேகமுத்தியளவும் தொடருமாயின், காணப்படுவன யாவுமித்

¶ "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்" என்றார் நாயனார்.

"தேவத்தன்மையை விரும்பியவன் அக்கினி முதலியவற்றிற் பிரவேசிப்பதுபோலச் சாட்சித்தன்மையாக மிஞ்சி யிருத்தற்பொருட்டு அச்சிதாபாசன் தனது விநாசத்தை யிச்சிக்கின்றான்" என்று பஞ்சதசி கூறுகின்றது.



போனா லன்றோ நன்றா நிட்டை பொருந்திடல் வேண்டாவோ
தானா நிட்டை புரிந்தாற் செய்கை தவிர்ந்தவ னெப்படியோ.

33. தெரிதரு மகனே யாரம் பத்தொடு தீரும் விவகாரம்
உரிய தியானமும் விவகா ரங்களு முள்ளத் தொழிலன்றோ
துரிய பரம்பொரு ளானவர் வேறொரு தொழில்செய் வதுமுண்
அரிய சமாதிகள் பழகுவ னேலவ னொரு டனுமன்றே. [டோ

தையேயாயினும் அவற்றைப்பற்றிய நாநாவியவகாரங்கள்ஞானிக்குத் துன்பந்தருமல்லவா? அவை அறிவாநந்தத்தைத்தருமா? அவ்வியவகாரங்க ளகன்றாலல்லவா அவ்வறிவாநந்தம் வெளிப்பட்டுத் தோன்றும்? வியவகாரங்க ளகன்றுபோதல் வாயிலாக அறிவாநந்தம் வெளிப்பட்டுத் தோன்றுதற்பொருட்டவன் நிர்விகற்ப சமாதி செய்தல் வேண்டுமல்லவா? அவன் தன்மயமாகும் நிர்விகற்ப சமாதியைச் செய்தால் அவனைக் கிருதகிருத்திய னென்பதெப்படி? இச்சங்கையை யகற்றும்படி பிரார்த்திக்கின்றேன். 32

கு—விடை :—உண்மையையுசாவி (வினவி) யறியு மைந்தனே! ஞானியினது வியவகாரம் அவனது பிராரத்த கர்மத்தோடுகூட ஒழிந்துவிடும். அறிவாநந்தம் வெளிப்படுதற்குரிய நிர்விகற்ப சமாதியும்,யான் செய்யாநின்றேன் கண்டே னென்றற் றொடக்கத்து வியவகாரங்களும், அந்தக்கரணத்தின் வியாபாரமல்லவா? அஃதுனக்குத் தெரிந்ததே; ஆதலால், துரியநிலையென்னும் சமாதியில் விளங்கும் பரம்பொருளாக விருக்கும் ஜீவன்முத்தர்கள் தாமாகவேயிருப்பதன்றி வேறே யாதாயினு மொருதொழிலைச் செய்வதுமுண்டோ? இல்லையல்லவா? ஒருவன் தன்னை ஞானியென்று கூறிக்கொண்டு கர்த்தவ்விய புத்தியோடு அநதிகாரி புருஷர் செய்து முடித்தற்கரிய ‡ சமாதிகளையப்பியாசஞ் செய்துவருவானாயின், அவன் அப்பியாசியேயல்லாம லொரு போதும் கிருதகிருத்தியனான ஆரூடனாகான். இதனை நீ யாராய்ந்தறி. 33

‡ சமாதிகளென்றமையின், பாகிய திருசியானுவித்த சவிகற்ப சமாதி முதலிய சட்சமாதிகளையுங் கொள்க. அவை வருமாறு :—

1. கடாதி விஷய சமூகத்துள் ஒன்றனைக்குறித்துக்கொண்டு, அதன் நாமரூபமான மாயாம்சங்க ளிரண்டையும் நீக்கி, அதிலுள்ள அஸ்தி பாதிப்பிரியமென்னும் சச்சிதாநந்தப் பிரஹ்மாம்சத் திரயங்களை யனுசந்தானஞ் செய்வதே பாகிய திருசியானுவித்த சவிகற்பசமாதியாம்.

34: உத்தம குருவே யாரூ டருமா யொருதொழி லற்றவருள்
சித்தம டங்கு தியாஞ திகள்சிலர் செய்குவ தேன் னேன்றல்
இத்தல மருவும் பிராரத் தப்பிரி வேப்படி யப்படியே
முத்தரும் வெகுவித மாகுவ ரேன்பது முன்னே சோன்னேனே.

சீடன், ஆரூடருள்ளுஞ் சிலர் தியான முதலாயினவற்றைச் செய்வதேனென்று வினவுதலும் அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வி :—தேசிகோத்தமரே! அங்ஙனமாயின், கிருதகிருத்தியராய் † ஆரூடரா (திருசியநாட்ட மின்றித் திருக் நாட்ட முடையவரா) யிருப்பவருள்ளே சிலர் மனமடங்குதற் கேதுவான ஈசுவர மூர்த்தித்தியானம், அஜபாமந்திரோச்சாரணம், ஈசுவர நாம உச்சாரண முதலியவற்றைச் செய்வதேன் ?

கு—விடை :—அன்பனே ! இவ்வுலகத்திலே ஜீவன்முத்தரும் அந்நர் போலத் தம்து பிராரத்தகன்மத்தின் பிரிவேப்படி யிருக்கின்றதோ அப்படியே நாநாவியவகாரங்களை யுடையவரா யிருப்பரென்பதை முன்னே "பேதகர் மத்தால் வந்த பிராரத்த நாநா வாதும், ஆதலால் விவகா ரங்க ளவரவர்க் கர்வ வாதும், மாதவஞ் செயினுஞ் செய்வார் வாணிபஞ் செயினுஞ் செய்வார், பூதலம் புரப்பா ரையம் புகுந்துண்பார் சீவன் முத்தர்" என்று கூறினேனே ? அதனை நீ கவனித்துணரக்கடவாய். 34

2. அகண்ட சச்சிதாநந்த அத்விதிய சொரூபம் பிரஹ்மமென்றுணர்ந்து, அதனைத் தியானிப்பதே பாகிய சத்தானுவித்த சவிகற்ப சமாதியாம்.

3. இச் சமாதி யிரண்டன் அப்பியாச பலத்தால் பிரஹ்மாநந்தானுபவத்தில் மனம் மக்கினமாய் நிஸ்தரங்க (அலையின்றிய) சமுத்திரம்போல நிச்சல வடிவமாயிருப்பதே பாகிய நிர்விகற்ப சமாதியாம்.

4. சித்தத்துள்ள காம சங்கற்பாதிகளே திருசியமாம் ; இத்திருசியத்திற்கு நான் சாட்சியென்னும் அனுசந்தானமே ஆப்பியந்தர திருசியானுவித்த சவிகற்ப சமாதியாம்.

5. அசங்க சச்சிதாநந்த சுவயம்பிரகாச அத்வைத சொரூபமே நானென்றதனைச் சிந்தனை செய்வதே ஆப்பியந்தர சத்தானுவித்த சவிகற்ப சமாதியாம்.

6. அச் சுவானுபூதி சுகாவேசத்தால் திருசியம் சத்த மென்னு மிரண்டையும் விட்டு, நிவாத (காற்றின்றிய) தீபம்போல நிர்ச்சிந்தை வடிவா யிருத்தல் ஆப்பியந்தர நிர்விகற்ப சமாதியாம்.

† விசுவ விகிருதி (உலக நிலை) தோன்றும லாத்மஞானத்தால் சத்தியோ (உடனே) முத்தியடைபவனே ஆரூடனும்.



35. நல்லவ னேகே ளுலகுப காரம் ஞானிகள் விவகாரம்
அல்லது வேறோரு பேறுபே றும்மிலை யதனாற் பிணியுமிலை
வல்ல சிருட்டி முதற்பல தொழிலால் வருபுண் ணியபாவம்
எல்ல வருக்கு மநுக்கிர கஞ்செயு மீச னடைந்திலனே.

சீ—வி :—தந்தையே ! அங்ஙனமாயின், ஞானிகள் வியவகாரம் அப்பிரயோஜனமாமே ?

கு—விடை:—மங்கலவடிவாய் விளங்கும் மாணாக்கனே! யான் கூறுவதை நீ கேட்கக்கடவாய். $ ஞானிகளது வியவகாரம் உலகோபகாரமாம்; இதுவேயன்றி அவ்வியவகாரத்தினால் அவர்க்கோரு இலாபமு மில்லையாம், நஷ்டமு மில்லையாம்.

சீ:—வி:—வியவகாரத்தினால், ஞானிக்கு இலாப நஷ்டமில்லையென்பதெப்படி ?

கு—விடை:—சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகமென்னும் பஞ்சகிருத்தியங்களால் வருகின்ற நல்வினை தீவினை யென்னுந் தருமா தருமங்களைச் சர்வப் பிராணிகளுக்குங் கருணை செய்கின்ற ஈசுவரனடையாமை போல, ஞானிகளும் தமது வியாபாரங்களால் வருகிற இலாப நஷ்ட முதலிய துவந்துவங்களை யடைவதில்லையாம். § இதனை நீ பொருத்திப் பார்க்கக் கடவாய். 35

$ "அந்த ஞானியிருக்குந் தேசம் உபத்திரவமில்லா திருக்கும். அச்சீவன்முத்தனால் உதாசீனன் - பாவி - சிஷ்யன் - பக்த னென்பவர்க்கு அனுக்கிரகமுண்டாம். அஃதெப்படி யெனின், அவனது பரிசுத்தமான சரித்திரத்தைக் கண்ட உதாசீனர்க்குப் புண்ணிய கிருத்திய விருப்பமும், அவன் தர்சன பரிசனங்களால் பாவிகளுக்குப் பாபக்ஷயமும், அவனை நம்பும் சிஷ்யனுக்குத் தத்துவோபதேசத்தினால் முத்தியும், அவனை யன்போடு வழிபடும் பக்தனுக்குப் புண்ணியமுதலிய சாதனமு முண்டாம். கர்த்திருத்வாதி கர்மமில்லாத சீவன் முத்தனால் வேதாந்த வாக்கிய சத்திய தாற்பரிய பிரமாண அனுகூல தர்க்க திருஷ்டாந்த யுக்திகளால் முயற்சியோடு கூடிய பிரஹ்மோபதேசாதிகளெங்ஙனங் கூடுமெனின், மறைப்பின்றிய பிரஹ்ம சொரூபமாயிருத்தலால் இராகத்துவேஷாதிகளில்லாத ஈச்சுரனுக்கு ஜனங்களுடைய புண்ணியபாவ வசத்தால் அனுக்கிரக நிக்கிரக சேஷ்டை யுண்டாவதுபோல, சாதகருடைய புண்ணியாதிப் பிரபாவத்தால் ஞானிக்கும் ஞானோபதேசாதி செய்தல் கூடும்" என்று வேதாந்த பரிச்சேதங் கூறுகின்றது.

§ தனக்குப் பயன் தரும் வினை, பிறர்க்குப் பயன் தரும் வினை, தனக்கும் பிறர்க்கும் பயன்தரும் வினை, தனக்கும் பிறர்க்கும் பயன்தாராவினை

36. ஈசனு மாயரு வாயுரு வாகி யெழுந்தரு ளுங்குருவே
ஈசனு ஞானியு மோப்பென் றீரே யெப்படி யோப்பென்றல்
ஈசனு ஞானியு மமதை யகந்தை யிகந்ததி ஞலோப்பாம்
ஈசனு மாம்பல சீவரு மாமுல கெல்லா மிவனுமே.

---

சீடன், ஈசனும் ஞானியும் தம்முளொத்திருப்ப தெவ்வாறென வினவுதலும் அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வின.—உண்மையி லருவமான அறிவாயிருந்தும் உலகத்தைப்படைத்தல் முதலியன செய்தற்பொருட் டீசுவரனுகியும் என் போன்றவரை யிரட்சித்தற்பொருட்டுக் கருணையினுல் மானுட வுருவமாகியு மெழுந்தருளிய தேசிகோத்தமரே! தேவரீர் ஈசனும் ஞானியும் தம்முளொப்பானவரென்று திருவாய்மலர்ந்தருளினீரே; அவ்விருவரும் தம்முளெப்படி யொப்பாவர்? அதனைத் தேவரீர் கூறியருளல் வேண்டும்.

கு—விடை:—அன்பனே! ஈசனும் ஞானியும் தானல்லாத வுடம்பை யானென்னு மகந்தையையும் தன்னுடைமையில்லாத பொருளை யெனதென்னு மமதையையும் விட்டிருத்தலால், தம்முள் ஒப்பாவர். இந்த ஞானி அகந்தை மமதைகளை விட்டிருத்தலால் ஈசனே டொப்பாவதே யன்றிப் "பிரஹ்மவித் பிரஹ்மேவபவதி—பிரஹ்மத்தை யறிந்தவன் பிரஹ்மமே யாகின்றன்" என்னும் சுருதிப்படி ¶ பிரஹ்மமாயு மிருத்தலால், தன்னிடத்திற் கற்பிதமாயுள்ள ஈசுரனுகியும், பலஜீவர்களாகியு முலகமாகியு மிருக்கின்றன். 36

---

யென்னும் வினை நான்கனுள், ஞானிகளது உலகோபகாரமாகிய வினை ஈசுவரனது பஞ்சகிருத்தியமாகிய வினைபோலப் பிறர்க்குப் பயன் தரும் வினையா மென்பதிங் குணர்தற் பாலதாம்.

¶ பிருகதாரண்யகோபநிஷத் முதலத்தியாயம் நான்காவது பிரமாணத்தில் "நான்தான் மனு; நான்தான் சூரிய னென்று வாமதேவரிஷி யறிந்து கொண்டார்" என்று கூறுவதும், குறுந்திரட்டு "உலகெலா முணர்ந்த விடத்திலே யுறங்கி யுறங்கிய விடத்திலே யுணர்வர், உலகிலெப் பொருளுந் தம்மினுந் தம்மை யுலகினெப் பொருளினுங் காண்பர், உலகிலெப் பொருளு மன்றியே தம்மை யன்றியொன் ளின்றியே யிருப்பர், உலகமு முயிரும் பரமுமாய் நிகழ்ந்த வொருபொரு ளுணர்ந்தவுத் தமரே" என்று கூறுவதும், நன்றாக, நானுன்னை யன்றி யிலேன்கண்டாய் நாரணனே, நீயென்னை யன்றி யிலை" என்று திருமழிசை யாழ்வார் கூறுவது மிங்குணர்தற் பாலனவாம்.



37. எல்லாச் சீவரு மிவனு மேன்றீ ரிவன்றன் முத்தியடைந்
எல்லாச் சீவரு முத்தி பெறும லிருப்பா னேனையா
எல்லாச் சீவரும் வெவ்வே றுனு லிவனெல் லாமலனே
எல்லாப் பொருளு முரைத்தருள் குருவே யிதைநீர் மொழியீரே.

---

சீடன், ஞானி யெல்லாச் சீவருமாவ தெப்படி யென்று வினவுதலும் அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வின:—யான் வினவியதற்கெல்லாந் தக்கவாறு விடை யருளுகின்ற சற்குருமூர்த்தியே! தேவரீர் இந்த ஞானியானவன் (ஈசனு முலகமுமா யிருப்பதல்லாமல்) எல்லாச் சீவருமா யிருக்கின்றனென் றருளிச்செய்தீர்; அவ்வாறயின், இவன் மோக்ஷமடைய அவ் வெல்லாச் சீவரும் மோக்ஷமடையவேண்டுமல்லவா? அவர்கள் மோக்ஷமடையாதிருக்குங் காரணம் யாது? ஐயனே! எல்லாச் சீவரும் இவனிலும் வேறயத் தம்முள் வேறுபட்டிருப்பாராயின், இவன் ஜக ஜீவ பரமா யிருக்கின்றனென்பது எவ்வாறு பொருந்தும்? தேவரீ ரிவ்வினவிற்கு விடை யருளல் வேண்டும். 37

கு—விடை:—அன்பனே! ‡ யதார்த்தத்தில் நானென்று சொல்லுதற் கியைந்த ஆத்மா பரிபூரணமு மேகமுமாம்; அங்ஙனமிருந்தும், அஃது அபார்த்தத்தில் நானென்று சொல்லுதற் கியைந்த $ அந்தக்கரணேபாதிக ளளவில்லாது (அநேகவிதமாய்) இருந்தலால், அவ்வுபாதி காரணமாக அநேக வித ஜீவர்களாக விளங்குகின்றது.

சீ—வின:—ஆத்மா ஒன்ற யிருந்தும், அஃதந்தக்கரண வுபாதியினால் அநேகவித ஜீவர்களாக விளங்குகின்ற தென்பது எப்படி?

---

‡ "அவிர்சான் ஜெுன்று யிருந்தாலு மந்தக்கரண பேதத்தாற், குவியாப் பேத விவகாரப் படுங்கூ டுருத்தி ராதியருங், கவலா துயர்சின் மாத்திரவான் மாவின் கண்ணே கறையில்லாத், தவமே கொண்டீ ரகஞ்சத்தத் தைச் செய்வார்கள் பிரயோகம்" என்று சூதசங்கிதை கூறுதிங் கறிதற்பாற்று.

$ கேவலத்தில் சீவத்துவத்திற்கு முக்கிய வுபாதியாயுள்ள அவித்தை சகலத்தில் அந்தக்கரண ரூபமாகப் பரிணமித்து முபாதியா யிருத்தலால், அந்தக்கரணேபாதிகள் என்று கூறப்பட்டது. கேவலம் - சுழுத்தி, சகலம் - சாக்கிர - சொப்பனம். "சுழுத்தியில் அஞ்ஞான மிருக்கின்றது. சுழுத்தியிலுள்ள சைதன்னியத்தின் பிரதிபிம்ப சகித அஞ்ஞானம்ச மெதுவோ அது புத்தி ரூபத்தை யடைகின்றது; சேதனத்தின் பிரதிபிம்பமுங் கூடவே யுண்

38. அகமெனு மான்மா பூரண மேக மநேக விதஞ்சீவர்
அகமெனு மந்தக் கரணு பாதிக ளளவிலை யாதலினுல்
சகமுழு துங்குளிர் சந்திர னேகஞ் சலசஞ் திரர்பலராம்
சகமதி லேரி குளஞ்சிறு குழிசால் சட்டி குடம்பலவால்.

39. சட்டி குடங்களி லொன்று நசித்திடி னதினுட் சலசந்திரன்
ஒட்டு முதற்சந் திரனேடு கூடு மொழிந்தவை கூடாவே
கட்டு முபாதி நசித்திடு சீவன் காரண வான்மாவில்
கிட்டு மயிக்க முபாதி கெடாதவர் கேவல மாகாரே.

---

சூ—விடை :—¶ அது சந்திரன் ஒன்றயிருந்தும் ஏரி, குளம், குழி, சால், சட்டி, குடமென்னு முபர்திகளால் பலவிதமான சலசந்திரர்களாக விளங்குவதுபோலாம். (சந்திரன் ஏரி குள முதலியவற்றில் பிரதிபிம்பிப்பதால் பலவிதமான ஜல சந்திரராக விளங்குவதுபோல ஆத்மாவும் அந்தக்காணங்களிற் பிரதிபிம்பிப்பதாற் பலவிதமான ஜீவர்களாக விளங்குகின்றதென்க.) 38

எங்ஙனம் சட்டி, குட முதலிய வுபாதிகளுள் ஒருபாதி தடியால்நாசமானுல் அதிற் பிரதிபிம்பித்துள்ள சந்திரன் தனது பிம்பசந்திரனே டைக்கியமாக ஏனைய பிரதிபிம்ப சந்திரர்கள் ஐக்கியமாவதில்லையோ, அங்ஙனமே அந்தக்காணத்துள்ள ‡ அஞ்ஞான வுபாதி தத்துவஞானத்தால் நாசமானுல் அதிற்பிரதிபிம்பித்துள்ள சீவன் தனது காரணமான பிம்பவடிவஆத்மாவில் ஐக்கியமாவன் ; அவ்வஞ்ஞான வுபாதி கெடாத ஏனைய ஜீவர்களோ ஐக்கியமாகார். அன்பனே ! இவ்விடையை நன்கு கவனிக்கக்கடவாய். 39

---

டாகின்றது. இச்சிதாபாச சகித புத்தியில் புண்ணியாதி சம்சாரந் தோற்றுகின்றது. இந்த அபிப்பிராயத்தால் சில சாஸ்திரங்களில் புத்தியே ஜீவத்தன்மைக்குபாதியாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. விசார திருஷ்டியால் பார்க்குமிடத்து ஜீவத்தன்மையினுபாதி யஞ்ஞானமாம்” என்று விசாரசாகரம் நான்காவது தரங்கத்திற் கூறுகின்றது.

¶ “நித்திய மாகு மான்மா வேகமாய் நிகழ்ந்து மாயா
சத்தியா லளப்பில் பேத மாயுறும் பேதஞ் சாற்றில்
வைத்தநீர்க் குடங்க டோறுந் தோன்றிடு மதியே போல
உய்த்திடு முபாதி தன்ஞற் பற்பல வுருவாத் தோன்றும்”

என்று கூர்ம புராணங் கூறுவதிங் குணர்தற் பாலதாம்.

‡ நம்மனேருள் எவாது அந்தக்காணத்தில் யான் பிரஹ்மமென்னும் தத்துவ ஞானமுண்டாகின்றதோ அவாது அந்தக்காணவச்சின்ன (அந்தக்



40. இவனயன் மால்சிவ ஞகிய வீசரோ டெப்படி யொப்பாவன்
சிவன்முதன் மூவரு மகில சிருட்டி திதிநா சங்கள் செய்வார்
அவர்பிறர் மதிகளு முக்கா லங்களு மறிவார் விபுவாவார்
தவமிகு குருவே யிவனுக் கவையிலோர் சற்றுங் காணேனே.

---

சீடன், ஈசனும் ஞானியும் தம்முள் ஒப்பாவரோன்பதுபற்றி மீண்டும் வினவுதலும் அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வின :—மன விந்திரியங்களி னேகாக்கிரமென்னுந் தவமிக்குள்ள குரு ரத்தினமே! யான் கூறுவதைத் தயவு செய்து கேட்டருளல் வேண்டும். மும்மூர்த்தி வடிவமாயுள்ள ஈசனும் ஞானியும் தம்முளொத்தவராயிருப்பின், அய னரி யுருத்திரரென்னு மூவரு முலகத்தைச் சிருஷ்டி, திதி, சங்காரஞ் செய்தலும், பிறரெண்ணங்களையும் திரிகால விஷயங்களையு மறிதலும், அதனுல் வியாபகமாயிருத்தலும், இந்த ஞானிக்குமிருக்க வேண்டுமல்லவா ? அவற்றுளொரு சிறிதும் இவனிடத்தி லிதுகாறுங் கண்டிலே னுதலின், இந்த ஞானி யென்பவன் மும்மூர்த்திகளோ டெப்படி யொப்பாவான்? 40

---

கரணத்தோடு கூடிய) சேதனத்தின்கணுள்ள அஞ்ஞானம்சம் அந்த ஞானத்தால் நாசமாம்; அவர் தாம் முத்தராவர்; மற்றவர் முத்தராகா ரென்பதாம். “அந்த அஞ்ஞான மொன்ருக விருக்கின்றது ; ஞானத்தால் நிவர்த்தியாகின்றது ; ஆனுல், எந்த அந்தக்கரணத்தில் அஞ்ஞான மிருக்கின்றதோ அந்த அந்தக்கரண அவச்சின்ன சேதனத்துள்ள அஞ்ஞான அம்சம் ஞானத்தால் நிவிர்த்தியாகின்றது ; அவனே முத்தனுகின்றுன். எந்த அந்தக்கரணத்தில் ஞானமுண்டாகவில்லையோ அங்கு அஞ்ஞான அம்சமும் பந்தமும் தங்குகின்றன ” என்று விசாரசாகரம் ஐந்தாவது தரங்கத்திற் கூறுகின்றது. மலைக் குகையில் அளவிறந்த காலமாகவுள்ள இருள் ஒருகாலத்தில் செவ்வையாக வேற்றிய தீபத்தால் நாசமாவதுபோல, சித்தக் குகையில் (சேதனத்தை யாசிரயித்து) அளவிறந்த காலமாகவுள்ள அஞ்ஞானம் ஒரு காலத்தில் தன்னை (ஆத்மாவை)ப் பிரஹ்ம மென்று சந்தேக விபரீதமின்றி யறியும் ஞானத்தால் நாசமாகின்ற தென்ப திங்குணர்தற்பாலதாம்.

“செப்பரிய வேகான்ம பக்கத்திற் போகத் திதியிலையென் றநேகான்ம பக்கமது கொளினு, மிப்பரிசு மிகுபோகத் திதிகூடாதாயிற் றிச்சங்கை யிருமதத்து மொக்குமே யென்னிற், பற்பலவி லேகான்ம பக்கமதில் விம்பப் பதிவிம்ப நியாயத்தாற் காரணவசை வாதி, மெய்ப்பரிய பலதிறத்தா லெண்ணிகழ்ந்த போக விளைவுகூ டுதலெளிதென் குதலுத்தி யாமால்” என்று வேதாந்த சூடாமணி கூறுவது மிங்குணர்தற் பாலதாம்.

41. தடத்து நீர்நிலாத் திரியொளி யுபயமுந் தழுவுமூர் தனைக்காக்கும், குடத்து நீர்விளக் கினிலொளி யிரண்டுமோர் குடும்பமாத் திரங் காக்கும், அடுத்த மைந்தனே ஞானியு மீசனு மறிவினாற் பிரிவில்லை, கெடுத்த மாயையின் குணங்களான் மேலென்றுங் கீழென்றும் பிரிவாமே.

42. நரரின் மன்னனைச் சித்தரைப் போலவே நாரணன் முதலான சுரர்கண் மாயைவல் லவரணி மாதிக டொக்கமா தவமிக்கோர் தரணி மானுடர்க் கவைகளில் லாமையாற் றாழ்வுள ரானாலும் பிரம பாவனை யாலிவ ரவரேனும் பேதமொன் றிலைபாராய்.

---

கு—விடை :—சாதுசங்கத்தை யடுத்துள்ள மைந்தனே! எங்ஙனம் தடாகநீர்-நிலாத்திரி (பகல்வத்தியின்) ஒளியென்னு மிரண்டும் ஓரூர் முழுதினையும்,குடத்து நீர்-விளக்கொளி யென்னு மிரண்டும் ஒரு குடும்ப முழுதினையும், நீர்தந்தும் ஒளி வீசியு மிரட்சிப்பதனாற் பேதமில்லாவிடினும், தடாக முதலிய வுபாதிகளாற் பெரிது சிறிதென்னும் பேத முடையனவாயிருக்கின்றனவோ, அங்ஙனமே ஞானியும் ஈசனும் அகம் பிரஹ்மாஸ்மி யென்னும் தத்துவ ஞானத்தினால் பேத மில்லாவிடினும், பிரகிருதியின் சத்துவ குண (மாயை) ரசோ குண (அவித்தை) உபாதிகளால் மேல் கீழென்னும் பேதமுடையவரா யிருக்கின்றனர். 41

மக்களுள்ளே துஷ்ட நிக்கிரகம் சிஷ்டபரிபாலனஞ்செய்யு மரசனையும் சாபானுக்கிரக சாமர்த்தியமுள்ள சித்தரையும் போன்று திருமால் முதலிய தேவர்கள் மாயை செய்வதிற் சமர்த்தராயும் † அணிமாதியஷ்ட ஐசுவரிய முங் கைவந்த மாதவமிக்கோராயு மிருக்கின்றனர். உலகத்திலே ஜீவன் முத்தர்க்கு அம்மாயா வல்லபம், அணிமாதியஷ்ட ஐசுவரிய மென்பன வில்லாமையால் அவர்கள் திருமால் முதலியவரினும் தாழ்ந்தவராயினும், அகம் பிரஹ்மாஸ்மி பாவனையால் ஞானிக ளிழிந்தவர், திருமால் முதலியோ ருயர்ந்தவரென்னும் பேதஞ் சிறிது மில்லையாம். அன்பனே! நீ இதனை யூகித்துப் பார்ப்பாயாக. 42

---

† அணிமாதியஷ்ட ஐசுவரியமாவன:—அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசித்துவம், வசித்துவ மென்பனவாம்.

1. அவற்றுள், சங்கற்பமாத்திரத்தால் பிரகிருதியை (சுபாவத்தை)க் கெடுத்தலால் பரமாணுவைப் போலத் தேகம் சூக்ஷ்மமாதல் அணிமாவாம்.

2. பிரகிருதியைப் பூரித்தலால் ஆகாயாதிகளைப் போலத் தேகம் பெரிதாதல் மகிமாவாம்.



43. முத்தி நல்கிய சற்குரு வேபல முனிகளுக் கணிமாதி
சித்தி பூமியிற் கண்டிருக் கவுமந்தச் செல்வமீ சனதென்றீர்
புத்தி யோத்திட வுரைத்தரு ளென்றிடிற் புகழுமீ சனைநோக்கிப்
பத்தி செய்திடுந் தவத்தினு லியோகத்தாற் பலித்ததென் றறி
[வாயே.

---

சீடன், அணிமாதி யஷ்டஐசுவரியம் ஈசுரனதாயின், அவ்வைசுவரியம் மக்களிடத்து மிருப்பானேனென்று வினவுதலும் அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினா:—சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தியென்னும் மோட்சத்தினைத் தந்தருளிய தேசிகோத்தமரே! வசிஷ்டர், வியாசர் முதலிய பல முனிவர்கட்கு அணிமாதி யஷ்ட சித்திகளுண்டென்பது சாஸ்திரவாயிலாக வறியப்பட்டிருக்கவும், அவ்வணி மாதியைசுவரிய மீசுரனுக்குரியதென்று கூறியருளினீர். அவ்வைசுவரியமவர்கட் கின்ன காரணத்தா லுண்டாயிற்றென்பதை யென் புத்தி சம்மதிக்கும்படி யுரைத்தருளல் வேண்டும்.

கு—விடை:—அன்பனே! அம்முனிவர்கள் பரமேசுவரனை நோக்கிச் செய்த ¶ பத்தியினாலும் கிருச்சிரம் சாந்திராயண முதலிய தவங்களாலும் § இயமநியமாதி யஷ்டாங்கயோகத்தாலும் அவ்வணிமாதிச் செல்வம் அவர்கட்குச் சித்தித்ததென்றறியக் கடவாய். 43

---

3. மிக இலகுத்துவமு (எண்மையு) டையனவா யிருக்கும் பஞ்சு முதலியன மலை முதலியவற்றைப் போலக் குருத்துவமு (திண்மையு)டையனவாதல் கரிமாவாம்.

4. மிகக் குருத்துவமுடைய பர்வத முதலியன பஞ்சு முதலியவற்றைப்போல இலகுத்துவ முடையனவாதல் இலகிமாவாம்.

5. சகலமும் முன்னிற்றல் பிராப்தியாம்; அது பூமியிலிருந்து கொண்டே விரல் நுனியால் சந்திரனைத் தொடுதல் போல்வதாம்.

6. இச்சித்தபடி முடித்தல் பிராகாமியமாம்; அது ஜலத்திற்போலப் பூமியிலும் முழுகி எழும்புதல் முதலியனவாம்.

7. பூதபௌதிகங்களைச் சிருஷ்டித்தல் திதித்தல் சங்கரித்தலாகிய விசேஷ சாமர்த்தியம் ஈசித்துவமாம்.

8. பூதபௌதிகங்களைச் சுவாதீனம் (வசம்) செய்தல் வசித்துவமாம்.

¶ அந்தக்கரணம் (சித்த விருத்தி) பகவதாகாரமாதல் பத்தியாம். வயலிற் பாய்ந்த நீர் வயலாகார (வடிவ) மாவதுபோல, பகவானிடத்துச் சென்ற

44. சிவசோ ரூபமாந் தேசிக மூர்த்தியே சித்திமுத் தியிரண்டும்,
தவமு ளோரடை குவரேனி லவர்கள்போற் சகலரு மடை
வாரே, அவர்கள் பூருவஞ் சித்தியு ஞானமு மடைந்ததுங் கண்
டோமே, இவர்கண் ஞானிக ளேன்றிடிற் சித்திக ளிவர்க்கிலா
வகையேதோ.

---

சீடன், சித்தி முத்தி யிரண்டற்கும் தபசே காரணமாயின், இப்போதுள்ள ஞானிகளிடத்துச் சித்தியில்லாதிருப்பதற்குக் காரண மியாதேன வினவுதலும் அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வின:—சிவ சொரூபமாய் விளங்குந் தேசிக மூர்த்தியே! தவமுடையவர் சித்தி முத்தி யென்னுமிரண்டையு மடைவாரென்று சுருதி கூறுமாயின், அத்தவமுடையவரைப் போல இக்காலத்துள்ள தவமுடையவ ரியாவரு மவ்விரண்டையு மடைய வேண்டுமல்லவா? அத்தவமுடையவர் முன்னே சித்தி முத்தி யென்னு மிரண்டையு மடைந்தா ரென்பதையும் நாம் சாஸ்திர வாயிலாக வறிந்திருக்கின்றனம். இக்காலத்துள்ள இவர்களை ஞானியரென்று கூறின், இவர்களிடத்து அணிமாதிசித்திக ளில்லா திருக்குங் காரணம் யாது? அதனைத் தயைகூர்ந் தருளல் வேண்டும். 44

---

சித்தவிருத்தி பகவதாகார (பகவானது வடிவ) மாதல் பத்தியாம்; பகவானை மன மொழி மெய்களின் மகிழ்ந்துவணங்குத லிதற்கங்கமா மென்க.

கிருச்சிரம் சாந்திராயண முதலிய தவங்களி னிலக்கணத்தைப் பராசர ஸ்மிருதியிற் காண்க. இவை பாவநிவிர்த்தியின்பொருட்டுச் செய்யப்படும் பிராயச்சித்தங்களாம். மன - இந்திரியங்களின் ஏகாக்கிரமே தவமாம்; உண்டி சுருக்கல், வெயினிலை நிற்றல், நீர்நிலை நிற்றல் முதலியன இதற் கங்கமாம். மனநிக்கிரகம் - சமமாம்; இந்திரிய நிக்கிரகம் தமமாம்.

§ இயமநியமாதி யஷ்டாங்க யோகத்தி னியல்பை அடயோகப் பிரதீபிகையிற் காண்க. "யோகமென்பது என்னிடத்து (பகவானிடத்து) ஒரேமனதா யிருத்தல்" என்று ஆதித்திய புராணங் கூறுகின்றது. ஞானேந்திரிய பஞ்சகம் மனத்துடன் ஆத்மாவில் நிலைத்து நிற்க, புத்தி வியாபாரமற்றுள்ள நிலை யோகமாம்.



45. காமி யத்தவங் காமிய மோன்றையுங் கருதிடாத் தவமேன்றும்,
பூமி யிற்றவ மிருவகை சித்தியும் போதமுந் தருமைந்தா, ஆமி வற்
றிலோன் றியற்றினு ரோன்றையே யடைகுவ ரிதுதீர்வை,
யாமு ரைத்தவவ் விரண்டையு மியற்றினு ரன்றுள பெரியோரே.

46. அனக மைந்தனே முத்திஞா னத்தையே யடைந்தன ரல்லாமல்
சேனகன் மாபலி பகீரதன் முதலினேர் சித்திகள் படித்தாரோ
இனிய சித்தியே விரும்பினுர் சிலர்சில ரிரண்டையு முயன்றுரம்
முனிவர் சித்திகள் விநோதமாத் திரந்தரு முத்தியைத் தாராவே.

---

கு—விடை:—மைந்தனே! † உலகத்திலே தவமானது காமியத்தவம் நிஷ்காமியத்தவமென விருவகைத்தாம்; அவ்விரண்டனுள், காமியத்தவம் அணிமாதி சித்திகளையும், நிஷ்காமியத்தவம் தத்துவ ஞானத்தையும் தருவனவாம். இவ்விரு தவத்துள், ஒரு தவத்தைச் செய்தவர் ஒருபயனையே யடைவர்; இது நிச்சயமாம். யாங் கூறிய அவ்விரு தவத்தையும் அக்காலத்துள்ள வியாசர் முதலிய மகாத்துமாக்கள் செய்தார்கள். அதனல் அவர்கள் சித்தி முத்தி யென்னு மிரண்டையும் பெற்றிருந்தார்கள். 45

பாவமற்ற மைந்தனே! ஜனகன், மாபலி, பகீரதன், ஜடபாதர் முதலிய பெரியோர்கள் சமையலுக்குத் தீப்போல மோட்சத்திற்கு நேர்சாதனமாயுள்ள தத்துவ ஞானத்தை யடைந்தார்களே யல்லாமல் $ அணிமாதி சித்திகளை யப்பியசித்தார்களா? இல்லையே. அவர்களை ஞானியால்ல ரென்று

---

† "வியாசாதிகள்போலச் சாபானுக்கிரக சாமர்த்தியமெவனுக்குண்டோ அவனே தத்துவஞானியல்லாமல், வேறொருவனுகானெனின், அச்சாமர்த்தியம் தபசின் பயனே யல்லாமல், தத்துவ ஞானத்தின் பயனன்று. அன்றியும், தத்துவ ஞானத்திற்குத் தபசே மூலமென்னுஞ் சுருதி யிருத்தலால், தபோராகிதனுக்குத் தத்துவ ஞானமேதெனின், சாபாதிகளுக்குக் காரணம் காமிய தபசென்றும், நிஷ்காமிய தபசினல் தத்துவஞான முண்டாமென்று மறிக. அவ்வியாசாதிகளுக்குத் தத்துவ ஞானம் சாபாதி சாமர்த்தியமிரண்டு மிருத்தலென்னெனின், அவர்களுக்கு இருவகைத் தவமுமிருத்தலால்ஞானம் சாமர்த்தியமென்னு மிரண்டுபயனு முண்டு. ஒவ்வொன்றை யாசிரயித்தவனுக்கு ஒவ்வொன்றே சித்திக்கும். அதனல் விரோதமில்லை" என்றுவேதாந்த பரிச்சேதங் கூறுவதிங் குணர்தற் பாலதாம். காமியத்தவம் - பயனேக்கிச் செய்யுந் தவமாம்; நிஷ்காமியத்தவம் - பயனேக்காது செய்யுந் தவமாம்.

$ "சித்திநெறி கேட்டல் செகமயக்கஞ் சென்மமற
முத்திநெறி கேட்டல் முறைகாண் பராபரமே"
"கற்றாலுங் கேட்டாலுங் காயமழி யாதசித்தி
பெற்றாலு மின்ப முண்டோ பேசாய் பராபரமே."

என்று தாயுமானவ ரருளியிருப்ப திங்குணர்தற் பாற்றும்.

47. யோக ஞானமே முத்தியைத் தருமேனி லொழிந்தசித் திகள் வேண்டி, மோக மாயுடல் வருந்தினுர் சிலசில முத்தர்க ளேனென்றுல், போக மாய்வரும் பிராரத்த கர்மங்கள் புசித் தன்றே நசித்தேகும், ஆகை யாலந்தச் சித்திகள் பிராரத்த மாகு மேன் றறிவாயே.

48. இலக்க மாயிரஞ் சுருதியா லூகத்தா லேன்மன மசையாமல், பெலக்க வேண்டுமேன் றருள்தரு வேயகப் பிராந்திபோய்த் தேளிவானேன், துலக்க மானகண் ணுடியை யடிக்கடி துலக் கிறைற் பழுதன்றே, அலக்கண் மாற்றிய தேவரீ ரேனக்குரை யமிர்தங்க டேவிட்டாவே

---

கூறலாமா? இவர்கள் தத்துவஞானிகளேன்பது உலகப் பிரசித்தமல்லவா? சில முனிவர் அணிமாதிசித்திகளையே விரும்பித் தவத்தைச் செய்தனர்; சில முனிவர் சித்தி முத்தியேன்னு மிரண்டையும் விரும்பித் தவத்தைச் செய்தனர். அம்முனிவர்களடைந்துள்ள அணிமாதி சித்திகள் வானிலே பறத்தல் மண் ணிலே நுழைதல் முதலிய விளையாட்டைமாத்திரந் தருமே யல்லாமல் மோட்சத்தைக் கோடுப்பனவல்லவாம். 46

சீடன், ஜீவன் முத்தர்களுள் சிலர் சித்தியை விரும்பி வருந்தியதேனேன்று வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினு:—அன்பே யுருவாயுள்ள குருவே! ‡ யோக ஞானமே மோக்ஷத்தைத் தருமாயின், சூடாலை முதலிய சிற்சில ஜீவன் முத்தர்கள் மோக்ஷத்தைத் தருதலொழிந்த அணிமாதி சித்தி களை மோகங்கொண்டுவிரும்பி யுடல்வருந்தியதேன்?

கு—விடை:—அன்பனே! சுகதுக்க அனுபோக வடிவமாய் வருகின்ற பிராரத்த கன்மங்கள் அனுபவித்தாலல்லவா கேடும்; ஆதலால், அவர்க் ளடைந்த அச்சித்திகள் அவர்களது பிராரத்த கன்மத்தின் பயனுதமேன்று நீ அறியக்கடவாய். 47

சீடன், இன்னு முபதேசிக்கவேண்டுமேன்னுங் கருத்தினனுய்க் குருவை வியந்து துதித்தல்.

சீ—வினு:—அளவிறந்த சுருதி வாக்கியங்களாலும் அளவிறந்த யுக்திகளாலும் என்னுடைய மனம் சொரூபத்தின்கண் ஐயத்தினுற் சலனப்படாது ஸ்திரமாயிருக்க வேண்டுமென்று யான் வினவும்

---

‡ யோகஞானம் - யோகத்தின் வாயிலாக வுண்டாகுந் தத்துவ ஞானம். "யோகியர்க்கே ஞான மொழுங்காம்பே ரன்பான, தாகியரு மியோக முன்னே சார்ந்தார் பராபரமே" என்று தாயுமானவர் கூறுவதறிக.



49. கைத வங்களைச் சாத்திரஞ் சோல்லுமோ கருணையா லேனையா ளும், ஐய னேகுரு வேயேவ ராகிலு மநுபவித் தாலன்றிச், சேய்த கர்மங்கள் விடாவேன்ற வசனமுஞ் சேன்மசஞ் சிதம் வேவத், துய்ய ஞானத்தீச் சுடுமேன்ற வசனமுந் துணிவதேப் படிநானே.

---

வினுக்கட்கெல்லாந் தக்கவாறு விடை யருளுகின்ற குரு மூர்த்தியே! தங்களது உபதேசத்தினுல் பேதப் பிராந்தி, கருத்திருத்துவ போக் திருத்துவப் பிராந்தி, சங்கப் பிராந்தி, விகாரப் பிராந்தி, பிரஹ்மத் திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப் பிராந்தி யென்னும் பஞ்சப்பிராந்தியு மெனது அந்தக்கரணத்தினின்று மொழிய அதனுல் தெளிவுடையவனுயினேன். பிரகாசமான கண்ணுடியை யடிக்கடி துலக்கினுல் யாதொரு பழுதுமில்லையல்லவா? அதனுல், தேவரீ ரடி யேற் குபதேசியாநிற்கும் வாக்கியாமிர்தங்கள் தெவிட்டாதனவா யிருக்கின்றன. ஆதலா லடியே னின்னுந் தங்களது உபதேசத்தைக் கேட்க விரும்புகின்றேன்; அருள் புரியவேண்டும். 48

கு—விடை:—மாணவ சிரோமணியே! நீ விரும்பியவாறு கேட்கக் கடவாய்.

சீடன், பரஸ்பரம் விரோதமுள்ள வேதவாக்கியங்களில் பிரமாணமாகக் கோள்ளத்தக்கது யாதேன்று வினவுதலும் அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினு:—"வலியப் பிடித்தாண்டனையகோ" என்ற வாறு மார்ச்சால நியாயமாகக் கருணையினு லடியேனை யாண்டருளிய தேசிகோத்தமரே! ‡ சாஸ்திரங்கள் அசத்திய வார்த்தைகளைக் கூறு மோ? கூறுவல்லவா? யாவராயிருப்பினு மவர் தாஞ் செய்த சஞ்சித கர்மங்களை யனுபவித் தொழித்தாலல்லாமல் அவை நாசமாகாவென் னும் வசனமும், ¶ அளவிறந்த ஜன்மங்கட்குக் காரணமாயுள்ள சஞ் சித கர்மம் வெந்து சாம்பராம்படி அதனை ஞானக்கினி தகிக்குமென் னும் வசனமும் சாஸ்திரங்களிலிருத்தலின், § அவ்விரு வசனங்களுள் இஃதுண்மை, இஃதுண்மையன்றென் றொன்றை யான் நிச்சயிப்ப தெப்படி? அச் சந்தேகத்தை யொழித்தருளல் வேண்டும். 49

---

‡ "சிவம்போல வேதமுமற் றொன்றினுக்குச் சேடமாகா, தெத் "ஆதலான் மறையிற் சொலப்பட்ட வருத்தமே யுண்மையானது" என்றும்,

50\. சீவ பேதங்க ளளவிலை மைந்தனே செய்கையு மளவில்லை
ஆவ வாமவ ரவரதி காரங்க ளறிந்துபக் குவநோக்கிப்
பூவ லர்ந்துபின் பலங்கள்காட் டுவனபோற் பூருவஞ் சித்தாந்தம்
காவல் வேதங்க ளிரண்டையும் வசனிக்குங் காண்டமூ வகை
[யாலே.

---

கு—விடை :—மைந்தனே ! 'அகமேனுமந்தக்கரணோபாதிக ளளவிலை யாதலினால்' சீவ பேதமு மளவிறந்தனவாம்; அச் சீவர்களது அந்தக்கரணத்

---

தகைய வுயிர்களுக்குந் தாய்போல வுண்மையையே யெடுத்துச்சொல்லும்" என்றும் சூதசங்கிதை கூறுவதிங் குணர்தற் பாற்றும்.

¶ "ஒவ்வாத பவநோய்முற் றொழிக்குமருந் துயர்ஞானம்" என்று சூத சங்கிதை கூறுவதிங் குணர்தற் பாற்றும்.

§ "அவ்விரு வசனங்கள்:—நூறு கோடி கற்பங்களாலும் கர்மம் போக மின்றி நாசமாகாது; ஆனால், 'செய்யப்பட்ட சுபாசுப கர்மங்கள் அவசியம் அனுபவிக்கத் தக்கனவேயாம்;" "எப்படி நன்றாகச் சுவலித்துக் கொண் டிருக்கிற அக்கினி விறகுகளை யெரித்துச் சாம்பராக்குமோ அப்படி ஞானக் கினி சகல கருமங்களையும் சாம்பராக்கி விடும்" என்றற் றொடக்கத்தனவாக விருப்பனவாம்.

"அசுபகர்மத்தினின்று முண்டாகிய அசுபவாசனா ரூப மூளை சற்சங் காதி யுபாயங்களால் நாசமாம்; சுபகர்மத்தினின்று முண்டாகிய சுபவா சனா ரூப மூளை துர்ச்சங்க முதலியவற்றால் நாசமாம். சாஸ்திரத்தில் எவ்வளவு புருஷார்த்தம் சொல்லப்பட்டிருக்கின்றதோ அதனால் பிரவிருத் திக் கேதுவான வாசனை நசிக்கின்றது; ஆதலால், புருஷார்த்தமும் ஸபல மாம். போகத்திற்கேதுவான அதிர்ஷ்டம் நாசமடைவதில்லை. ஆதலால் "பலத்தைக்கொடுக்காமல் கர்மம் நிவிர்த்தியாவதில்லை" என்று சாஸ்திரம்கூறு வதற்கும் விரோதமில்லை. இவ்வாற்றால் அஞ்ஞானிக்குப் பலபோக மின்றிக் கர்மம் நிவிர்த்தியாகாது ; ஞானிக்கோ போகமின்றியும் கர்மம் நிவிர்த்தியா கின்றது ; எனெனின், கர்மம் கர்த்தா பலனென்பன பரமார்த்தமாகவோ இல்லை ; ஆனால், அவித்தையாற் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. அந்த அவித் தைக்கு ஞானம் விரோதியாம். ஆதலால், அவித்தியா கற்பித கர்மாதிகளும் ஞானத்தால் நாசமாகின்றன. சொப்பனத்தில் நித்திரையாற் றோன்றும் பதார்த்தம் சாக்கிரத்தில் நித்திரையி னிவிர்த்தியாற் றோன்றியமைபோல, அவித்தியா ரூப நித்திரையாற் றோன்றும் கர்மம் - கர்த்தா - பலனென்பன வும் ஞான தசை வடிவ ஜாக்கிரத்தில் அவித்தையி னிவிர்த்தியால் அபாவ மாகின்றன; ஞானமின்றி அபாவ மாவதில்லை" என்று விசாரசாகரம் இரண் டாவது தரங்கத்திற் கூறுவதிங் குணர்தற் பாலதாம்.



51\. ஆன பாவிக ளடைவன நரகங்க ளவசிய மானாலும்
தான மந்திர விரதவோ மங்களாற் றவிருமேன் பதுபோய்யோ
ஈன மாம்பல சன்மசஞ் சிதவினை யெத்தனை யானாலும் [டே.
ஞான மாங்கனல் சுடுமென்ற மறைமொழி நம்பினால் வீடுண்

---

தின்கண் காமம், சங்கற்பம், சந்தேகம், சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதை ரியம், லஜ்ஜை, தீ (புத்தி), பயம் என்றற் றொடக்கத்தன வளவிறந்திருத்தலின் அவர்களது செயல்களுமளவிறந்தனவாம். அவ்வாறிருத்தலால், அச்சீவர்கட் குத் தருமாதருமங் (இருவினை)களால் ஆவத்தக்கன ஆவனவாம். $ வேதமா னது கர்மம்-பத்தி-ஞானமென்னுங் காண்டத்திரயத்தால் அவ்வச் சீவர்களது அதிகாரங்களை யறிந்து, அந்தக்கரணத்தின் பரிபாகத்தைநோக்கி, முன்னே பூ விட்டுப் பின்னே பலத்தைக் கொடுக்கின்ற மாமுதலிய விருட்சங்களைப் போன்று (எவராகிலு மனுபவித்தாலன்றிச் செய்தகர்மங்கள் விடா என்னும்) பூர்வபக்கம், (சென்மசஞ் சிதம்வேவத் துய்ய ஞானத்தீச் சுடுமென்னும்) சித்தாந்த மென்னு மிரண்டையும் கூறுகின்றது. 50

பாவிக ளடைவதற் குரியனவாயுள்ள நரகத் துன்பங்கள் நிச்சயமாக வுளவாயினும், அவை கோதான முதலியன செய்தல், பஞ்சாட்சர முதலிய மந்திர ஜபம், கிருச்சிரம் சாந்திராயண முதலிய விரதங்களைப் புரி தல், அசுவமேதாதி யாகங்களை யியற்றல் (ஈசுவர நாம உச்சாரணம், கங்காஸ்நானம்) என்னும் ¶ பிராயச்சித்தங்களால் பாவம் நிவிர்த்தியாவதா லொழிந்துபோமென்று சாஸ்திரங் கூறுவது பொய்யாமா ? பொய்யாகா தல்லவா ? அங்ஙனமே, அளவிறந்த ஜன்மங்கட்குக் காரணமாயுள்ள சஞ்சித கர்மங்களெவ்வள விருப்பினும் அவற்றை ஞானாக்கினி தகித்துவிடுமென் னும் வேதத்தின் சித்தாந்த வாக்கியத்தை நம்பி யொழுகினால் சஞ்சித வினை முற்று மொழிவது வாயிலாக மோக்ஷம் நிச்சயமாக வுண்டாம். (இதனால் வேதங்களின் வாக்கிய பேத காரணம் நன்கு விளங்கும்.) 51

---

$ வேதம் "தான்மாளாக் கிரியையர்க்குக் கிரியை சாற்றுஞ் சாதனமு ளோர்க்குணர்வைச் சாற்றும்" என்க. சொரூபாநந்த சித்தி யென்னும் பிரமகீதை "கேட்பவ னுடைய சித்தம் பரிபாக மிலாமை கண்டு, மீட்சி யாய் வசம தின்றி வேதமோ ரிடத்தி னோர்கால், காட்சிய தின்றி யுள்ள பாத் தினை யொழிந்து வேறு, மாட்சியி னென்றுண் டாக வகுத்துரை செய்த தன்றே" என்று கூறுவதும், அஞ்ஞான நிவிர்த்தி நாடகம் "யாகத்தாற் றானத்தால்," என்னுஞ் செய்யுளில் "முன்முன்மறை பின்பின்மறைக் குதவி காணே" என்று கூறுவது மிங்குணர்தற்பாலனவாம்.

¶ பாவநாசத்தின் பொருட்டு விதிக்கப்பட்ட கர்மம் பிராயச்சித்த மெனப்படும்.

52. என்ம னந்திருக் கோயிலாத் தினங்குடி யிருந்தருள் குருமூர்த்தி
சென்ம சஞ்சித வினைகள்வே ரறுத்திடுந் தேவரீர் மெய்ஞ்ஞானம்
தன்ம யந்தரு மகிமையை விபுதராஞ் சமர்த்தரு மறியாமல்
கன்ம மாங்குழி யினில்விழுந் தழிகின்ற காரண முரையீரே.

53 அழிவி லாததற் பதந்தனை மைந்தனே யகமுகத் தவர்சேர்வர்
வழிந டப்பவர் பராமுக மாயினுன் மலர்ந்தகண் ணிருந்தாலும்
குழியில் வீழ்வர்கா ணப்படி வெளிமுகங் கொண்டுகா மிகளா
பழித ரும்பிற விக்கட லழுந்துவர் பரகதி யடையாரே. [னோர்

சீடன், சஞ்சிதவினையை முற்றுங் கெடுக்கும் ஞானத்தை யடையாது கர்மப் படுகுழியில் அறிஞரும் விழுந்தழுந்துதலேனென்று வினவுதலும் அதற்குத் தரு விடை கூறுதலும்.

சீ:—வி:—எனது மனத்தையே திருக் கோயிலாகக் கொண் டெப்போது மெழுந்தருளி யிருக்கின்ற குருமூர்த்தியே! ஜன்மகாரண மான சஞ்சித கர்மங்களை அவற்றிற் காதாரபூதமான அஞ்ஞானத் தோடு கெடுக்கின்ற தத்துவஞானமானது நான் சிவமே யென்று தன்மயமாக விளங்குகின்ற நிலையினைத் தருகின்ற மகிமையினை விரிந்த வறிவினையுடையவராகிய $ பண்டிதரு முணராது கன்மப் படுகுழியில் விழுந்து கிலேசமடையுங் காரணத்தைத் தேவரீருரைத் தருளல் வேண்டும். 52

கு—விடை:—ஞானபுத்திரா! நாமரூப நாட்டத்தை விட்டுச் § சொரூப நாட்ட முடையவரா யிருப்பவர் சர்வம் மித்தை, சர்வம் பிரஹ்மம், சர்வம் நானேன்னும் திடநிச்சய முடையவரா யிருத்தலின், நித்திய நிரதிசயாநந்த வடிவப் பிரஹ்மமாகவே விளங்கும் நிலையினைத் தவறா தடைவர்; ஏனை யோ ரடையார். பிரயாணஞ் செய்பவர் அசட்டையாகச் செல்லின் விழித்த கண்ணோடிருப்பினும் எங்ஙனம் வழியிலுள்ள குழியில் விழுந்து

$ பண்டிதரு மென்றது "சஞ்சிதா திகளாம் பந்தந் தன்னையைங் கருமத் தாலும், பஞ்சுதீ யுற்ற தென்னப் பாறுவித் தெக்கா லத்தும், எஞ்சுறுச் சுவர்க்க மெய்தி யினிதுவீற் றிருந்த ரூனே, துஞ்சுறு முத்தி யீதே சுருதியின் முடிவா மன்றே." கருமத்தா லுலகந் தோன்றுங் கடவுளென் றொருவ னில்லை, சுருதிச்சொல் லொருவன் சொற்ற தன்றுநற் சுவர்க்க முத்தி, தெரி வுற்றால் வினையி னுகும்" என்று கூறுகின்ற பூர்வமீமாம்சகரை; அவர் சைமினி-சபரர்-பட்டபாதர்-பிரபாகரர் முதலியோராவர்.

§ சொரூப நாட்டமாவது திருசிய மனைத்தையும் அஸ்தி பாதிப் பிரிய (சச்சிதாநந்த) வடிவமாகக் காண்டல்.



54. சிறந்த நன்மையுந் தீமையு மீசனுர் செய்விக்குஞ் செயலன்றோ,
பிறந்த சீவர்க ளென்செய்வ ரவர்கண்மேற் பிழைசொலும் வழி
யேதோ, துறந்த தேசிக மூர்த்தியே யென்றிடிற் சுருதிநூற்
பொருண்மார்க்கம், மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்தி
காண் மைந்தனே யதுகேளாய்.

கிலேச மடைவரோ, அங்ஙனம் நாமரூப நாட்டத்தால் ‡ பகிர்முகப்பட்டு ("வேளாண்மை முதலிய தொழில்களாலுண்டாகும் பயிர்முதலாயின நசிப் பனபோல யாகாதி கருமங்களாலுண்டாகும் சுவர்க்காதி போகங்களும் நசிப்பனவாம்" என்னுஞ் சுருதியையுணராது) சுவர்க்காதி போகங்களில் விருப்புடையவரா யிருப்பவர் மிக்க வறிவுடையவரா யிருப்பினும் ¶ பிறவிப் பெருங்கடலில் விழுந்து கிலேச மடைவார்; தன்மயமாக விளங்கும் பரகதி யை யடையவே மாட்டார். இதனை நீ நன்றாக வுணரக்கடவாய். 53

சீடன், "ஈசன்முற் றறிவான் வியாபி யெவைக்கு மேது" என்று கூறப்படுதலின், எல்லாஞ் சிவன்செயலன்றோ? அங்ஙனமாக, ஜீவர்கள்மீது தவறு யாது என்று வினவுதலும், அதற்குத் தரு விடை கூறுதலும்.

சீ—வி:—யானெனதென்னுஞ் செருக்கை முற்றுமொழித்த தேசிக மூர்த்தியே! ஜீவர்களியாவருஞ் செய்யும் நல்வினையும் தீவினையும் சூத்திரதாரிபோன்று சுதந்தரனுள்ள பரமேசுவரன் செய்விக்குஞ் செயலல்லவா? அங்ஙனமாக, சூத்திரப் பாவை போன்று சுதந்தரமின்றி அவன் பிறப்பித்தவாறு பிறந்த அச்சீவர் கள் யாது செய்வார்கள்? அவர்கள்மீது ஒரு தவறுமில்லையே? தவ றில்லாதிருக்கவும், இவன் புண்ணியவான், இவன் பாவியென அவர் கள் மீது குற்றங் கூறுங் காரணம் யாது? அதனைத் தேவரீர் கூறி யருளல் வேண்டும்.

கு—விடை:—அன்புள்ள புத்திரனே! நீ கூறிய விது சுருதி ஸ்மிருதி களி னர்த்தக்கிரமத்தை யாராய்ந் தறியாத மூடர்கள் கூறும் பிராந்தி வாக் கியமாகும்; அவ்வர்த்தக்கிரமத்தைக் கேட்பாயாக. 54

‡ பகிர்முகப் படுதலாவது அடங்காச் சித்த முடையவாதல்.

¶ அசட்டையின்றி விழித்த கண்ணோடு பிரயாணஞ் செய்பவர் தாங் குறித்த ஊரைத் தவறாதடைவது போல, நாமரூப நாட்டமின்றிச் சொரூப நாட்டத்தோடு தங்காலத்தைக் கழிப்பவர் தாங்குறித்த பரகதியைத் தவறா தடைவர்; அசட்டையாய்த் திறந்த கண்ணோடு பிரயாணஞ் செய்பவர் தாங் குறித்தவூரை யடையாது படுகுழியில் விழுந்துகிலேசமடைவதுபோல, சுருதி

55. திகழ்ந்த வீசனுர் சிருட்டியுஞ் சீவனுர் சிருட்டியும் வெவ்வேறே, சகந்த னிற்போது வீசனுர் சிருட்டிகள் சராசரப் பொருளேல் லாம், அகந்தை யாமபி மானங்கள் கோபங்க ளாசைக ளிவை யெல்லாம், இகழ்ந்த சீவனுர் சிருட்டிக ளாகுங்கா ணீசனுர் செயலன்றே.

† ஈசுவரசிருஷ்டி ஜீவசிருஷ்டியெனச் சிருஷ்டி யிருவகைத்தாம். நடப்பன நிற்பனவாகிய சராசரப் பொருள் யாவும் ஈசுவர சிருஷ்டியாம் (ஈசுவரனுல் படைக்கப்பட்டனவாம்); இவையென்றும் யாவர்க்கும்பொதுவா யிருப்பனவாம். தேகாதிப் பிரபஞ்சத்தில் யானெனதென்னும் அபிமானங்களும், காமம்-வெகுளி- கடும்பற்றுள்ளம் - மானம் - உவகை - மதமெனப்பட்டவைகளும் பிறவும் மனேகற்பனையா யிருத்தலின், ஜீவசிருஷ்டியாம். யாவர்க்கும் பொதுவாயிராது ஒவ்வொருவர்க்கே சிறப்பாயுள்ள இவை ஈசுவர சிருஷ்டியன்றாம். 55

*தாற்பரியமுணர்தலில் பராமுகமாய் விரிந்த வறிவோடு கருமஞ்செய்து வருபவர் தாங் குறித்த பரகதியை யடையாது பிறவிப் பெருங் கடலில் விழுந்து கிலேசமடைவ ரென்பதிங் குணர்தற் பாலதாம்.*

† *"அந்த விஷயமொன்றில் ஈச்சுர நிர்மிதமான ஏகாகாரமும் சீவகற்பிதமான அநேகாகாரமுமானதற்குத் திருஷ்டாந்தம் வருமாறு:—*

*ஈச்சுரனுல் நிர்மிதமான இரத்தினுதி வஸ்துக்கள் ஒரு விதமாயிருக்கினும் போக்தாக்களின் புத்தி கற்பித நாநாவிதத்தால் அவை தம்மைப் பெற்றவர்க்குப் பிரீதி விஷயமும், பெருதவர்க்குத் துவேஷ விஷயமும், விரக்தனுக்கு உபேக்ஷா விஷயமுமாம்.*

*இதனை விளக்குதற்பொருட்டு மற்றுமொரு திருஷ்டாந்தம் வருமாறு:—*

*ஒரு ஸ்திரீயின் மாம்சமயமான வடிவம் ஒரே விதமாயிருக்க அந்தஸ்திரீ போக்துருக்களின் புத்தி கற்பிதாகாரத்தால் பிதாவுக்குப் புத்திரியென்றும், கணவனுக்கு மனைவியென்றும், மகனுக்கு மாதாவென்றும் வெகுவித மானாற்போல, ஏகாநேகப் பிரகாரமாகிய விடயமெல்லாம் ஈசுவர நிர்மிதம், சீவகற்பிதமென இருவகையாம். ஈச்சுர நிர்மிதமான பிரபஞ்சம் பாதகமில்லாததும், குருசாஸ்திர ரூபத்தால் மோக்ஷ சாதனமும், தன்னுல் நீக்கக்கூடாததுமாயிருத்தலால், அஃது அங்ஙனமே நிற்க, சீவ கற்பிதப் பிரபஞ்சமே அநேகாகாரமாயிருத்தலால் மோக்ஷ விருப்புடையோரால் நீக்கத்தக்கதாம்."* என்று வேதாந்த பரிச்சேதங் கூறுகின்றது.



56. மூவ ராம்பரன் சிருட்டிக ளுயிர்க்கெலா முத்திசா தனமாகும்
சீவ னுர்செயுஞ் சிருட்டிக டங்களைச் செனிப்பிக்கும் பிணியாகும்
தாவ ராதிக ணசித்திடி லொருவர்க்குஞ் சனனங்க ணசியாவாங்
கோப மாதிக ணசித்திடிற் பந்தமாங் கொடும்பிற விகள்போமே.

57. ஈசர் காரியம் பிரளயத் தொழியவு மெவர்பவ மொழிந்தார்கள்
தேச காலதே காதிக ளிருக்கவுஞ் சீவகா ரியமோகம்
நாச மாக்கிய விவேகத்தி னுயிரோடு ஞானமுத் தர்களானுர்
பாச மோகங்கள் பசுக்களின் செயலன்றிப் பசுபதி செயலன்றே

58. அச்சு வத்தமென் ருெருமர மதிலிரண் டரும்பற வைகள்வாழும்
நச்சு மங்கொரு பறவையம் மரக்கனி நன்றுநன் றெனத்தின்னும்
மெச்சு மங்கொரு பறவைதின் ணுதென வியங்கியப் பொருளாக
வைச்சு மாமறை சீவனை யீசனை வகுத்தவா றறிவாயே.

மும்மூர்த்தி வடிவாயுள்ள பரமேசுவரனது சிருஷ்டிகள் (மாயையின் காரியமான சராசரப் பிரபஞ்சம் குருசாஸ்திராதி ரூபமாய்ச்) சர்வ ஜீவர்கட்தும் மோட்சசாதனமா யிருப்பனவாம். ஜீவகற்பிதமான சிருஷ்டிகள் இருவினை வடிவமாய் அவர்களை மக்கள், தேவர், நாரகர், பசு, பட்சி முதலியனவாகப் பிறக்கச் செய்யும் பந்தங்களா யிருக்கின்றன.

ஈசுவர சிருஷ்டியான தாவர (நிற்கும் பொருள்) முதலியன நாசமாதமாயின், ஒருவர்க்கும் பிறப்பு நாசமாவதில்லையாம்; ஜீவ சிருஷ்டியான கேர்ப முதலியன நாசமாதுமாயின், அது நாசமாம்; ஆகவே, ஈசுர சிருஷ்டி மோக்ஷசாதனமும், ஜீவ சிருஷ்டி பந்த சாதனமுமாம். சீவர்கள் மோக்ஷ மடைதற்கு ஈசுவர சிருஷ்டி தவிர வேறு வழியில்லையாம். இதனை நீ யூகித்துப்பார். 56

மேலும், ஈசுவர சிருஷ்டியான பிரபஞ்சம் § மகாப்பிரளயத்தில் அவரது சங்கற்பத்தின்வண்ணம் நாசமாகவும் பிறப்பினின் றகன்றவர் யார்? ஒருவருமில்லையே; ஆனல், அவர்களுட் சிலர் தேச கால தேகமுதலிய ஈசுவர சிருஷ்டிகளிருக்கும்போதே குரு சாஸ்திர முதலியவற்றினுதவியால் ஜீவ சிருஷ்டியான மோக முதலியவற்றை மீண்டு மெழாதவாறு நாசஞ்செய்த விசார ஞானத்தினலே ஜீவன் முத்தர்களாயினர். இதனல் பந்த வேதுவான மோகாதிகள் சீவசிருஷ்டியே யல்லாமல், ஈசுவரசிருஷ்டி யல்லவென்பது நன்கு விளங்கும். 57

*§ பிரமதேவர் தமக்குரிய வயது நூறு முடிந்தபிறகு ஆகாய முதலிய சர்வபூதங்களுடன் நாசமாதல் மகாப் பிரளயமாம்.*

அன்பனே! முண்டகோபநிஷத்து ¶ ஓரரசமரத்தில் (உடம்பில்) இரண்டு பறவைகள் வாழ்கின்றன; அவற்றுள், ஒருபறவை (சீவன்) அம்மரத்தின் கனிகளை இது நல்லது இது நல்லது என்று தின்று நிற்கும்; மற்றொரு பறவை (ஈசன்) தின்றுதென்று † குறிப்புப் பொருளாக வைத்துச் $ சீவனையும் ஈசனையும் வகுந்துக் கூறிய வழியையும் நீ விசாரித் தறியக் கடவாய். 58

¶ "அரசதொன் றும்பர்வே ராகிநீள் சாகைகீழ்
நிரைசெய்தெங் கணுநிறைந் தென்றுநின் றுள்ளதால்
கரையிலண் டங்களெல் லாமதன் கண்ணதாம்
ஒருபரம் பொருள்கடந் திடவொணு தொருவரால்" என்றும்.

"இந்த வுடம்புறை சீவ பரங்க ளெனப்படு மன்னமிரண்
டந்த விரண்டிலு மொன்று வினைப்பய னங்கு நுகர்ந்திடுமாம்
தொந்த மறும்பர மொன்று முணுது சொலப்படு பேதமில்வான்
வந்த கடத்தி லகப்படு பேத மெனப்படு மாயையினுல்"

என்றும் பிரமகீதை கூறுவதிங் குணர்தற் பாலதாம்.

சம்சார விருட்சத்தின் சொரூபம் பகவத் கீதை 15வது அத்தியாயத்தில் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. விருப்புடையா ரதனை ஆண்டுக் காண்க.

† சப்தத்தின் (சொல்லின்) வியஞ்சநாவிருத்தியா (குறிப்பா)ற் றோன்றும் பொருள் வியங்கிய (குறிப்பு)ப் பொருளாம். வியஞ்சநா விருத்தியாற் (குறிப்பாற்) பொருளுணர்த்துஞ் சொல் குறிப்புச் சொல்லாம்; அதன் பொருள் குறிப்புப்பொருளாம். அக்குறிப்புச்சொல் பலவகையாம். அவை "ஒன்றொழி பொதுச்சொல், விகாரம், தகுதி" முதலியனவாம். இங்கு வியஞ்சநா விருத்தி யென்பது ஒட்டணியாம். ஒட்டணியாவது உவமான மாத்திரங்கூறி, அதனுல் உவமேயத்தைப் பெறவைத்தலாம். இங்கு உவமானம் அரசமரமும், பழந் தின்னும் பறவையும், பழந் தின்னுப் பறவையுமாம்; உவமேயம் உடம்பும், சீவனும், ஈசனுமாம். "கருதிய பொருடொகுத் ததுபுலப் படுத்தற்,கொத்ததொன் றுரைப்பினஃ தொட்டென மொழிப-கவிதன்னுற் கருதப்பட்ட பொருளை மறைத்து அதனை வெளிப்படுத்தற்குத் தக்க பிறிதொன்றனைச் சொல்லின், அஃதொட் டென்னு மலங்காரமாம்" என்று தண்டியலங்காரங் கூறுவதிங் குணர்தற் பாலதாம்.

$ "வேதத்தி லிவ்வாறு பார்த்திருக்கின்றேன்:—

புத்தி ரூபமான ஒருவிருட்சத்தி லிரண்டு பட்சிகளுண்டு; அவையிரண்டுஞ் சமமாம்; அவற்றுள், ஒன்று கர்மபல போக்தாவாயிருக்கின்றது;



59. இந்தச் சீவனுல் வருமறு பகையெலா மிவன்செய லென்னுமல்,
அந்தத் தேவனுல் வருமென்ற மூடர்க ளதோகதி யடைவார்
கள், இந்தச் சீவனுல் வருமறு பகையெலா மிவன்செய லல்லா
மல், அந்தத் தேவனு லன்றெனும் விவேகிக ளமலவீ டடை
வாரே.

(பிரத்தியட்சமான) இந்தச் சீவனுலுண்டாகின்ற § கர்மாதி பகையாறும் இவனது சிருஷ்டி யென்று கருதாது (பரோட்சமான) அந்த் வீசுரனு

மற்றொன்று சுத்தமாய்ப் போகமின்றி யசங்கமாய்க் கர்மபல போக்தாவைப் பிரகாசிப்பிக்கின்றது. இவற்றுள், ஒன்று கர்மபலத்தைப் புசிக்கும் சீவனுகத் தோன்றுகின்றது; மற்றொன்று பரமாத்மாவாகத் தோன்றுகின்றது. ஆதலாலவற்றிற்கபேதம் பொருந்தாது" என்னுஞ் சங்கைக் குத்தரங்கூறி முடிக்குமிடத்து, "ஆகையால் புத்தி ரூப விருட்சத்தில் பரமாத்மா சீவனென்றிரண்டு பட்சிகளிருக்கின்றன என்று முதலில் நீ யெந்தச்சங்கை செய்தாயோ அதற்குப் பரமாத்மாவையும் சீவனையுங் கொள்ளலாகாது; ஆனுல், கூடஸ்தன் பிரகாசித்துக் கொண் டிருக்கின்றது; ஆபாசன் புசிக்கின்றதென் றுத்தரஞ் சொல்லப்பட்டது. சீவசொரூபத்திலுள்ள சேதனத்தின் சாயையாகிய ஆபாச அம்சம் கர்மத்தைச் செய்கின்றது; அதற்குச் சாயையாகிய ஈசுவரனுடைய ஆபாச அம்சம் பயனைக் கொடுக்கின்றது. இதனுல், இவ்வார்த்தை சித்திக்கும்:—சீவ சொரூபத்திலுள்ள ஆபாச அம்சம் புண்ணியபாவங்களைச் செய்து அவற்றின் பலத்தை யனுபவிக்கின்றது; ஈசுவர சொரூபத்திலுள்ள ஆபாச அம்சம் கர்ம பலத்தைக் கொடுக்கின்றது. அவ்விரண்டிலுமுள்ள சேதனும்சத்தி லெவ்விதமான பேச்சுக்கு மிடமில்லை. சீவனிடத்துள்ள சேதனும்சத்தில் கர்மம் பலமென்பவற்றின் சம்பந்தமில்லை; ஈசுவரனிடத்துள்ள சேதனும்சத்தில் பலத்தைத் தருதலின் சம்பந்தமில்லை. அந்தச் சேதனத்தில் அவற்றைக் கூறுபவன் மூடனுவன்; எனெனின், சேதன மிரண்டிடங்களிலும் அசங்கமாயும் ஏக ரூபமாயு மிருக்கின்றது. சேதனத்தில் பேதமில்லை. சீவ சேதனத்தை ஈசுவர சேதனத்திற்கு வேருகவேனும் ஈசுவரசேதனத்தைச் சீவ சேதனத்திற்கு வேருகவேனும் நினைப்பவன் நிந்திக்கத் தக்கவனுவன்" என்று விசாரசாகரம் நான்காந்தரங்கத்தி லெழுதப்பட்டிருப்ப திங்குக் கவனித்தற் பாலதாம்.

§ காமாதி பகையாறும் அரிசட்வர்க்கமெனப்படும். அவை (1) காமம் (நேரிட்ட பதார்த்தத்தை யனுபவிக்கு மிச்சை), (2) குரோதம் (துவேஷம்-கோபம்), (3) உலோபம் (கிடையாத பதார்த்தத்தை யடையவேண்டு மென்னுமிச்சை), (4) மோகம் (ஆன்மானுன்மாக்களின் அல்லது காரியாகாரியங்க

60. நலமெய் யையனே யெல்லவர்க் குந்தெய்வ நாயகன் பொதுவா னுல், சிலரை வாழ்வித்தல் சிலரோடு கோபித்தல் செய்வதே னென்றுயேல், குலவு மக்களைத் தந்தைபோற் சிட்டரைக் குளிர்ந்துதுட் டரைக்காய்வன், கலைக ணல்வழி வரச்செயுந் தண்டமுங் கருணையென் றறிவாயே.

லுண்டாகின்றனவென்னு மூடர்கள் நரகத்தையும், இந்தச் சீவனுலுண்டாகின்ற காமாதி பகையாறும் இவனது சிருஷ்டியே யல்லாமல் அந்த வீசுரனு லுண்டாயின வன்றேன்னும் விவேகிகள் நிர்மலமான மோட்சத்தையு மடைவார்கள். (ஆகலின் நீ காமாதிகளை யீசுவர சிருஷ்டி யென்று கருதாது சீவசிருஷ்டியேயாமென்று திடப்பட அனுபவ வாயிலாக வறியக் கடவாய்.) 59

சீடன், ஈசனிடத்துப் பட்சபாதங் கூடுமோ என வினுவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ.—வினு:—சதாநந்த வடிவக் குருமூர்த்தியே! தேவதேவனுகிய பரமேசுவரன் நல்லார் தீயாரென்னு மியாவரிடத்தும் பட்சபாதமின்றிப் பொதுவாயிருப்பானுயின், அப்பரமேசுவரன் சிலரைப் புத்தி முத்திகளைக் கொடுத்து வாழச்செய்தலும் சிலரைத் துன்புறுத்தக் கோபித்தலும் செய்வது யாது காரணம்? அதனைத் திருவாய் மலர்ந் தருளல் வேண்டும்.

கு—விடை :—அன்பனே! ¶ புத்திரர்களை அவர்தம் குணத்தைக் கண்டு பாராட்டுதலுங் குற்றத்தைக்கண்டு கோபித்தலுஞ் செய்கின்ற பிதாவைப்போன்று, பாமேசுவான் நல்லாரை யிரட்சித்துத் தீயாரைக்கோபித்துத் தரித்திரம், பிணி, நரக முதலிய துன்பங்களாற் றண்டனை செய்கின்றன். இங்ஙனமவன் செய்வது பட்சபாத மாகாது. சாஸ்திரங்கள் கூறும் நன் மார்க்கத்தில் வந்துய்தற்பொருட்டுத் தீயோர்க்குப் பாமேசுவான் செய்யும் தண்டனையும் அவனது கருணையேயாதுமென் றறியக்கடவாய். 60

ளின் அவிவேகம்), (5) மதம் (கருவம் - அகங்காரம்), (6) மற்சாம் (பிறாது மேன்மையைச் சகியாமை) என்பனவாம்.

காமாதிகளை யீசுவர சிருஷ்டி யென்று விபரீதமாக வுணர்ந்து அவற்றை நீக்காதிருப்பவர் நரகமடைவர் ; அவற்றைச் சீவசிருஷ்டியென்று விபரீதமின்றி யுணர்ந்து நீக்க முயல்பவர் மோட்சமடைவ ரென்பதிங் குணர்தற் பாலதாம்.

"காமாதி படைஞரெனுங் காலிபுகா தறன்வேலி கட்டித் தீய, மாமோக மிகுமோக னெனுங்களையும் வேரோடு வாங்கி நீக்கிக், கோமானின் கருணைவெள்ள நீர்பாய்ச்சி யுணர்வெனும்பைங் கூழ்மீ தோங்கற், காமாறு விளைக்கி னல்லா லாராவின் னமுதமெவர்க் கனுக லாமே" என்று பிரபோத சந்திரோதயங் கூறுகின்றது.



61. மனைவி லங்கறு மைந்தனே கற்பக மரங்கனல் புனன்மூன்றும், தனைய டைந்தவர் வறுமையுஞ் சீதமுந் தாகமுந் தவிர்த்தாளும், அனைய வீசனு மடைந்தவர்க் கருள்செய்வ னகன்றவர்க் கருள் செய்யான், இனைய குற்றங்க ளேவர்குற்ற மாகுமென் றெண்ணிநீ யறிவாயே.

குடும்ப பாரமென்னும் விலங்கு நீங்கப்பெற்ற மைந்தனே! $ கற்பக விருட்சம், அக்கினி, நீரென்னு மிம் மூன்று பதார்த்தமும் பட்சபாதமில்லாது தம்மை யடைந்தவரது தரித்திரத்தையும், குளிரையும், தாகத்தையும்

¶ "தெய்வ முளதென்பார் தீய செயப்புகின்
தெய்வமே கண்ணின்று நின்றொறுக்குந்—தெய்வ
மிலதென்பார்க் கில்லைத்தம் மின்புதல்வர்க் கன்றே
பலகாலுஞ் சொல்வார் பயன்"

என்று நீதிநெறி விளக்கங் கூறுவதறிக.

ஈசுவரன் நல்லோர்க் கருள்செய்வது அறக் கருணையாம் ; தீயோரை நல்வழியில் வாத் தண்டிப்பது மறக்கருணையாம். தாயுமானவர் "காரிட்ட வாணவ" என்னுஞ் செய்யுளில் மறக்கருணையை வியந்து, "ஏரிட்ட தன் சுருதி மொழிதப்பி னமனைவிட் டிடருறவுறுக்கி யிடர்தீர்த் திரவுபக லில் லாத பேரின்ப வீட்டினி லிசைந்துதுயில் கொண்மி னென்று, சீரிட்ட வுல கன்னை வடிவான வெந்தையே" என்று கூறுவதறிக.

$ "குழந்தைகளுக்கு விநோதத்தி னிச்சை யுண்டாவதுபோல, ஈசுவர னுக்கும் நிமித்தமின்றியும் ஜகத்தைச் சிருஷ்டித்தலாகிய விநோதத்தினிச்சை யுண்டாமென்று கூறின், அதுவும் பொருந்தாது; ஏனெனின், குழந்தை களுக்கு விநோதத்தில் சித்தத்தின் களிப்பு வடிவச் சுகத்தை யடைதற் பொருட்டு இச்சை யுண்டாவதுபோல, பூர்ண காமனான ஈசுரனுக்குங் களிப்பு வடிவச் சுகப்பிராப்தியினிச்சை சம்பவியாது. இச்சங்கைக்கு இது சமாதானமாம் :—

கற்பக விருக்ஷம் அந்நியனது சங்கற்பமாகிய நிமித்தத்தால் இச்சித்த பலத்தைத் தன் சுபாவத்தால் கொடுப்பதுபோல, ஈசுவரனும் பலத்தைக் கொடுக்க ஸன்முகனுய் ஜீவர்களுடைய அதிர்ஷ்டமாகிய நிமித்தத்தால் இச்சா ஞானப் பிரயத்தனங்களைத் தன் சுபாவத்தால் செய்கிறுன். அந்த ஈசு வரனது இச்சை முதலியவற்றி னெவ்வொரு வியக்தியே சிருஷ்டியினாரம்ப காலத்தி லுற்பத்தியாய்ப் பிரளய பரியந்தம் நிற்பதாம். ஆதலால், அவை நித்திய மெனப்படுகின்றன; இறப்பு எதிர்வு நிகழ்வு என்னுங் காலங்களி லுள்ள சகல பதார்த்தங்களையும் விஷயஞ் செய்கின்றன; ஆதலால் எப்போ தும் சிருஷ்டி அல்லது பிரளயம், சீதம் அல்லது உஷ்ணம் அல்லது மழை

62. ஒன்று கேண்மக னேபுமான் முயற்சியா லுறைத்துமா நுடர்க்
கீசன், நன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்துநல் லவர்
பின்னே, சென்று துட்டவா தனைவிட்டு விவேகராய்ச் சேனித்
தமா யையைத் தள்ளி,நின்று ஞானத்தை யடைந்தவர் பவங்கள்
போ நிச்சய மிதுதானே.

---

முறையே நீக்கி அவர் தம்மைக் காக்தும்விதம்போன்று, ‡ ஒருவரிடத்து விருப்பும் மற்றொருவரிடத்து வெறுப்புமின்றிய பாமேசுவரனும் தன்னைப் பற்றுக்கோடாக வடைந்தவர்க்குக் கிருபைசெய்கின்றன்; (கற்பகவிருட்சம், அக்கினி, நீரென்னு மூன்றும் தம்மை யடையாதவர்க்கு முறையே தரித்திரத் தையும், குளிரையும், தாகத்தையும் நீக்காவாறுபோன்று) தன்னை யடையாதவர்க்குக் கிருபை செய்வதில்லை. இக்குற்றங்கள் எவருடைய குற் றங்களாம்? இதனை நீ யாலோசித் தறியக்கடவாய். 61

சீ—வினு:—*ஐயனே ! அக்குற்றம் நீங்கி யுய்தற்குரிய உபாயம் யாது ?*

கு—விடை :—மைந்தனே ! சதுர்த்தச வித்தைகளின் சாரபூதமான தோ நுபாயத்தைக் கூறுகின்றேன்; அதனை நீ கவனமாய்க் கேட்டல் வேண்டும்.

சீ—வினு:—*அவ்வாறே கேட்கிறேன்; கூறியருளல் வேண்டும்.*

கு—விடை :—பாமேசுரவன் மக்களுக்கு நன்மை செய்தற்பொருட் டரு ளிச்செய்த சாஸ்திரவழியில் புருஷப் பிரயத்தனத்தாலழுந்தி யொழுகி, பெரி யோர்களைப் பின்பற்றிநடந்து, காமம் - வெகுளி - கடும்பற்றுள்ளம்-மானம்- உவகை - மதமென்னு மரிசட்வருக்கத்தின் மலினவாசனைகளை யொழித்து, ஆன்மாநான்ம விவேக முடையவராய், அஞ்ஞானத்தினுலுண்டான அநாத்மா வாகிய தேகாதிகளில் ஆத்மபுத்தி, அநித்தியமான ஆகாயாதிகளில் நித்திய புத்தி, துக்கவடிவத் தனுதிகளில் சுகபுத்தி, அசுசியான சரீரமுதலியவற்றில் சுசி புத்தியென்னும் அவிவேகத்தை நீக்கி, தமது நிசவடிவில் பிறழாது நின்று தத்துவ ஞானத்தை யடைந்தவர்களது நர சுராதி வடிவ ஜன்மங்க ளக லும்; ஏனையோரது ஜன்மங்க ளகலா. § இதுவே சாஸ்திரங்களின் நிச் சயமாம். 62

---

*யுண்டாவதில்லை. ஆனுல், சமயாநுசாரமாகவே அவை யுண்டாகின்றன.'' என்று விசாரசாகரம் குறிப்புரையி லெழுதப்பட்டிருக்கின்றது.*

‡ *வேண்டுதல் வேண்டாமை யிலானுகிய இறைவனடியைச் சேர்ந்தவர் பிறவிப் பெருங்கடலை நீந்துவர்; சேராதார் நீந்தா ரென்பதிங் குணர்தற் பாலதாம்.*

§ *புருஷப்பிரயத்தனத்தோடு சாஸ்திரம்கூறும் நெறியிற்றவருதொழுகி, நல்லவர் நேசங்கொண்டு, தீயசிந்தை யின்றி, விவேகமுற்று, மோகமில்லாது சமாதியில் நிலைத்துநிற்பவர்தாம் ஞானமடைவர்; அவர்க்கே பிறவி யகலு மென்பது இங்குச் சுருக்கமாக வுணர்தற் பாற்றும்.*



63. இந்த ஞானந்தான் வருவதெப் படியேனி லிடைவிடா விசாரத்
தால், வந்த டைந்திடும் விசாரந்தா னேதெனின் மனுதியாஞ்
சரீரத்தில், இந்த நானேவன் சித்தேது சடமேது விரண்டுமோன்
ருக்கூடும், பந்த மேதுவீ டேதென வுசாவுதல் பகர்விசா ரம
தாகும்.

---

தத்துவஞான முண்டாகும் வழியைக் கூறல்.

சீ—வினு:—*ஐயனே ! இத்தத்துவஞான முண்டாவ தெப்படி?*

கு—விடை :—அஃதிடைவிடாது விசுவாசத்தோடு செய்யும் விசாரத்தி னுல் வந்து சித்திக்கும்.

சீ—வினு.—*விசாரத்தின் சொரூபம் யாது?*

கு—விடை :—இந்த மனமுதலிய சரீரத்திரயங்களுள் நானேன்பது யாது ? சித்தாயிருப்பது யாது? சடமாயிருப்பது யாது? சித் ஜட மிரண்டும் ஒன்றுகக் கூடுதற்கேதுவாயுள்ள பந்தமேன்பது யாது ? மோக்ஷமேன்பது யாது? என்று நானேன்பது முதலியவற்றை யிடைவிடா தழுத்தமாக வாராய் தலே † விசாரத்தின் சொருபமாம். 63

---

*† (1) இவ்விசாரத்திற்கேது ஈசுவரன், வேதம், குரு, தனதந்தக்கரண மென்னு மிந்நான்கனது கிருபையாம் ; (2) இதனது பயன் ஆத்மாவின் திட அபரோட்ச (பிரத்தியட்ச) ஞானமாம்; (3) இதனது அவதி (எல்லை) மேற்படி ஞானமுண்டாகும் வரையாம்.*

*தத்துவ ஞானத்தி னந்தரங்க சாதனங்களாகிய விவேகம், வைராக்கியம், சமாதிசட்கசம்பத்தி, முமுட்சுத்துவம், சிரவணம், மனனம், நிதித்தியாசனம், மகாவாக்கியார்த்த விசாரமென்னு மெட்டனுள், அந்த ஞான முண்டாதற்குத் தூரசாதனமாகாது நேர்சாதனமாகவிருப்பது மகாவாக்கியார்த்த விசாரமாக வே யிருத்தவின், விசாரணையின்றித் தத்துவஞானமுண்டாகா தென்ப தொரு தலையாம். நானெவன், சித்தெது, சடமெது, பந்தமெது, வீடெது என்னும் விசாரம் மகாவாக்கியார்த்த விசாரத்தி லந்தர்க்கதமாம். ஆத்மாநாத்மாக்களை வேறு பிரித்தறிதலே விசாரத்தின் முக்கிய சொரூபமாம்.*

*"ஒருகணமு மொழியாமற் சுகமதாகி யுடல்கடவா னுய்ச்சான்றோ ருசாவி னுலே, பெருகியவிவ் வீட்டுநெறி விசாரஞ் செய்வோன் பிறவிதீர் மெய்ஞ்ஞானம் பெற்றோ னுகி, வெருளுமரு பிறப்பினுருத் தாயர்யோனி விதனமுறுன்" என்று ஞான வாசிட்டங் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.*

64. போன சன்மங்க டமிலநுட் டித்தநற் புண்ணிய பரிபாகம்
ஞானமாக்குமே விசாரமே னென்றிடி னுமுரைத் திடக்கேளாய்
ஆன புண்ணிய மீசுரார்ப் பணஞ்செயி னசுசிபோஞ் சுசியாகும்
மான தம்பினை விசாரித்து ஞானத்தை மருவுமேன் றறிவாயே.

சீடன், விசாரத்தினால் பயன்யாது என்று வினவுதலும் அதற்குத் தரு விடை கூறுதலும்.

சீ—வினா:—பரம குருவே! ஒருவன் கீழ்ச்சென்ற அளவிறந்த ஜன்மங்களி லநுஷ்டித்து வந்த சற்கரும பரிபாகமானது அவனுக்குத் தத்துவஞானத்தை யுண்டாக்கு மல்லவா? அங்ஙனமிருக்க, ஆத்மாநாத்மாக்களை வேறு பிரித்தறிதல் வடிவ விசாரத்தினால் யாது பயன்? இதற்குத் தேவரீர் விடையருளல் வேண்டும்.

கு—விடை:—அன்பனே! § மக்கள் தத்தம் வருணாச்சிரமங்கட் குசிதமான சற்கருமங்களைப் பலாபேட்சையில்லாது ஈசுரார்ப்பணமாகச் செய்தால் அவரது அந்தக்கரணத்தின்கணுள்ள பாவமாகிய அசுத்தம் நீங்கும்; அதனால், அது நிர்மலமாகிய கண்ணாடிபோலச் சுத்தமாம். பிறகு சுத்தமான அம்மனது $ ஆத்மாநாத்ம விசாரஞ் செய்து தத்துவ ஞானத்தை யடைய அவர்க்குச் சிறந்த காரணமாவதாம். இம் முறையை நீ யூகித்தறியக்கடவாய். 64

§ "ஆற்றும் பயன்வேண் டாக்கரும மந்தக் கரண சுத்திதரும்
போற்றுஞ் சுத்தி தரும்போதம் போதம் பிரம நானென்னும்
ஊற்றந் தருசா னுதித்தலுமே யுயர்வான் மதிநீர்த் துளக்கமெனந்
தோற்றந் தருமா யையிற்றன்னைத் துளக்க மின்றிக் காணுவன்றால்"
என்று பிரபோதசந்திரோதயங் கூறவதிங் குணர்தற் பாலதாம்.

$ "விசார சொரூபமாவது யாதெனின், யான் யாவன்? தேகாதிகளே யானா? அல்லது அதனின் வேறாயவனா? என்பது துவம்பதார்த்த விசாரமாம். இந்தத் தோஷ ரூப சம்சாரம் எவ்வேதுவினாலே அதிஷ்டானத்தில் வந்துற்றது? என்பது தத்பதவிசாரமாம். இவ்வண்ணம் சுருதி-முநி - ஆச்சார்ய சம்பிரதாய முறையிற் காட்டியபடி நியாயத்தா லாராய்ச்சி செய்வதே விசாரமெனப்படும்....விசாரத்தினாலே நித்தியதத்துவம் அறியப்படுகின்றது; தத்துவ ஞானத்தினால் மனோ நிச்சலத் தன்மை வடிவ விஸ்ராந்தி ஆத்மாவின் கண்ணே கிடைக்கும்; விஸ்ராந்தியினால் மனத்தின்கண்ணே சாந்தத் தன்மையாம். இதுவே சர்வதுக்கங்களையும் நீக்குவதாம்" என்று பெரிய ஞான வாசிட்ட வசனத்தி லெழுதப்பட்டிருக்கின்றது.



65. பத்தி யும்வயி ராக்கிய மும்பர லோகமு மணிமாதி
சித்தி யுந்தவ நிட்டையும் யோகமுந் தியானமுஞ் சாருப
முத்தி யுந்தரும் விசித்திர கருமங்கண் மோகமாத் திரந்தள்ளும்
புத்தி தந்திட லருமையோ விசாரமேன் புண்ணிய குருமூர்த்தி.

66. வேட மாறிய பேர்களை யறியவே வேண்டினான் மகனேகேள்
கூட மாமவர் சுபாவங்கள் சீலங்கள் குறிகளாய்ந் தறியாமல்
ஓடி யுங்குதித் துந்தலை கீழ்நின்று முயர்ந்தகம் பத்தேறி
ஆடி யும்பல கருமங்கள் செய்யினு மவருண்மை தெரியாதே.

67. இன்ன வாறந்தப் பிரமத்தை யறிவிக்கு மிலக்கணத் தால்வேதம்
சொன்ன ஞானமும் விசாரத்தால் வருமன்றிச் சுருதிநூல் படித்
தாலும், அன்ன தானங்க டவங்கண்மந் திரங்களா சாரங்கள்
யாகங்கள், என்ன செய்யினுந் தன்னைத்தா னறிகின்ற திவை
களால் வாராதே.

சீடன், எல்லாம் வல்ல கருமத்தால் தத்துவஞான முண்டாகாதோவென வினவுதலும் அதற்குத் தரு விடை கூறுதலும்.

சீ—வினா:—தர்ம சொரூபியான குருவே! ஈசுவர பக்தியும், வைராக்கியமும், சுவர்க்காதி லோகப் பிராப்தியும், அணிமாதியஷ்ட சித்தியும், தவத்தி லுறுதிபாக நிற்றலும், பிராணாயாமவடிவ யோகமும், சகுண நிர்க்குணத் தியானமும், சாரூப முத்தியுமாகிய இவற்றைக் கொடுக்கும் விசித்திரமான சற்கருமங்கள் தன்னைப் பிரஹ்மமென்றறியாமையாகிய மோகத்தை மாத்திரங் கெடுக்குந் தத்துவ ஞானத்தைக் கொடுப்பதோ வருமையாமா? அருமையன்றே? அங்ஙனமாக, விசாரம் யாதுக்கு? 65

விசாரத்தாலன்றி வேறேதனாலும் தத்துவஞான முண்டாகாதென்பதைத் திருஷ்டாந்த வாயிலாக வுணர்த்துதல்.

கு—விடை:—சற்புத்திரனே! யான் கூறுவதைக் கேள். தம்வேடம் விட்டு வேறு வேடங் கொண்டு மறைந்திருப்போரை யறிய விரும்பினவன் வேட மாறியுள்ள அவரது குணங்களையும், ஒழுக்கங்களையும், அடையாளங்களையு மாராய்ந்து இவரின்னாரென் றறியவேண்டும்; அவ்வா றறியாமல், வெது தூரங் கால்சலிக்க ஓடினாலும், மலைமேலேறிக் குதித்தாலும், தலைகீழாக நின்றாலும், உன்னதமான ஸ்தம்பத்தி லேறிக் கூத்தாடினாலும், இன்னும் பல கருமங்களைச் செய்தாலும் அவரது உண்மை வடிவத்தை யறிதல் அவனுக்கு முடியாது. 66

இதுபோலத் தனது சொரூபத்தை அவித்தையாற் காட்டாது ஜீவேசுராதி சொரூபமாக விளங்கும் அந்தப் பிராஹ்மத்தை § அதத்வியாவிருத்தி,

§ (1) தேகாதி யனாத்ம வர்க்கங்களை யுத்தியால் நேதித்து, (இஃதாத்மா வன்று, இஃதாத்மா வன்றெனத் தள்ளி) நின்ற ஆத்மாவை யறிவிப்பதே அதத்வியாவிருத்தி யிலக்கணமாம்.

68. துளங்கு தர்ப்பண மழுக்கறக் கைக்கோண்டு துலக்கிஞற்
போமன்றி, விளங்கு புத்தியா லுலகிலார் துலக்கிஞர் விமலதே
சிகமூர்த்தி, களங்க மாதுமஞ் ஞானமு மப்படிக் கருமத்தாற்
கழுவாமல், உளங்கு றித்தஞா னத்திஞ லேப்படி யோழியுமீ
தருள்வீரே.

---

தடத்தம், சோருப மென்னு மூன்றிலக்கணவர்யிலாக அதிகாரிகட் கறிவிக்கும் வேதங் கூறும் ஞானமும் விசாரத்திஞல் வருவதாம்; அவ்விசாரத்திஞலல்லாமல், ¶ தன்னைத்தா னறிவதாகிய பிரஹ்மஞானம் சுருதிஸ்மிருதி புராணேதிகாசங்களை யோதல், அன்னதானமுதலியவற்றைச் செய்தல், கிருச்சிரம்சாந்திராயணமுதலிய தவங்களைப் புரிதல், பஞ்சாக்கா முதலிய மந்திரங்களை ஜபித்தல், தத்தம் வருணச்சிரமத்திற்குரிய சற்கருமங்களை யியற்றல், தத்தம் வருணத்திற்குரிய யாகங்களைச் செய்த லென்னு மிவற்றினுள் எக்கருமத்தைச் செய்வதாலும் வாராது. 67

கருமத்தாலன்றி ஞானத்தா லஞ்ஞானமகலுமா றெவ்வாறென்பதைச்
சீடன் திருஷ்டாந்தவாயிலாக விறைவுதல்.

சீ—விஞ:—விமலதேசிக மூர்த்தியே! செப்புக் கண்ணுடியிலுள்ள களங்கம் அக்கண்ணுடியைச் செங்கல்மா முதலியவற்றைக் கொண்டு கையாற் செவ்வையாகத் துலக்கிஞலொழியும்; அவ்வாறன்றி அதனை ஞானத்திஞற் றுல(விள)க்கினவர் யார்? ஒருவரு மில்லையே; அவ்வாறு, (இந்துவினை மறைக்குங் களங்கம்போன்று ஆன்மாவை மறைக்கும்) களங்க வடிவ அஞ்ஞானமும் கருமத்திஞலொழிவதன்றி அஞ்ஞானம் மித்தையென மனத்தில் நிச்சயிக்கும் ஞானத்திஞ லெவ்வாறொழியும்? இவ்விரகசியத்தைக் கிருபை கூர்ந் துரைத்தருளல் வேண்டும். 68

---

(2) விருட்சத்தி னுனியிலிருப்பதாகச் சந்திரனை யறிவிப்பது போல, பூதாதி ஜகத்காரணமா யிருப்பதாக ஆத்மாவை யறிவிப்பதே தடத்த விலக்கணமாம்.

(3) மிகுந்த உஷ்ணப் பிரகாச ரூபமே சூரியனென் றவனை யறிவிப்பது போல, சச்சிதாநந்தாதி நிஜரூபமே ஆத்மாவென் றதனை யறிவிப்பதே சொரூப விலக்கணமாம்.

¶ "தன்னை யறிவ தறிவா மதுவன்றிப்
பின்னை யறிவது பேயறி வாமே.

"தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைகுவர்"

என்று திருமந்திரங் கூறுவதிங் குணர்தற் பாற்றும்.



69. தர்ப்ப ணத்தினிற் களிம்புவாஸ் தவமலஞ் சகசமா தலின்மைந்
தா,கற்பளிங்கினிற்கருநிறஞ்சகசமாக் கறுத்ததன்றுரோபம்,[டும்,
தர்ப்ப ணத்தினி லழுக்கற வேண்டிஞற் சாதனத்தோழில்வேண்
கற்ப ளிங்கிலா ரோபமே கறுப்பென்று கண்டிட மனம்போதும்.

70. இங்கு மப்படிச் சச்சிதா நந்தத்தி லிடர்சடம் பொய்மூன்றும்
தங்கு மாயையின் கற்பித மன்றியே சகசவாஸ் தவமன்றே [கும்
பங்க மாகுமஞ் ஞானத்தைக் கருமங்கள் பகைசெயா துறவாக்
துங்க ஞானமே கருமவஞ் ஞானத்தைச் சுடுகின்ற நெருப்பாமே.

---

இத்திருஷ்டாந்தம் ஒத்ததன்றேன மறுத்து வேறு திருஷ்டாந்தத்தால்
தாஷ்டாந்தத்தை விளக்கல்.

கு—விடை:—மைந்தனே! செப்புக்கண்ணுடியி லுள்ள களங்கம் † சகஜமும் வாஸ்தவமுமாயுள்ள மலமாம்; ஸ்படிகக் கல்லிலுள்ள கறுநிறம் சகஜமாய்க் கறுத்திருப்பதன்று; ஆனு லக்கல்லில் ஆரோபமா(மித்தையா)க விருப்பதாம்; அதனுல், ¶ செப்புக் கண்ணுடியி லுள்ள களங்கத்தை யொழிக்க வேண்டின், அக்களங்கத்தை யொழித்தற்குரிய சாதனத்தோடு கூடிய தொழில் வேண்டும்; (அஃதின்றி அக்களங்க மொழியாது). ஸ்படிகக் கல்லிலுள்ள கறுநிறம் ஆரோபமே(பொய்த் தோற்றமே) யென்று காண் ...ந்த மனமே (ஞானமே) போதும்; (மற்றேன்று வேண்டுவ தன்றும்). 69

ஸ்படிகக்கல்லில் கறுநிறம் ஆரோபமாயிருக்கின்றதென்னு மத்திருஷ்டாந்தம்போல இத்தாஷ்டாந்தத்திலும் $ சச்சிதாநந்த வடிவ ஆத்மாவில்

---

† சகஜம்—கூடவே யுண்டாயிருப்பது. வாஸ்தவம்—உண்மை. முல்லை முதலிய மலர்களில் வாசனை சகஜமா யிருப்பது போலச் செம்பினிற் களிம்பு சகஜமா யிருக்கின்ற தென்க.

¶ செப்புக் கண்ணுடியில் களங்கம் வாஸ்தவமாக விருத்தலின், அதனை யொழித்தற்குக் கிரியையே வேண்டும்; மற்றொன்று (ஞானம்) வேண்டப் படுவதன்றும். ஸ்படிகக் கல்லில் கறுநிறம் கறுநிற ஆடை முதலிய வற்றின் பிரதிபிம்பத்தால் ஆரோபமா யிருத்தலின், அதனை யொழித்தற்கு (ஸ்படிகம் சகஜமாய்க் கறுத்திருப்ப தன்றென்னும் விசார) ஞானமே வேண்டும்; பிறிதொன்று (கிரியை) வேண்டப்படுவ தன்றும். செப்புக்கண்ணுடியின் களங்கம் ஞானத்தாலும், ஸ்படிகத்தின் கறுப்புக் கிரியையாலும் நீங்காமையின், அததற்குரிய சாதனத்தாலேயே அதுவது நீங்குமென்பது வெளிப்படையாயிற் றென்க.

$ சச்சிதாநந்த வடிவ ஆத்மாவில் அசத்து ஜட துக்க வடிவமாயுள்ள தேகாதிப்பிரபஞ்சம் மாயையால் கயிற்றரவு - கானனீர் முதலியன

71. மனைக்குள் வைத்தபண் டங்களை மறந்தவன் வருடநூ றழுதா லும், நினைத்து ணர்ந்தபின் கிட்டுமப் படியிந்த நின்மல வான் மாவும், அனர்த்த மானதன் மறதியைக் கெடுத்துத்தன் னறிவி னாற் காணாமல், கனத்த கர்மங்க ளாறுகஞ் செய்யினுங் காணு மோ காணாதே.

72. நன்மை யாங்குரு வேசுகந் தருவது ஞானமே யெனும்வேதம்
தன்ம பாவமிச் சிரங்களாற் றேவர்க டருவிலங் குகண்மாந்தர்
சென்ம மாகுவ சாதியா சாரமே செய்தவஞ் சுகமென்று [ரே.
கன்ம காண்டத்தில் விதித்ததேன் விதித்துள காரண முரையீ

---

அசத்து ஜட துக்க மூன்றும் கயிற்றரவு போன்று மாயா கற்பிதமே யல்லாமல் சகஜமா யிருப்பதும் வாஸ்தவமாயிருப்பது மன்றாம். அசத்து ஜட துக்க வடிவாயுள்ள அஞ்ஞானத்தைப் புண்ணிய கருமங்கள் பகைத்துக் கெடுக்காமற் றமக்குறவாகச் செய்யும்; (சூரியன் இருட்டைக் கெடுப்பதுபோல) ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானமென்னுந் தத்துவஞானமே கரும நபமாய அஞ்ஞான மென்னும் வனத்தை யெரித்துக்கெடுக்கவல்ல தீயாம். 70

இதுகாறுங் கூறியதைப் பிரசித்தமான அனுபவத்தால் வற்புறுத்திக் கூறல்.

எப்படி வீட்டின்கண் பெட்டி முதலியவற்றுள் வைத்த கடக கங்கண முதலிய பதார்த்தங்களை வைத்தவிடந் தெரியாது மறந்தவன் அவற்றைப் பெறவேண்டிப் பல வருஷம் வரை யழுதாலும் அவை கிடைக்காமல் எவ்விடத்தில் வைக்கப்பட்டனவென்று சிந்தித்து வைத்தவிடத்தை யறிந்தபிறகவனுக்குக் கிடைக்கின்றனவோ, அப்படியே அதிகாரிபுருஷன் இந்தப் பரிசுத்தமாகிய ஆத்மாவையும் துக்க வேதுவான தனது மறதியை விசாரத்தாற் கெடுத்துத் தனது ஞானத்தினாற் காணல் வேண்டும்; அவ்வாறு காணாமல் அநேக காலங் கர்மங்களைச் செய்தாலும் அதனைக் காண்டல் அவனுக்கு முடியாது. 71

---

போலக் கற்பிதமா யிருக்கின்றதென்றிங் குணர்தல் வேண்டும். இதனை அத்துவித வுண்மை "எந்தச் சத்தி லசத்தாகு மிந்த வுலகு சத்தாகும், எந்தச் சித்தி லசித்தாகு மிந்த வுலகந் தான்விளங்கும், எந்த வின்பிற் றுன்பாகு மிந்த வுலக மின்பாகும், அந்தச் சச்சி தாநந்த மதுவே நமது வடிவாகும்" என்று கூறுவதாலு மறிக.



சீடன், சுகத்தைத்தருவது ஞானமே யென்னும் வேதம் அதனைக் கருமமுந் தருமென்பதேப்படி யென வினவுதலும் அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினா:—நிரதிசயாநந்த வடிவத் தேசிகோத்தமரே! சுகத்தைத் தரத்தக்கது ஞானமே யென்று கூறும் வேதமானது † புண்ணிய பாவ மிசிர மென்னுங் கருமங்களால் முறையே தேவஜன்மமும், விலங்கு முதல் ஸ்தாவர பரியந்த மான ஜன்மமும், மானுட ஜன்மமு முண்டாவனவாமென்றும், தத்தஞ் சாதிக் குரிய ஒழுக்கமே செய்யத்தக்க தவமாமென்றும், இத் தவத்தால் சுகமுண்டாகுமென்றும், கருமகாண்டத்தில் விதித்திருப்பது யாதுகருதி? இவ்வாறு விதித்துள்ள காரணத்தைத் தேவரீர் கூறியருளல் வேண்டும். 72

---

† கருமம் - புண்ணியம் - பாவம் - மிசிரமென மூன்று வகைத்தாம்; இவற்றுள், ஒவ்வொன்றும் உத்கிருஷ்ட - மத்திம-சாமானியமென மூன்று வகைத்தாம்.

I (1) இரணிய கர்ப்பாதி சரீரப்பிராப்தி புண்ணிய உத்கிருஷ்ட பலமாம்; (2) தேவேந்திராதி சரீரப்பிராப்தி புண்ணிய மத்திம பலமாம்; (3) யட்ச - ராட்சச - கின்னர - கிம்புருஷ - பிசாசாதி சரீரப்பிராப்தி புண்ணிய சாமானிய பலமாம்.

II (1) தேள் - பாம்பு - காடி - புலி முதலிய சரீரப்பிராப்தி பாவ உத்கிருஷ்ட பலமாம்; (2) புளியமரம் - மாமரம் - பலாமரம் - தென்னமரம் - எருமை-பருந்து முதலிய சரீரப்பிராப்தி பாவமத்திம பலமாம்; (3) அரசு - துளசி-பசு-யானை-குதிரை முதலிய சரீரப்பிராப்தி பாவ சாமானிய பலமாம்.

III (1) நிஷ்காம புண்ணிய கர்மத்தால் சித்த சுத்தியும், அதனால் சாதன சதுஷ்டயமும், அவற்றால் சற்குருலாபமும், அதனால் சிரவண-மனன - நிதித்தியாசன-மகா வாக்கியார்த்த விசாரமும், அவற்றால் ஆத்மாவின் அபரோட்ச ஞானமும், அதனால் சீவன்முத்திச் சுகமும் பெறுதற்குரிய (மானுட) சரீரப்பிராப்தி மிசிர உத்கிருஷ்ட பலமாம்; (2) தத்தம் வருணாச்சிரம தருமங்களைச் செய்வதற்கு யோக்கியமான (மானுட) சரீரப்பிராப்தி மிசிர மத்திம பலமாம்; (3) பாண்டு - குஷ்ட முதலிய ரோகங்களையுடைய (மானுட) சரீரப்பிராப்தி மிசிர சாமானிய பலமாம்.

73. தினமு மண்ணுகர் பிள்ளைநோய்க் கிரங்கியே தீம்பண்ட மெதிர்
காட்டிக், கன மருந்துக ளோளித்துவைத் தழைக்கின்ற கருணை
நற் ருய்போல, மனைய றங்கள்செய் மகங்கள்செய் நன்றென்று
மலர்ந்தவா சகஞ்சோல்லும், நினைவு வேறுகாண் சுவர்க்ககா
மிகளந்த நிண்ணயந் தெரியாரே.

74. போக மாருயிர் கண்டதை யுண்டதும் புணர்வது மியல்பே
காண், ஆக மங்களுஞ் சுபாவத்தை விதிக்குமோ வத்தனை
தெரியாதோ, காக மேகறுத் திடுநேருப் பேசுடு கசந்திடு வேம்பே
நீ, வேக வாயுவே யசையென வோருவரும் விதித்திடல் வேண்
டாவே.

---

த—விடை:—அன்பனே ! யர்ன் கூறுவதைச் சாவதானமாய்க் கேள். நாடோறும் மண்ணைப் புசிக்கின்ற தன் பிள்ளையின் வியாதிக்காக மனமிரங்கி, அது தீர்தற்பொருட்டு நல்ல மருந்துகளை இனிப்புடைய பலகாரங்களுள் மறைத்து வைத்து அவற்றை அப்பிள்ளைக் கெதிரே காட்டி என் கண்ணே!வா, என் செல்வமே! வா, இவற்றையுண்பாய், இவை நன்றயிருக்கும் என்றப்பிள்ளையைப் பலமுறை யழைக்கின்ற கருணையுடைய நல்ல மாதாவைப்போல, † வேதத்தின் கருமகாண்ட வாக்கியங்களும் இல்வாழ்க்கைக்குரிய தருமங்களைச் செய்க, யாகங்களைச் செய்க, இவற்றற் சுகமுண்டாகுமென்று கூறுகின்றன. இவ்வாறு கூறும் வேதத்தின் கருத்து வேறதும். சுவர்க்க போகத்தில் விருப்புடையார் அந்த நிச்சயத்தை யறியார். 73

---

† வேதம் சுவர்க்க வின்பத்துள் தத்துவஞானத்தை மறைத்து வைத்துச் சுவர்க்க காமிகளை நோக்கி இல்லறம் புரிக, வேள்வி செய்க, அவற்றால் சுவர்க்க வின்பமுண்டாகு மென்று கூறுகின்ற தென்க.

"ஒரு தாய் தன் குழந்தைக்கு நாவில் வெல்லம் பற்றிய விரலைத் தடவிக் கசப்பான மருந்தில் தித்திக்கு மென்னும் புத்தியை யுண்டுபண்ணிக் கசப்பு மருந்தைச் செலுத்திவிடுகின்ருள். இது சாஸ்திரத்தில் குட ஜிஹ்வா நியாய மெனப்படும். அங்ஙனமே, சுருதியாகிய தாய் பாமர சீவர்களாகிய குழந்தைகட்குத் தன் கரும பலத்தைத் துதிக்கும் வசனங்களாகிய அர்த்தவாத வாக்கியங்கள் வடிவ வெல்லம் பற்றிய விரலை நக்க வைத்துச் சுவர்க்காதிகளினடைவாகிய கர்ம பலத்தைப் போதித்து, அக்கர்மத்திற் பிரவிர்த்தி யுண்டாகச் செய்கின்றது. ஆனல், எங்ஙனம் அத்தாய்க்குக் குழந்தையின் ரோகநிவிர்த்தியிற் கருத்தோ வெல்லந் தடவிய விரலைச் சுவைக்கச் செய்வதிற் கருத்தில்லையோ, அங்ஙனமே சுருதியாகிய தாய்க்குப் பாவநிவிர்த்தி வாயிலாகச் சித்த சுத்தியிற் ருற்பரியமாம்; சுவர்க்காதி பலத்திற் ருற்பரிய மில்லையாம்" என்பது விசாரசாகரக் குறிப்புரை.



75. கள்ளு முனுநீ விரும்பினுன் மகங்கள்செய் காமத்தின் மனதா
ஞல், கோள்ளும் பெண்டோடு கலவிசெய் யெனிலிவன் குறை
யேலாந் தோடானேன்றே, தள்ளும் வேதத்தின் சம்மதஞ் சகல
முந் தவிர்வதே கருத்தாகும், விள்ளு மிவ்விதி யென்னேனிற்
பூருவ நியமமாம் விதியன்றே.

---

அவ்வாறு விதித்த சுருதியின் கருத்து வேறென்பதற்கு யுக்தி கூறல்.

இந்திரியங்கள் வாயிலாகச் சுக துக்க வடிவப் போகத்தை யனுபவிக்கின்ற சீவர்கள் நேரிட்ட உணவை யுண்பதும், நேரிட்ட பெண்களைப் புணர்வதும் அவர்தமக் கியல்பே யல்லாமல் வேறல்லவாம். சீவர்கட்குச் சுபாவமா யுள்ள விவற்றைச் சுருதிகள் (விலக்குமே யல்லாமல்) விதிக்குமா ? சுபாவத்தை விதித்தல் கூடாதென்னு மவ்வளவு அச்சுருதிகட்குத் தெரியாதோ ? காகமே ! நீ கறுத்திடு; நெருப்பே ! நீ சுடு; வேம்பே ! நீ கசந்திடு; காற்றே! நீ அசை யென்றெருவரும் அவற்றிற்கு விதிக்க வேண்டியதில்லையாமன்றே ? (அவை அவற்றிற்குச் சுபாவமாக விருக்கின்றன; அவ்வாறு நேரிட்ட உணவை யுண்பதும், நேரிட்ட பெண்களைப் புணர்வதும் ஜீவர்கட்குச் சுபாவமா யிருக்கின்றன. இவை வேதத்தால் விதிக்கப்பட்டன வல்லவென்க). 74

வேதத்தின் கருத்து விலக்கிலேயே யன்றி விதியி லன்றேனல்.

¶ மது மாமிசங்களை நீ யுண்ண விரும்பினல் யாகங்கள் செய்துண்

---

¶ "மணஞ்செய்த மனைவியோடு கூடல்வேண்டும் ; ருதுவுடைய மனைவியைக் கூடல்வேண்டும் ; ஓமஞ்செய்து மிஞ்சிய மாமிசத்தைப் புசித்தல் வேண்டும் ; சூத்திராமணி யென்னும் யாகத்திற் கட்குடித்தல் வேண்டும்" என்றற்றொடக்கத்து வேதத்தின் விதிவாக்கியங்களுக்கு வேறு வகையால் கிடைத்த எல்லா ஸ்திரீகளையும் கூடுதல், அல்லது எப்போதும் மணந்த பெண்ணைக்கூடுதல், அல்லது மாமிசத்தையும் மதுவையு முட்கொள்ளுதல் என்பவற்றிற் பிரவர்த்திக்கச் செய்வதி லபிப்பிராய மின்ரும்; ஆனல், அவற்றின்கண் இயல்பாயுள்ள பிரவிர்த்தி யெதுவோ அதனைச் சுருக்குதல் வாயிலாக நிவிர்த்தியிலேயே அபிப்பிராயமாம். ஆதலால், அவ்வாக்கியங்கள் பரிசங்கியாவிதி வாக்கியங்களாமென்ப திங்குணர்தற்பாலதாம். ஒரு காலத்தி லிரண்டர்த்தம் பெறப்பட, அவற்றுள் ஒன்றனீக்கத்தைப் போதிக்கும் விதி பரிசங்கியா விதியாம்.

விதி நிஷேத முதலிய வாக்கியங்களுள் விதிவாக்கியம் அபூர்வவிதிவாக்கியம், நியமவிதிவாக்கியம், பரிசங்கியாவிதிவாக்கிய மென மூவகையாம்:— (1) எய்தாத தெய்துவிப்பது அபூர்வ விதியாம்; (2) எய்திய திகந்துபடாமற் காப்பது நியம விதியாம்; (3) எய்தியதனை யொரு மருங்கு மறுப்பது பரிசங்கியா விதியாம்.

76. மதுவி றைச்சிக ளுண்ணேன்ற சுருதிபின் மணந்துபா ரெனல்பா
ராய், மிதுன விச்சையும் புத்திரோற் பத்தியால் விரும்பென்ற
விதிபாராய், இதையும் விட்டொழி யதிநயிட் டிகவங்கி க் கிகழ்ச்
சியற் றதும்பாராய், அதைய றிந்துகன் மங்களா சைகளொழிந்
தாநந்த மடைவாயே.

---

ணக் கடவாய் ; மாதர் போகத்தில் மனஞ்சென்றால் மனைவியோடு புணரக்
கடவா யென்று நாம் விதித்தால் இக்காமி நம தாக்கினைக் கஞ்சி பேப்
போதும் நேரிட்ட வுணவை யுண்பதையும், நேரிட்ட பெண்களைப் புணர்வ
தையும் பற்றது நீக்குவா னென்பதே வேதத்தின் சம்மதமாம். அதன்
கருத்து எங்கும் சர்வசங்கப் பரித்தியாகத்திலேயே யாம்.

சீ—வினு :—ஞான சூரியனே ! சர்வ சங்கப் பரித்தியாகத்
திலேயே சுருதிக் கபிப்பிராய மாயின், அதில் மனைபறங்கள் செய்,
மகங்கள்செய் என்னு மிவ்விதி வாக்கியங்க ளிருப்பதேன் ?

கு—விடை:—அவை பூர்வ பட்சமான விதியாம் ; § சித்தாந்த யன்று.
[முன்னர் "சீவ பேதங்க ளளவில மைந்தனே செய்கையு மளவி லை, ஆவ
வாமவ ரவாதி காரங்க ளறிந்துபக் குவநோக்கிப், பூவ லர்ந்து ன் பலங்
கள்காட் டுவனபோற் பூருவஞ் சித்தாந்தம், காவல் வேதங்க ளி டையும்
வசனிக்குங் காண்டமு வகையாலே" என்று கூறியிருப்பது மறிக] 75

வேதத்தின் கருத்து நிவிர்த்தியிலே யன்றிப் பிரவிர்த்தியி லன் றெனலை
விரித்துக்கூறலும், சகலமுந் தவிர்ந்தவர்க்குப் பழிப் பின்றென லும்.

அன்பனே ! நீ மது மாமிசங்களை யுண்ண விரும்பினல் பின் நரக
துக்கம் வாராதபடி அவற்றை யாகத் செய் துண்ணக் கடவ யென்று
விதித்த வேதம், பின்பு அவற்றை † யாகஸ்தலத்தில் மோந்துமாத்தி ரம் பார்க்
கக்கடவா யென்று விதித்திருப்பதையும், மனைவியோடு புணரு புணர்ச்
சியையும் புத்திரோற்பத்தியின் பொருட்டு விரும்பக்கடவா யென் று விதித்
திருப்பதையும், ‡ யாகஸ்தலத்தில் மது மாமிசங்களை யுண்பதை யொழித்

§ சித்தாந்தம் - முடிந்த முடிவு.

† யாக ஸ்தலத்தில் மது மாமிசங்களை யுண்ணுது மோந்து மாத்திரம்
பார்ப்பவனுக்கு வெகுகாலஞ் சுவர்க்க போக முண்டாகுமென்பது வேதத்
தின் கருத்தாம்.

‡ "ஆசையானது போகத்தினு லொருபோதும் அடங்குகின் றதில்லை ;
நெய்யினல் நெருப்பு விருத்தியாவதுபோல அது போகத்தினுல் விர்த்தி
யடைகின்றது ; ஒருவன் சகல போகங்களையு மனுபவிக்கின்றான் ; மற்றொரு
வன் அவற்றை யற்பமாகக் கருதி நிவிர்த்தி செய்கின்றான் ; இவ்விருவருள்



77. உலக மானவஞ் ஞானமுங் கருமமு முறவென்ற வழிகூடும்
பலவு மானவஞ் ஞானமு ஞானமும் பகையென்ப துளதானுல்
நிலவி லேமறுப் போலவஞ் ஞானமு நிமலஞா னத்தோடே
குலவி நின்றிந்தச் சிருட்டிகள் செய்யவுங் கூடுமோ குருமூர்த்தி.

---

த்லே யன்றிப் புத்திரோற்பத்தியின் பொருட்டு மனைவியைப் புணர்வதை
யும் விட்டொழியக் கடவா யென்று விதித்திருப்பதையும், (யாகஞ்செய்து
அது வழியிலாக மது மாமிச முண்டல், அவற்றை மோந்து மாத்திரம் பார்த்
தல், புத்திரோற்பத்தியின் பொருட்டு மனைவியுடன் புணருதல் முதலியவற்
றை விட்டொழிந்த) சந்நியாசிக்கும் $ நைஷ்டிகப் பிரஹ்மசாரிக்கும் உல
கில் பழியில்லா திருப்பதையு முணர்ந்து, அவ்வாறு கூறிய வேதத்தின்
தாற்பரியத்தை யறிந்து, யாகாதி கருமங்களையும் மனைவி முதலியோரிடத்
துள்ள ஆசைகளையும் விட்டுத் தத்துவ ஞானத்தால் ஆத்மாநந்தத்தை
யடையக்கடவாய். 76

சீடன், ஞானம் அஞ்ஞானத்திற்குப் பகையாயின், அதனோடுகூடிச்
சிருஷ்டி செய்வ தெவ்வாறென வினவுதலும், அதற்குக்
குரு விடை கூறுதலும்.

சீ—வினு:—குருமூர்த்தியே ! தேவரீர் உலக வடிவமாகப்
பரிணமத்தை யடைந்த அஞ்ஞானமும் யாகாதி கிரியைகளும் தம்
முள் பகையாகாம லுறவாயிருக்கின்றன வென்று முன்பு (70-வது
செய்யுளில்) கூறிய முறை யங்கீகரிக்கத் தக்கதாம். நாமரூப மியா
வுந் தானுன அஞ்ஞானமும் ¶ எப்போதும் விகாரமின்றி யுள்ள
ஞானமும் தம்முள் பகையாயிருப்பதென்ப துண்மையாயின், சந்திர

---

அனுபவிக்கின்றவனைப் பார்க்கிலும் நிவிர்த்தி செய்கின்றவ னுத்தமன்"
என்று மநுஸ்மிருதி கூறுகின்றது.

இம்மைப் பயனுகிய மாதர் போகமும் மறுமைப் பயனுகிய சுவர்க்க
போகமும் நசித்துப் போகுந் தன்மையுடையனவாதலின், இவற்றை விரும்
பாதே யென்று சுருதி கூறிற்றென்க.

$ மரண பரியந்தம் பிரஹ்மசாரியாகவே யிருப்பவன் நைஷ்டிகப் பிரஹ்ம
சாரியென்று சொல்லப்படுவான்.

"பிரஹ்மசாரிக்குக் கலியாணத்தில் விருப்பமில்லாது குருகுலவாசத்தி
லேயே மனமிருந்தால் இந்திரிய நிக்கிரகமுடையவனுய் ஞானமுள்ள பிரா
மண குருவினிடத்து மரண பரியந்தம் நைஷ்டிகப் பிரஹ்மசாரியாய் வசிக்க
லாம்," என்று மனுஸ்மிருதி கூறுகின்றது.

78. சொரூப ஞானமும் விருத்திஞா னமுமென்று சோதிஞானமு மிரண்டாம், சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாய்த் தோன்றும்வே றிலைமைந்தா, சொரூப ஞானமஞ் ஞானசத் துருவன்று சுழுத்தியிற் கண்டாயே, சொரூப ஞானத்தின் மருவுமஞ் ஞானத்தைச் சுடும்விருத் தியின்ஞானம்.

---

ணிடத்துக் களங்கம்போல அந்த அஞ்ஞானமானது ஞானத்தோடு கூடி நின்று இந்த ஜகத் சிருஷ்டியைச் செய்வது கூடுமோ? அதனை யுரைத்தருளல் வேண்டும். 77

கு—விடை:—மைந்தனே! பிரகாச வடிவ ஞானமானது சொரூப ஞானம் விருத்திஞான மென விரு வகைத்தாம். சொரூப ஞானமே விருத்தி ஞானமாகத் தோன்றும்; அதனால் அவை கடபடம்போலத் தம்முள் வேறுபட்டன வல்லவாம்; அங்ஙனமாயினும் § கட்டையி லுள்ள சாமானிய அக்கினி இருட்டிற்கு விரோதி யாகாதது போலச் சொரூப ஞானமானது அஞ்ஞானத்

---

¶"ஞானம் ஏக(நித்திய)மென்றொப்புக்கொள்வது மிகவும் இலாகவமாம். கடஞான மென்றும் படஞானமென்றுந் தோன்றும் ஞானபேதம் கடமுதலிய உபாதியினாற்றான் தோன்றுகின்றது. சுபாவத்திலோ ஞானம் ஞானமென்றே யேக வடிவமாக வறியப்படுகின்றது. ஞானங்களி னுற்பத்தி நாசஞானமோ அவசியங் கற்பிக்க வேண்டிய விஷய சம்பந்தத்தையே (அந்த ஞானம்) விஷயமாக வுடைமையால் பொருந்தும்." என்று சித்தாந்த பிந்து கூறுவதால், ஞானம் எஞ்ஞான்றும் விகாரமின்றி ஒரு தன்மைத்தா யிருப்பதென்பது பெறப்படுவதாம்.

§ "ஆத்மா பிரகாச ரூபமா யிருந்தாலும் அதன் சொரூபப் பிரகாசம் அஞ்ஞானத்திற்கு விரோதியன்று. ஆத்ம சொரூபப் பிரகாசம் அஞ்ஞானத்திற்கு விரோதியாகுமாயின், சுழுத்தியில் பிரகாச ரூப ஆத்மாவினிடத்தில் அஞ்ஞானம் தோற்றுகின்றது; அது தோற்றலாகாது.

"கோர நித்திரை விட்டெழுந்தவன் 'நான் சுகமாய்த் தூங்கினேன், ஒன்றும் தெரியவில்லை' என்று அறிகிறான். இந்த ஞானத்திற்குச் சுகமும் அஞ்ஞானமும் விஷயங்களாம். இந்த ஞானம் ஜாக்கிரகாலத்திற் பிரத்தியக்ஷமன்று; ஏனெனின், எந்த ஞானத்தின் விஷயம் எதிரிலிருக்கிறதோ அந்த ஞானம் பிரத்தியக்ஷ ரூபமாம். ஜாக்கிரகாலத்தில் சுகமும் அஞ்ஞானமுமில்லை; ஆதலால், ஜாக்கிரத்தில் சுகத்தின் ஞானமும் அஞ்ஞானத்தின் ஞானமும் பிரத்தியக்ஷ ரூபமன்று; ஆனால் ஸ்மிருதி ரூபமாம். அந்த ஸ்மிருதி அறியப்படாத வஸ்துவினதன்று; ஆனால், அறியப்பட்ட வஸ்துவினதேயாம். ஆதலால், சுழுத்தியில் சுகம் அஞ்ஞான மென்பவற்றின் ஞானமிருக்கிறது.



79. துருத்தி மாயையைச் சுழுத்தியிற் சுடாததற் சொரூபஞா னந்தானே, விருத்தி ஞானமாய்ச் சுட்டதேப் படியெனில் வெய்யிலா லுலகெங்கும், பரித்த சூரியன் சூரிய காந்தத்திற் பற்றியக் கினியாகி, எரித்த வாறுபோற் சமாதியில் விருத்தியா லெரிக்குமென் றறிவாயே.

---

திற்கு விரோதி யன்றாம்; அதனை நீ சுழுப்தி யவஸ்தையில் அநுபவித் தறிந்திருக்கின்ற யல்லவா? சொரூப ஞானத்தின்கண் கற்பிதமாகவுள்ள அஞ்ஞானத்தை நான் பிரஹ்மமென் றந்தக்கரணத்தினின் றெழுகின்ற விருத்திஞானமானது கெடுக்கும். (ஆதலால், விருத்தி ஞானமே அஞ்ஞானத்திற்குச் சத்துருவாவதன்றிச் சொரூபஞானம் சத்துருவாவ தில்லையென் றறிவாயாக). 78

---

அந்தச் சுழுத்தி ஞானம் அந்தக்கரணம் இந்திரிய மென்பவற்றா லுண்டாகின்றதில்லை; ஏனெனின், சுழுத்தியில் அந்தக்கரணமு மிந்திரியங்களும் இல்லை. ஆதலால், சுழுத்தியில் ஆத்ம சொரூபமே ஞானமாம். ஞானம் பிரகாசம் என்பவற்றிற்குப் பொருள் ஒன்றே.

இவ்வாறு சுழுத்தியில் ஆத்மா பிரகாச ரூபமாயிருக்கிறது. அந்தப் பிரகாச ரூப ஆத்மாவில் சொரூபசுகமும் அஞ்ஞானமும் விளங்குகின்றன. ஆத்ம சொரூபப் பிரகாசம் அஞ்ஞானத்திற்கு விரோதியாமாயின், சுழுத்தியில் அஞ்ஞானம் தோற்றலாகாது. ஆதலால், ஆத்மா பிரகாச ரூபமாகவே இருக்கிறது. ஆனால், அதன் சொரூபப் பிரகாசம் அஞ்ஞானத்திற்கு விரோதியன்று; மாறாய் ஆத்மாவின் சொரூபப் பிரகாசம் அஞ்ஞானத்திற்குச் சாதகமாயிருக்கின்றது.

இவ்வபிப்பிராயத்தினாற்றான் வேதாந்த சாஸ்திரத்தில் 'சாமானிய சைதன்னியம் அஞ்ஞானத்திற்கு விரோதியன்று; விசேஷ சைதன்யமே அஞ்ஞானத்திற்கு விரோதியாம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. எங்கும் வியாபித்திருக்கிற சைதன்னியம் சாமானிய சைதன்னிய மென்றும், விருத்தியிலிருக்கிற சைதன்யம் விசேஷ சைதன்னிய மென்றும் சொல்லப்படும். கட்டையிலிருப்பது சாமானிய அக்கினி; அஃது இருளிற்கு விரோதியன்று. கட்டையைக் கடைதலாலுண்டாகும் விசேஷ அக்கினி திரியிலேற்றப்பட்டு இருளிற்கு விரோதியாகிறது. அதுபோல, வியாபக சைதன்னியம் அஞ்ஞானத்திற்கு விரோதி யன்றாயினும், வேதாந்த விசாரத்தால் எந்த அந்தக்கரண விருத்தி பிரஹ்மாகாரமாகிறதோ, அதிலிருக்கின்ற சைதன்னியம் அஞ்ஞானத்திற்கு விரோதியாம்." என்று விசாரசாகர மிரண்டாந்தரங்கத்திற் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

80. அருளு மையனே திரிவித கரணத்தா லாகிய தொழிலெல்லாம் கரும மல்லவோ விருத்திஞா னமுமந்தக் கரணகா ரியமன்றே உரிய கர்மமஞ் ஞானத்தைக் கெடுக்குமென் றோதினு லாகா தோ, பெரிய ஞானமென் றதற்கொரு பெயரிட்ட பெருமையை யுரையீரே.

---

சீடன், காரணவடிவச் சொருப ஞானத்தாற் கெடாத அஞ்ஞானம் அதன் காரிய வடிவ விருத்தி ஞானத்தினுற் கெடுமென்ப தெவ்வா றென்று வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினு :—தீர்த்தருத்திபோலும் ‡ சங்கோச விகாச தரும முடைய அஞ்ஞானத்தைச் சுழுத்தியிற் கெடுக்காத (விரோதியாக் கெடுக்காது சாதகமாய் நின்ற) அந்தச் சொரூபஞானமே சாக்கிரத் தில் விருத்தி ஞானமாகத்தோன்றிக் கெடுத்ததெப்படி? உரைத்தரு ளல் வேண்டும்.

குரு—விடை :—அன்பனே! நீ யான் கூறுவதைக் கவனமாய்க் கேள். $ தனது கிரண வடிவத்தா லுலக முற்றும் வியாபித்துள்ள சூரியன் (எப் பொருளையு மெரிக்காது) சூரியகாந்தக் கல்லிற் பொருந்தி யக்கினி வடிவ மாகத்தோன்றி அதனுற் பஞ்சினை யெரித்துக்கெடுக்கும் விதம் போலத் தனது சத்தாஸ்பூர்த்தி (இருத்தல் விளங்குதல்) வடிவத்தால் எங்கும் வியாபித் துள்ள சொரூப ஞானமும் (எதனையுங் கெடுக்காது) சமாதியினிடத்துப் பொருந்தி அகம் பிரஹ்மாஸ்மி யென்னும் விருத்திரூப ஞானமாகத் தோன்றி அதனு லஞ்ஞானத்தைக் கெடுக்கு மென் றறியக்கடவாய். 79

சீடன், அந்தக்கரண காரியங்களுள் ஒன்றான விருத்தி ஞானமும் கருமமா யிருத்தலின், அதனைக் கருமத்தினும் வேறான ஞான மென லெவ்வாறமென வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினு :—யான் வினவும் வினுக்கட் கெல்லாந் தக்கவாறு விடை யருளுகின்ற குருமூர்த்தியே! மனம் வாக்குக் காயமென்னுந்

---

‡ சித்திரப்படம் தன் விகாச தருமத்தால் நாநாவிதமாயுள்ள சித்திரங் களைக் காண்பித்துச் சங்கோச தருமத்தால் அவற்றை மறைப்பதுபோல, மாயையும் தன் விகாச தருமத்தால் உலக மனைத்தையும் தோற்றுவித்துச் சங்கோச தருமத்தா லவற்றை யடங்கச் செய்யுமென்பதாம்.

விகாசம் . விரிவு; சங்கோசம் - குவிவு.

$ காரண வடிவச் சூரிய கிரணத்தால் கெடாத பொருள் காரிய வடி வச் சூரிய காந்தக்கல்லின் தீயால் கெடுவதுபோலக் காரணவடிவச் சொரூப ஞானத்தாற் கெடாத அஞ்ஞானமும் காரியவடிவ விருத்தி ஞானத்தாற் கெடுகின்றதென்பதாம்.



81. விருத்தி ஞானமந் தக்கர ணத்தொடு விருத்தியா கிலுமைந்தா, ஒருத்தி மக்களே தங்களிற் பகைக்கின்ற துலகெங்குங் கண் டோமே, கருத்த னுகிய புருடதந் திரங்களாங் கருமங்க ளவை போல, வருத்த ஞானமோ புருடதந் திரமன்று வஸ்துதந் திர மாமே.

---

திரிகரணங்களாலு முண்டாகுங் கிரியைக ளியாவும் கருமங்களல் லவா? அவற்றுள், நான் பிரஹ்ம மென்னும் விருத்தி ஞானமும் அந் தக்கரணத்தின் காரியமா யிருத்தலின், கருமமல்லவா? அதனுல், மோக்ஷமடைதற்குரிய நான் பிரஹ்ம மென்னும் அந்தக்கரண விருத்தி வடிவ மானச கருமமானது அஞ்ஞானத்தைக் கெடுக்கு மென்று கூறினுல், அது சாஸ்திர சம்மதமாகாதோ? அவ்வாறு கூறுது அம்மானச கருமத்திற்கு ஞானமென் றொருபெய ரிட்டுள்ள மகிமையை யுரைத்தருளல் வேண்டும். 80

குரு—விடை :—அன்புள்ள மைந்தனே! ஒரு தாயின் மக்களே தம்முள் பகைத்திருத்தல்போல, அகம் பிரஹ்மாஸ்மி யென்னும் விருத்திஞானமும் அந்தக்கரணத்தின் காரிய மாயினும் அந்தக்கரணத்தின் காரியமாகிய தியான முதலிய கர்மங்கட்குப் பகையா யிருக்கின்றது. கருமங்கள் புருஷ தந்திரங்களா (கருத்தாவாகிய புருஷனது அதீனமா)ம்; அவைபோல (விசார) ஞானமோ புருஷ தந்திர மன்று; ஆனுல், வஸ்துதந்திர (வஸ்துவின் அதீன) மாம். 81

---

¶ "ஞானமோ பிரமாணப் பிரமேய மென்பவற்றின் அதீனமாம்; விதி புருஷனுடைய இச்சை என்பவற்றின் அதீனமன்று.

தியானமானது விதி, புருஷனுடைய இச்சை, விசுவாசம், ஹடம் என் பவற்றின் அதீனமா யிருக்கின்றது.

பிரத்தியக்ஷ ஞானத்தில் பிரமாணம் நேத்திரமும் பிரமேயம் கடாதி களுமாம். அங்ஙனமே, நேத்திரத்திற்கும் கடத்திற்கும் சம்பந்த முண் டாகவே புருஷனுடைய இச்சையின்றியும் கடத்தின் பிரத்தியக்ஷ ஞான முண்டாகின்றது. விநாயக சதுர்த்தி தினத்தில் சந்திரனைப் பார்த்தல் கூடா தென்னும் நிஷேதமுண்டு; விதியில்லை. புருஷனுக்கு இன்றையதினம் எனக்குச் சந்திர தரிசன முண்டாகலாகாதென்று இச்சை யுண்டானுலும் எவ்விதத்திலாவது நேத்திரப் பிரமாணத்திற்குப் பிரமேயமாகிய சந்திரனோடு சம்பந்த முண்டாய் விடுமாயின், சந்திரனுடைய பிரத்தியட்ச ஞானம் அவசியமாகவே யுண்டாகும். இவ்விதத்தால் ஞானம் பிரமாணப் பிரமேயங் களின் அதீனமா யிருக்கின்றது; இச்சை விதிகளின் அதீனமா யில்லை.

82. வகுத்த கர்மங்கள் செய்யவுந் தவிரவு மற்றொன்றாக் கவுங் கூடும், மிகுத்த ஞானமப் படியன்று தியானமும் விவேகஞானமும்வேறே, செகத்தி லொன்றையொன் றாவிவன் பாவிக்குந் தியானங்கற் பிதயோகம், முகத்த மாக்கண்ட ஞானமே வாஸ்தவ மோகமாய் மயங்காதே.

தியானமும் ஞானமும் தம்முள் வேறுபட்டனவா மெனல்.

¶ சுருதி ஸ்மிருதிகள் விதித்த கருமங்கள் (மானசக் கிரியைகளாய வுபாசனைகள்) விருப்ப மிருந்தாற் செய்யவும், விருப்ப மின்றாயின் செய்யாமல் விடவும், மற்றொரு விதமாகச் செய்யவேண்டின் மற்றொரு விதமாகச் செய்யவுமாம். ஞானம் : கருமம் போல விதி, இச்சை, விசுவாசம், ஹட மென்பவற்றின் வசமாகாது பிரமாணப் பிரமேயங்களின் வசமா யிருத்தலின், செய்யவும் செய்யாமல் விடவும் மற்றொருவிதமாகச் செய்யவு மாகாது. அதனால், கரும வடிவத் தியானமும் விவேக வடிவஞானமும் (அந்தக்கரண காரியமா யிருப்பினும்) தம்முள் வேறுபட்டனவாம். ஒன்றை (சாலிக்கிராமத்தை) மற்றொன்றாக (விஷ்ணுவடிவமாக)ப் பாவிக்குந் தியான யோகம் கற்பிதமாம்; பிரத்தியட்சமாக வறிந்த ஞானமே யதார்த்தமாம். இவற்றி லறியாமையுடையவனாய் நீ மயங்குத லொழியக்கடவாய். 82

*சாலிக்கிராமம் விஷ்ணு ரூபமென்று தியானம் செய்கிறவனுக்கு உத்தம பலனுண்டாகிறது. அங்குச் சாஸ்திரப் பிரமாணத்தினால் விஷ்ணுவைச் சதுர்ப்புஜ மூர்த்தியாகவும் சங்கு சக்கர கதா பத்ம லக்ஷ்மி சகிதமாயும் அறிகின்றான்; நேத்திரப் பிரமாணத்தால் சாலிக்கிராமத்தைச் சிலையாக அறிகின்றான். அங்ஙனமாயினும், விதி விசுவாச இச்சைகளால் சாலிக்கிராமம் விஷ்ணுவா மென்னுந் தியான முண்டாகின்றது. ஆனால் இந்தத் தியானம் அநேக விதமாம்.*

*சாலிக்கிராமத்தை விஷ்ணு ரூபமாகத் தியானிப்பதுபோல அன்னிய வஸ்துவை அன்னிய ரூபமாகத் தியானிப்பது பிரதீகத்தியான மெனப்படும்.*

*வைகுண்ட லோகத்தில் வசிக்கிற விஷ்ணுவைச் சங்கு சக்காதி சகித சதுர்ப்புஜ மூர்த்தி வடிவமாகத் தியானிப்பதில் அன்னிய வஸ்துவின் அன்னியரூபமான தியானமில்லை. ஆனால், இது தியேய வடிவத்தின் அனுசாரமான தியானமாம். வைகுண்டவாசி விஷ்ணுவின் ஸ்வரூபம் பிரத்தியக்ஷமாகவோ இல்லை ; கேவலம் சாஸ்திரத்தினால் அறியப்படுகிறது. சாஸ்திரத்தில் சங்கு சக்காதி ஸகிதமாகவே விஷ்ணுவின் ஸ்வரூபம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால், அந்தத் தியானம் தியேயஸ்வரூபத்தை அனுசரித்ததாகவே யிருக்கின்றது.*

*விதி விசுவாச இச்சைகளின்றித் தியான முண்டாகிறதில்லை. " இந்த உபாசனை செய்" என்று ஒருவனைப் பிரவிர்த்திக்கும்படி செய்கிற வசனம் விதியென்று சொல்லப்படும்.*



83. கண்ட றிந்தது ஞானங்கேட் டதுதனைக் கருதுபாவனையோகம், கண்ட பேர்சொலக் கேட்டது மறந்துபோங் கண்டது மறவாதே, கண்ட வஸ்துமெய் தியானவஸ் துக்கள்போய் கருவியஞ் ஞானத்தைக், கண்ட வக்கணங் கொல்வது ஞானமே கருமமன் றறிவாயே.

தியானங் கற்பிதம், ஞானம் யதார்த்த மென்றற் கேது கூறல்.

இது கடம், இது படமென யாதாயினு மொன்றை யனுபவித் தறிந்தது ஞானத்தின் வடிவமாம்; (சாலிக்கிராமத்தை விஷ்ணுவாகத் தியானிக்க வேண்டு மென்று) பிறர் சொல்லக்கேட்டு அதனைக் கேட்டபடி பாவிக்கும் பாவனை தியானத்தின் வடிவமாம். யாதாயினு மொன்றை அனுபவித் தறிந்த பெரியோர் சொல்லக் கேட்டுத் தியானிப்பது (தியான மில்லாதபோது இல்லாமற் போவதால்) ஒரு சமயத்தில் மறந்து போவதாம்; (நான் பிராமணன், நான் க்ஷத்திரிய னெனத்) தானே அனுபவித்தறிந்தது (மறத்தற் கேதுவின்மையின்) எந்நான்றும் மறவாதிருப்பதாம். ஆதலால், அனுபவித் தறிந்த வஸ்து உண்மையாம்; தியான வஸ்துக்கள் மித்தையாம். ஆகவே, அஞ்ஞானத்தைத் தான் பார்த்தவப்பொழுதே கோபித்துக் கெடுப்பது விருத்தி ஞானமேயாம்; தியான முதலிய கர்மங்க ளல்லவாம். இவ் வேறுபாட்டை அன்பனே! நீ செவ்வையாக வறியக் கடவாய். 83

*அந்த வசனத்திலுள்ள சிரத்தைக்கு விசுவாசமென்று பெயராம்.*

*அந்தக்கரணத்தின் காமனை வடிவ ரஜோகுண விருத்திக்கு இச்சையென்று பெயராம்.*

*தியானம் ஹடத்தினு லுண்டாகும். ஞானத்தில் ஹடத்தின் அபேக்ஷையில்லை; ஏனெனின், நிரந்தரத் தியேயாகாரமான சித்த விருத்திக்குத் தியானமென்று பெயராம். அங்கு விருத்தியில் விட்க்ஷேபமுண்டானால் ஹடத்தால் விருத்தியை ஸ்திரப்படுத்தல் வேண்டும்.*

*ஞானரூப அந்தக்கரண விருத்தியால் தற்கால ஆவரண பங்கமுமுண்டாதலால், விருத்தியை ஸ்திரப்படுத்துவதி னுபயோகமில்லை ; ஆதலால், ஹடத்தின் அபேக்ஷையில்லை.*

*வைகுண்ட வாசியான சதுர்ப்புஜ விஷ்ணுவைத் தியானிப்பதுபோல 'நான் பிரஹ்மம்' என்னும் தியானமும் தியேயானுசாரமா யிருக்கின்றது; பிரதீகமன்று; ஆனால், இஃது அகங்கிரகத் தியானமாம்.*

*தியேயஸ்வரூபத்தைத் தன்னோடு அபேதமாகச் சிந்தித்தல் அகங்கிரகத் தியான மெனப்படும்.*

*எவனுக்கு அபரோக்ஷ ஞான முண்டாகிறதில்லையோ, வேதத்தின் ஆஞ்ஞாரூபவிதியில் விசுவாசம் வைத்து ஹடமாக இடைவிடாமல் 'நான் பிரஹ்ம' மென்று எவன் அகங்கிரகத் தியானஞ் செய்கின்றானோ அவனுக்கும் ஞான முண்டாவது வாயிலாக மோக்ஷம் கிடைக்கும்." என்று விசாரசாகரம் ஐந்தாவது தரங்கத்திற் கூறுவதிங் குணர்தற் பாலதாம்.*

84. சருவ முத்தியைத் தருகின்ற தியானமுஞ் சத்திய மன்றென்றால் சருவ முத்தியுஞ் சத்திய மன்றேன்று சங்கியா தேநீகேள், உருவங் கேட்டவன் றியானிக்கும் பொழுதிலவ் வுருவம்வாஸ் தவமன்றே, உருவ மாகுமப் பொழுதுகண் ணுற்கண்ட வுருவம் வாஸ் தவமாமே.

சீடன், மித்தையான தியானத்தா லுண்டாகு முத்தியும் மித்தையாதுமன்றே வென்று வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினா ;—ஐயனே! அஞ்ஞானமும் அதன் காரியமாகிய வுலகமு மென்னும் அநர்த்த (துக்க) நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமாகிய முத்தியைத் தருகின்ற §நிர்க்குணப் பிரஹ்மத் தியானமும் மித்தையாமாயின், அந்த முத்தியும் மித்தையாகு மல்லவா? இதற்கு விடை கூறி யருளல் வேண்டும்.

கு—விடை :—அன்பனே! நீ யான் கூறுவதைச் சாவதானமாய்க் கேள். ¶பெரியோர் வாயிலாகப் பிரஹ்ம சொரூபத்தைக் கேட்டவன் கேட்டவாறு அதனைத் தியானஞ் செய்யும்போது அது பாவனு மயமா யிருத்தலின், யதார்த்த மன்றாம்; அத்தியானத்தின் பரிபாகவசத்தால் அது தானாதம்போது †பிரத்தியட்சமாக அறிந்த பிரஹ்ம சொரூபம் யதார்த்தமாம்.(ஆதலால், நிர்க்குணப் பிரஹ்மத் தியானம் மித்தையாயினும் அதனா லுண்டாகும் தானே தானாகு முத்தி மித்தை யன்றாம்.) 84

§நாமரூப மின்றியதாகத் தன தெதார்த்த வடிவப் பிரஹ்மத்தை விஷய வாசனை சிறிது மில்லாது சிந்தித்தல் நிர்க்குணப் பிரஹ்மத் தியானமாம். இதனை ரிபுகீதை "ஆதலினுற் கனவிலுமே பிரமத் திற்கிங் கன்னியமா யணுவேனு முள்ளதென்னும்,பேதமுறும் புத்தியினைத் தூரத்தள்ளிப் பிரமமெலா மதுவேநா னெனதென்றே, சாதகமா முறுதியினைத் திடப்படுத்திச் சந்ததமும் பாவித்துச் சலனமின்றி, யாதிமுடி வொன்றமிலா வகண்டாகார வனுபூதி யடைந்தந்த மயமே யாவாய்" என்று கூறுவதனாலுமறிக.

¶"தியானத்திற்கு விஷயமான பிரஹ்மம் பரமார்த்த (உண்மை) ரூப மன்றாம்; ஆனால், மனோ கற்பிதமாம்; ஆதலால், பிரம (பிராந்தி) ரூபமாம். இதனாலேயே அதனை விஷயஞ் செய்வதாகிய விருத்தி வடிவத் தியானமும் பிராந்தி ஞானமாம். என்றாலும், மணியின் பிரபையில் மணியென்னும் புத்தி வடிவமான சம்வாதிப் பிராந்தியால் ஓடியவனுக்கு மணியின் ஞானவாயிலாக மணி கிடைப்பதுபோல, முற்கூறிய தியானத்தால் பிரஹ்மத்தின் ஞான முண்டாவது வாயிலாக மோட்சப் பிராப்தியுஞ் சம்பவிக்கின்றது." என்று விசாரசாகரக் குறிப்புரையி லெழுதப்பட்டிருக்கின்றது.



85. சடம தாகிய தியானமெய் யாகிய சர்வமுத் தியைநல்கும், திடமதானதெப் படியெனி லவரவர் தியானமே பிறப்பாகும், உடலமாசையாற் றியானிக்கிற் றியானித்த வுடல்களா குவர்மைந்தா, தொடர்பவங்கெடச் சொரூபமே தியானிக்கிற் சொரூபமா குவர் மெய்யே.

சீடன், மித்தையாகிய தியானத்திற்குச் சத்தியமாகிய முத்தியைத் தரும் சாமர்த்திய மெவ்வாற மென்று வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினா :—ஐயனே! மித்தையாகிய நிர்க்குணத் தியானம் சத்தியமாகிய முத்தியைத் தருஞ் சாமர்த்தியத்தை யுடையதா யிருப்பதெப்படியாம்?

குரு—விடை :—அன்பனே! $மரண காலத்தி லுண்டாகின்ற தியானத்தை யனுசரித்தே அவரவர்க்கு ஜன்மமா மென்பது நியமமா யிருத்தலின், நிர்க்குணப் பிரஹ்மத்தியானத்தால் பிரஹ்ம சொரூபமாகவே நிலைக்கும் முத்தியுண்டா மென்பதற்கு யாதொரு சங்கையு மின்றாம். ஆதலால், ‡ ஒருவர் சகுணப் பிரஹ்மப் பிராப்தியினிச்சையா லதனைத் தியானஞ் செய்தால் தாம் தியானஞ் செய்த சகுணப் பிரஹ்மமே யாவர்; அநாதி காலமாகத் தொடர்ந்து வருகின்ற ஜன்மம் இனி வாராது கெடும்படி நிர்க்குணப் பிரஹ்மத்தைத் தியானஞ் செய்தால் தாம்தியானஞ் செய்த நிர்க்குணப் பிரஹ்மமே யாவர். இது சத்தியமாம். 85

பிராந்தி விசம்வாதிப் பிராந்தி, சம்வாதிப் பிராந்தியென விருவகையாம். (1) நிஷ்பலப் பிரவிர்த்தி (பயனில் முயற்சி)யை யுண்டுபண்ணும்பிராந்தி ஞானமும் அதன் விஷயமும் விசம்வாதிப் பிராந்தியாம்; (2) சபலப் பிரவிர்த்தி (பயனுள் முயற்சி)யை யுண்டுபண்ணும் பிராந்தி ஞானமும் அதன் விஷயமும் சம்வாதிப் பிராந்தியாம்.

1. தீபத்தின் பிரபையிலுண்டாகும் மணியின் பிராந்திபோல்வது விசம்வாதிப் பிராந்தியாம்.

2. மணியின் பிரபையிலுண்டாகும் மணியின் பிராந்திபோல்வது சம்வாதிப் பிராந்தியாம்.

தியானத்தின் கர்த்தா தியாதாவாம்; தியேய வடிவமாகிய சித்த விருத்திப் பிரவாகம் தியானமாம்; தியான விஷயமான பிரஹ்மம் தியேயமா(தியானிக்கப்படும் பொருளா)ம்.

† "சிவன்வேறு சீவன்வே றென்றிரண்டாச் செப்பும், அவன்றவனை யென்று மறியான்—றவமில்லா, யுள்ளத்தார்க் கெய்துமோ வூர்க்குருவி யாகாச, மெள்ளப் பறந்தறியு மோ" என்று சிவஞான வள்ளலார் கூறுவதின் குணர்தற்பாலதாம்.

86. பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும் பிரமமா குவரேன்றல்
நரச ரீரமாங் குரவனே விசாரமேன் ஞானமே னேன்னுதே
பரம பாவனே பரோட்சமாம் பின்பந்தப் பரோட்சமே யபரோட்
சம், திரவி சாரமா ஞானமா முத்தியாந் தீர்வையீ தறிவாயே.

சீடன், நிர்க்குணப் பிரஹ்மத் தியானத்தினலேயே முத்தி யுண்டாகுமாயின், விசார மேற்றிற்கு? ஞான மேற்றிற்கு? என்று வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினு :—மானிட வடிவங் கொண்ட குருவே! ஆத்மாநாத்ம விசாரஞ் செய்யாது நிர்க்குணப் பிரஹ்மத் தியானஞ் செய்கின்றவரும் அதனது பரிபாகவசத்தால் நிர்க்குணப் பிரஹ்மமாவாரென்று கூறப்படுமாயின், விசார மெற்றிற்கு? ஞான மெற்றிற்கு? இதற்கு விடைகூறியருளல் வேண்டும்.

கு—விடை :—அன்பனே! ¶ நிர்க்குணப் பிரஹ்மத் தியானம் முன்னே பரோட்ச ஞானமாம்; அத் தியானம் பரிபாக மான பிறகு அப்பரோட்ச ஞானமே தியானத்தின் சாமர்த்தியத்தால் அபரோட்ச (பிரத்தியட்ச) ஞானமாம்; இவ்வபரோட்ச ஞானமே விசாரமாம், ஞானமாம், முத்தியாம். இது சித்தாந்தமாமென் றறியக் கடவாய். 86

$ "குந்திபுத்திரா! எவன் மரணகாலத்தில் எந்தெந்த வடிவத்தை நினைக்கின்றவனாய்த் தேகத்தை விடுகின்றானே அவன் எப்போதும் அந்தந்த வடிவத்தின் நினைப்புடையவனாய் அந்தந்த வடிவத்தையே யடைகின்றான்" என்று பகவத்கீதை கூறுவதறிக.

‡ "ஐயமின்றித் தெய்வவுருத் தியானித்தா லதுவா மருவுருவைத் தியானித்தா லட்டமூர்த் தியுமாம், பொய்யவிரண் டையுந்தவிர்ந்து தானாகி யிருந்தாற் பூரணமாஞ் சிவனெதிற் பொருந்துமது வாமான், மையலுறு மனம்விடயத் தாசையுற்றே யதுவாய் மரணசன னமும்விளைந்து வாறதென்றே யுணர்ந்து, மெய்யறிவே தானாகப் பாவித்தா லதுவாய் விளங்குவர்யா வருஞ்செனியா வீட்டையுமெய் துவரே," என்று உபநிடதங் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

¶ நிர்க்குணப் பிரஹ்மத் தியானம் மானசக் கிரியா வடிவமாயிருத்தலின், அத் தியான காலத்தில் நிர்க்குணப் பிரஹ்மம் (சுவர்க்க முண்டென்பதுபோல்) பரோட்சமாக விளங்குவதாம்; அந்தத்தியானத்தின் சாமர்த்தியத்தால் அஃது ஒருவாறு அபரோட்ச (பிரத்தியட்ச)மாக விளங்குவதாம்; அதனால் இந்த நானெவன், சித்தெது என்றற் றொடக்கத்து விசார முண்டாவதாம்; அதனால் அகம் பிரஹ்மாஸ்மி யென்னுந் தத்துவ ஞான முண்டாவதாம்; அதனால் சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோட்ச முண்டாவதா மென்பதிங் குணர்தற்பாலதாம். "எவர் விவேக முதலிய



87. வீட தாம்பரி பூரண சொருபத்தில் விருத்திஞா னமுங்கூடிச்
சேட மாகினு லகண்டமா மநுபவ சித்தியேப் படியேன்றல்
சாடி நீர்மண்ணைப் பிரித்ததேற் றம்பொடி தானுமண் ணேடு
மாயும், ஊடி ஞானமு மறிவிலா மையைக்கேடுத் தோக்கவே
கேடுந்தானே.

சீடன், விருத்திஞானம் கெடாது மிஞ்சி நிற்குமாயின், ஆத்மானுபவம் சித்திப்ப தெங்ஙனமாமென வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினு:—சற்குருவே! § சர்வபந்த நிவிர்த்திவடிவப்பரிபூரணப் பிரஹ்ம சொருபத்தில் (சொருபாவரணத்தை நிவிர்த்தித்த பிரஹ்மைவாஹம் என்னும்) விருத்திஞானம் கூடி மிஞ்சி நிற்குமாயின், அகண்டானுபவ சித்தி யெங்ஙன முண்டாம்?

நான்கு சாதனத்தோடு கூடினவராயும் மந்தபுத்தி யுடைமையால் வேதாந்த சாஸ்திர விசாரத்தில் வல்லவரல்லாராயும் நிர்க்குணப் பிரஹ்மத்தை யறிய விருப்பமுடையாராயு மிருக்கின்றனரோ அவர் சுரோத்திரியப் பிரஹ்ம நிஷ்ட குருவின் முகத்தினின்றும் நிர்க்குணப் பிரஹ்மத்தின் சொருபத்தை நிச்சயித்து, ஸ்தூல - சூக்கும - காரணமாயுள்ள வுபாதி யெல்லா மில்லாததும் சச்சிதாநந்த சொருபமாயுமுள்ள நிர்க்குணப் பிரஹ்மம் நானென்று நிர்க்குணப் பிரஹ்மத்தை யுபாசித்தல் வேண்டும். அந்த நிர்க்குணப் பிரஹ்ம வுபாசனையால் அவ்வதிகாரிக்கு இச்சரீரத்தின் ஜீவித அவஸ்தையிலாவது மரணாவஸ்தையிலாவது பிரஹ்ம லோகத்திலாவது நிர்க்குணப் பிரஹ்மத்தின் சாட்சாத்கார முண்டாய், அந்த நிர்க்குணப் பிரஹ்மவடிவப் பிராப்தியாகிய பயனுண்டாகின்றது. மணியினொளியில் மணிபுத்தி கொண்டு முயன்றவனுக்கு அம்மணியை யடையும் பயனுண்டாவதுபோல, நிதித்தியாசனமாகிய நிர்க்குணப் பிரஹ்மோபாசனையால் இவ்வதிகாரிக்கு அந்த நிர்க்குணப் பிரஹ்மப் பிராப்தியாகிய பயனுண்டாகின்றது." என்று தத்துவானுசந்தானம் முதற் பரிச்சேதத்திற் கூறுவது இங்குணர்தற்பாலதாம்.

§ அகம் பிரஹ்மாஸ்மி (நான் பிரஹ்மமா யிருக்கின்றேன்) அல்லது பிரஹ்மைவாஹம் (பிரஹ்மமே நான்) என்னும் நிச்சயவடிவ அந்தக்கரண விருத்திஞானம் திரிபுடிவடிவமா யிருத்தலின், அஃதுள்ளவளவும் அகண்டானுபவ (பேத ரகித அனுபவ) மெவ்வாறு சித்திக்குமென்பது சீடனது வினுவின் கருத்தாம்.

88. இந்த நிச்சய முத்தரு ளநுபவ மிருப்பதெப் படியென்றால்
சிந்தை யற்றபூ மண்டல விராசனுஞ் சிசுவும்போற் சுகமாவர்
பந்த முத்திகண் மறந்துபோ முண்டென்று பலர்சொலி னகை
யாவர், அந்த ரத்தையுண் டுமிழ்ந்ததோர் கோசுகெனு மவர்களை
நகையாரோ.

---

த—விடை:—அன்பனே! † கடநீரிலுள்ள சேற்றை வேறாக்கிய தேற்றம்பொடி தானும் அச்சேற்றோடு கூட எங்ஙனங் கெடுகின்றதோ அங்ஙனமே, அஞ்ஞானத்தை (சொரூபாவரணத்தை)ப் பகைத்துக் கெடுத்த தத்துவ ஞானமும் தானும் அதனோடு கூடவே கெட்டுப்போவதாம். (அஃ தங்ஙனங் கெடுவதால், அகண்டானுபவம் சித்திப்பதற்கு யாதொரு தடையு மில்லையாம்). 87

சீடன், இவ்வகண்டானுபவம் ஜீவன்முத்தரிடத் தெவ்வாறிருக்குமென்று
வினவுதலும், அதற்குத் குரு விடை கூறுதலும்.

சீ—வி:—தேசிக மூர்த்தியே! இவ் வகண்டானுபவம் ஜீவன் முத்தரிடத் தெவ்வா றிருக்கும்?

---

† "ஜலத்திற் போட்ட தேற்றாம் பொடியினால் ஜலத்தின்கணுள்ள சேற்றின் பிரிவுண்டாகின்றது; அதன்கூடவே தேற்றாம் பொடியும் பிரிந்து போகின்றது. தேற்றாம் பொடியின் பிரிவில் வேறு சாதனங்களி னபேட்சையில்லை,......அங்ஙனமே காரியத்தோடு அவித்தையி னிவிர்த்தி யுண்டாக, அதன் கூடவே தத்துவஞானத்தி னிவிர்த்தியு முண்டாகின்றது. ஆதலால் தத்துவஞான நிவிர்த்தியில் வேறு சாதனத்தின் அபேட்சையில்லை" என்று விருத்திப்பிரபாகரம் 8-வது பிரகாசத்திற் கூறுவதும்,

" அகம் பிரஹ்மாஸ்மி (நான் பிரஹ்மமா யிருக்கின்றேன்) என்னுந் திட நிச்சயமாகிய அபரோட்ச (பிரத்தியட்ச)ப் பிரஹ்ம நிஷ்டை ஒரு க்ஷணத்தி லுதயமாய், இரண்டாவது க்ஷணத்தில் நிலைபெற்று, அவித்தையையும் அதன் காரியத்தையும் பாதிக்க (கெடுக்க)த் தொடங்குகின்றது; மூன்றாவது க்ஷணத்தில் காரியத்தோடு அவித்தையி னிவிர்த்தியாகிய பாதத்தைச் செய்கின்றது; அதேக்ஷணத்தில் தேற்றாம்பொடிபோல விருத்தி ஞானத்திற்கும் மித்தியாத்துவ நிச்சயம் அல்லது மூன்று காலத்திலு மில்லை யென்னும் நிச்சய மாகிய பாதமுண்டாகின்றது; இதனாற்றான், ஞானி ஜீவன் முத்தனாவன்" என்று பஞ்சதசியின் குறிப்புரையி லெழுதப்பட் டிருப்பதுமிங் குணர்தற்பாலனவாம்.

சர்வகர்ம பரித்தியாகஞ் செய்து பிரஹ்ம சொரூபமாக நிலைத்தல் பிரஹ்ம நிஷ்டையாம்.



---

த—விடை:—சிஷ்ய விரத்தினமே! அச் சீவன்முத்தர்கள் (தன்னாலும், தன் பரிசனத்தாலும், பகைவராலும், கள்வராலும், துஷ்ட மிருகங்களாலும் தன்னாட்டிற் கொரு தீங்கில்லாமை காரணமாக யாதொரு) சிந்தையு மில்லாத † சக்கிரவர்த்தி போலவும், (யானெனதென்னும் அபிமான மில்லாமை காரணமாக யாதொரு சிந்தையு மில்லாத) அதி பாலர் போலவும், பரமாநந்த வடிவமாகவே யிருப்பர்; எந்நான்றும் பந்த முத்தி யின்றிய பிரஹ்ம சொரூபமாகவே யிருத்தலின், பந்த முத்தி யென்னும் பாவனை விகற்பம் என்றும் அவர்க்கு மறந்து போவதாம்; பந்த முத்திகளுண்டென்று பிறர் கூறுவாராயின், ஆகாயத்தை யொரு கோசுதுண்டு உமிழ்ந்ததென்று கூறுவாரை நோக்கிப் பிறர் நகைப்பதுபோல அவரை நோக்கி நகையா நிற்பர், (இவ்வாறிருத்தலே § அவரது அகண்டானுபவமாம்). 88

---

†" அண்ணன் சமமா மழிவில்லா வான்மா வாய்நின் றின்பமுறும்
என்னு கினுமொன் றடுப்பவனு யென்னு கினுமொன் றுண்பவனாய்
உன்னு தெங்கா கினுமொருபா லுறங்கு வோனு யாங்கவனே
பொன்னூர் பூமி முழுதாளும் பூபா லனைப்போற் பொலிவுறுமால்"

என்று ஞானவாசிட்டங் கூறுவதும்,

" பிள்ளை யாமுணுச் சிந்தைசெ யாமையிற் பித்தன்
கொள்ளு மார்வமுங் கோபமு மறுதலிற் கூளி
யுள்ள தன்னுரு வொளித்தலி னுளதுணர் முனிக்குப்
பிள்ளை பித்தன்வன் பேய்நிக ருரைத்தனர் பெரியோர்."

என்று குறுந்திரட்டுக் கூறுவது மிங்குணர்தற் பாலனவாம்.

§ "ஜகத்து என்னிடத்தில் முக்காலத்திலு மில்லை; ஏனெனின், அது மித்தையா யிருக்கின்றது. எது மித்தையோ அஃது அதிஷ்டானத்திற் கானி செய்வதில்லை. கானல்நீர் பூமியை நனைப்பதில்லை; அதுபோல, ஜகத்து விளங்குகின்றது; ஆனால், மித்தையா யிருக்கின்றது; எனக்கானி யுண்டாக்குவதில்சிறிதுஞ்சாமர்த்திய முடையதன்று.'நான்சச்சிதாநந்தப் பிரஹ்ம சொரூபமா யிருக்கின்றேன்' என்னும் நிச்சயத்திற்கு ஞானமென்று பெயராம். அதுவே மோட்சத்திற்குச் சாதனமாம்; வேறெதுவு மன்றாம்." என்றும், "ஜகத்திற்குக்காரணம் அஞ்ஞானமாம்; அந்த அஞ்ஞானநாசத்தாலுண்டாகும் ஜகத்தி னிவிர்த்தி ஞானத்தாலுண்டாகின்றது. ஜகத் மித்தை, ஜீவன் ஆநந்த சொரூபன், பிரஹ்மத்திலும் வேறல்லன்; பிரஹ்ம சொரூபமே யாவன் என்னும் நிச்சயத்திற்கு ஞானமென்று பெயராம்" என்றும், விசாரசாகரம் நான்காந் தரங்கத்திற் கூறுகின்றது.

89. மலடி மைந்தனுந் தாணுவிற் புருடனும் வான்மலர் முடிசூடி இலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை யிரசதம் விலைபேசிக் கலக மாய்முயற் கொம்பினுற் குத்தியே களைத்திரு வருமாண் டார், அலகை யாயினு ரெனும்விவ காரத்தை யறிந்தவன் மயங் கானே.

90. மாயை யென்பது பொய்யெனி லதுபெற்ற வகையெலாம் பொய் யாமே, தாயை யன்றிமக் களுக்கொரு பிறவியுஞ் சாதியும் வே றுண்டோ, சேய சொர்க்கமு நரகமு நன்மையுந் தீமையும் பாரா மல், தூய சத்துச்சித் தாநந்த பூரண சொருபமா யிருப்பாயே.

ஜகத் பிராந்தி நீங்குதற் பொருட் டொரு கதை கூறல்.

அன்பனே ! † வந்தியா புத்திரனும் ‡ ஸ்தாணு புருஷனும் ஆகாயத் தாமரை மலரால் தொடுத்த மாலையைத் தம் முடியி லலங்காரமாகச் சூடிக் கொண்டு, கந்தர்ப்ப நகரத்திற்குச் சென்று, அங்குள்ள வொருகடையில் இப்பிவெள்ளியை வாங்க விலை பேசி, அதனுற் றம்முட் கலக முடையவ ராகி, § சசவிஷாணத்தால் $ பரஸ்பரம் குத்திக்கொண்டு, அதனு லிளைப் படைந்து மூர்ச்சித்தனர்; பின் னவ்விருவரு மிறந்தனர்; அகாலத்தி லிறந் தமையால் பேயாகி யலைகின்றனரென் றெருவன் கூறும் ¶ கதையைப் பொய்யென் றறிந்தவன் எங்ஙனம் அக்கதையைக் கேட்டு மயங்கானே அங் ஙனமே சர்வம் மித்தை, சர்வம் பிரஹ்மம், சர்வம் நானேனென்பதைச் சுருதி யுக்தி யனுபவ வாயிலாக வறிந்துள்ளவன் மித்தையா யுள்ள உலக வியவ காரத்தைப்பற்றி மயங்கான். இதனை நீ யூகித்துணரக் கடவாய். 89

மாயை மித்தையா யிருத்தலின், அதன் காரியமாய ஜகஜீவபாமும் மித்தையாமென வற்புறுத்திக் கூறல்.

அன்பனே ! § மாயை யென்று சொல்லப்படுவது சுருதி யுக்தி யனு பவங்களால் மித்தையாமாயின், ¶ அம்மாயைகற்பித்த ஜகஜீவபாக் கூறுபா

† வந்தியா புத்திரன் - மலடிமகன், ‡ ஸ்தாணுபுருஷன் - கட்டையிற் கள்வன். § சசவிஷாணம் - முயற்கொம்பு, $ பரஸ்பரம் - ஒருவர்க்கொருவர்.

¶ ஞானவாசிட்டத்திலுள்ள பாலன் கதை யிங்குணர்தற் பாலதாம்.

§ விசாரிக்குமிடத்து எது தனக்கென் றெரு வடிவ மில்லா தொழி கின்றதோ அது மாயையாம். "எவளுண்மையில்லையோ அவள்தான் மாயை" என்று சர்வசாரோபநிஷத் கூறுகின்றது.

¶ ஜக ஜீவ பாம் மாயா கற்பித மென்பதை வராகோபநிஷத் 2-வதத்தியா யத்தில் "மாயையும் அதன் காரியமும் நசித்துப்போனுல், ஈஸ்வரத்துவமு மில்லை; சீவத்துவமு மில்லை" என்று கூறுவதனுலு மறிக.



91. பங்க யாசனன் முதற்பல தேவரும் பாருள பெரியோரும் கங்கை யாதியாந் தீர்த்தமுந் தேசமுங் காலமு மறைநாலும் அங்க மாறுமந் திரங்களுந் தவங்களு மசத்திய மெனச் சொன் ஞல், எங்க ளுயக னேயத ஞற்குற்ற மில்லையோ மொழியீரே.

டனைத்தும் மித்தையா மென்பதற்குத் தடையாது? அஃதெதுபோலெனின், ‡ தாயினது பிறப்பையும் ஜாதியையும் விட்டு மக்கட்கு வேறொரு பிறப்பும் வேறொரு ஜாதியு முண்டாகாமை போலவாம். ஆதலால், † சுவர்க்க நாகமே ன்பனவற்றையும் அவற்றை யடைதற்கேதுவாயுள்ள புண்ணிய பாவமென் பனவற்றையும் சத்தியமாக வறியாது மித்தையென் றுபேட்சித்து நீ சச்சி தாநந்த பரிபூரணப் பிரஹ்ம சொருபமா யிருப்பாயாக. 90

சீடன், ஜகஜீவ பரங்களை மித்தையெனக் கூறல் அபசார மாகாதோவென வினவுதலும், அதற்குத் குரு விடை கூறுதலும்.

சீ—விஞ:—தேசிகோத்தமரே! பிரமன் முதலிய பற்பல தேவர்களும், பூமியின்கண்ணுள்ள பெரியோர்களும், கங்கை முத லிய புண்ணிய தீர்த்தங்களும், காசிமுதலிய புண்ணிய க்ஷேத்திரங் களும், அர்த்தோதயம் மகோதய முதலிய புண்ணிய காலங்களும், இருக்கு-யசுர்-சாமம்-அதர்வண மென்னும் நான்கு வேதங்களும், சந் தசு - கற்பம் - வியாகாணம் - சிட்சை - சோதிஷம் - நிருத்தியென்னும் வேதாங்கமாறும், பஞ்சாட்சா முதலிய மந்திரங்களும், கிருச்சிரம் சாந்திராயண முதலிய தவங்களும் மித்தையாமெனக் கூறின், § அவ் வாறு கூறுவதாற் றோஷ மில்லையோ? அத னுண்மையை யுரைத் தருளல் வேண்டும். 91

‡ அந்தணர் மக்கள் அரசர்மக்க ளாகாமைபோல மித்தியா வடிவ மாயா கற்பித ஜகஜீவபாமும் சத்தியமாகா வென்பதாம்.

† "உலகெலா முணர்ந்த விடத்திலே யுறங்கி யுறங்கிய விடத்திலே யுணர்வர்" என்றும், "சாதி யந்தகர் தாமெனக் காணினுஞ் சகத்தினைக் காணுராய், வாது சொல்லுமி டத்திலுஞ் செவிடராய் மற்றவர் தமையுண் மை, யோது மென்றுரை செய்பொழு தூமரா யுண்மையா யொழிவில்லாப், போத ரூபராய்ச் சுதந்தா ராகியே யிருப்பர்கள் புரையற்றோர்." என்றும் குறுந்திரட்டுக் கூறுவதிங் கறிதற்பாலதாம்.

§ பிரமன் முதல் தவங்களீறுயுள்ளன தம்மை வழிபடுவோர்க்கு நன்மை தருவனவா யிருத்தலின், அவற்றை மித்தையெனல் தோஷமாகாதோ வென விஞவினனென்க.

92. சொற்ப னந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்வது
பிழையானல், அற்ப மாயையிற் ேறன்றிய சகங்களை யசத்தே
னல் பிழையாமே,சொற்ப னந்தனிற் கண்டதைப் பொய்யென்று
சொல்லலா மெனின்மைந்தா, அற்ப மாயையிற் றேன்றிய சக
மெலா மசத்திய மெனலாமே.

93. பொய்யை மெய்யென்ற மூடர்புண் ணியரென்று புராணங்கூப்
பிடுமானல், மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள்
விதித்தசாத் திரமுண்டோ,பொய்ய தேதெனி னுமரு பங்களாம்
பூதமா கியமாயை, மெய்ய தேதெனிற் சச்சிதா நந்தமாய் வியா
பிக்கு மான்மாவே.

---

கு—விடை:—மைந்தனே! சொப்பனத்திற் கண்ட (பிரமன் முதல் தவங்களீறயுள்ள)பொருள்களைச் சாக்கிரத்தில் விழித்தவன் மித்தையென்று கூறுவது தோஷமானல், மாயையிற் றேன்றிய பிரபஞ்சங்களை மித்தையென்று கூறுவதும் தோஷமாம். ¶ சொப்பனத்திற் கண்ட பொருள்களைச் சாக்கிரத்தில் விழித்தவன் மித்தை யென்று கூறலாம்; அதனுற் றேஷ மில்லை யென்றல், மாயையிற் றேன்றிய பிரபஞ்சங்களை யெல்லாம் தன்னில் விழித்தவன் (ஞானி) மித்தை யென்று கூறலாம்; அதனுற் றேஷ மில்லையாம். 92

பிரம்மா முதல் ஸ்தம்பபரியந்தமா யுள்ள மித்தியாவடிவத் துவைதப் பிரபஞ்சத்தைச் சத்தியமெனக் கூறும் தார்க்கிகர் முதலிய மூடரைப் புண்ணியவான்களென்று புராணங் கூறுமாயின், $ சத்தியவடிவ அத்வைதப் பிரஹ்மத்தைச் சத்தியமெனக் கூறும் ஞானிகட்கு அபராதங்கள் விதித்த சாஸ்திரமு மிருக்கின்றதா? இல்லையே. (ஆதலால் ஜகஜீவ பரங்களைத் தன்னில் விழித்தவன் மித்தையென்று கூறுதலால் யாதொரு தோஷமும் அவனுக்குச் சம்பவியாதென் றறிவர்யாக).

---

¶ சொப்பனப் பிரபஞ்சத்திற்குச் சாக்கிரப் பிரபஞ்சம் அதிஷ்டானமாயிருத்தலால், சொப்பனப் பிரபஞ்சத்தினின்றும் சாக்கிரப் பிரபஞ்சத்தில் விழித்தவனுக்கு அச் சொப்பனப் பிரபஞ்சம் மித்தையாக விளங்குகின்றது; அங்ஙனமே, ஜக ஜீவ பரங்கட்குத் தான் (நிர்விசேஷ சின்மாத்திர வடிவ ஆத்மா) அதிஷ்டானமா யிருத்தலால், அவற்றினின்றும் தன்னில் விழித்தவனுக்கு (தன்னை யறிந்தவனுக்கு) அவை மித்தையாக விளங்குகின்றன வென்பதாம்.

சொப்பனப் பிரபஞ்சத்திற் கதிஷ்டானம் சாக்கிரப் பிரபஞ்ச மென்பது வேதாந்திகளுள் ஏகதேசிகளது கொள்கையாம்.



94. மாயை யென்பதே துடையரா ரெப்படி வந்தது வருவானேன்
மாயை யென்பதுபிரமத்தின் வேறெனின் வஸ்துவு மிரண்டாமே
மாயை யென்பதும் பிரமமு மொன்றெனின் வஸ்துவும் பொய்
யாமே, மாயை யென்றமே கங்களுக் கொருசண்ட மாருத குரு
மூர்த்தி.

---

சீ—வினு.—§ மித்தை(பொய்)யாவது யாது?

கு—விடை:—நாமரூபமா யுள்ள பூத பௌதிக வடிவ மாகிய மாயையாம்.

சீ—வினு:—சத்தியமாவது யாது?

கு—விடை:—சச்சிதாநந்த வடிவமாய் (தனது காரியமான கடத்தில் காரணமான மண் வியாபித் திருப்பதுபோல வெங்கும்) வியாபித்திருக்கும் ஆத்மாவாம். 93

சீடன், மாயையின் சொரூப முதலியவற்றை யறிய அறுவகையாக
வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினு:—‡ மாயை யென்னு மேகங்களை யகற்றுதற்குச் சண்டமாருதமா (பெருங்காற்று)யுள்ள குருமூர்த்தியே! (1) மாயை யென்று சொல்லப்படுவது எப்படிப்பட்ட சொரூப முடையது? (2) அதனை யுடையவர் யார்? (3) † விருத்தி, பரிணாமம், ஆரம்பம், விவர்த்தமென்னும் நான்கு பட்சங்களுள் அதனது உற்பத்தி யெவ்வாறு? (4) அஃதெக் காரணத்தால் என்னிடத்து வந்தது? (5) மாயை பிரஹ்மத்தினும் பின்னமா (வேறு)மெனின், அத்வைதஞ்

---

$ ஞானிக்குக் குற்றம் விதித்த சாஸ்திர மின்றென்பதை "ஈசனு ஞானி யிருந்துள விடத்தே யிருப்பது முத்திதா னந்தத், தேசிக னேவல் செய்பவன் காலென் சென்னியி லிருப்பது மன்னி, மாசிலாப் பரம ஞானியா முனிக்கு மகேசனு மொப்பலன் மதிக்கி, லாசிலா வரியு மொப்பல னு மொப்பல னேவரொப் பாரே" என்று பிரமகீதை கூறுவதாலறிக.

§ "இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்" என்னும் நன்னூற் சூத்திர விருத்தியுரையில் "மெய்யுள்ளது, பொய் யில்லது" என்றிருப்பதும், பிரபுலிங்கலீலை-மாயை கோலாகலகதியில் "நின்னை (மாயையை) யோர் பொருளென மூடரே கிளப்பார்" என்றிருப்பது மிங்குணர்தற் பாலனவாம்.

‡ மாயை தமசு, மோகம், அவித்தையெனப் பலவிதமாக வியவகரிக்கப் படுதலின், 'மாயை யென்னு மேகங்களை' என்று கூறப்பட்டது.

† காரியோற்பத்தி நால்வகைத்தாம்; அவை விருத்தி, பரிணாமம், ஆரம்பம், விவர்த்த மென்பனவாம். இவற்றிற்கு முறையே ஆடை வீடாதலும், பால் தயிராதலும், நூல் ஆடையாதலும், கயிற்றி லரவு தோன்றுதலு முதாரணங்களாம்.

95 அதனை யின்னதென் றுரைத்திடப் படாமையா லவாச்சிய வடி
வாகும், இதுத னக்குள துடலியா னுலகுமெய் யெனுமவ ருடை
யோர்கள், கதையி லாதபோய் வந்ததிப் படியென்று கண்டபே
ரிலைமைந்தா, இதன மாயையேன் வந்ததென் றாற்புத்தி விசார
மற் றதனாலே.

---

சித்தியாது துவைதம் (மாயை, பிரஹ்மமென்னு மிரண்டும்) சித்திக்கு மல்லவா? (6) மாயையும் பிரஹ்மமும் அபின்னமா (ஒன்று)மெனின், பிரஹ்மமும் மாயை போன்று மித்தையா மல்லவா? இவற்றிற்கு விடை கூறியருளல் வேண்டும். 94

கு—விடை:—அன்புள்ள மகனே! யான்கூறும் விடையைக் கவன மாய்க் கேட்பாயாக. (1) † அம்மாயையைப் பின்னம், அபின்னம், பின்ன

† “ஈதுசத் தானதல்ல வீதுதா னசத்து மல்ல, வீதுமற் றுபய மல்ல வீதுதான் பின்ன மல்ல, வீதுமற் றபின்ன மல்ல வீதுதா னுபய மல்ல, வீது சா வயவ மல்ல விதுநிர வயவ மல்ல.” “ஈதுமற் றுபய மல்ல விதுவிசித்திரமே யாகி, யாதிதென் றுணர வொண்ணா வநிர்வச நீய மாகும்,” என்று விவேக சூடாமணி கூறுவதும், திருக்குறளிலுள்ள ‘இருள்சேரிருவினையும்’ என்னுஞ் செய்யுளின் விசேட வுரையில் பரிமேலழகர் “இன்ன தன்மைத்தென ஒருவ ராலுங் கூறப்படாமையின், அவிச்சையை இருளென்றும்” என்றெழுதி யிருப்பது மிங் குணர்தற் பாலனவாம்.

I மாயை நான் பிரஹ்மமென்னும் தத்துவ ஞானத்தால் பொய்யென்று நிச்சயிக்கப்படுதலின், (1) சத்தன்றாம்; உலக காரணமா யிருத்தலாலும் நானஞ்ஞானியென்னு மனுபவமிருத்தலாலும், (2) அசத்தன்றாம்; சத்தும் அசத்தும் தம்முள் விரோத முடையனவாகலின் (3) அவ்விரண்டு மன்றாம்;

II திரவிப மாயின் சாவயவமாம், அன்றாகலின் (4) சாவயவ மன்றாம்; ஜகதாகாரமாய்ப் பரிணமித்தலின், (5) நிரவயவமன்றாம்; சாவயவமும் நிரவய வமும் தம்முள் விரோத முடையனவாகலின் (6) அவ்விரண்டு மன்றாம்;

III பிரஹ்மத்திற் கன்னியமாக வின்மையின், (7) பின்ன மன்றாம்; சித்தாகிய பிரஹ்மத்திற்கும் சடமாகிய மாயைக்கு மபேதங் கூடாமையின் (8) அபின்னமன்றாம்; பின்னமும் அபின்னமும் தம்முள் விரோத முடை யன வாகலின் (9) அவ்விரண்டு மன்றாம். இதன் விரிவை விருத்திப் பிரபா கரம் 8-வது பிரகாசத்திலும் வாசுதேவ மனனம் இராகத்துவேஷ நிரூபகத் திலுங் காண்க.

“பிரஹ்மத்தில் (கற்பிதமாய்) உள்ள பராசத்தி (மாயை) பிரஹ்மத்தைப் போல மூன்று காலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப்படாம லிருத்தலின்மை



---

பின்னம், சத்து, அசத்து, சதசத்து, சாவயவம்(அவயவமுடையது), நிரவய வம்(அவயவமில்லாதது), சாவயவ நிரவயவமென்னு மிவற்றுள் இத்தன்மைய தாய சொரூபமுடையதென்று நிச்சயித்துச்சொல்வது முடியாமையின், அஃது ‡அநிர்வசநீய சொரூபமாம். (2) இந்த விளைநிலம் வீடு முதலியன எனக்குள்ள பொருளாம்; இத் தேகத்திற்கு வேறாக ஆத்மா காணப்படாமையின், தேகமே ஆத்மாவாம்; ஜகத் மித்தையன்று; ஆனால் சத்தியமா மென்னும் §விபரீதபுத்தி யுடையவரே அம்மாயையை யுடையோராவர். (3) இன்ன தன்மையதே ன்று கூறுதற் கரிய அம்மாயை அநாதியா யிருத்தலின், அதனை விருத்தி பரிணம முதலிய பட்சங்களுள் இவ்விதமா யுண்டாயிற்றென் றறிந்தவ ரொருவரு மில்லை. (4) (அசத்து, ஜடம், துக்கம், அநித்தியம், கண்டமென்னு மிலக்க ணங்களை யுடைய) மாயை யென்னிடத் தெக் காரணத்தினால் வந்தது என்றால், அஃது இந்த நானேவன்? சித்தேது? ஜடமேது? இவ்விரண்டு மொன்றாகக் கூடும் பந்தமேது? வீடேது? என்று புத்தியினிடத்து விசா ரணை யில்லாமையினாலே வந்தது. 95

---

யான், சத்தன்றாம்; மலடி மகனைப்போல முக்காலத்தும் சொரூப மிலதாயிரு த்தலின்மையான், அசத்தன்றாம்; ஆகவே, இது பொய்யென்று நிச்சயிக்கத் தக்கதாயும் சொரூப முளதாயும் இருத்தலின், சத்திற்கும் அசத்திற்கும் வேறாம், ஆகவே, ஒருகாலத்து (மயக்க காலத்து)ச் சொரூப முடையதாய்த் தோன்றி மற்றொரு காலத்து (தெளிவு காலத்து)ப் பொய்யென்று நிச்சயித் தற்குரியதா யிருப்பது சதசத்விலக்ஷண மென்பது பெறப்பட்டது” என்பது நாநாஜீவவாதக்கட்டளைக் குறிப்புரை.

“பதார்த்தம் எத்தனை வகை? அவை சத், அசத், மித்தையென மூன்று வகையாம். சத் எது? பிரஹ்மம். அசத் எது? துச்சம் (இல்லாதது). மித்தை எது? இல்லாத பிரபஞ்சத்தைப் பிரஹ்மத்திற் கற்பிப்பது (மாயை).” என்று சர்வசாரோபநிஷத் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

‡ பாதிக்க (பொய்யென்று நிச்சயிக்க)த் தக்க சொரூப முடையது அநிர் வசநீய வஸ்துவாம். கயிற்றரவு முதலியன பாதிக்கத்தக்க சொரூபமுடையன வாயிருத்தல் போன்று மாயையும் பாதிக்கத்தக்க சொரூப முடையதா மென்க.

§ விபரீத புத்தி யுடையவ ரென்பது விபரீத புத்தி யுடைய மற்றைப் பிராணிகளுக்கு முபலட்சணமாம்.

96. அருவ மாகுமா யாவிவித் தைகள்விளை யாடுமுன் றேரியாவே
உருவ மாம்பல கந்தர்ப்ப சேனையா யுதித்தபின் வெளியாகும்
பிரம சத்திக ளநந்தமா மதைக்கண்டு பிடித்திடல் கூடாதே
பரவு பூதங்கள் கண்டநு மானத்தாற் பலருக்கும் வெளியாமே.

‡ (5-6) இந்திரசாலக்காரனது அருவமாகிய மாயாசத்திகள் அவன் கந்தர்வநகர முதலியவற்றைக் காட்டி விளையாடுவதற்கு முன்பு ஒருவர்க்குந் தோன்றாமல்,பலவுருவமுள்ள கந்தர்வ சேனைகளாகித் தோன்றியபிறகு யாவர்க்கு மனுமான வாயிலாகத் தோன்றுநிற்கும்; அதுபோல,பிரஹ்மத்தின் (அருவமாகிய) மாயாசத்திக ளளவிறந்தனவாம்; அவற்றை யின்னதன்மையன வென்று கண்டறிதல் ஒருவர்க்கு முடியாது; ஆனால், அவை ஆகாயாதி பூதங்களைக்கண் டனுமானித்த அனுமானத்தால் பலர்க்கும் தோன்றுநிற்கும். 96

‡ இந்திர ஜாலக்காரனது மாயாசத்திகளை அவனிடத்திற் றோன்றிய இந்திரஜாலத்தைக்கண் டனுமானஞ்செய் தறிவதுபோல, பிரஹ்மத்தினது மாயாசத்திகளையும் அதனிடத்திற் றோன்றிய ஆகாயாதி பூதங்களைக்கண் டனுமானஞ்செய் தறிதல் வேண்டுமென்பதாம்.

ஈண்டனுமானம் வருமாறு:—பிரஹ்மத்தின்கண் அளவிறந்த மாயா சத்திகளுண்டு; ஆகாயாதி பூதங்கள் தோன்றி யிருத்தலின்; யாது ஆகாயாதி பூதங்களின் தோற்றத்தை யுடையது அஃதளவிறந்த மாயாசத்திகளை யுடையது; (கடகலசாதிகளைத் தோற்றுவிக்கும் பலவிதமாய சக்திகளை யுடைய) மண்போல என்பது.

"வித்தையாடி செய்யும் ஜாலவித்தைகளைப்பார்க்கும் மகனைப் பார்த்துத் தகப்பன் மகனே! வித்தையாடியாற் காண்பிக்கப்பட்ட இம் மாமர முதலியன முழுமையும் பொய் என்றான்; இப்படி சொன்னதினால் வித்தையாடி பொய்யனென மகன் நினைக்கிறதில்லை; ஆனால், அவனைச் சத்தியமாகவே அறிகிறான். அதுபோல ஜகத்து மித்தையென்று சொல்லுதலால் ஆத்மா சத்தியமென்று அறிந்து கொள்ளுவான் என்னும் அபிப்பிராயத்தால் ஆசாரியர் பாராவார (சம்சார)த்தை மித்தையாகச் சொன்னார்". என்பது விசாரசாகரம்.

"மாயையொடு விரவுமந்தச் சிவத்தினின்றும் பழுதைமா சுணமேபோல
ஆயவபஞ் சீகிருத சூக்குமவா காயமுமற் றதிலிருந்து
வாயுவுமற் றதினழலு மதிற்சலமு மதிலிருந்து வயங்குமண்ணும்
பாயவபஞ் சீகிருத மாகவே யம்மாவுற் பத்தியான"

என்று சூதசங்கிதை கூறுவதும், "ஆறு கோடி மாயா சத்திகள், வேறு வேறு தம் மாயைக டொடங்கின" என்று திருவாசகங் கூறுவதும், "இவ்வுலக காரணமா மாயை யுண்மையினு ளிறுதியதி லென்பதென்கொ லென்னில், வரைவதரு சித்திரிகன் சித்திரசத் தியைப்போன் மாயையுஞ்சின் மாத்திர மாம் பிரமத்தின் வேறாய்த், தெரிவ திலாமையின்" என்று வேதாந்த சூடாமணி கூறுவது மிங்குணர்தற் பாலனவாம்.



97. காரி யங்களுஞ் சத்தியா தாரமுங் காணுமற் றதுமாயம்
பாரி னின்றமா யாவியுஞ் சேனையும் பார்ப்பவர் கண்காணும்
வீரி யந்திகழ் வித்தையா யினசத்தி வெளிப்படா ததுபோலப்
பேரி யற்பிர மத்துக்கு முலகுக்கும் பிறிதுசத் திகளுண்டே.

98. சத்தி சத்தனைத் தவிரவே றன்றுகாண் சத்தனு மாயாவி
வித்தை காட்டிய விந்திர சாலம்போய் வித்துவான் மெய்போலப்
புத்தி மைந்தனே சத்திமா னாகிய பூரண வான்மாவின்
வத்து நிர்ணயஞ் சொன்னதிட் டாந்தத்தின் வழிகண்டு தெளி
[வாயே.

இந்திர ஜாலக்காரனும் அவனது இந்திரஜால சத்தியாற்றோன்றிய கந்தர்வசேனையும் காண்போர்க்குப் பிரத்தியட்சமாகத் தோன்றும்; அவ்விந்திரஜால சத்தியோ பிரத்தியட்சமாகத் தோன்றுவதில்லை; அதுபோல,மாயாசத்தியின் காரியமான நாமரூபவடிவப் பிரபஞ்சமும் அச்சத்திக் காதாரமாகிய ¶ பிரஹ்மமும் காண்போர்க்குப் பிரத்தியட்சமாகத் தோன்றும்; அம் மாயாசத்தியோ பிரத்தியட்சமாகத் தோன்றுவதில்லை. ஆதலால், ஆதாரமாகிய பிரஹ்மத்திற்கும் காரியமாகிய பிரபஞ்சத்திற்கும் வேறாக அளவிறந்த சத்திகளுளவாம். 97

அறிவுள்ள மைந்தனே ! † (இந்திரஜால) சத்தியானது தன்னையுடைய இந்திரஜாலக்காரனிலும் வேறன்றாம். அச்சத்தியை யுடையவனான இந்திரஜா

¶ "சங்கை:-அனுமானத்தால் கடாதிகளைமித்தையென்றுகூறுமிடத்துச் சத்தாயிருக்கின்றது கடமென்னும் பிரத்தியட்சத்தால் அனுமானத்திற்குப் பாத முண்டாகும்.

சமாதானம்:-அதிஷ்டானமா யிருக்கின்ற பிரஹ்மத்தின் சத்தை அந்தப் பிரத்தியட்சத்தில் விஷயமா யிருக்கின்றமையின், கடாதிகளுக்கு (மேற்கூறிய பிரத்தியட்சத்தாற்) சத்தியத்துவம் சித்திக்கவில்லை.

சங்கை:-ரூபமற்ற பிரஹ்மம் எங்ஙனம் சாட்சுசஞானத்திற்குவிஷயமாம்?

சமாதானம்:-ரூபத்திற்கு வேறு ரூபமில்லாவிடினும் அது பிரத்தியட்சமாகின்றது; (அதுபோலப் பிரஹ்மசத்தையும் பிரத்தியட்சமாதலமையும்)." என்று வேதாந்த பரிபாஷை அனுமான பரிச்சேதத்திற் கூறுவதிங் குணர்தற் பாலதாம்.

† இவ்வுவமானத்திற் கேற்றவாறு உவமேயம் மாயாசத்தி பிரஹ்மத்தினும் வேறன்று மென்றும், மாயாசத்தியாற் றோற்றிய வுலகம் மித்தையாகப் பிரஹ்மம் சத்தியமாய் விளங்கு மென்றுங் கொள்க.

99. இல்லை யாகிய சத்தியை யுண்டென்ப தெப்படி யெனக்கேட்கில்
புல்லை யாதியா மசேதனப் பொருளெலாம் பூத்துக்காய்ப் பனபா
ராய், நல்லை யாமக னேயதிற் சிற்சத்தி நடந்திடா திருந்தக்கால்
தோல்லை யாய்வருஞ் சராசர வுயிர்க்கெலாஞ் சுபாவங்கள்
'[வேருமே.

லக்காரன் இந்திர ஜாலவித்தையாற் றேற்றுவித்த இந்திரஜாலம் பொய்யாக அவ்விந்திரஜாலக்காரன் மெய்யாயிருப்பதுபோல, (மாயாப் பிரபஞ்சம் பொய்யாகப் பிரஹ்மம் மெய்யாயிருப்பதாம்; அதனால்) சர்வசக்தியையுடைய பரிபூரணமான ஆத்மாவினது வாஸ்தவ நிர்ணயத்தை நீ கூறிய திருஷ்டாந்த வாயிலாக வறிந்து தெளிவாயாக. 98

சீடன், மாயாசத்தி பிரஹ்மத்தினும் வேறன்றயின், அதனை அனுமானத்தா லுண்டென்றறிவது எவ்வாறு பொருந்துமென்று வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வின:—ஐயனே! மாயாசக்தி பிரஹ்மத்தினும் பின்னமா யிருப்பதில்லை யாயின், அதனை யுண்டெனக் கூறுவது எவ்வாறு பொருந்தும்?

கு—விடை:—நற்குணமுள்ள மைந்தனே! நீ புல் முதலிய அசேதனப் பொருளனைத்தும் புஷ்பிக்குங் காலத்திற் புஷ்பித்துக் காய்க்குங் காலத்திற் காய்க்கும் விசித்திரங்களைக் கவனித்துப் பாராய். அப்பொருள்களில் $ பிரஹ்மத்தின் மாயாசத்தி வியாபியாதிருக்குமாயின், அநாதியாய் வருகின்ற சராசரமான வுயிரனைத்திற்கும் தத்தஞ் சுபாவங்கள் வேறுபட்டுப் போம். 99

*பிரஹ்மத்தின் சத்தி பிரஹ்மத்திற்கு வேருயிருக்குமாயின், அத்வைத சுருதிக்கு விருத்தமாம்; அபின்னமென்று கூறின், சக்தி பிரஹ்மரூபமாதலால் பிரஹ்மத்தின் வேருதற்றன்மையைச் சத்தி யென்னும் பெயரால் கூறுதல் வியர்த்தமாம்; ஆதலால், சத்திக்குப் பிரஹ்மத்தோடு பேதம் அபேத மிரண்டுங் கூறுதல் வேண்டும்; இருளும் ஒளியும்போல அவ்விரண்டு தர்மங்களு மோரிடத்திரா; ஆனல், ரச்சுவோடு சர்ப்பத்தின் சம்பந்தம்போலப் பிரஹ்மத்தோடு சத்திக்குக் கற்பிதபேதமும் வாஸ்தவ அபேதமுமான அநிர்வசநீய தாதாத்மிய சம்பந்தமுண்டு; அதனுல், சத்திக்குத் தனது சத்தனோடு வாஸ்தவபேத மில்லாமையால், எந்தப் பிரமாணத்தாலும் வேருகத் தோன்றுதலின்மையின், அந்தச் சத்தி பின்னமன்று; ஆனல், கற்பித சர்ப்பம் பரமார்த்தமாக ரச்சுவடிவமா யிருப்பதுபோலச் சத்தி பரமார்த்தமாகப் பிரஹ்மவடிவமாகவே யிருக்கின்ற தென்பதிங் குணர்தற் பாலதாம்.*

*$ "காற்றிலே யசைவுங் கல்லிலே திடமுங் கனலிலே சூடும்வான் றனிலே*
*தோற்றலா மையுநன் னீரிலே நெகிழ்வுந் தொலைவுறு மாய்விலே மாய்வு*
*மூற்றமாம் விதையின் மரங்களும் போல வுள்ளுறை பிரமசத் திகடா*
*மாற்றல்சால் கால தேசசித் திரத்தா லவனியிற் சாலிரோபாற் றேன்றும்"*

*என்று ஞானவாசிட்டம் பாலன் கதை கூறுவதிங் குணர்தற் பாலதாம்.*



100. கருப்பை முட்டையுட் பறவைகள் பலநிறங் கலந்தசித் திரம்
பாராய், அருப்ப மாஞ்சத்தி நியமமில் லாவிடி லரசிலா நகர்போ
லாம், நெருப்பு நீரதாங் கசப்புமே மதுரமா நீசனு மறையோதும்,
பொருப்பு மேகமாங் கடலெலா மண்களாம் புவனமிப் படி
போமே.

மேலும், முன்னர் முட்டையுள்ளே ஜலவடிவமா யிருந்த கரு பின்னர்ப் பல வர்ணங்களோடு கூடிய பறவைகளாய்த் தோன்றிய ஆச்சரியத்தையும் நீ பார்க்கக்கடவாய். இவ்வாறு ‡ நியமஞ் செய்யுஞ் சத்தியில்லையாயின், சர்வப் பிரபஞ்ச சுபாவமும் அரசனில்லாத நகரம்போல மாறுபாடடையும்.

சீ—வின:—*அஃதெவ்வாறு மாறுபாடடையும்?*

கு—விடை:—உஷ்ண சுபாவமுள்ள அக்கினி சீதள சுபாவமுள்ள நீராம்; கைப்புச் சுபாவமுள்ள வேம்பும் மதுர சுபாவமுள்ள கற்கண்டாம்; வேதமோதுவதற் கநதிகாரியான சண்டாளனும் வேதமோதுதற் கதிகாரியாவன்; அசல சுபாவமுள்ள மலையும் சலன சுபாவமுள்ள மேகமாம்; திரவ சுபாவமுள்ள கடலனைத்தும் கடின சுபாவமுள்ள பிருதிவியாம். (அவ் நியமசத்தி யில்லாவிடின், உலக மிவ்வாறு சுபாவங் கெட்டுப் போம். (அவ் வாறு கேடாமையின், ¶ அக்கினியின் றகசத்திபோலப் பிரஹ்மத்தின்கண் 100
மாயாசத்தி யுண்டெனற்குச் சந்தேக மின்றும்).

*‡ "நியம சத்தியினுற் போகபோத் துருவை நியமஞ் செய்து" என்று*
*கூறுவதறிக.*
*வேதாந்த சூளாமணி*

*அக்னியின் தாகசக்தி அதனினும் வேருகாதிருந்தும் தனது காரியத்*
*¶ அக்னியின் தாகசக்தி அதனினும் வேருகாதிருந்தும் தனது காரியத்தைச் செய்வதுபோல, பிரஹ்மத்தின் மாயாசத்தியும் அதனினும் வேருகாதிருந்தும் தனது காரியத்தைச் செய்கின்ற தென்பதாம்.*

*தீயின் சத்தி சுடுதல் அடுதல் முதலிய தொழில் வேறுபாட்டால் பலதிறத்ததாய் விளங்குதல்போல, பிரஹ்மசத்தியும் சீவசேதனத்தை மறைத்தல், பிரஹ்மத்தில் உலகைத் தோற்றுவித்தல் முதலிய தொழில் வேறுபாட்டால் பல திறத்ததாய் விளங்குகின்ற தென்பதிங் குணர்தல் வேண்டும்.*

*"அக்கினி தானே தனது சக்தியாகாது; ஏனெனின், அக்கினியே அக்கினியின் சத்தியாகுமாயின், அக்கினி யிருக்கப் பிரதிபந்த வடிவ மணிமந்திர ஔஷதங்களால் தாக மில்லாமற்போகின்றது; உத்தேஜகமாகிய பிரதிபந்தத்தை மாற்றும் மணி மந்திர ஔஷதங்க ளிருக்குமாயின், பிரதிபந்த மிருக்குங் காலத்திலுந் தாகமுண்டாகின்றது; அவ்விரண்டு முண்டாகலாகா; உண்டாகின்றமையின், அக்கினியின் சக்தி அக்கினிவடிவமன்று; அக்கினிக்கு வேருமென நிச்சயிக்கப்படுவதாம்" என்பது பஞ்சதசிக் குறிப்புரை.*

*(1) காரியத்திற்கு விரோதமாயிருப்பது பிரதிபந்தமாம், (2) பிரதிபந்த மிருக்கக் காரியத்திற்குச் சாதகமா யிருப்பது உத்தேஜகமாம்.*

101. ஆர்க்குங் காணவு மறியவும் படாதேன்று மவாச்சிய வடிவேன்
றும், சேர்க்கு நாமரூ பப்பயிர் வித்தேன்றுஞ் செப்பிய சிற்சத்தி,
பேர்க்கு மாறேங்ஙன் பிரித்திடப் படாதேனிற் பிரமபா வனே
யோன்றுப், பார்க்கு மாறேங்ஙன் முத்தியா குவதேங்ஙன் பரம
சற் குருமூர்த்தி.

102. வாயுத் தம்பனஞ் சலத்தம்ப னம்மணி மந்திர மருந்தாலே
தேயுத் தம்பனஞ் செய்திடி லதிலதிற் சிறந்தசத் திகளேங்கே
நீயச் சச்சிதா நந்தமாய் வேறேன்று நினேந்திடா திருப்பாயேல்
மாயச் சத்திபோ மீதன்றி மந்திர மறைகளிற் காணேமே.

---

சீடன், மாயை பிரஹ்ம பின்னமாயின், அதனை யொழித்தலும், அத்வைத பாவனை செய்தலும், முத்தியடைதலும் எவ்வாறமென்று வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினு:—பரம சற்குருமூர்த்தியே! † யாவர்க்கும் பாகியமாயுள்ள கடமுதலியவற்றைப் போலக் காணவும், ஆந்தரமாயுள்ள சுக முதலியவற்றைப் போல வறியவுங் கூடாதென்றும், அவாச்சிய வடிவென்றும், நாமரூபப் பயிர்களை யுண்டாக்கும் விதை யென்றும் தேவரீர் கூறிய சித்சத்தி (பிரஹ்மத்தின் மாயா சத்தி)யை நானொழிக்குமா றெப்படி? ஒழித்தல் கூடாதாயின், அஹம்பிரஹ்மாஸ்மி யென்னும் அத்வைத பாவனையால் என்னையும் பிரஹ்மத்தையும் ஏகமாயறிவ தெப்படி? எனக்குச் சர்வதுக்க நிவிர்த்தி-பரமாநந்தப் பிராப்திவடிவ மோட்ச முண்டாவ தெப்படி? இவற்றிற்கு விடையருளல் வேண்டும். 101

கு—விடை:—அன்பனே! மந்திரவாதி மணி-மந்திர-ஔஷதங்களாலே வாயுஸ்தம்பனம்-ஜலஸ்தம்பனம்-தேயுஸ்தம்பனமென்னு மிவற்றைச் செய்வானாயின், வாயு-ஜலம்-தேயுவென்னும் அவ்வப் பொருள்களிலுள்ள சலன (அசைவு)-திரவ (நெகிழ்ச்சி)-தாக (உஷ்ண) மென்னும் விசேஷ சத்திகள் நாசமாகவாவது திரோதானமாக (மறைவாக)வாவது போமேயல்லாமல், எங்கே காணப்படும்? ஓரிடத்துங் காணப்படா வன்றே; அது

† மாயையை இப்படலத்தின் 96-97-வது செய்யுட்களில் காணவும் அறியவும் கூடாதென்றும், 95-வது செய்யுளில் அவாச்சிய வடிவென்றும், 99-100-வது செய்யுட்களில் நாமரூபப்பயிர் வித்தென்றும் கூறியிருப்பதறிக.



103. மேவு மண்ணிலவ் வியத்தமே வியத்தமாம் விவகரித் திடவேண
டில், நாவினுன் மண்ணைக் குடமேன்ப ரக்குட நசிப்பது நாவா
லே, பாவு நாமரூ பங்களை மறந்துமண் பார்ப்பதே பரமார்த்தம்,
சீவ பேதகற் பிதங்களை மறந்துநீ சின்மய மாவாயே.

---

போல, § நீயும் மாயைக் கதிஷ்டானமாயுள்ள அந்தச் சச்சிதாநந்த வடிவப் பிரஹ்மமாய், நாமரூப வடிவப் பிரபஞ்சத்தில் யாதொன்றனையும் நினையாது, ஒரேநிலையா யிருப்பாயாயின், அசத்து-ஜட-துக்க வடிவமாயுள்ள மாயா சத்தி உன்னிடத்தினின்று மீண்டு மெழா தொழிந்து போவதாம். மாயா சத்தி யொழிவதற் குபாயமாக ‡ இம்மந்திரத்தையன்றி வேறொருமந்திரத்தை யாம் வேதங்களில் காணவில்லை. 102

§ குலால வியாபாரத்திற்கு முன்னர் உருவையாயுள்ள மண்ணில் வெளியாகாதிருந்த கடசத்தியே குலால வியாபாரத்திற்குப் பின்னர் வெளியாய்க் கட மென்னும் நாமத்தை யடைகின்றது. உலகத்தார் கடமென வியவகாரஞ் செய்யவேண்டின், மண்ணைத்தவிரக் கடமின்மையின், மண்ணையே கடமெனச் சொன்மாத்திரத்தால் வியவகாரஞ் செய்வர்; அக்கடம் நசித்த தென்னும் வியவகாரமும் சொன்மாத்திரத்தாலே யாம். இங்ஙனம் கடமுண்டென்பதும், நசித்ததென்பதும் சொன்மாத்திரமா யிருத்தலின், கடமென்னு

§ "விளங்குஞ் சொரூப நோக்காது விளங்கு மூலகை நோக்கியிடின்
விளங்குஞ் சொரூபந் தோன்றாது விளங்கு மூலகே தோன்றியிடும்
விளங்குஞ் சொரூபந் தனைநோக்கி விளங்கு மூலக நோக்கமறில்
விளங்குஞ் சொரூப மேதோன்றும் விளங்கு மூலகு மதுவாய்ப்போம்."

என்று அத்துவித வுண்மை கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

‡ சச்சிதாநந்த வடிவப் பிரஹ்மமாய் நாமரூப வடிவப் பிரபஞ்சத்தில் யாதொன்றனையும் நினையாது ஒரே நிலையா யிருப்பதாகிய இம்மந்திரத்தையன்றி.

"எப்போதுந் தன்னுத்ம மந்திரத்தையே யப்பியாசஞ் செய்தல் வேண்டும்; நான் பிரஹ்மமா யிருக்கின்றேனென்னும் மந்திரம் தேகாதிகளா லுண்டாகின்ற பாவத்தை நாசஞ் செய்கின்றது; நான் பிரஹ்மமா யிருக்கின்றே னென்னு மிந்த மந்திரம் பிறவித் துன்பத்தைப் போக்குவதாம்; நான் பிரஹ்மமா யிருக்கின்றே னென்னு மிந்த மந்திரம் மாண துக்கத்தைப் போக்கும்; நான் பிரஹ்மமா யிருக்கின்றே னென்னு மிந்த மந்திரம் சித்த பந்தத்தை நாசஞ் செய்கின்றது; நான் பிரஹ்மமா யிருக்கின்றே னென்னு மிந்த மந்திரம் ஞாநாநந்தத்தைக் கொடுப்பதாம்" என்று தேஜோபிந்து உபநிஷ கூறுவதிங்குணர்தற்பாலதாம்.

மட்சர சமுதாய நாமம் உருட்சி யென்னும் நபமென்னு மிவற்றை மித்தை யென் றுபேட்சித்துக் கடத்தை மண்ணாகக் காண்பதே பரமார்த்தமா (உண் மையா)ம். அவ்வாறு நீ சீவபேத மாகிய நாமரூப கற்பனைகளை மித்தை யென் றுபேட்சித்து, சர்வத்தையும் சின்மாத்திரமாகக் கண்டு, † சின்மாத் திரமாகவே யிருக்கக்கடவாய். 103

§ மண்ணுருளையில் மறைந்துள்ளகடசத்தி கடமாய்விளங்குவதுபோலப் பிரஹ்மத்தில் மறைந்துள்ள ஜகத்காரண மாயாசத்தியும் ஜகத்தாய் விளங்கு கின்றது; மண்ணைத் தவிரக் கடசத்தியும் கடமு மில்லாமைபோல, பிரஹ் மத்தைத்தவிர ஜகத்காரண மாயாசத்தியும் ஜகத்துமில்லை; கடம் மண்ணைத் தவிர வின்மையின், கடம் தோன்றியதென்பதும் ஒடுங்கியதென்பதும் சொன்மாத்திரமா யிருப்பதுபோல, ஜகத்துப் பிரஹ்மத்தைத் தவிர வின்மை யின், ஜகத்துத் தோன்றிய தென்பதும் ஒடுங்கியதென்பதும் சொன்மாத்திர மேயாம்; கடத்தின் நாமரூபங்களை யொழித்து அதனை மண்ணாய்க்காண்பதே பரமார்த்தமாவதுபோல ஜகத்தின் நாம ரூபங்களை யொழித்து, அதனைப் பிரஹ்மமாய்க் காண்பதே பரமார்த்தமா மென்று தத்துவ விசாரணைசெய்து, சீவபேத கற்பிதங்களை மறந்து,சர்வத்தையுஞ் சின்மாத்திர சிவசொரூபமாகக் கண்டு, சின்மாத்திர சிவசொரூபமாகவே விளங்கவேண்டு மென்பதிங் குப தேசஞ் செய்யப்பட்ட தென்பதாம்.

"மண்ணதோர் திரளைக் காண வனந்தகா ரியங்க ளந்த
மண்ணில்வே றிலாதெக் காலும் வருதலே யாத லால்வே
றெண்ணிடு நாம ரூப மிசைந்திலை யாகு மென்று
மண்ணிதே யுள்ள தென்றும் வானவர்க் கயன்முன் சொன்னான்"

என்றும்,

"எல்லா விகாரங் களும்வாக்கா லென்று முண்டென் றுரைப்பதுவும்
சொல்லா மளவே யெவ்விடத்துந் தோன்று மென்ற துண்மையதே
யல்லா விகார மறிவொழிய வனைத்தும் பொய்யே விகாரத்துக்
கில்லா தாகு முண்மைபிறி தில்லா தாகு மாதலினால்"

என்றும், பிரமகீதை சாந்தோக்கிய வுபநிஷத தாற்பரிய முரைக்கு மத்தியா யம் கூறுவதிங் குணர்தற்பாற்றும்.

I (1) கடாதி வடிவக்காரியம் அசத்தியம் (மித்தை); (2) விநாசியா யிருத்தலின்; (3) யாது அசத்திய மன்றோ அது விநாசியாகாது, மண்போல.

II (1) கடாதி காரியம் அசத்தியம்; (2) வாக்கிந்திரியத்தினின்றுந் தோன்றிய சப்த மாத்திர சொரூப முடையதாயிருத்தலின்; (3) யாது அசத் தியமன்றோ அது வாக்கிந்திரியத்தினின்றுந் தோன்றிய சப்தமாத்திர சொரூப முடைய தாகாது, ஆத்மாப்போல. என்பனவிங் கனுமானமாம்.

† சிருஷ்டிக்குமுன் பிரஹ்மத்தினின்றும் வெளியாகாதிருந்து பின் வெளியாய நாமரூப வடிவப் பிரபஞ்சம் சச்சிதாநந்த வடிவப் பிரஹ்மத்தி



104. பூரிக் குங்கன சச்சிதா னந்தத்திற் போய்சடந் துயர்மூன்றும், தூரத் தாயினுந் தோன்றுபாழ் விபரிதந் துடைப்பதெப் படியென் றால், நீரிற் றேன்றுந்தன் னிழறலை கீழதாய் நின்றலை யினு நேராய்ப், பாரிற் றேன்றிய தன்னைநோக் கிடிலந்தப் பாழ்நிழல் போய்யாமே.

சீடன், திருச்துவின்கண் திருசியம் பொய்யாமென்று அதனை யறிந்தவிடத்தும் மீண்டுமது தோன்றுதலின், அதனை யொழித்தற்குரிய உபாயம் யாது என்று வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினா:—சற்குரு மூர்த்தியே! பூஷண மனைத்தினும் பொன் பூரணமா யிருப்பதுபோல மாயாப் பிரபஞ்ச மனைத்தினும் பூரணமா யிருக்குஞ் சச்சிதாநந்த வடிவப் பிரஹ்மத்தின்கண் அசத்து ஜட துக்க மென்னு மூன்றும் (இம்மூன்று வடிவமா யுள்ள சர்வப் பிரபஞ்சமும்) நீரிற் புழுதி போலவும், நெருப்பிற் குளிர்ச்சி போலவும் இலவாமாயி னும், தோன்றுதலின், தோன்றுகின்ற பாழாகிய அவ்விபரீதங்களைத் தோன்றாவாறு கெடுப்பது எப்படி? அவற்றைக் கெடுக்கு மார்க்கத் தைத் தேவரீர் திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்.

குரு—விடை:—அன்பனே! ‡ தடாக நீரிற் றேன்றுந் தனது சாயையா னது அதோமுகமா (தலைகீழா) யிருந்து சலித்துமாயினும் ஊர்த்துவமுகமாய்

னும் வேறன்றாகலின், அஃதுண்டென்பதும் நசித்ததென்பதும் சொன்மாத் திரமாம்; அதனால், அதனிடத்துச் சத்தியபுத்தி வையாது சொரூபமாத்திரமா யிருக்கக் கடவாயென்று கூறியவாறும்.

மாயாப்பிரபஞ்சம், "இந்தப்பிரஹ்மத்தில் நாநாவென்பதுசிறிதுமில்லை." "இங்ஙனமன்று இங்ஙனமன்று" என்றற் றொடக்கத்துச் சுருதி சம்பந்த ஞானமுடையார்க்கு ஆகாயத்தாமரை, ஆமை மயிர் முதலியனபோலத் துச்ச மாகத் தோன்றுவதாம்; மாயாப்பிரபஞ்சம் சத்தாயிருக்குமாயின், மாறு திருத்தல் வேண்டும்; மாறிப்போதலின், சத்தா யிருத்தல் கூடாது; அதனால், மித்தையாயிருத்தல் வேண்டுமென்னும் யுக்தி சம்பந்த ஞான முடையார்க் குக் கயிற்றரவு, கானல்நீர், சுத்திகாரசித முதலியனபோல மித்தையாகத் தோன்றுவதாம்; சுருதி சம்பந்த ஞானமும், யுக்தி சம்பந்த ஞானமு மில்லா தவர்க்கு ஆத்மாவைப்போல நித்தியமாகத் தோன்றுவதா மென்பதிங் குணர் தற்பாலதாம்.

‡ "இவ்விடத்தில் பிராந்தி கெட்டால் அந்த க்ஷணத்திலே சுத்திகா ரசித (கிளிஞ்சில் வெள்ளி) சொரூபத்திற்குக் கேடுண்டாவதுபோல, ஞானத்

105. ஞானங் காரண மறிபொருள் காரிய நாமரு பப்பேய்கள், ஆன
தெப்படி யழிந்ததெப் படியென வாய்குதல் பலனன்றே, மான
மைந்தனே தீர்க்கசொப் பனசகம் வந்ததும் பாராமல், போன
துந்நினை யாமலுன் போதமாய்ப் பூர்ணமா யிருப்பாயே.

---

(நோய்)த் தடாகக் கரையி லிருக்கின்ற தன்னை ஒருவன் நோக்குவானுயின், அப்பாழாகிய சாயை அவனுக்கு மித்தையாம். (அதுபோல உனது கற்பித மாகிய நாம நுப பேதங்கள் தோன்றுமாயினும் § உன்னையே நோக்கிறல் அவை உனக்கு மித்தையாம். இதுதான் அசத்து ஜட துக்கங்கள் தோன்றவா றவற்றை யொழித்தற்குரிய வுபாயமாம்.) 104

குரு சீடனை நோக்கி, நீ காரண காரிய கற்பனைசெய்யாது
சொருபமாத்திரமா யிருவெனக் கூறல்.

---

தால் அஞ்ஞானமழிந்த மாத்திரத்திற் பிரபஞ்சமே தோற்ருமையால், விவேகிக்குப் பிராரத்தபோகம் எங்ஙனமாமெனின், சுத்திகாசிதமென்பது நிருபாதிகப் பிராந்தியாகலின், தெளிந்தபோது இராஜத (வெள்ளி) சொரூபத்திற் காணியுண்டாம். இது சோபாதிகப் பிராந்தியாகலின், அங்ஙன மன்று. மற்றெங்ஙனமாமெனின், தெளிந்த குளத்தின் தீரத்திலிருப்பவன் தான் அக்குள ஜலத்தில் அதோ முகனுகித் தோன்றுவது பொய்யென்று நிச்சயித்த காலத்தும் அவ்வதோ முகம் தோன்றுவதுபோல, அகங்கார சம்பந்தமான சீவத்துவ முதலிய யாவும் மித்தை, சத்தியமான பிரத்யகாத்மா தானென்றறிந்த காலத்தும் சீவத்துவாதிப் பிரபஞ்சத் தோற்ற மிருத்தலால் சீவன் முத்தனுக்குப் பிராரத்த போக வியவகாரம் அங்கீகரிக்கப்படுவதாகும்" என்று வேதாந்த பரிச்சேதங் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

§ "தோன்றிடு முலகமெங்கே தோன்றிடு மென்ன நோக்கித், தோன்றிடு நினைவி லென்றே தோன்றிய நினைவு தானும், தோன்றிடு மிடத்தைப் பார்த்துத் தோன்றிடுஞ் சொரூபத் தென்றே, தோன்றிடும் பொருள்களெல்லாஞ் சொரூபமே யென்று கண்டான்" என்று மகாராஜா துறவு கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

"சிஷ்யனே! தீனத்தன்மையைவிட்டுன் ஸ்வரூபத்தைப் பார். நீயோ ஜனனமில்லாத சுத்தப் பிரஹ்மம்; பார்க்கப்படுவனவற்றை யெல்லாம் பிரகாசஞ் செய்கிருய்; உன்னஞ்ஞானத்தால் ஜகத்தையெல்லாம் நீ சிருஷ்டித்த பிறகு, மறுபடியும் எல்லாவற்றையும் நாசஞ்செய்து நாசமற்றவனுயிருக்கிருய்; மித்யாப் பிரபஞ்சத்தைப் பார்த்துச் சிறிதுகூட மனவருத்தத்தை யடைவதில்லை. நீ தேவர்களுக்கெல்லாந் தேவனு யிருக்கிருய்; சுகராசியா யிருக்கிருய். மாயையினுல் உன்னிடத்தில் ஜீவன் ஜகத்து ஈசுவரன் மூன்றும் விளங்குகின்றன. அது ரஜ்ஜுவில் சர்ப்பமும், கிளிஞ்சிலில் வெள்ளியும் விளங்குவதுபோலவாம்." என்று விசாரசாகரம் 6-வது தரங்கத்திற் கூறுவது மிங்குணர்தற்பாற்ரும்.



106. அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகினு லம்மட்டும்
நிசத்தி லுள்விழிப் பார்வையா மிப்படி நிரந்தரப் பழக்கத்தால்
வசத்தி லுன்மன நின்றுசின் மாத்திர வடிவமா யிடின்மைந்தா
கசத்த தேகத்தி லிருக்கினு மாநந்தக் கடல்வடி வாவாயே.

---

ஞான புத்திரரிற் சிறந்தவனே! திருக்கு (ஞானம்) காரணமாம்; திருசியம் (அறியப்படும்பொருள்) காரியமாம்; ¶ அத்திருசியமாகிய நாமநுபப் பேய்கள் உண்டாதுமா றெங்ஙனம்? அத்தியந்தம் தோன்றும லழியுமாறெங்ஙன மென்றவற்றை விசாரித்தல் பயனற்ற காரியமாம்.

சீ—வினு :—*அங்ஙனமாயின், செய்பத்தக்கது யாது?*

கு—விடை :—† தீர்க்க (நீண்ட) சொப்பன மென்னும் பிரபஞ்சம் இன்ன காரணத்தி னின்று இவ்வா றுண்டாயிற் றென்பதையும் விசாரியாது, அத்தியந்தந் தோன்றும லெவ் வுபாயத்தாற் போமென்பதையும் விசாரியாது, உனது ஆன்மாவாய்ப் பரிபூரணப் பிரஹ்மமா யிருக்கக்கடவாய். இதுவே நீ செய்பத்தக்கதாம். 105

இடைவிடாது பிரஹ்மாப்பியாசஞ் செய்யெனல்.

மைந்தனே! $ மித்தையான நாமநுப வடிவப் பிரபஞ்சத்தில் எவ்வளவு எவ்வளவு அபிமான மிருந்ததோ அவ்வளவு அவ்வளவு அபி

---

¶ பிராரத்தகன்மமுள்ளவளவும் நாமரூபங்கள் தக்தபடம்போலத் தோற்றிக்கொண்டிருப்பதல்லது எவ்வித வுபாயத்தாலும் நீங்குவனவன்மையின், அவற்றி னுற்பத்தி நாசத்தை விசாரித்தல் பயனுகாதென விளக்கியவாரும்.

† தனைமுதலாய்க் காண்கின்ற சகமெல்லா நீள்கனவாஞ் சகத்திற்ருேற்றும், இனையபொருள் களுங்கனவிற் காண்கின்ற பொருள்களா மென்று தேர்வாய்" என்றும், "பொய்யதாகிய வநேகபா வனையினைப் பொருந்தல் புன் பிறப்பாகும், ஐயமின்றிய வேகபா வனையினி லழுந்துதல் பவந்தீர்தல்" என்றும் ஞானவாசிட்டங் கூறுவதும், "பேத ஞானத்தால் அநர்த்தமுண்டாகின்றது. 'நிச்சயமாக இவையெல்லாம் பிரஹ்மம்' என்றற்ருெடக்கத்து வாக்கியங்களால் அபேதத்தில் சகல வேதங்களுக்குந் தாற்பரியமாம். 'இரண்டாவதனுல் பயமுண்டாகின்றது' 'எவன் ஈண்டு நாநாவைப்போலக் காண்கின்ருனே அவன் மிருத்தியுவினின்றும் மிருத்தியுவை யடைகிருன்' என்றற்ருெடக்கத்து வேதவாக்கியங்களால் பேதஞானம் நிந்திக்கப் பட்டிருக்கின்றது" என்று விருத்திப் பிரபாகரம் 7-வது பிரகாசத்திற் கூறுவது மிங் குணர்தற்பாலனவாம்.

$ "எத்தனையெத் தனைநீத்தா யகிலத்தைப் பாஞ்சுடரா யெறிக்குஞ் சோதி, யத்தனையத் தனைதோன்றும்" என்று ஞானவாசிட்டங் கூறு வதும், "யாதனின் யாதனி னீங்கியா னோத, லதனி னதனி னிலன்" என்று திருக்குறள்கூறுவது மிங்குணர்தற்பாலனவாம்.

107. தானன்றி வேறேன்று மில்லாத பூரண சச்சிதா நந்த குண
மாய், ஊனின்ற வுயிர்தோறு மொன்றுகு மென்றுலஃ தோக்
கின்ற படிகண்டிலேன், நானென்ற சீவன்கள் சத்தான வகை
யொக்கு ஞானங்கள் வெளிகண்டதால், ஆனந்த மிதுபோல வெ
ளியாக வுதியாத வடைவேது குருநாதனே.

---

மானமும் உபேட்சிக்க (விட)ப்படுமாயின், உபேட்சித்த மவ்வளவு அவ்வளவும் சத்தியமான பிரஹ்மத்தில் அகமுக திருஷ்டி (உள்விழிப்பார்வை)யுண்டாவதாம். இவ்வாறு இடைவிடாது ஆதாரவோடுசெய்யு மப்பியாசத்தினுல் மனமானது உனது ‡ வசத்தில் நின்று § சின்மாத்திர வடிவாய் விடுமாயின், ¶ வெறுக்கத்தக்க (குஷ்டம்-பாண்டு முதலிய வியாதியுள்ள) சரீரத்திருந்தாலும் நீ ஆநந்த சமுத்திர வடிவமாவாய். 106

சீடன், ஆத்மா சச்சிதாநந்த வடிவமாயின், சத்தும் சித்தும் போன்று
ஆநந்தம் எப்போது மேன் விளங்குவதில்லை யென்று
வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினு:—குருநாதனே! தானல்லாமல் மற்றொரு பொருளும் உண்மையில் தன்னிடத்தில்லாத ஆன்மா பரிபூரண சச்சிதாநந்த சுபாவமாய்த் தேகத்தின்கண் நான் நானென்று வியவகரிக்கும் உயிர்தோறும் (ஒவ்வொரு சீவரிடத்திலும்) ஏகரசமா யிருக்கிறதென்று கூறப்படுமாயின், அவ்வாத்மா அவ்வாறு எப்போது மொத்திருக்குந் தன்மையை யானறியவில்லை. (முயற்கொம்பு முதலியனபோன்று வியவகார யோக்கியமற்ற அபாவ பதார்த்தமாகாது) நான் நானென்று வியவகரிக்குஞ் சீவர்கள் சத்தாயிருத்தல் பொருந்தும்; நான் கண்டேன், கேட்டேன், சுவைத்தே னென்றற் றொடக்கத்து ஞானங்கள் வெளிப்படையாக விருத்தலின், அவர்கள் சித்தா யிருத்தலும் பொருந்தும். இச்சத்தும் சித்தும் போல ஆநந்தமும் வெளிப்படையாகத் தோன்றாத காரணம் யாது? அதனை யுரைத்தருளல் வேண்டும். 107

---

‡ வசத்தில் நிற்றல்—நிறுத்தியவிடத்துப் பிறழாதிருத்தல்.

§ சின்மாத்திர வடிவமாதல்—சிவோகமென்று பாவனைசெய்யும் அகண்டாகார விருத்திமாத்திரமா யிருத்தல்.

¶ சிவோகமென்று பாவனை செய்யும் அகண்டாகார விருத்திமாத்திரமுடையவர்க்குச் சரீர துக்கமு மின்றென்ப திதனுல் பெறப்படுவதாம்.



108. உருவங்க ளிரதங்கள் பரிசங்க ளொருபூவி லொன்றுகு மென்று
லுமே, கரணங்க ளோரோரொன்றி லோரொன்று தெரியுங் கணக்
கன்றி வாராதுகாண், அருமந்த சச்சிதா நந்தச் சுபாவங்க ளான்
மாவின் வடிவாகிலும், பிரபஞ்ச மயமாம் விருத்திபே தத்தினுற்
பேதங்க ளாமைந்தனே.

109. தாமத மிராசதஞ் சாத்துவித முக்குணத் தால்வரும் விருத்திமூன்
றும், ஆமவைகண் மூடமுங் கோரமுஞ் சாந்தமு மபிதான மாகு
மகனே, ஏழுற விருக்கின்ற சச்சிதா நந்தங்க ளேன்றேன்று
மொன்றுகிலும், நாமுரைக் கும்விருத் திப்பிரிவி னுற்சொருப
ஞானுதி பிரிவாகுமே.

---

குரு—விடை:—மைந்தனே! $ ஒரு மலரினிடத்து நபரச பரிசங்கள் ஏகமா யிருக்குமாயினும் அவற்றுள், ஒவ்வொன்று நேத்திர முதலிய இந்திரியங்களுள் ஒவ்வொன்று லறியப்படுமே யல்லாமல் ஓரிந்திரியத்தினு லவ்வெல்லாக் குணங்களும் அறியப்படுத லில்லையாம். அதுபோலச் சச்சிதாநந்த வியல்புகள் ஆன்மாவின் சொருபமா யிருப்பினும் அவை உலகாகாரமாகிய விருத்திகளின் பேதத்தினுல் பேதங்களாகத் தோன்றுவனவாம். 108

விருத்தி பேதத்தினுல் சச்சிதாநந்தங்கள் பேதமாகத் தோன்றுதலைத்
தெரித்துணர்த்தல்.

மகனே! § தாமதம், இராசதம், சாத்துவித மென்னு முக்குணத்தினுலுண்டாகும் விருத்திகள் மூவகையாம். அம்மூவகை விருத்திகளும் முறையே மூடம், கோரம், சாந்தமெனப் பெயர் பெறுவனவாம். தம்மை யடைந்தோர் ஆநந்தக்கடலாய் விளங்குதற் கேதுவாயுள்ள சச்சிதாநந்தங்கள் (அஸ்திபாதிப்பிரியங்கள்) எப்பொழுதும் ஆன்மாவின் சொருபமாக ஏகரசமா யிருப்பினும், ஆன்ம சொரூப அச்சச்சிதாநந்தங்கள் மூட, கோர, சாந்த மென்னும் விருத்தி பேதத்தினுல் பேதமாகத் தோன்றுவனவாம். 109

---

$ "பூவண்ணம் பூவின்மணம் போலமெய்ப் போதவின்ப, மாவண்ண மெய்கொண்டவன்" என்று திருவிளையாடற் புராணங் கூறுவதறிக.

§ தாமத குணத்தாலுண்டாகும் விருத்தி மூட விருத்தி யெனவும், இராசத குணத்தாலுண்டாகும் விருத்தி கோரவிருத்தி யெனவும், சத்துவ குணத்தாலுண்டாகும் விருத்தி சாந்தவிருத்தி யெனவும் பெயர் பெறு மென்க.

110. சடமான மூடத் தருக்கல்லு மண்களிற் சத்தோன்று மேதோன் றுமால், விடமான காமாதி கோரத்தி லாநந்தம் விளையாது மற்ற வைகளாம், திடமான வொழிவாதி சாந்தத்தி லேசச்சி தாநந்த மூன்றும் வெளியாம், மடமான மூடங்கள் கோரங்கள் விடு சாந்த மனமாகி லாநந்தமே.

---

விருத்திபேதத்தினால் சச்சிதாநந்தங்கள் பேதமாகத் தோன்றுதலை யனுபவ வாயிலாகக் காட்டல்.

¶ ஜடமான கல் மண்-மூடமான விருட்ச முதலியவற்றில் ஆன்மாவின் சுபாவமான சச்சிதாநந்தங்களுள் சத்தொன்றுமே வெளிப்பட்டிருக்கும்; ஏனைய சிதாநந்தங்கள் வெளிப்பட்டிரா. விஷம்போலும் தம்மை யுடைய வரை மயக்குவதான (புத்தியின்) இராசதகுணத்தினால் இராக (காம)மயமான கோர விருத்தியிலும், தாமதகுணத்தினால் அஞ்ஞானமயமான மூட விருத்தியிலும், சத்தும் சித்தும் வெளிப்பட்டிருக்கும்; ஆநந்தம் வெளிப்பட்டிராது. சத்துவ குணத்தினால் திட வைராக்கிய முதலியவற்றின் மயமான சாந்த விருத்தியில் சச்சிதாநந்த மூன்றும் வெளிப்பட்டிருக்கும். இராகமயமான கோர விருத்தியையும் அஞ்ஞான மயமான மூட விருத்தியையும் விட்ட சமமுதலிய வற்றின் வடிவ அந்தர்முக விருத்தி யுண்டாயின், அதில் தடையில்லாது 110
† ஆநந்தம் தோன்றும்.

---

¶ "சாந்தம், கோரம், மூடமென மனத்தின் விருத்திகள் மூவகையாம்:- (1) வைராக்கியம், க்ஷமை, உதாரத்தன்மை முதலியன சாந்தவிருத்திகளாம்; (2) ஆசை, சிநேகம், இராகம், உலோப முதலியன கோர விருத்திகளாம்; (3) மோகம், பய முதலியன மூட விருத்திகளாம். இவ்வெல்லா விருத்திகளிலும் ஆத்மாவின் சித் வடிவத்தன்மை பிரதி பிம்பிக்கின்றது. சாந்த விருத்திகளில் சுகமென்னும் ஆநந்தமும் பிரதி பிம்பிக்கின்றது. ......... கோர மூட விருத்திகளில் மலினத் தன்மையால் பிரஹ்மத்தின் சுகாம்சம் திரோபதா னத்தை (மறைவை) யடைகின்றது. சொற்ப நிர்மலத் தன்மையால் அந்தக் கோர மூட விருத்திகளில் சிதம் சத்தின் பிரதிபிம்ப முண்டாகின்றது. ...எங்ஙனம் கட்டையில் அக்கினியின் தர்மமாகிய உஷ்ணம் பிரகாசமென்னு மிரண்டும் உற்பவத்தை யடைகின்றனவோ அங்ஙனமே சாந்த விருத்தி களில் ஞானம் சுகமென்னுமிரண்டும் உற்பவத்தை யடைகின்றன" என்று பஞ்சதசி விஷயாநந்தப் பிரகரணத்தில் கூறுவதும்,

"சச்சிதாநந்தமே ஆத்ம சொரூபமானால், சத்துஞ் சித்தும்போலச் சர்வ புத்திவிருத்தியிலும் ஆநந்தரூபத்திற்கும் அபிவியக்தி (வெளிப் படுதல்) உண் டாதல் வேண்டும்; அஃதில்லாமையால் ஆநந்தம் ஆத்ம சொரூபமல்லவெ னின்,அதற்குத் திருஷ்டாந்தம்வருமாறு:—உஷ்ணப் பிரகாசமான தீபத்தின் பிரகாசமே கிருகத்தில் வியாபித்திருக்கும்; அதனுஷ்ணம் வியாப்தமாகாது; ஜலத்தில் உஷ்ணமே பிரகடித்தி (வெளிப்பட்டி)ருக்கும்; பிரகாசம் பிரகடித மாகாது; காஷ்டத்தில் உஷ்ணமும் பிரகாசமுமாகிய விரண்டும் பிரகடமா யிருக்கும். அப்படியே, பிரஹ்மத்தின் சத்துப் பாஷாணாதிகளில் அபிவியக்தி யாகுமன்றிச் சிதாநந்தங்கள் பிரகாசியா; புத்தியின் தமோகுணத்தால் அஞ் ஞான மயமான மூட விருத்தியிலும், இராஜோ குணத்தால் இராகமயமான குரோத விருத்தியிலும் சத்துச் சித்திரண்டும் பிரகாசிக்குமேயன்றி ஆநந்தம் பிரகாசியாது; சத்துவ குணத்தால் வைராக்கியமயமான சாந்தவிருத்தியில் சச்சிதாநந்த மென்னு மூன்றற்கும் விளக்கம் காணப்படும். ஆகையால் ஆநந் தம் ஆத்மசொரூபமாம்" என்று வேதாந்த பரிச்சேதம் கூறுவதுமிங்குணர் தற் பாலனவாம்.

† கோர மூட விருத்தியிரண்டும் முறையே இராகமயமாயும் அஞ்ஞா னமயமாயு மிருத்தலின், அவற்றில் ஆத்மாவின் ஆநந்தம் பிரதிபிம்பியாது, வைராக்கிய மயமாய் அந்தர் முகமான சாந்த விருத்தியில் உள்ளவாறு பிரதி பிம்பித்துத் தோன்று மென்பதாம்.



111. இகமான குருநாத னேசச்சி தாநந்த மெனுமிலக் கணமறிகி லேன், அகலாத சத்தாவ தேதுசித் தாவதே தாநந்த மேதேன் றிடில், மிகுகால மூன்றுங் கெடாதிருப் பதுசத்து வேறுபா டறி தல்சித்தாம், மகிழ்காம நுகர்போது சுகமாகு மநுபூதி வாழ் வென்ப தாநந்தமே.

---

சீடன், சச்சிதாநந்தங்களி னிலக்கணம் யாது என்று வினவுதலும் அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினா:—§ அவ்விடத்தினின்றும் இவ்விடத்திற்கு மானிட வுருவங்கொண் டெழுந்தருளிய சாதுரத்ந சற்குருமூர்த்தியே! சச்சிதாநந்தமென்பவற்றி ‡ னிலக்கண மெனக்குத் தெரியாது? சத்தி னிலக்கணம் யாது? சித்தி னிலக்கணம் யாது? ஆநந்தத்தி னிலக்கணம் யாது? அவற்றைக் கிருபைகூர்ந் துரைத்தல்வேண்டும்.

---

§ "அருபரத் தொருவ னவனியில் வந்து, குருபர னாகி யருளிய பெரு மையைச், சிறுமையென் றிகழாதே" என்று திருவாசகங் கூறுவதறிக.

‡ அசாதாரண தர்மம் (சிறந்தகுறி) இலக்கண மெனப்படும்:—உதா ரணம்:—நெருப்புச் சுடும்பரிசமுடையது; நீர் குளிர்ந்த பரிசமுடையது; வாயு உருவமின்றிப் பரிசமுடையது; இருள் பரிசமின்றி யுருவ முடையது என்றற் போல்வனவாம்.

112. நாசச் சரீரத் திருக்குஞ் சரீரிதனை நால்வேத மாவாக்கியம், நீசச்சி
தாநந்த மென்றிடினு மாசிரியர் நீபிரம மாகு மெனினும், மாச
ற்ற சச்சிதா நந்தநா னென்னவிவன் மன்னுமநு பவமெங்ஙனே
கோசப் புரங்களை யிடித்துத் தகர்க்குமத குஞ்சரக் குருநாதனே.

---

து—விடை :—அன்பனே ! § காலத்திரயத்திலும் கெடாதிருத்தல் சத்திற் கிலக்கணமாம் ; இஃதிதனினும் வேறென்று பதார்த்தங்களுள் ஒன்றற் கொன்றுள்ள வேற்றுமையை யறிதல் சித்திற் கிலக்கணமாம் ; ¶ விரும்பிய பொருள் கிடைக்கப்பெற்று அதனை யனுபவித்தபோது இனிமையாயுண் டாகுஞ் சுவானுபவசுகம் ஆநந்தத்திற் கிலக்கணமாம். 111

சீடன், ஆத்மா சச்சிதாநந்தவடிவ மென்பதற்கு அனுபவ மெப்படி
யென்று வினவுதலும் அதற்குத் தரு விடை கூறுதலும்.

---

§ முக்காலத்திலும் பாதிக்க(பொய்யென்று நிச்சயிக்க)ப்படாமைசத்திற் கிலக்கணமும், கேடின்றியபிரகாசம் அல்லதுமுக்காலத்திலு மெல்லாவற்றையு மறிதல் சித்திற்கிலக்கணமும், முக்காலத்திலும் பரமப்பிரேமைக்கு (மிகுந்த பிரீதிக்கு)விஷயமாயிருத்தல் ஆநந்தத்திற் கிலக்கணமுமாம். "இச்சித்தவிஷ யம் கிடைத்தவுடன் க்ஷணமாத்திரம் புருஷனது புத்தி ஸ்திரப்பட்டு, அதன் விருத்தி அந்தர்முகமாகின்றது ; அந்த அந்தர்முக விர்த்தியில் ஆத்மாவின் சொரூபாநந்தம் பிரதிபிம்பிக்கின்றது. அந்த ஆத்மசொருப ஆநந்தத்தின் பிரதி பிம்பத்தை யனுபவிக்கின்ற புருஷனுக்கு எனக்கு விஷயத்தால் ஆநந்த முண்டாயிற்றென்று பிராந்தியுண்டாகின்றது ; ஆனால், விஷயத்தில் ஆநந்தமில்லை" என்று விசாரசாகரம் நான்காவது தரங்கத்திற் கூறுவதும், "இந்த விடய மவையில்வரு மின்பும் பேரின் பத்திருந்தே, வந்த லேச மிட்ட மது வந்து கிடைத்த வக்கணமே, அந்த முகமாய் மதிதிரும்பி யறிவா நந்தங் கணம்புசிக்கும், அந்த முகமே யெக்காலு மாகி னனைத்து மடைந்ததுமாம்" என்று அத்துவிதவுண்மை கூறுவதும், "காலமொரு மூன்றிலுமே யிருக்கை யாலுங் கற்பிதமாம் யாவையுமே விளக்கலாலும், சாலவுமே யாவையினு மினிமையாலுஞ் சத்திய ஞாநாநந்த சொரூபனானே" என்றும், "நாசமிலா திருப்பதனு னேசத்து நாடியெலா மறிவதனு னேசித்து, நேசமதாய் நிற்ப தனுனேன்யின்ப நிகழ்த்தியவா சத்தியசிற் சுகமானானே" என்றும் ரிபுகீதை கூறுவதுமிங் குணர்தற்பாலனவாம். இவற்றை விரிவாய் விசாரசாகரம் ஆறா வது தரங்கம் "ஆத்மா சத்தெனல்" "ஆத்மா சித்தெனல்" "ஆத்மா ஆநந்தரூப மெனல்" என்னும் மகுடத்தின் கீழறிக.

¶ "அறிவானு மறிபொருளுங் கூடியகூட் டாவிலெழும் அறிவா நந்தம்" என்று ஞானவாசிட்டங் கூறுவது மறிக.



113. சென்மாந்த ரஞ்செய்த வினைகளுட றருமெனிற் செல்கால மிவ
னுண்டலோ, கன்மாநு பவநரக சொர்க்கமெனில் வருகின்ற
காலத்து மிவனுண்டலோ, உன்மாத யாதனு வுடல்கடவு
ளுடன்மநுட வுடன்மாறி மாறியழியும், தன்மாய வுடல்கெடினு
மிவனிருப் பதுகொண்டு சத்தென்ப தோக்குமகனே.

---

சீ—வினா :—பஞ்ச கோசமாகிய நகரங்களை † யிடித்து நாச மாக்கும் ஞானமத யானையாகிய குருமூர்த்தியே ! * ஒரு காலத்தில் நாசமாதற் கியைந்த சரீரத்தில் அதனை யானென் றபிமானித் திருக் குஞ் சரீரியை(ஆத்மாவை) நோக்கி, இருக்கு - யசுர் - சாமம் - அதர் வண மென்னும் நான்கு வேதங்களிலும் "பிரஞ்ஞானம் பிரஹ்மம்" "அகம் பிரஹ்மாஸ்மி" "தத்துவமசி" "அயமாத்மாப் பிரஹ் மம்" என்று முறையேயுள்ள நான்கு மகா வாக்கியங்களும் நீயே சச்சிதாநந்த வடிவப் பிரஹ்ம மென் றுபதேசிக்கினும், நீயே பரப் பிரஹ்மமென் றாசிரியர் உபதேசிக்கினும், இச்சரீரி நானே சச்சிதா நந்த வடிவப் பிரஹ்மமென்று பிரஹ்மானுபவத்தை யடையாதிருக் கின்றனனே ; அவனவ்வனுபவத்தை யடைவதெப்படி? அதனை யுரைத்தருளல் வேண்டும். 112

தரு—விடை :—மகனே! (1) ¶முற் சன்மங்களிற் றன் மனம் வாக்குக் காயங்களாற் செய்த புண்ணிய பாவமென்னு மிருவினைகள் தேகத்தைத் தருமென்றல், இறந்த காலத்திலும் இச்சரீரி (சரீரத்தை யுடைய ஆத்மா)

---

† இடித்து நாசமாக்கல்—பஞ்ச கோசங்களுள் ஒன்றும் நீயன்றென்று சந்தேக விபரீதமில்லா துபதேசஞ்செய்தல்.

* இவ்வினா ஸ்திதப் பிராஞ்ஞனை நோக்கியதன்றாம் ; அஸ்திதப் பிராஞ் ஞனை நோக்கியதாம். (1) சமாதி சிரவணாதி சாதனங்களோடு செய்யும் மகா வாக்கியார்த்த விசாரத்தாலுண்டாகுஞ் சந்தேகவிபரீதமின்றிய பிரஹ்மாகார புத்தியுடையவன் ஸ்திதப் பிராஞ்ஞனவன். (2) சமாதி சிரவணாதி சாதனங் களின்றிச் சாமானியமாக வேதாந்த சாஸ்திரங்களைக் கேட்பதாலும் படிப்ப தாலும் க்ஷணகாலமுண்டாகும் பிரஹ்மாகார புத்தியுடையவன் அஸ்திதப் பிராஞ்ஞனவன்.

¶ "தரித்திரன் நான் சன்மாந்தரத்தில் யார்க்கு மொன்றுங் கொடாமற் போனமையால் இச்சன்மத்திற் றரித்திரத்தை யனுபவிக்கிறேன்; இச்சன்மத் திலும் யார்க்கு மொன்றுங் கொடுப்பதற்கு வகையில்லாமையால் இனிவருஞ் சன்மத்திலுந் தரித்திரனாகவே பிறப்பே னென்று கூறுவதாலும், மகாராஜன்

இருக்கின்றனல்லவா ? நிகழ்காலத்தி லிச்சரீரி தான் செய்யும் பாவ புண்ணியங்களின் பயனை யனுபவிப்பதற்குத் தக்க $ நாகமும் சுவர்க்கமும் இவனுக்கு வருமென்றல், எதிர்காலத்திலும் இவனிருக்கின்ற னல்லவா? துக்க விசேஷத்தை யனுபவித்தற் கிடமாகிய ‡ யாதனு சரீரமும், சுகவிசேஷத்தை யனுபவித்தற்கிடமாகிய தேவ சரீரமும், சுகதுக்கங்களைக் கலந் தனுபவித்தற் கிடமாகிய மானுட சரீரமும் "மீதிற் காணும் பசும்புற் பனியென மின்மினிக்கு ளொளியென் வேட்கைகூர், வாதைக் காமினி சஞ்சல நெஞ்சென மாறி மாறி வருகண் ணிமையென, வூதைக் காலெறி நீர்மேற் குமிழென வும்பர் மேகத்து மின்னென" மாறிமாறி நசிக்குந் தனது மித்தையாகிய சரீரங்கள் நாசமான விடத்தும் இச்சரீரி காலத்திரயத்திலுங் கெடாதிருத்தலால், இவன் சத்தென்பது பொருந்து மாற்றேடு (யுத்தியோடு) பொருந்துவதாம். 113

நான் சன்மாந்தரத்திற் பெரியோர்க் குபகாரஞ் செய்தமையால் இச்சன்மத்தில் ஐசுவரியத்தை யனுபவிக்கிறேன்; இந்தச் சன்மத்திலு மொருவர்க்குபகாரஞ் செய்வேனுகில் இனிவருஞ் சன்மத்திலும் மகாராஜனுகவே பிறப்பேனென்று கூறுவதாலும், கர்மி நான் அநேக சன்மத்திற் சற் கருமமே செய்தமையால் அச்சற்கரும வாசனையா லிச்சன்மத்திலும் சற்கருமமே செய்யுமாறு எனக்குச் சம்பவித்தது ; இச்சற்கருமத்தினுல் இனி வரும் சன்மத்திலும் எனக்குப் பரலோக முண்டென்று கூறுவதாலும், பக்தன் நான் அநேக ஜன்மத்தில் பகவானை யுபாசித்தேனுகையால், அவ்வுபாசனை வழியே இச்சன்மத்திலும் நிரதிசயமான பக்தி யெனக்குண்டாயிருக்கிறது; இதனுல், இனி யெனக்குப் பகவத்கடாட்ச முண்டாகுமென்று கூறுவதாலும், முமுட்சுவும் நான் அநேக சன்மத்தில் ஈசுவரார்ப்பணமாகச் சற்கர்மங்களைச் செய்தமையால் இச் சன்மத்தில் சித்த சுத்தியும் சற்குரு லாபமும் சிரவணுதிசாதனமு மெனக் குண்டாயின; நானே கிருதார்த்தன்; எனக்கினிச் சனனமில்லையென்று கூறுவதாலும், திடவிவேக முடையவர்க்கு ஆத்மா காலத்திரயத்திலு மிருக்கின்றதென்பது அனுபவமாம்" என்று வாசுதேவ மனனங் கூறுவதிங் குணர்தற் பாலதாம்.

$ துக்கவிசேஷம் நாகமென்றும், சுகவிசேஷம் சுவர்க்க மென்றுங் கூறப்படும்.

‡ "பாவஞ் செய்தவர்க்கு அவரிறந்தபின்னர் யமவாதனையை யனுபவித்தற்பொருட்டுப் பஞ்சதன்மாத்திரைகளாலே வேறொரு யாதனு சரீர முண்டாகின்றது. அது துக்கத்தைப் பொறுத்துக்கொள்ளுதற்பொருட்டு மிக வுறுதியாக விருக்கின்றது." "அந்தச் சீவன் மாநுடனுக விருந்தபோது புண்ணிய கருமத்தை மிகுதியாகவும் பாவகருமத்தைக் குறைவாகவுஞ் செய்திருந்தால், அம்மாநுட சரீரத்திற் காதாரமாயிருந்த அந்தப் பஞ்சதன் மாத்திரைகளா லேற்பட்டுள்ள ஸ்தூலமான போக (தேவ) சரீர மெடுத்துக் கொண்டு சுவர்க்கத்தில் சுகத்தை யனுபவிக்கின்றுன் ; பாவ கருமத்தை மிகுதியாகவும் புண்ணிய கருமத்தைக் குறைவாகவுஞ் செய்திருந்தால் அப்போது அந்த ஸ்தூல சரீரமில்லாதவனுய், மேற்படி சூட்சுமமான யாதனு சரீர மெடுத்துக்கொண்டு யமவாதனைகளை யனுபவிக்கின்றுன்." என்று மனுதர்ம சாஸ்திரங் கூறுவதிங் குணர்தற்பாற்றும்.



114. இருளாக மூடுஞ் சுழுத்தியி லிராத்திரியி லிரவிசுட ரற்றபொழுது, மருளாம லிருளையும் பொருளையுந் தெரிகின்ற வகைகொண்டு சித்தாகுமே, பெருவாழ்வு மிக்கதா னேதன்னி டத்தினிற் பேராத பிரியமதனுல், அருகாத பிரியஞ் சுகத்தில்வரு மாதலா லாநந்த மாமைந்தனே.

115. அன்னபா னுதிசுக சாதனம தாகையா லார்க்கும்வெகு பிரியமாகும், இன்னவா ருன்மாவு மாநந்த சாதன மெனக்கருதல் பொருளல்லவே, சொன்னவான் மாவையொரு சுகசாத னங்களொடு சொல்லுவா யாகின்மகனே, உன்னதா நந்தம்வே றேதநுப விப்பதா ருபயவான் மாவுமுளவோ.

மைந்தனே ! (2) * மழைக்காலத்திரவி னிருள்போல யாதொன்றுந் தோன்றவாறதனை மறைக்கும் சுழுத்தியிலும் இராக்காலத்திலும் சூரியப் பிரகாச முதலியன வில்லாத பகற்காலத்திலும் முறையே (அவித்தியா விருத்தியால்) அஞ்ஞானத்தையும் ஆநந்தத்தையும், (நேத்திரேந்திரிய விருத்தியால்) இருளையும், (துவக்கிந்திரிய விருத்தியால்) கடாதிகளையும் மயங்காதறியும் விதத்தால் இவன் சித்தென்ப தனுபவமாம். (3) பேராநந்த மிகுந்த தானே தன்னிடத்தில் நீங்காத பிரியம் வைத்திருப்பதாலும் குறைவற்ற பிரியம் எவர்க்கும் (துக்கத்தினிடத்துண்டாகாது) சுகத்தினிடத் துண்டாவது பிரசித்தமா யிருத்தலாலும் இவன் ஆநந்த மென்ப தனுபவமாம். 114

அன்ன பான (உண்பன, பருகுவன) முதலியன சுக மடைதற்குச் சாதனமாக விருத்தலால், அவை யாவர்க்கும் மிகு பிரியமா யிருக்கின்றன. இவ்வாறு ஆன்மாவும் ஆநந்தமடைதற்குச் சாதனமா யிருக்கின்றதென்று கருதுதல் சுருதி விரோதமாம்.

அன்னபானுதிகளிற் பிரீதி காணப்படுவதுபோல சீடன், சுகசாதனங்களான ஆன்மாவிலும் பிரீதி காணப்படுதலின், அது சுகசாதனமன்றிச் சுகவடிவமன்றேன்று வினவுதலும் அதற்குக் குரு அது சுகவடிவமே யன்றிச் சுகசாதன மன்றேன விடை கூறுதலும்.

சீ—வி௵:—தேவரீர் ("பெருவாழ்வு மிக்கதா னேதன் னிடத்தினிற் பேராத பிரியமதனுல், அருகாத பிரியஞ் சுகத்தில்வரு மாதலா லாநந்தமாம்" என்றிவ்வாறு ஆநந்தவடிவமென்று) கூறிய ஏகமான ஆத்மாவை அன்னபான முதலிய சுகசாதனங்களோடு சேர்த்து இவ்வாத்மாவும் அவைபோலச் சுகசாதனமா யிருக்கின்றதென்று கூறுவது கூடாதோ ?

* ஆத்மா சுழுத்தியவஸ்தையில் அஞ்ஞானத்தையும் ஆநந்தத்தையும் அவித்தியா விருத்தி வாயிலாகவும், இராக்காலத்திலும் சூரியப்பிரகாச முத

116. விடயசுக மதில்வருதல் பிரியமாத் திரமாகும் வெகுபிரிய மான்மாவிலாம், விடயசுகம் வருபிரிய மாறிவரு மான்மாவில் வெகு பிரிய மாறாதுகாண், விடயசுகம் விடலுமாங் கொளலுமா மான்மாவை விடுவதெவர் கொள்வ தெவர்பார், விடயசுக போகங்கள் விடுமவனை யவனால் விடப்படா தொருநாளுமே.

---

குரு—விடை :—மகனே ! † உன்னுடைய ஆநந்தம் உன்னைத் தவிர வேறே ஏது ? அதனை யனுபவிக்குங் கர்த்தா உன்னைத் தவிர வேறே யார் ? ஆநந்தவடிவ ஆன்மா ஒன்று ; அதனை யனுபவிக்கும் ஆன்மா வொன்று என இரண்டாத்மாக்களு முண்டோ ? அங்ஙன மின்மையின், ஆத்மா ஆநந்த வடிவமேயன்றி அதன் சாதன மன்றாம். 115

ஆநந்தவடிவ ஆன்மா ஒன்று, அதனை யனுபவிக்கும் ஆன்மா ஒன்று என இரண்டான்மாக்க ளில்லையென்பதற் கேது கூறல்.

‡ விஷயாநந்தத்தில் வரும் பிரியம் அற்பமாம் ; ஆன்மாவில் வரும் பிரியம் மகத்தாம்.

*சீ—வினா:—அவை அவ்வாறிருத்தற்குக் காரணம் யாது ?*

கு—விடை :—விஷயாநந்தத்தில் வரும் பிரியம் கால தேச நிமித்தங்களால் மாறிமாறி வருவதாம் ; ஆத்மாவில் வரும் பிரியமோ எக்காரணத்தினாலும் மாறிவருவதில்லையாம். அதனால், விஷயாநந்தத்தில்வரும் பிரியம் அற்பமும் ஆத்மாவில் வரும் பிரியம் மகத்துமாம்.

*சீ—வினா:—மேற்கூறிய விரண்டு பிரியங்களுள், முன்னது மாறிமாறி வருகின்றதென்பதும் பின்னது அவ்வாறு வருகின்றதில்லை யென்பதும் எப்படி ?*

---

*வியன வில்லாத பகற்காலத்திலும் இருளையும் கடாதிகளையும் முறையே நேத்திரேந்திரிய விருத்தி வாயிலாகவும் துவக்கிந்திரிய விருத்தி வாயிலாகவும் மயக்கமில்லா தறிகின்றது ; அதனால், அது சித்தென்பது பிரசித்தமாக விளங்கு மென்பதிங் குணர்தற்பாற்றாம்.*

*† அன்ன பான முதலியனபோல ஆத்மாவும் சுகசாதனமாயின், அதுவும் அவைபோலச் சுகவடிவ மாகாதொழியும் ; அங்ஙனமாகாது சுகவடிவமாகவே யிருத்தலின், அதனைச் சுகசாதனமெனக் கூறுதல் பொருந்தாதென்பதாம்.*

*‡ வனிதாதி விஷயலாபத்தால் தோன்றும் ஆத்மாநந்தம் விஷயாநந்தமெனப்படும்.*

*விஷய ஜந்நிய சுகத்தில் பிரீதியே யுண்டாகின்றது; நிரதிசயப் பிரீதி யுண்டாவதில்லை. ஆத்மாவோ நிரதிசயப் பிரேமைக்கு விஷயமாம்; ஆதலால், விஷய ஜந்நிய சுகத்திற்குச் சமமாகாதென்பதிங் குணர்தற் பாற்றாம்*



117. வேகின்ற கோபங்க ளாலென்னை நான்கொன்று விடுகிறே னென்றுசிலபேர், சாகின்ற படியினாற் றன்னையே தான்கொன்று சாவனெனல் சங்கையலவே, தேகந்த னைக்கொல்லு மவனால் விடப்பட்ட தேகமவ னல்லமகனே. ஆகந்த னிற்கோப மலது தனை யொருநாளு மான்மா வெறுப்பதிலையே.

---

கு—விடை :—ஒரு விஷயாநந்தத்தை விடுதலும் மற்றொரு விஷயாநந்தத்தைப் பற்றுதலும் கூடும். அவ்வாறு ஆன்மா தள்ளத்தக்கதும் கொள்ளத்தக்கது மன்மையின், அதனை விடத்தக்கவர் யார் ? கொள்ளத்தக்கவர் யார் ? இதனை நீ யாராய்ந்து பார்.

*சீ—வினா:—இதனால் யாது பெறப்பட்டது ?*

கு—விடை :—விஷயாநந்தானுபவங்களைத் தியாகஞ் செய்யும் (விடும்) அவ்வாத்மாவை அவ்வாத்மாவாலே ஒரு காலத்துந் தியாகஞ் செய்தல் கூடாதென்பது பெறப்பட்டது. (படவே, ஆத்மாநந்தத்தை மற்றொன்று பற்றுதலும் விடுதலும் செய்கின்றதென்ப தின்றென்பதாயிற்று.) 116

சீடன்; ஆத்மா தள்ளத்தக்கதும் கொள்ளத்தக்கதுமற்ற பிரிய வடிவமா யிருப்பின், சிலர் என்னை நான் கொன்றுவிடுகிறேனென்று சொல்வதெப்படி பொருந்துமென்று வினவுதலும் அதற்குக் குரு விடை கூறுதலும்.

*சீ—வினா:—ஐயனே ! சிலர் உக்கிரமான ஆதி (§ மானசதாபம்) வியாதி (¶ சரீரதாபம்) களால் என்னை நான் கொலைசெய்துவிடுகிறேனென்றுகூறி யிறக்கின்றபடியால், ஆத்மா தன்னிடத்துள்ள வெறுப்பினால் தன்னையே தான் கொலைசெய் திறக்கின்றதென்பது பெறப்படுகின்ற தல்லவா ? இச்சங்கையை யொழித்தருளல் வேண்டும்.*

குரு—விடை :—நீ செய்த சங்கை சங்கையாகாது ?

*சீ—வினா :—அஃதெப்படி ?*

குரு—விடை :—மகனே ! தேகத்திற்கு வேறு யிருந்துகொண் டதனைக் கொன்று தியாகஞ் செய்யும் எந்தப் புருஷ னிருக்கின்றானோ அந்தப் புருஷனால் தியாகஞ் செய்யப்பட்ட தேகம் அந்தப் புருஷனாகாது ; ஆகாதாகவே, ஆத்மாவிற்குத் தனக்கன்னியமான தேகத்தின்கண் வெறுப்பு வந்ததேயல்லா

---

*§ சூக்கும தனுவி (மனதி)லுள்ள காமக்குரோதாதிகள். ¶ ஸ்தூல தனுவி (உடம்பி)லுள்ள வயிற்றுவலி, தலைவலி முதலியன.*

118. தாகப்ப டும்பொருளி லும்மகன் பிரியமாந் தனயனிலு முடல்
பிரியமாம், ஆகத்தி லும்பிரிய மிந்திரிய மாங்கரண மதனிலும்
பிரியமுயிராம், ஏகப்பி ராணனிலும் வெகுபிரிய மான்மாவி லிந்த
வான் மாமுக்கியம், ஊகத்தி னுற்கௌண மித்தைகர்த் தா
மூன்று மோரோன்றி லதிகமகனே.

119. கேடலான பொழுதிவன் காணிக்கு மகனுன கேவுணவான்
மாமுக்கியம், விடலாத வுடலம் பரிக்குநா ளுடலான மித்தை
யான் மாமுக்கியம், திடமான நன்மைகதி வேண்டினுற் கர்த்த
னுஞ் சீவவான் மாமுக்கியம், சடமாயு முத்தியினின் ஞானவான்
மாவான தானே மகாமுக்கியம்.

---

மல் தன்னிடத்தில் வெறுப்பு வந்ததில்லையாம். அதனுல் $ ஆத்மா ஒரு
போதும் தன்னை வெறுப்ப தில்லையாமென் றறிவாயாக. 117

ஆத்மாவே பிரியவஸ்துவெனக் காட்டத் தனமுதலியவற்றிலுள்ள
பிரியங்களின் தாரதம்மியத்தைக் கூறல்.

மகனே ! ‡ தனத்திலுள்ள பிரியத்திலும் புத்திரனிடத்துள்ள பிரியம்
அதிகமாம்; புத்திரனிடத்துள்ள பிரியத்திலும் (ஸ்தூல) தேகத்திலுள்ள பிரி
யம் அதிகமாம் ; (ஸ்தூல) தேகத்திலுள்ள பிரியத்திலும் நேத்திராதி யிந்திரி
யங்களிலுள்ள பிரியம் அதிகமாம் ; இந்திரியங்களிலுள்ள பிரியத்தி
லும் பிராணனிலுள்ள பிரியம் அதிகமாம் ; மனதோ டொன்றுயிருக்தும்
பிராணனிடத்துள்ள பிரியத்திலும் ஆன்மாவிலுள்ள பிரியம் அதிகமாம்.
இவ்வா றிருத்தலால் இந்த ஆன்மாவே முக்கியப் பிரியமாம். யுக்தி வாயிலா
கப் பார்க்குமிடத்துக் கௌணன்மா, மித்தையான்மா, கர்த்தான்மா என
மூன்றன்மாவுண்டு ; அவற்றுள், ஒன்றிலொன்று அதிகப் பிரியமாம். 118

---

*$ ஆன்மா அன்ன முதலியனபோலக் கொள்ளுதற்கும் புலி முதலியன
போலத் தள்ளுதற்கும் விஷய மாகாமையின், அது கொள்ளுதலும் தள்
ளுதலும் அற்ற துரும்பு முதலியனபோல உபேட்சைக்கு விஷயமாமோ
வெனின், அஃது உபேட்சை செய்பவனது நிஜவடிவமா யிருத்தலால்
உபேட்சைக்கும் விஷய மாகாதென்க.*

*‡ "தனத்தைவிடப் புத்திரன் பிரியன்"; புத்திரனைவிட ஸ்தூலசரீரம்
பிரியம் ; ஸ்தூல சரீரத்தைவிட இந்திரியம் பிரியம் ; இந்திரியத்தைவிட
அந்தக்கரணம் பிரியம் ; அந்தக்கரணத்தைவிடப் பரமாத்மாப் பிரியமாம்"
என்று வார்த்திகாமிர்தங் கூறுகின்றது. இவற்றின் விரிவை விசாரசாகரம்
6-வது தரங்கம் 362-வது பிரிவிலும், வாசுதேவமனனம் பிரியத்துவ நிரூப
ணத்திலுங் காண்க.*



---

கௌணன்மா முதலியவற்றுள் இத்தருணத்தில் இது முக்கியமாமெனல்.

(1) ஒருவன் தனது மரணகாலத்தில் தன்னுடைய புத்திரர் முதலியோர்
துன்பமடையாது வாழ்தற்பொருட்டுச் செய்யவேண்டிய பிரயத்தனஞ் செய்
தலால் அத்தருணத்தில் அவனது காணி (வயல்) முதலியவற்றிற்குரிய புத்தி
ரனுகிய † கௌணன்மா அவனுக்கு முக்கிய (பிரதான) மாம்; (2) ஒருவன்
மோக்ஷபரியந்தம் விடாது மாறிமாறி வருகின்ற (ஸ்தூல) தேகத்தை யான்
இளைத்திருத்தலால் இனிப் புஷ்டியைத் தேடுவேனென்று அதற்கேதுவான
உண்டி முதலியவற்றைப் புத்திரர் முதலாயினுரைச் சேர்க்காது தானே யுண்டு
இரட்சிக்குந் தருணத்தில் ‡ (ஸ்தூல) தேகமான மித்தையான்மா அவனுக்கு
முக்கியமாம் ; (3) ஒருவன் உறுதியான நற்கதியை யடைய விரும்பித் தேக
போகங்களை வெறுத்தொழித்துத் தவம்புரியுந் தருணத்தில் ¶ கர்த்தாவாகிய

---

*† ஒருவகை யாகாரத்தோடுந் தாடிமீசை முதலியவற்றோடுங் கூடியுள்ள
மிருக விசேஷமாய சிங்கத்தின் சூரத்தன்மை முதலிய குணங்கள் தேவதத்த
னிடத்துச் சமமாயிருத்தலை நோக்கிக் குண ஒப்புமையால் சிங்கம் தேவதத்த
னென் றுரைக்குமிடத்துச் சிங்கபதம் தேவதத்தனைக் கௌணி விருத்தியா
லறிவிப்பதுபோல, ஒருவன் தனது காணிமனைமுதலியவற்றினுரிமைக்குணம்
தனது புத்திரனிடத்துச் சமமாயிருத்தலை நோக்கிக் குணவொப்புமையால்
யானே (என்னுத்மா) இப்புத்திரனென் றுரைக்குமிடத்து யானென்னும் பதம்
புத்திரனைக் கௌணி விருத்தியா லறிவிக்கின்றதென்க. ஈண்டு யானென்றது
ஸ்தூல தேகத்தை. இக்காரணத்தால் புத்திரன் கௌணன்மாவென்று சொல்
லப்படுகின்றுனென்க. பதத்தின் சக்கியார்த்தத்தில் எந்தக்குண மிருக்கின்ற
தோ அதனையுடைய அசக்கியார்த்தத்தில் பதத்தின் கௌணி விருத்தி
கூறப்படுகின்றதென்க.*

*‡ வெள்ளியினும் வேறான இப்பியை இது வெள்ளியென்பதெங்ஙனம் மித்தையோ அங்ஙனமே ஆத்மாவினும் வேறான ஸ்தூல தேகத்தை
யானிளைத்தேன், பருத்தேனென்றற்றொடக்கத்து வியவகாரத்தால் ஆன்மா
வெனக் கருதுதல் மித்தையாயிருத்தலின், ஸ்தூலதேகம் மித்தையான்மா
என்று கூறப்படுகின்றது. "நெருப்பினொடு புணர்ச்சியாற் புனற்கழற்சி வால்
போல் நித்தமுறு மான்மசந் நிதியதனின் முறையே, சரிப்பினொடு காண்ட
னினை வுறலறிதல் வரலால் தகுந்தூல மெய்மித்தி யாத்தியா சந்தான்" என்று
வேதாந்தசூளாமணி கூறுவது மிங்கறியத்தக்கதாம்.*

*¶ லோகாந்தகுந்தம் போன்று சித் பிரதிபிம்பத்தோடுகூடிச் சுழுத்தி
யவஸ்தையி லொடுங்கி ஜாக்கிராவஸ்தையில் நகநுனிமுதல் சிகைபரியந்தம்
சரீரத்தில் வியாபித்துக் கர்த்தாவடிவமாயிருக்கும் விஞ்ஞானமயகோசம்
கர்த்தாவாகிய சீவான்மாவாம். "நானென், றாந்தைதரு விஞ்ஞான மய*

சீவான்மா அவனுக்கு முக்கியமாம்; (4) நாம நுபப்பிரபஞ்சம் தனது காரணமாகிய அஞ்ஞானத்தோடொழியும் மோக்ஷ தசையில் அதிகாரிபுருஷனுக்குச் $ சிதான்மாவாகிய தானே மிகவும் முக்கியமாம். 119

கோசவடிவா மாங்காரந் தனையான்மா வென்பாறி விழந்தோர்'' என்று வேதாந்த சூளாமணி கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

$ சிதான்மாவிலுள்ள முக்கியப்பிரீதி ஏனையவற்றின்கணின்மையின், அதுவே முக்கிய ஆன்மாவாமென்க. கௌணாத்மா முதலியவற்றின் தன்மையை விரிவாயறிய விரும்புவோர் பஞ்சதசி ஆத்மாநந்தப் பிரகாணத்திற் காண்க.

(1) "பூதங்களின் விகார அகிருத ஜட துக்கவடிவமும், மலமூத்திராதிகளால் நிறைந்ததும், அந்நமய முதலிய பஞ்சகோசங்களோடு கூடியதும், இந்திரியாதி சங்காதங்களுமாகிய இந்தச் சரீரம் மித்தையாம்; அநாத்மாவும் சொரூபமாக மித்தியாவடிவமாம். ஆயினும், சேதனவடிவப் பிரத்யகாத்ம தாதாத்மிய அத்தியாசத்தால் இஃது ஆத்மசப்தத்தினல் சொல்லப்படுகின்றது. இச் சேதன ஆத்மா அவிவேககாலத்தில் தன்னை முற்கூறிய சங்காதங்களுக் கபின்னமாக மதித்து, கர்த்திருத்வபோக்திருத்வ-சுகித்வ-துக்கித்வ-ஜன்ம மாண முதலான அநாத்மதர்மங்களைத் தன்னுடையதருபமாகக்கருதித் தாழ்ந்தநிலையை யடைகின்றது; விவேககாலத்தில் தாதாத்மியசம்பந்த அபிமானத்தை விடுகின்றது. அதனால் இச்சங்காதம் பொய்யென்று நிச்சயிக்கப்படுகின்றது. அதனால், இது மித்தையாத்மா வெனப்படுகின்றது.

(2) ஸ்த்ரீ புத்ர தனதிகள் கௌணாத்மாவெனப்படுகின்றன. ஜீவனது அவிவேகதசையில் அவனுக்குத்தன்னினும் அவைவேறு என்னும்பேதம் பிரத்தியட்சமாகச் சித்தித்திருந்தாலும், ஆத்மாவின் தாதாத்மிய அத்தியாசத்தால் அவன் அவற்றைத் தன்வடிவாகப்பாவித்து அவற்றிற்குண்டாகும் லாபநஷ்டங்களைத் தானநுபவிக்கின்றான். எப்படி தனதாத்மாவில் தனக்குப் பிரேமையிருக்கின்றதோ அப்படியே அவற்றிலு மிருக்கின்றது. எப்படியவன் இந்தத் துக்காதி குணங்களைத் தனக்குப் பிரதிகூலமாக நினைக்கின்றானே அப்படியே அவற்றின் துக்காதி குணங்களையும் நினைக்கின்றான். அதனால் அவை கௌணாத்மா வெனப்படுகின்றன.

(3) எந்தச் சுயம்பிரகாசவடிவச் சாக்ஷியாகிய ஆத்மா பஞ்சகோசங்களையும் பிரகாசிப்பிக்கின்றதோ, எதற்குச் சகல சங்காதங்களும் திருசியமாமோ, அது திருஷ்டாவாம். அதுவே தனது நிஜவடிவமாம். எதற்கு மகாவாக்கியங்களால் சொல்லப்படும் பூரணாநந்தப் பிரஹ்மத்தோடு அபின்னத் தன்மையிருக்கின்றதோ அது முக்கியாத்மா வெனப்படும்'' என்று விசாரசந்திரோதயங் கூறுகின்றது. "தப்தாயப்பிண்டம் (காய்ந்துள இரும்பு) போலத் தேகத்துள்ளே சம்பந்தித்துச் சர்வசம்சார வியவகாரமு முடையவனே சீவாத்மா'' என்று வேதாந்த பரிச்சேதம் கூறுகின்றது.



120. புலியுமநு கூலமெனி லிட்டமாம் பகைசெயிற் புதல்வனெனி
னும்வெறுப்பாம், உலகிலிரு வகையுமல் லாதபுல் லாதியி
லுதாசீன மாமாதலான், மலினமறு சின்மயன் பலவகையு மிப்
படி மகிழ்ச்சியில் விருப்பமிகழான், அலகிலா நந்தவடி வாகு
முன் சோருபத்தை யாராய்ந்து பார்மைந்தனே.

121. மானஞ்சி றந்தகுரு நாதனே யாநந்த வகைகளைத் தனையென்
னிலோ, ஞானந்தி கழ்ந்தபிர மாநந்தம் வாசனு நந்தம்விட
யாநந்தமேன், றுநந்த மூன்றுவித மேட்டுவகை யென்பார்சில
ரவ்வைந்து மிதிலடக்கம், யானந்த வகைசொலக் கேண்மைந்த
னேயெட்டு மிஃதின்ன தின்னதேனவே.

விஷயங்களிலுள்ள விருப்ப முதலியன நியமமா யிராது மாறுவதுபோல
ஆத்மாவின்கண்ணுள்ள விருப்பம் மாறாது நியமமாயிருத்தலின்,
ஆத்மாவே ஆநந்த வடிவமெனக் கூறல்.

மைந்தனே! பிரதிகூலமாயுள்ள புலியும் † அனுகூலமான காரியத்தைச் செய்யுமாயின், அப்போது அஃது எவர்க்கும் பிரியத்திற்கு விஷயமாம்; ஒருவன் மற்றொருவனுக்குப் ‡ பிரதிகூலமான காரியத்தைச் செய்தால் செய்பவன் அவனது பிரியத்திற்கு விஷயமாயுள்ள புத்திரனாயிருப்பினும் அவனது வெறுப்பிற்கு விஷயமாவன்; விருப்பிற்கும் வெறுப்பிற்கும் விஷயமாகாத திரணமுதலியன உபேட்சா புத்தி (நோதுமல் மதி)க்கு விஷயமாம். அங்ஙனமாயினும், § அவை ஒவ்வொரு சமயத்தில் விருப்பிற்கும், வெறுப்பிற்கும் விஷயமாம். சுத்த சின்மயமான ஆத்மா பலவகையாலும் இவ்வாறு தனதானந்தத்திலுள்ள விருப்பத்தை யிகழாதிருக்கின்றதாகலின், அபரிச்சின்ன ஆநந்தவடிவமாயுள்ள உனது சோருபத்தைப் பஞ்சகோசத்தினும் வேறாக விவேகத்தா லாராய்ந் தறிந்து, அச் சோருபமாகவே யிருக்கக்கடவாய். 120

சீடன், ஆநந்தம் எத்தனை வகைப்படு மென்று வினவுதலும்
அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினா:—பெருமைமிகுந்த குருநாதனே! ஆநந்தத்தின் கூறுபாடுகள் எத்தனை? அவற்றைக் கூறியருளல் வேண்டும்.

கு—விடை:—மைந்தனே! ஆநந்தம்: (சுழுத்தியவத்தையில் தனது ஞானத்தால் விளங்குவதான) பிரஹ்மாநந்தம், (நித்திரைதெளிந்துந் தெளி

† சுகசாதனம்-அனுகூலமாம்; ‡ துக்க சாதனம்-பிரதிகூலமாம்.

§ சிறுதுரும்பானது பற்குத்தும்போது விருப்பிற்கு விஷயமாயும் பல்லீற்றினின்றும் இரத்தத்தை வெளியாக்கும்போது வெறுப்பிற்கு விஷயமாயு மிருத்தலறிக.

யாவிடத்திற் றேன்றுவதான) வர்சநாநந்தம், (விரும்பிய வஸ்து கிடைத்த லால் அந்தர்முகமர்ன மனத்தின்கண் பிரதிபிம்பிக்கின்ற) விஷயாநந்தமென மூவகைத்தாம்.

சில பெரியோர் (1) விஷயாநந்தம், (2) பிரஹ்மாநந்தம், (3) வாசநா நந்தம், (4) ஆத்மாநந்தம், (5) முக்கியாநந்தம், (6) நிஜர்நந்தம் (7) அத் வைதாநந்தம், (8) வித்தியாநந்தமென ஆநந்நம் எண் வகைத்தா மென்பர். (அப்பெரியோர் இம்மூன்றுநந்தத்திலும் அதிகமாகக்கூறிய) $ அவ்வைந்தா நந்தமும் இம்மூவகை யாநந்தத்துள் அடக்கமாம். இன்னவாநந்தம் இன்ன நாமமுடையது, இன்னவாநந்தம் இன்ன நாம முடையது என்று அவ்வெண் வகை யாநந்தத்தின் கூறுபாடுகளையும் யான் கூறுகின்றேன் ; அவற்றை நீ கவனமாய்க் கேட்கக் கடவாய். 121

$ "நிஜாநந்தமும், முக்கியாநந்தமும், ஆத்மாநந்தமும், யோகாநந்த மும், அத்வைதாநந்தமும் பிரஹ்மாநந்தத்தி லடக்கமாம் ; வித்தியாநந்தம் விஷயாநந்தத்தி லடக்கமாம்" என்று வேதாந்தசஞ்ஞா கூறுகின்றது.

"வித்தியாநந்தம் விஷயாநந்தம் போல அந்தக்காண விருத்தி வடிவமா யிருத்தலின், விஷயாநந்தத்தி லடக்கமாம்; முக்கியாநந்தம், ஆத்மாநந்தம், அத்வைதாநந்தமென்னு மூன்றும் பிரஹ்மாநந்தத்திற்கு வேறுதவின்மையின், பிரஹ்மாநந்தத்தி லடக்கமாம்; (விருப்பு வெறுப்பின்றிய) உதாசீன காலத்தில் தோன்றும் நிஜாநந்தமும், (சுழுத்தியினின்றும்) விழித்தகணத்தில் தோன் றும் வாசநாநந்தமும் விஷயத்தைப் பற்றியும் சொரூபத்தைப்பற்றியு மிராது பிரஹ்மாநந்தத்தின் அம்சமாத்திரமா யிருத்தலின், வாசநாநந்தமாம். இத ஞல், பிரஹ்மாநந்தம், வாசநாநந்தம்,விஷயாநந்த மென்னு மிம்மூன் றுநந்தத் தைத் தவிர உலகத்திலோ ராநந்தமு மில்லையாம்" என்று பஞ்சதசி யோகா நந்தப் பிரகாணத்தின் சிற்றுரையி லெழுதப்பட் டிருப்பதிங் குணர்தற்பால தாம்.

கைவல்லிய நவநீத நூலாசிரியர் விஷயாநந்தம், பிரஹ்மாநந்தம், வாசநா நந்தம், ஆத்மாநந்தம், முக்கியாநந்தம், நிஜாநந்தம், அத்வைதாநந்தம், வித்தி யாநந்த மென்று கூறிய ஆநந்த மெட்டனுள்; முக்கியாநந்தம், ஆத்மாநந்தம், அத்வைதாநந்த மென்னுமூன்றும் பிரமாநந்தத்தி லடக்கமாம்; நிஜாநந்தம் வாசநாநந்தத்திலடக்கமாம்;வித்தியாநந்தம் விஷயாநந்தத்திலடக்கமாமென்க. பிரஹ்மாநந்தம் விஷயாநந்தமும் வாசநாநந்தமு முண்டாதற்குக் காரணமாய்ச் சுவயம்பிரகாச வடிவமாய் நிலைத்திருத்தலாலும், பிஹ்மாநந்தமாகிய கார ணத்தைத் தவிர விஷயாநந்தமும் வாசநாநந்தமுமாகிய காரிய மின்மையாலும், முக்கியாநந்தம், ஆத்மாநந்தம், அத்வைதாநந்தமென்னு மூன்றும் பிரஹ்மாநந்த வடிவமாகவே யிருத்தலாலும்,அதனைத் தவிர எவ்வித



122. போகத்தில் வருசுகம் விடயசுக நித்திரைப் போதுளது பிரமசுக மாம், மோகத்த னந்தலிற் சுகம்வாச னைச்சுக முழுப்பிரிய மான் மசுகமாம், யோகத்தி லுளதுமுக் கியசுக முதாசீன முற்றசுக நிசசுகமதாம், ஏகத்தை நோக்கலத் துவிதசுகம் வாக்கிய மே மூந்தசுக ஞானசுகமே.

அவை யிவையென அவற்றைத் தொகுத்துக் கூறல்.

(1) விரும்பிய வஸ்துவை யடைந்து, அதனை யனுபவிக்கும்போது இச்சா நிவிர்த்தியின் நிமித்தத்தால் அந்தர் முகமர்ன மனோவிர்த்தியில் பிரதி பிம்பித்துள்ள ஆத்மர்நந்தம் விஷயாநந்தமாம்.

(2) சுழுத்தி யவஸ்தையிலுள்ள சொப்பிரகாச ஆத்மாநந்தம் பிரஹ் மாநந்தமாம்.

(3) மயக்கமாகிய நித்திரை தெளிந்து வருஞ் சமயத்துள்ள ஆநந்தம் ¶ வாசநாநந்தமாம்.

(4) பிரிய வஸ்துக்களுள் யானே மிகப் பிரியனென்று விவேகத்தா லறிந்தபோது தோன்றும் ஆநந்தம் ஆத்மாநந்தமாம்.

(5) யோகாப்பியாச பலத்தால் மனோலயமான போது மறைப்பின்றித் தோன்றும் ஆநந்தம் § முக்கியாநந்தமாம்.

(6) ‡ உதாசீனகாலத்துத் தோன்றும் ஆநந்தம் † நிஜாநந்தமாம்.

(7) நாம நுபங்கள் மித்தையாமென் றுணர்ந்து அவற்றை யுபேட்சித்து விவேகத்தால் அத்வைதமர்ன தன்னை நோக்கும் போது தோன்றும் ஆநந்தம் அத்வைதர்நந்தமாம்.

(8) தத்துவமசி முதலிய மகா வாக்கியார்த்த விசாரஞானத்தால் அந்தக் காண விருத்தியில் பிரதிபிம்பிக்கும் ஆநந்தம் வித்தியாநந்தமாம். 122

வாநந்தமு மில்லையா மென்பதிங் குணர்தற் பாலதாம். வித்தியாநந்தம் விஷ யாநந்தத்திலும் நிஜாநந்தம் வாசநாநந்தத்திலு மடக்கமாகலின், அவை யிங்குக் கூறப்படவில்லை.

¶ சுழுத்தியினின்றும் விழித்தவனுக்குச் சுழுத்தியிலனுபவித்த பிரஹ் மாநந்தத்தின் வாசனை சிறிதுநோ மிருப்பதுபற்றி அது வாசநாநந்தமென்று கூறப்படுகின்றது.

§ இதனை நிஜாநந்தமென்று வேதாந்த சூளாமணி கூறுகின்றது.

‡ சுகதுக்கவடிவ நிமித்தத்தாலுண்டாகும் இராகத்துவேஷங்களின் அபாவகாலம் உதாசீனகாலமென்றும், தூஷ்ணீம்பூதாவஸ்தை யென்றும் கூறப்படும்.

† இதனை முக்கியாநந்தமென்று வேதாந்த சூளாமணி கூறுகின்றது.

123. இவ்வா றுரைசெய்த சுகபே தங்களி னியல்பா மவைசொல
மகனேகேள், ஒவ்வா நனவினி லுழல்வா னிடர்கெட வுறங்குஞ்
சயனம துறுநேரம், செவ்வா மனமக முகமா மதிலொளிர் சித்
தின் சுகநிழல் சேருங்காண், அவ்வா றிவனுள மகிழ்வா மநுபவ
மதுதான் விஷயசு காநந்தம்.

---

அவ்வாநந்தங்களி னியல்பை விரிவாகக் கூறுவான்
றொடங்கி, விஷயாநந்தத்தி னியல்பைக் கூறல்.

### 1. விஷயாநந்தம்.

சீ—வினா:—ஐயனே! *அவற்றை விரிவாகக் கூறிபருளல் வேண்டும்.*

கு—விடை:—மகனே! இங்ஙனம் கூறிய ஆநந்தத்தின் வேறுபாட்டியல்பினை விரிவாகவே கூறுகின்றேன்; அவற்றை நீ கவனமாய்க் கேட்கக்கடவாய்.

§ சாக்கிராவஸ்தையில் அநுகூல விஷயங்களை யடைதற் பொருட்டு அந்துமிந்து மலைகின்ற சீவன் அவ்வலைதலா லுண்டாகுந் துன்பம் நீங்குதற் பொருட்டு உறங்குதற் கேதுவாயுள்ள சயனத்திற் சயனஞ் செய்யுஞ் சமயத்தில் அவனது மனோ விருத்தி செவ்வையாக அந்தர்முகமாம்; அப்போது அவ்விருத்தியில் ஆத்மாநந்தம் பிரதிபிம்பிக்கும். அவ்வாறு இவனது மனோ விருத்தி (ஆத்மாநந்தத்தின் பிரதிபிம்பத்தை யடைவதால்) ஆநந்தாகாரமாக விளங்குமனுபவமே விஷயாநந்தமாம். 123

---

*§ சாக்கிராவஸ்தையில் தானடையாத விஷயத்தைச் சம்பாதித்தல் முதலியவற்றால் துக்கத்தை யனுபவித்து, அத்துக்க நிவிர்த்தியின் பொருட்டு, மிருதுவான சயன (மெத்தென்ற படுக்கை) முதலியவற்றில் படுக்கும் புருஷனது புத்தி அந்தர்முகமா (உள்நோக்கியதா)கின்றது. அவ்வந்தர்முக புத்தி விருத்தியில் தன்னெதிரிலுள்ள கண்ணாடியில் முகம் பிரதிபிம்பிப்பதுபோலச் சொரூப வடிவ ஆநந்தம் பிரதிபிம்பிக்கின்றது. இப்பிரதிபிம்ப ஆநந்தமே விஷயாநந்தமாம். இங்கும் விஷயாநந்தத்தை யனுபவித்து, அனுபவிப்பவன், அனுபவம், அனுபவத்தின் விஷயமென்னுந் திரிபுடியால் சீவன் சிரமத்தை யடைந்து, அச்சிரமம் நீங்குதற்பொருட்டு (சுழுத்தியில்) ஆநந்தவடிவப் பிரஹ்மத்தோ டொருமையை யடைந்து, பிரஹ்மாநந்த வடிவமாக விளங்குகின்றானென்பதிங் குணர்தற்பாற்றாம்.*

*இவ்விஷயாநந்தாநுபவம் பிரஹ்மாநந்த வடிவமாக விளங்குதற்குக் காரணமா யிருப்பதறிக.*



---

*சாக்கிராவஸ்தையிலாவது சொப்பனவஸ்தையிலாவது விரும்பிய பொருள் கிடைத்தலாகிய நிமித்தத்தால் ஒருமுகமாய சித்தத்திலுண்டாகும் ஆத்ம சொரூப ஆநந்தத்தின் க்ஷணகாலப் பிரதிபிம்பம் விஷயாநந்தமாம். இது பிரதிபிம்பாநந்தமென்றும், இலேசாநந்தமென்றும், மாத்திராநந்தமென்றும் சொல்லப்படும்.*

*கண்ணாடியிற் றோன்றும் முகத்தின் பிரதிபிம்பம் சத்தாகிய முகவடிவப் பிம்பத்தை யுள்ளவாறுணர்தற்குச் சாதனமா யிருத்தல்போல, விருத்தியிற் றோன்றும் பிரஹ்மாநந்தத்தின் பிரதிபிம்பமாகிய விஷயாநந்தமும் சத்தாகிய பிரஹ்மாநந்தத்தை யுள்ளவாறுணர்தற்குச் சாதனமா யிருக்கின்றதென்பதிங் குணர்தற்பாலதாம்.*

*"எப்போது மாலை முதலிய விஷயங்களி னிலாபத்தா லந்தந்த விஷயங்களி னிச்சை நீங்குகின்றதோ, அப்போது மனம் அந்தர்முகமாகின்றது; ஆகவே, அம்மனதி லெந்த ஆத்ம சொரூபத்தி னாநந்தம் பிரதிபிம்பத்தினை யடைகின்றதோ அது விஷயாநந்தமெனப்படும்.*

*அல்லது, எப்போது விரும்பிய விஷயத்தினடைவுண்டாகின்றதோ அப்போது இச்சைவடிவச் சஞ்சலமான இராஜச விருத்தியினது நிவிருத்தியுண்டாகின்றது. கிடைத்த விஷயத்தின் ஞானவடிவச் சாத்துவீக விருத்தியினால் விஷய உபகித சேதனத்தின் சொரூப வடிவ ஆநந்தத்தின் விளக்கமுண்டாகின்றது. இந்த விருத்தி விஷய வடிவ நிமித்தத்தாலுண்டாகின்றது; ஆதலால், இந்த விருத்தி விஷயாநந்தமெனப்படுகின்றது. அல்லது, விரும்பிய விஷயத்தின் ஞானத்தால் இச்சையாகிய விருத்தி நீங்குகின்றது; அந்த இச்சையி னிவிருத்தி வடிவ நிமித்தத்தினாலேயே வேறு அந்தர்முக விருத்தி யுண்டாகின்றது; அதனால், அந்தக்கரண உபகித ஆநந்தத்தின் பான (விளக்க) முண்டாகின்றது. இவ்வந்தர்முக விருத்தி அல்லது அந்த விருத்தியி லுண்டாகும் சொரூபாநந்தத்தின் பிரதிபிம்பம் விஷயாநந்தமெனப்படுகின்றது.*

*இஷ்டவிஷயமான சந்தனம் மாலை முதலிய பதார்த்தங்கள் கிடைக்க அவற்றை யநுபவிக்கும்போது இச்சை மறைதலாகிய நிமித்தத்தா லுண்டாகும் அந்தர்முகமனோவிருத்தியில் பிரதிபிம்பிக்கு மாநந்தம் விஷயாநந்தமாம்.*

*இதனால், பிரஹ்மாமுதல் எறும்புபரியந்தமுள்ள சர்வஜீவர்களும் நிர்வாகஞ்செய்கின்றனர்.'' என்று விசாரசந்திரோதயம் கூறுவதிங்குணர்தற்பாலதாம்.*

124. ஈனந் தருசுக விடயந் திரிபுடி யிடரா மெனமன மசையாமல்
சேனந் தனது குலாயந் தனில்விழு செயல்போ னித்திரை செறி
சீவன், தானந் தமில்பர னுடனேன் றுவனொரு தனையல் லது
பிற நினையாமல், ஆநந் தமயனு மாவன் சுகமிகு மதுதா னுயர்
பிர மாநந்தம்.

## 2. பிரஹ்மாநந்தம்.

விஷயாநந்தம் புசிப்பவன் போகம் போக்கிய மென்னும் திரிபுடியோடுகூடி யிருத்தலின், துன்பவடிவமா மென்று கருதி, அது தீர்தற் பொருட்டுச் † சேனமா (பருந்தா) னது தனது கூட்டில் ஆகாயத்தினின்றும் வந்து விழுந் தடங்கி யிருக்கும் தன்மையைப்போல மனத்தின் புடைபெயர்ச்சியின்றி நித்திரை செய்யும் அந்தச் சீவன் (அந்நித்திரையாகிய சுழுத்தியில்) பிரஹ்மத்தோடு ஐக்கியத்தை யடைவான்; அத்வைதமான தன்னை யன்றிப் பிறிதோன்றனையும் நினையாமல் ஆநந்தநுபனுமாவன். (சுழுத்தியின்கணுள்ள) அவ்வாநந்தமே பிரஹ்மாநந்தமாம். 124

† சேனமென்பது சகுனி முதலியவற்றிற்கும் உபலட்சணமாம்; ஆகவின், சுழுத்தி யாநந்தத்திற்குத் திருஷ்டாந்தமாகச் சுருதிகூறியவாறு சேனம், சகுனி, குமாரன், சக்கரவர்த்தி, மகாப் பிராமணனென்னும் ஐவகைத் திருஷ்டாந்தமுங் கொள்ளற்பாலனவாம். அவை வருமாறு:—

"சகுனி (ராஜாளி), சேனம் (பருந்து), குமாரன், மகாராஜன், மகாப் பிராமண னென்னுமைந்து திருஷ்டாந்தங்களும் சுழுத்தியின் ஆநந்தத்தில் சுருதியால் சொல்லப்பட் டிருக்கின்றன. (1) கயிற்றாற் கட்டப்பட்ட சகுனி எல்லாத் திக்குக்களிலும் வியாபாரஞ்செய்து, அங்கிளைப்பாறு மிடமாகிய ஆதாரத்தை யடையாது பந்தனத்திற்கிடமான கை அல்லது ஸ்தம்பத்தை யாசிரயிக்கின்றது ; அப்படியே ஜீவனது உபாதியாகிய மனமும் தர்மாதர்மங்களின் பயனை யடைதற் பொருட்டுச் சொப்பன சாக்கிரங்களிற் சுழன்று, கர்ம க்ஷயமாகவே ஒடுங்குகின்றது ; (2) எப்படி சேனம் சயனித்தற்குத் தனது கூடு ஒன்றன் கண்ணேயே பற்றுடையதாய் வேகமாய்ச் செல்லுகின்றதோ அப்படியே சீவன் பிரஹ்மாநந்தம் ஒன்றன்கண்ணேயே பற்றுடையவனாய்ச் சுழுத்தியின்பொருட் டோடுகின்றான் ; (3) அதிபாலகன் ஸ்தனத்தின் பானஞ்செய்து மிருதுவான சயனத்திலிருந்து சிரிக்கின்றவனாய், இராகத்துவேஷ முதலியவற்றி னுற்பத்தியின்மையால் ஆநந்தரூப முக்கிய ஸ்வபாவமுடையவ னாகின்றான் ; (4) சகல பூமிக்கு மதிபதியாகிய மகாராஜன் சர்வ போகங்களினாலுஞ் செவ்வையாய்த் திருப்தி யடைந்தவனாய் மானுடாநந்தத்தி னவதியை யடைந்து, ஆநந்த மூர்த்தி யொன்றனையே



125. தூங்குஞ் சுகமது பிரமச் சுகமெனல் சுருதிப் பொருள்விழி
துயில்வோர்கள், தாங்கும் மலரணை நன்று கச்சிலர் சம்பா திப்
பது தானாகம், தீங்குந் நன்மையு மாண்பெண் முறைமையுந்
தெரியா தமளிசெய் பொழுதேபோல், ஆங்குள் வெளிகளு
ம்றியா வநுபவ மதனு லதுபிர மாநந்தம்.

சுழுத்தியின்கண் ஆநந்த முண்டென்பதற்குச் சுருதி யுக்தி யனுபவங் கூறுதல்.

(1) உறங்கும்போதுள்ள (சுழுத்தியில் ஜீவனடைந்துள்ள) ஆநந்தம் பிரஹ்மாநந்தமென்று கூறுதல் $சுருதியினர்த்தமாம்; (2) நித்திரை செய்பவருள் சிலர் தத்தமக்கியன்றவாறு நித்திராபங்க முண்டாகாதபடி அதனைக்காக்கத்தக்க மலரணை முதலியவற்றைச் செவ்வையாகச் சம்பாதிப்பதே சுழுத்தியின்கண் ஆநந்தமுண்டென்பதற்கு யுக்தியாம்; (3) காதலனொருவன் சயநக்கிருகத்தில் தனது காதலியைக் கூடியனுபவிக்கும் பொழுது தீமை நன்மை யென்னும் பாகிய வியவகாரமும் ஆந்தா வியவகாரமும் ஆண்பெண் என்னு முறைமையும் சிறிதுமறியாது ஆநந்தவடிவா யிருத்தல்போல, அச் சுழுத்தியின்கண் பிராஞ்ஞ னென்னும் ஜீவன் பிரஹ்மத்தையடைந் தைக்கியமானபொழுது பாகியாந்தர(வெளி-உள்) வியவகாரங்களுள்எதனையும் சிறிது மறியாது ஆநந்தவடிவமா யிருத்தலே அனுபவமாம். இவ்வாறு சுருதி, யுக்தி, அனுபவங்க ளிருத்தலால் சுழுத்தியின்கணுள்ள அவ்வாநந்தம் பிரஹ்மாநந்தமாம். 125

பஜிக்கின்றான்; (5) மகாவிப்பிரனாகிய பிரஹ்மவேதி கிருத கிருத்தியத்தன்மை வடிவவித்யாநந்தத்தின் பரமாவதியை யடைந்து நிலைக்கின்றான்....குமாரன் முதலியவரைப் போலவே இச்சுழுத்தி யுடையவன் பிரஹ்மாநந்த மொன்றில் தற்பரனாகின்றான் (பிரஹ்மாநந்தமொன்றையே யடைகின்றான்)." என்பது பஞ்சதசி - யோகாநந்தப் பிரகரணம்.

$ "சுழுப்தி காலத்தில் சகலப்பிரபஞ்சமும் ஒடுங்கவே தமசினால் மறைக்கப்பட்ட ஜீவன் சுகரூபத்தை யடைகிறான்" என்று அதர்வண வேதத்தின் கைவல்லியோப நிஷத்துக் கூறுகின்றது. எப்போது புருஷன் நித்திரை செய்கிறானோ அப்போது சத்ரூபமான ஆத்மாவுட னேகமாய்விடுகின்றான்; அவன் பாஹியமாயுள்ள விஷயங்களுள் ஒன்றையும் ஆந்தரமாயுள்ள விஷயங்களுள் ஒன்றையும் அறிகின்றதில்லை. அஃதெதுபோலெனின், பிரியமுள்ள ஸ்திரீயுடன் சம்பந்தப்பட்டிருக்கின்ற புருஷன் சம்பந்தப்பட் டிருக்கின்றபோது பாஹியாந்தர விஷயங்களி லொன்றையும் அறியாமைபோலுமா மென்க.

126. உதவும் புவியினி லோருவன் னநுபவ மோருவன் மனதினி
லுதியாதே, மதியுங் கெடுகிற துயில்கோண் டாநந்த மயனன்
றேசுக முறுகின்றான், இதுவிஞ் ஞான மயனது சிந்தையி
னினைவாய் வந்திட லழகன்றே, சுதைவிண் ணோர்புகழ் குருவே
நீரிது சொல்லீர் சகலமும் வல்லீரே.

---

சீடன், அனுபவத்திற்கும் ஸ்மிருதிக்கும் அதிகரணம் ஒன்றுமென்பது நியமமாயிருக்க, அதற்கு மாறாக ஆநந்தமயனது (ஒன்றுமறியாது சுகமா யுறங்கும்) அனுபவம் விஞ்ஞானமயனுக்கு ஸ்மிருதி வடிவாய் வருதலெவ்வாறு பொருந்து மென்று வினவுதலும் அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வி௵:—சாஸ்திர மனைத்தையு முணர்ந்தவராயும் தேவர்கள் போற்றும் மேம்பா டுடையவராயு முள்ள குருவே! ஒருவனது அனுபவம் அவனுக்கன்றி மற்றொருவனது மனத்தின்கண் ஸ்மிருதி வடிவமாக வுண்டாகாதென்பது நியமமல்லவா? ஆநந்தமயனல்லவா மனோமய கோசத்தோடு விஞ்ஞானமய கோசமும் நாசமாகின்ற நித்திரையை (சுழுத்தியை) யடைந்து பிரஹ்மாநந்தத்தை யனுபவிக்கின்றான். இவ் வனுபவம் விஞ்ஞானமயனை கர்த்தாவினது கரணவடிவமான மனதில் * ஸ்மிருதிவடிவமாக வெழுதல் எவ்வாறு பொருந்தும்? இச்சங்கைக்குத்தரங் கூறியருளுமாறு பிரார்த்திக்கின்றேன். 126

கு—விடை:—அன்பனே! § நெய்—வெண்ணெ யென்னு மிரண்டும் உருகியிருத்தல் உருகாதிருத்த லென்னும் உருவினால் வேறுப் சுவையினாலொன்று யிருத்தல்போல ஆநந்தமயன் விஞ்ஞானமய னென்னு மிருவரும் அவித்தை, அந்தக்கரண மென்னு முபாதி நோக்கத்தால் வேற்றுமையுடையவராய்ப் பிரதிபிம்ப சேதனவடிவ நோக்கத்தால் ஒற்றுமையுடையவராயிருக்கின்றனர். போகப்பிரதானமான (பிராரத்த) கர்மவசத்தால் நாநாவியவகாரங்களைச் செய்கின்ற சாக்கிராவஸ்தையின்கண் ஸ்தூலமான அந்தக்கரண வுபாதியோடு கூடியுள்ள சின்மயனென்னும் விஞ்ஞானமயனை

---

* அனுபவத்தின் காரியமாகிய சம்ஸ்காரத்தினால் தோன்றும் ஞானம் ஸ்மிருதி (நினைவு) எனப்படும்.

§ "உறைந்த நெய்யினைப்போல யாது பின் ஜாக்கிரமுதலியவற்றில் விஞ்ஞானமயகனமாகின்றதோ அதுவே முன் விலீன (ஒடுங்கிய) வவஸ்தையையுடையதாய் ஆநந்தமய சப்தத்தாற் சொல்லப்படுகின்றது." "சுழுத்திக்கு முந்திய கணத்தி லெந்தப் புத்திவிருத்தி சுகத்தின் பிரதிபிம்பத்தோடு கூடியதாகின்றதோ, அதன்பின் அச்சுகத்தின் பிரதிபிம்பத்தோடு கூடிய அதே



127. நெய்யும் வெண்ணெயு மிருபேர் களுமறி நினைவிற் பிறிவறி
வினிலில்லை, செய்யுங் நனவினி லிறுகும் மனதோடு சேருஞ்
சின்மய விஞ்ஞானன், நையுங் துயர்மன நழுவும் பொழுதுணர்
ஞானச் சுகமுணு மாநந்தன், பெய்யுங் துளிகளு நீருங் குளமோடு
பாகும் போலிவர் பிரிவன்றே.

---

வன் துன்பத்திற் கேதுவாகிய அந்தக்கரணம் போகப்பிரதானமான கர்மக்ஷயவசத்தால் நித்திரா (சுழுத்தி) வடிவமாக லீனமாகும்போது (அச்சுழுத்தியில்) அவித்தியா விருத்தியினால் பிரஹ்மாநந்தத்தை யனுபவித்தும் ஆநந்தமயனென்று சொல்லப்படுகின்றான்; ஆதலின், விஞ்ஞானமயன் ஆநந்தமயனென்னு மிவ்விருவரும் மேகம்பொழியு மழைத்துளிகளும் சமுத்திர முதலியவற்றின் ஜலமும் வெல்லமும் பாகும்போல † வேறகாதிருப்பர். வேறகாதிருத்தலால், ஆநந்தமயனது அனுபவத்தின் ஸ்மிருதி விஞ்ஞானமயனுக்குண்டாகின்றதென்ப தறிவாயாக. 127

---

விருத்தி யொடுங்கி யாநந்தமய மெனப் படுகின்றது." "அந்தர் முகமாகிய ஆநந்தமய னெவனோ அவனப்போது சேதனப் பிரதிபிம்பத்தோடு கூடிய அஞ்ஞானத்தினின்றுண்டாகிய விருத்தியால் பிரஹ்ம சுகத்தை யனுபவிக்கின்றான்."

"எது முன் விஞ்ஞான மய முதலிய ஆகாரங்களோடு கூடியதாயிருந்ததோ அதுவே யிப்போது இலயத்தினால் பல அரிசியாலாய மாவைப் போல ஒருமையை யடைந்திருக்கின்றது." ......"முன் பிரஞ்ஞான வடிவமாயிருந்த புத்தி விருத்திகளெவையோ அவை பின் கன வடிவமாகின்றன." "எப்படி ஜலத்தோடு கூடிய தேகத்தில் பனித் துளிகளின் கனவடிவத் (ஒரு வடிவத்) தன்மை யுண்டாகின்றதோ அப்படியாம்."......"ஆநந்தத்தின் போஜனத்தில் அஞ்ஞானத்தில் பிரதிபிம்பித்த சேதனம் முக (சாதன)மாகின்றது." "பின் புசிக்கின்ற பிரஹ்ம சுகத்தை விட்டுக் கர்மத்தால் வெளியிற் செல்லுகின்றது."......

"சுழுத்தியி லெந்த ஆநந்தமய னிருக்கின்றானோ அவன் விஞ்ஞானமய வடிவத் தன்மையடைந்து, ஸ்தானபேதத்தால் சொப்பனத்தையாவது ஜாக்கிரத்தையாவ தடைகின்றான்" என்று பஞ்சதசி யோகாநந்தப் பிரகரணங் கூறுவதினு ணர்தற் பாலதாம்.

† "ஜீவனும் தன்னுடைய வுபாதியி னவாந்தர பேதத்தால் விசுவன், தைசசன், பிராஞ்ஞனென மூவகையாவன்; அவற்றுள், அவித்தை - அந்தக்காரணம் - ஸ்தூலசரீர மிவற்றோடு கூடியுள்ள ஜாக்கிராவஸ்தாபிமானி விசுவனும்; அவனே ஸ்தூல சரீர அபிமானமற்று மற்ற விரண்டு உபாதியோடு

128. ஒன்றுகியபிர மாநந் தச்சுக மொழிவா னேன்வெளி வருவா
னேன், என்றன் முன்செய்த கருமம் வெளியினி லிழுக்குஞ்
சுழுத்திவிட் டெழுந்தோனும், நன்று யினசுக மகலான் வெளி
யிலு நடவான் மறதியும் பெறமாட்டான், அன்று மெனவிருந்
துறங்குஞ் சிலகண மதுவே வாதனை யாநந்தம்.

---

சீடன், சுழுத்தியின்கண் பிரஹ்மாநந்தத்தை யனுபவிக்கும் ஆநந்தமயன்
அதனைவிட்டுத் துக்கமயமான ஜாக்கிரத்திற்கு வருதலே னென்று
வினவுதலும் அதற்குக் குரு விடை கூறுதல் வாயிலாக
வாசநாநந்தத்தி னியல்பு கூறுதலும்.

3. வாசநாநந்தம்.

சீ—வினா:—ஐயனே! ஆநந்தமயன், நிரதிசய (பேதமற்ற) பிரஹ்மாநந்தத்தை யனுபவியா தொழிதற்குக் காரணம் யாது? சாக்கிரத்தில் வருதற்குக் காரணம் யாது? அக்காரணத்தைக் கூறியருளல் வேண்டும்.

கு—விடை:—அன்பனே! † ஜீவன் பூர்வஞ்செய்த அறம்பாவமென்னுங் கயிற்றால் கட்டுண்டிருத்தலின், அக்கயிறு சுழுத்தியின்கண் பிரஹ்மா

---

கூடியிருப்பின் சொப்பனாபிமானியான தைசசனும்; சரீரம் அந்தக்கரணமென்னுமிரண்டு உபாதியற்றவனும் அந்தக்கரண சம்ஸ்காரத்துடன் கூடின அவித்தியாமாத்திர வுபாதியுற்றவனுமுள்ள சுழுப்தியபிமானி பிராஞ்ஞனும். இவர்கட்குச் சுதந்தரமான வுபாதி பேத மிராமையால், சுதந்தரமான பேதமில்லாவிடினும், அவாந்தரமான உபாதிக்குப் பேதமிருப்பதால், அவாந்தரமான பேதம் சொல்லப்படுகின்றது." என்று சித்தாந்தபிந்து கூறுகின்றதிங் குணர்தற்பாலதாம்.

†"எந்தக் கருமம் ஜன்மாந்தரத்திலிருந்ததோ அதன்யோகமாகிய சேர்க்கையால் மறுபடியும் விழிக்கின்றான்." "ஜாக்கிரமடைந்த புருஷனுக்குச் சிறிது காலபரியந்தம் பிரஹ்மாநந்தத்தின் வாசனை தொடர்கின்றது." "எதனால் விஷயமில்லாத புருஷனும் சுகியாய்ச் சும்மாவிருக்கின்றானோ (அதனாலது அறியப்படுகின்றது)." கர்மங்களால் பிரேரிக்கப்பட்ட இவ்வெல்லாரும் பின் நாநாவிதமான துக்கங்களைப் பாவிக்கின்றவராய்ச் சிறிது காலம் பிரஹ்மாநந்தத்தை மறந்துவிடுகின்றனர்." "தினந்தோறும் நரர்க்கு நித்திரைக்கு முன்னும் பின்னும் பிரஹ்மாநந்தத்தில் பட்சபாதமென்னும் சிநேகமுண்டு; அதனுவிதி லெந்தப் பண்டிதன் விவாதஞ் செய்வான்?" ...... "இப்பிரசங்கத்தால் கிடைத்த பொருளிருக்கட்டும். எங்கெங்கு விஷயங்களின்றிச் சுகமுண்டாகின்றதோ அங்கங்குப் பிரஹ்மாநந்தத்தின் வாசனையை யறிக." என்று பஞ்சதசி யோகாநந்தப் பிரகரணத்திற் கூறுவதிங் கறிதற் பாற்றும்.



129. அந்தக் கணமுட லகமேன் றிடர்களி லலேந்தே சுகந்தனை மறந்
தேபோம், முந்தைச் செயும்வினை சுகதுக் கந்தரு மோனம் முறு
நடு வடிவிற்காண், எந்தப் புருடனு மொருசிந் தையுமற விருந்
தே னெனலநு பவமாகும், இந்தப் படிதனு தாசீ னச்சுக மிது
வே நிசமெனு மாநந்தம்.

---

நந்தத்தை அனுபவியாவண்ணஞ் செய்து அவனைச் சாக்கிரத்திற் கிழுக்கின்றது. இதுதான் ஆநந்தமயன் பிரஹ்மாநந்தத்தை யனுபவித்தலை விட்டு வெளிப்படுதற்குக் காரணமாம். இதனாற்றான் சுழுத்தியினின்றும் நீங்கி ஜாக்கிரத்தை யடைந்த ஒவ்வொரு புருஷனும் சிறிதுபொழுது சுழுத்தியிலனுபவித்த பிரஹ்மாநந்தத்தின் வாசனை நீங்காதிருக்கின்றான்; இவ்வாறிருத்தலாற்றான், புறத்துச் செல்லாதவனும் அகத்தே யனுபவித்த ஆநந்தத்தை மறவாதவனும் இருக்கின்றான். இவ்வாறு புருஷன் சுழுத்தியுமன்று சுழுத்தியாம்; சாக்கிரமுமன்று சாக்கிரமாமெனச் சிறிது பொழுதிருந் துறங்குகின்றான்; அவ்வாறுறங்கும்போது தோன்றும் ஆநந்தமே § வாசநாநந்தமாம். 128

4. நிஜாநந்தம்.

(ஜீவனைச் சுழுத்தியினின்றும் ஜாக்கிரத்திற்கிழுத்த பூர்வகர்மம்அவ்வாறு வாசநாநந்தத்தோ டிருக்க வொட்டாது செய்ய) அப்பொழுதே அவன் தேகமே நானென் றதிலபிமான முற்றுப் பல திறத்தனவாயுள்ள துக்கங்களி லுழன்று அதனால் சுழுத்தியி லனுபவித்த பிரஹ்மாநந்தத்தை மறந்துவிடுகின்றான். அதனால்,அவன் பூர்வஞ் செய்துள்ள அறம் பாவங்கள்(நல்வினை தீவினைகள்) முறையே அவனுக்குச் சுகத்தையுந் துக்கத்தையுந் தருகின்றன. இச்சுகதுக்கங்களின் மத்தியில் (சந்தியில்) (சும்மாவிருக்கும் நிலையென்னும்) உதாசீனத் தன்மை (இயல்பாக) உண்டாகின்றது. இப்படிப்பட்டதோ ரவஸ்தையுண்டென்பதற்கு எப்படிப்பட்ட புருஷனும் நான் யாதொரு சிந்தையுமின்றிச் சுகமாயிருந்தேனென்று கூறுதலே அனுபவமாம். இவ்வாறுள்ள † உதாசீனகாலத்திற் றோன்றும் ஆநந்தமே நிஜாநந்தமாம். 129

---

§ நித்திரையினின்றும் விழித்தபோது மயக்க முடைய சுழுத்தியிலனுபவித்த பிரஹ்மாநந்தத்தின் வாசனையைச் சொற்பகால மனுபவிக்கு மாநந்தம் வாசநாநந்தமாம்.

† சுகத்தை நல்வினையும் துக்கத்தைத் தீவினையும் தருகின்றன; உதாசீனத்தன்மை எந்தவினையாலு முண்டாவதன்றாம்; ஆனால், சுகதுக்கங்களின் சந்தியில் இயல்பாக வுண்டாவதாம். அவ்வுதாசீன காலத்திற் றோன்றும் ஆநந்தம் வாசநாநந்தமா மென்றுணர்க.

130. நிசமா னதுமுக் கியமோ குடத்துள நீரன் றேவெளி யீரந்தான் வசமா வகங்கர மறைந்தா னிசமது படிந்தான் முக்கிய வகை யாகும், திசையார் திரிசய மறியா தேதுயில் செறியா தேயுட றறி போல, அசையா தேமதி சமமா கியநிலை யதுதான் முக்கிய வாநந்தம்.

---

உதாசீன காலத்தில் விளங்கும் ஆநந்தம் யானிருக்கிறேனென்னும் சாமானிய அகங்காரத்தால் மறைவுற்றிருந்தலின் பிரஹ்மாநந்தவடிவ மன்றென்று முக்கியாநந்தத்தி னியல்பு கூறல்.

5. முக்கியாநந்தம்.

‡ நானிருக்கிறே னென்னும் சாமானிய அகங்காரத்தின் வசமாய்ப்

---

“(சுழுத்தியினின்றும் விழித்துக் கொண்ட) இச்சீவன் நான் உதாசீனன், சுகி, துக்கி யென்னு மூன்றவஸ்தையை யடைகின்றான்.” “சுக துக்கமிரண்டும் புண்ணிய பாவ வடிவக் கருமங்களின் காரியமாம்; உதாசீனத் தன்மையோ வியல்பாக வுண்டாகின்றது.” “வெளிப் போகத்தினாலும் மனோ ராஜ்யத்தினாலும் சுக துக்கங்க ளிரண்டிரண்டு வகையாகக் கொள்ளப்பட்டிருக்கின்றன.” “சுகதுக்கங்களினிடையில் (சந்தியில்) சும்மாவிருக்கும் நிலையென்னும் உதாசீனத்தன்மை யுண்டாகின்றது.” “யாவரும் இப்போது எனக்கு ஒருசிந்தனையுமில்லை; ஆதலால், நான் சுகமாயிருக்கின்றேனென்று கூறுகின்றவராய் உதாசீனத் தன்மையில் நிஜாநந்தத்தின் தன்மையினைக் கூறுகின்றனர்” என்று பஞ்சதசி யோகாநந்தப் பிரகரணங் கூறுவதிங் குணர்தற்பாற்றும்.

‡ “நானிருக்கின்றே னென்னு மகங்காரத்தின் சமான(சூட்சும)த் தன்மையால் மறைக்கப்பட்டிருத்தலால் இது (நிஜாநந்தம்) முக்கிய நிசாநந்தமன்று; ஆனால், இது அந்நிஜாநந்தத்தின் வாசனையாம். ஜலம் நிரம்பிய கடத்தினது வெளியிலுள்ள குளிர்ச்சி யெதுவோ அது ஜலமன்று; ஆனாலது நீரின் குணமாம். அச்சீதளத் தன்மை வடிவக் காரணத்தால் ஜலத்தின் சத்தை (ஜலம் கடத்திலிருத்தல்) அனுமானத்தா லறியப்படுகின்றது. அப்பியாச யோகத்தால் எவ்வளவு எவ்வளவு அகங்காரம் மறக்கப்படுகின்றதோ அவ்வளவு அவ்வளவு சூட்சுமதிருஷ்டியுடைய புருஷனுக்கு நிஜாநந்தத்தின் அனுமானமுண்டாகின்றது; முற்றும் மறக்கப்பட்டதாய் அகங்காரம் மிக்க சூட்சுமத்தன்மையை யடைகின்றது; ஒடுக்க மின்றியதாயிருத்தலின்,இது நித்திரையன்று; அதனால்,தேகமும் விழுகின்றதில்லை. எங்குத் துவைதம் தோற்றவில்லையோ, நித்திரையுமில்லையோ அங்கு எச்சுகமுளதோ அது பிரஹ்மாநந்தமாம்.” என்று பஞ்சதசி யோகாநந்தப் பிரகரணத்தில் கூறுவதிங் கூன்றியுணர்தற்பாலதாம்.

தியான - யோக - சமாதிகளி னப்பியாச மிகுதியால் மனோலயமான விடத்து மறைப்பின்றி விளங்கும் ஆநந்தம் முக்கியாநந்தமா மென்றுணர்க.



131. மனுடன் மனுடகந் தருவன் றேவநன் மாகந் தருவனேண் பிதி ரோடே, பனுமா சானர்கள் கருமத் தேவர்கள் பகர்முக் கியரிந் திரனுசான், கனமார் பிரசா பதியேன் விராட்டுப்போன் கர்ப்பப் பிரமனேன் றின்னோர்கள், பினவா நந்தங்க ளுரையாம் பிரளய வெள்ளக் கடல்பிர மாநந்தம்.

---

பிரஹ்மாநந்தம் மறைவுற்றால், § அவ்வுதாசீன காலத்தில் விளங்கும் ஆநந்தம் நிஜாநந்த வாசனையாம்; அதனால், அந்த நிஜாநந்த வாசனை முக்கிய நிஜாநந்த மன்றும். முக்கியாநந்தத்தினும் வேறாக வாசநாநந்த முண்டேன்பதற்குத் திருஷ்டாந்தம். ஜலம் நிரம்பிய குடத்தின் புறத்திலுள்ள குளிர்ச்சி அக்குடத்தினது ஜலமாகாமை போலவாம். அவ்வகங்காரம் (சஞ்சலமற் றகண்டபூரணமாய்ச் சித்தந் ததாகார மாவதேன்னும்) சமாதி யோகாப்பியாசத்தால் நிரோதமானால் முக்கிய நிஜாநந்தம் ஆவிர்ப்பாவமாம். அகங்காரமானது திருசியங்களை மறந்து நித்திரையை யடையாமல் சரீரம் ஸ்தம்பம்போ லசையாதிருக்கப் பிரஹ்மாகாரமான ஸ்திதியே முக்கிய நிஜாநந்தமாம். 130

முக்கியாநந்தத்தின் மகிமையைக் கூறல்.

† (1) மனுடன் (சார்வபௌமன்), (2) மனுடகந்தருவன், (3) தேவ கந்தருவன், (4) பிதிரர், (5) அஜான தேவர், (6) கருமத்தேவர்,

---

§ சுழுத்தியவஸ்தையினின்று மெழுந்தகாலத்துச் சுகதுக்கங்களினபாவமிருக்கின்றது. அதனாலது உதாசீனகாலமாம். இவ்வாறே சாக்கிராவஸ்தையில் சுகதுக்கங்களின் அபாவமுள்ள காலம் வாய்க்குமாயின், அக்காலமும் உதாசீன காலமாம். சுகமுள்ளபோது ராகமும், துக்கமுள்ளபோது துவேஷமு முண்டாவனவாம். அதனால், சுகதுக்கவடிவ நிமித்தத்தாற் றோன்றும் ராகத்துவேஷங்களி னின்மைக்காலம் உதாசீன காலமாம். இவ்வாறுள்ள காலம் உதாசீன தசையென்றும், தூஷ்ணீம் ஸ்திதியென்றும், சும்மாவிருக்கும் நிலையென்றும் சொல்லப்படும்.

† (1) யௌவனனாய், ரூபவானாய், வித்தை, அரோகம், திடசித்தமென் பவற்றை யுடையவனாய், சேனை சமுகங்களுடன் கூடிச் சர்வப் பிருதிவியையும் பரிபாலனஞ் செய்பவன் சார்வபௌமனாவன். மனித சுகத்திற்கு முடிவு இவனிடத்தேயாம்.

(2) இந்தக் கற்பத்திலே மனிதனா யிருந்து புண்ணிய விசேஷத்தால் கந்தர்வபத மடைந்தவன் மனுட கந்தருவனாவன். இவன் சார்வபௌமனிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவ னாவன்.

(3) முன் கற்பத்திற்செய்த புண்ணிய விசேஷத்தால் இக்கற்பத்தி னாதியிலேயே கந்தர்வத் தன்மையடைந்தவன் தேவ கந்தருவனாவன். இவன் மனுட கந்தருவனிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவ னாவன்.

(7) முக்கிய தேவர், (8) இந்திரன், (9) பிருகஸ்பதி, (10) பிரஜாபதி யேன்னும் விராட்டு, (11) இரணியகருப்பனேன்னும் பிரமன் என்று தைத்திரீயோபநிஷத்துக் கூறும் இப்பதினேருவாது பின்னமான (உத்தரோத்தரம் நூறு நூறு பங்கு அதிகமாவுள்ள) ஆநந்தங்கள் நுரை, திரை போல்வனவாம்; பிரஹ்மாநந்தம் பிரளயகாலத்துப் பெருங்கடல் போல்வதாம். 131

---

*(4) தமதுலகின்கண் வெகுகாலவளவு வசிக்கின்ற அக்கினிஷ்வாத்தர் முதலியோர் பிதிராவர். இவர் தேவ கந்தருவனிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவ ராவர்.*

*(5) கற்பத்தி னாதியிலேயே தேவத்தன்மையை யடைந்தவர் ஆஜான தேவராவர். இவர் பிதிரரிலும் நூறுபங் கதிகமான சுக முடையவ ராவர்.*

*(6) இந்தக் கற்பத்தில் அசுவமேதாதி கருமங்களைச் செய்து, மகத் பதத்தை யடைந்து, ஆஜான தேவரால் சேவிக்கப்பட்டிருப்பவர் கரும தேவராவர். இவர் ஆஜான தேவரிலும் நூறுபங்கதிகமான சுக முடையவ ராவர்.*

*(7) அஷ்டவசுக்கள், துவாதசாதித்தியர், ஏகாதச ருத்திர ரென்னு மிம் முப்பத்தொருவரும் முக்கிய தேவராவர். இவர் கரும தேவரிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவ ராவர்.*

*(8) தேவராஜன் - இந்திரன். இவன் முக்கியதேவரிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவ னாவன்.*

*(9) தேவகுரு - பிருகஸ்பதி. இவர் இந்திரனிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவ ராவர்.*

*(10) பிரஜாபதி - விராட்டு. இவர் பிருகஸ்பதியிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவ ராவர்.*

*(11) இரணியகருப்பன் - பிரமதேவர். இவர் பிரஜாபதியிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவ ராவர்.*

*பகவத்கீதை "ஸ்நானபான முதலிய காரியங்கட்குச் சிறிது நீருள்ள கிணறு முதலியவற்றி லெவ்வளவு பயனுமோ அவ்வளவு பயனும் நாநாப்பக்கத்திலும் வந்து சேருகின்ற விரிவாய நீருள்ள ஏரியிலுண்டாவதுபோல, வேதோக்தமான சர்வ கருமத்திலேயு மெவ்வளவு பயனுமோ அவ்வளவு பயனும் ஆத்மதத்துவ ஸ்வரூப நிச்சயமுள்ள பிரஹ்ம நிஷ்டனுக் குண்டாகின்றது" என்று 2-வதத்தியாயத்திற் கூறுவதும், விசாரசாகரம் 5-வது தரங்கத்தில் 11-ஆநந்தங் கூறுமிடத்து, "அரசன் முதலாகப் பிரமனீருயுள்ளவாதுசுகத்தை ஏகாந்த வாசியாயும், இருதயத்திற் காமத்தை யெரித்தவனுயுமுள்ளவ னெப்போது மடைவான்" என்று கூறுவதும், திருப்போரூர்ச் சந்நிதிமுறை "மன்ன ராவா ருறுசுகமும் வானோர் மகிழ்ந்து பெறுசுகமும் மணிப்பை நாகத் தவர்சுகமு மற்றை யோர்க ளடைசுகமும், பன்னு மிடத்திச் சிவத்தெழுந்த பரமா நந்த லேசமெனப் பகர்ந்தாய்" என்று கூறுவதி மிங்குணர்தற்பாலனவாம்.*



132. எவனு கிலுமிந்தத் துரியா தீதத்தி லேழாம் பூமியி லிருந்தானேல்,
அவனு ரதன்சுகன் சிவன்மா லயன்முத லறிவோ ரநுபவ சுக
போதன், விவகா ரதிர்சய மிதுவே யநுபவ மேனமுன் சொல்லிய
விவகாரி, உவமா னமுமறி மகனே யவனடி யுதிரும் பொடிக
ளேன் முடிமேலே.

133. இந்தவா றைந்துசுகஞ் சொல்லினேம் வித்தைசுக மினிமேற்
சொல்வோம், முந்தமா யையுஞ்சச்சி தாநந்தப் பொருளுமே
மொழியும் போதில், அந்தமா மத்துவித சுகமான்ம சுகமிரண்டு
மங்கே சொன்னேம், தொந்தமாற் றியமகனே யின்னமுனக்
கையமுண்டேற் சொல்லு வாயே.

---

முக்கியாநந்த மடைந்தோனைத் துதித்தல்.

அன்புள்ள மைந்தனே! $ ஒருவன் வருணச்சிரமங்களின் அபேட்சையுடையார், அபேட்சை யில்லா ரென்பவருள் யாவனு யிருப்பினும், இத்துரியாதீத மென்னும் ஏழாவது பூமியி லிருப்பானுயின், அவன் நாரதன், சுகன், சிவன், திருமால், பிரஹ்மன் முதலிய அறிஞரது அனுபவமாகிய அறிவாநந்த வடிவமாவன். திருசிய வியவகாரமற்று உறக்கமின்றி அறிவாநந்தவடிவமாயிருக்கு மிந்நிலையே முக்கிய நிஜாநந்தானுபவமா மென்று முற்கூறிய முக்கிய நிஜாநந்தானுபவித்து நாரதன் - சுகன் முதலியவரே உவமானமு மாவரென்ப தறியக்கடவாய். * அந்தப் பரமபுருஷனது திருவடிகளி னின்று முதிர்கின்ற தூளிகள் என் சிரசின்மீது தரிக்கத்தக்கனவாம். 132

குரு சீடனை நோக்கி இன்னுமுனக்கைய முளதாயின், அதனை நீ வினவக்கடவா யெனல்.

விருப்பு வெறுப்பு, நல்வினை தீவினை, பிறப்பிறப்பு என்றற் றொடக்கத்துத் துவந்துவங் (இருமை)களைத் தானறிவாநந்த வடிவமாக விளங்கு

---

*$ "கோதில்கதை முதன்மொழியாற் குச்சரிய நாட்டிற் கோவதைசெய் சக்கிலியன் குறைகடவிர்ந் தடைந்தான், நீதியிரண் டாமொழியாற் கர்ப்பிணியே குருவாய் நிசிசான்றன் பவமகற்ற நேர்மையில்வீ டடைந்தான், சோதிசெய்மூன் ருமொழியா லஞ்ஞானச் சுதராற் றுன்புறுவே டுவச்சிபரசுகமடைந்தா ளிவையே, யோதியநா லாமொழியா லந்தணன்செய் வினையாலுதவியிலாப் புசிப்புதவி யுயர்ந்தடையுங் கதையே" என்று மகாவாக்கியங் கூறுவதறிக.*

** "கன்றுத வின்றி யாறிக் கழிந்தகா மத்த னாகி, யென்றவெவ் வுயிருந் தன்னை யொக்கவே யுணரு ஞானி, சென்றதோர் நெறியிற் செல்வன் சென்னிமே லவன்காற் றூளி, துன்றுமேற் சுத்த னாவே னெனுமிது துணிவிற் கொண்டேன்" என்று பெருந்திரட்டுக் கூறுவதிங் குணர்தற்பாற்றும்.*

மனுபவத்தால் கெடுத்த மைந்தனே! இவ்வாறாக (1) விஷயாநந்தம், (2) பிரஹ்மாநந்தம், (3) வாசநாநந்தம், (4) நிசாநந்தம், (5) முக்கியாநந்தமென்னும் ஐவகை யாநந்தங்களின் சொருபத்தைக் கூறினும்; இனிமேல் (6) வித்தியாநந்தத்தின் சொருபத்தைக் கூறுவோம்; முன்னர் மாயையி னிலக்கணமும் சச்சிதாநந்தப் பதங்கட் கருத்தமுங் கூறியபோது (7) அத்துவிதாநந்தம் (8) ¶ ஆன்மாநந்த மென்னு மிரண்டன் சொருபத்தையும் கூறினேம். இன்னு மனக் கையமிருக்குமாயின், அதனை நீ வினவக்கடவாய். 133

¶ "ஆத்மாவின் சம்பந்தமுடைய வஸ்துக்களில் பிரியமுண்டாகின்றது; அவற்றினும் சமீபத்திருப்பனவற்றி லதிகப்பிரியமுண்டாகின்றது. இவ்வாறு புறத்தேயுள்ள பதார்த்தங்களை யபேட்சித்து அகத்தேயுள்ள பதார்த்தங்களி லதிகப் பிரியமுண்டாகின்றது. பரம்பரையாக ஆத்மாவின் சம்பந்தியான புத்திரனது மித்திரனிடத்துப் பிரியமுண்டாகின்றது; புத்திரனது மித்திரனை யபேட்சித்துப் புத்திரனிடத்து அதிகப் பிரியமுண்டாகின்றது; புத்திரனிலும் ஸ்தூல சூட்சும சரீரங்களி லதிகப் பிரியமிருக்கின்றது; அவற்றினும் ஸ்தூலத்தினும் சூட்சுமத்தி லதிகப் பிரிய மிருக்கின்றது. முன்முன் கூறப்பட்டனவற்றிலும் பின்பின் கூறப்பட்டவை ஆத்மாவிற்கு அதிக சமீபமானவையாம்.

ஆத்மாவின் ஆபாசம் (பிரதிபிம்பம்) சூட்சும சரீரத்தி லிருக்கின்றது; வேறொன்றி லில்லை. ஆதலால், ஆபாச வாயிலாக ஆத்மாவிற்குச் சூட்சும சரீரத்தோடு சம்பந்தமிருக்கின்றது; பிறிதொன்றனோ டில்லை; ஸ்தூல சரீரத்தோடு சூட்சும சரீரத்திற்குச் சம்பந்த மிருக்கின்றது. ஆதலால், சூட்சும சரீரவாயிலாக ஸ்தூல சரீரத்தோடு ஆத்மாவிற்குச் சம்பந்த மிருக்கின்றது; ஸ்தூல சரீரவாயிலாகப் புத்திரனோடு சம்பந்தமிருக்கின்றது; புத்திரன் வாயிலாக அவன் மித்திரனோடு சம்பந்தமுண்டாகின்றது. இவ்வாறு பின்பினுள்ள ஆத்மாவைச் சமீபித்தவை யெவையோ அவற்றி லதிகப் பிரியமுண்டாகின்றது. எந்த ஆத்மசம்பந்தத்தால் பதார்த்தங்களில் பிரியமுண்டாகின்றதோ அந்த ஆத்மாவிலேயே முக்கியப் பிரிய மிருக்கின்றது; பதார்த்தங்களிலில்லை. எப்படி புத்திரனது மித்திரனிடத்துப் புத்திர சம்பந்தத்தால் பிரியமுண்டாகின்றதோ, அதனால் புத்திரனிடத்திலேயே பிரிய மிருக்கின்றதோ, புத்திரனது மித்திரனிடத் தில்லையோ அப்படியே ஆத்மாவிற்கு மிகச்சமீபத்திலுள்ளவற்றில் அதிகப் பிரியமுண்டாகின்றது. அதனால், ஆத்மாவினிடத்தினிலேயே யாவர்க்கும் பிரியமிருக்கின்றது. அந்தப் பிரியம் ஆநந்தத்திலும் துக்காபாவத்திலு முண்டாகின்றது; மற்றொன்றி லுண்டாவதில்லை. மற்றப் பதார்த்தங்களி லுண்டாகின்ற பிரியம் ஆநந்தத்தின்பொருட்டும் துக்காபாவத்தின் பொருட்டுமாம். ஆதலால், ஆநந்தம் துக்காபாவ மென்பவற்றினும் வேறாய தொன்றிற் பிரியமுண்டாகின்ற



134. குகன்றனையு மெனையுமுல கினையுமீன் றளித்தருளுங் குருவே
கேளீர், புகன்ற சச்சி தாநந்தப் பதங்கடனித் தனியாகிப் பொரு
ள்வே றுறுனல், உகண்டமன முறைப்ப தெங்ஙன் பரியாய பதங்
களைப்போ லுறவு காணேன், அகண்டமா யொருசுவையாய்த்
தேனீக்கூட் டியமதுவா யறிவிப் பீரே.

சீடன், சச்சிதாநந்தப் பதங்களின் அருத்தம் பின்னமன்றென்னு
மனுபவ முறைக்குமா றுபதேசிக்க வேண்டு
மென்று வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினு:— § சுப்பிரமணியக் கடவுளையும், என்னையும் † உலகத்தையும் (சக ஜீவ பரமென்னும் மூன்றையும்) படைத் திரட்சிக்குங் குருமூர்த்தியே! அடியேன் வினவுவதைக் கருணை கூர்ந்து கேட்டருளல் வேண்டும். ("சச்சிதா நந்தச் சுபா வங்கள் ஆன்மாவின் வடிவு" என்று தேவரீர்) முற்கூறிய ‡ சத்து, சித்து, ஆநந்தமென்னும் பதங்கள் கடம் பட மென்னும் பதங்கள் போல

தில்லை. ஆகையால், எல்லாது பிரியத்திற்கும் விஷயமாயுள்ள ஆத்மா ஆநந்த ரூபமாம். துக்கத்தினபாவம் ஆத்ம வடிவமாம். கற்பிதத்தினபாவம் அதிஷ்டான வடிவமாம்; அது சர்ப்பத்தின் அபாவம் ரச்சுவின் வடிவமாயிருப்பதுபோலவாம். ஆதலால், கற்பிதமான துக்கத்தினபாவமும் ஆத்மரூபமேயாம். இவ்விதத்தால், ஆத்மா ஆநந்தரூபமாம்" என்று விசாரசாகரம் ஆறாவது தரங்கத்திற் கூறுவதால் ஆத்மா ஆநந்த வடிவமென்ப தினிது விளங்குவதாம்.

வித்தியாநந்தம் இப்படலத்தின் 164......177 வது செய்யுட்களிலும், அத்துவிதாநந்தம் 95......106-வது செய்யுட்களிலும், ஆத்மாநந்தம் 114......120-வது செய்யுட்களிலும் கூறப்பட்டிருத்தலறிக.

§ குருவைச் சிவமாகக் கருதுதல் வேண்டுமென்ப துணர்த்த இவ்வாறு கூறப்பட்டது. திருமந்திரம் "குருவே சிவமெனக் கூறினன் நந்தி, குருவே சிவமென் பதுகுறித் தோரார், குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும், குருவே யுரையுணர் வற்றதோர் கோவே." என்று கூறுவதறிக.

† "நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும், கலந்த மயக்க முலகம்" என்பது தொல்காப்பியம்.

‡ எஞ்ஞான்றும் நிவிர்த்தியின்றி யிருத்தலின் சத்தெனவும், ஜடத்திற்கு வேறாய்ப் பிரகாசவடிவமா யிருத்தலின் சித்தெனவும், துக்கத்திற்கு வேறாய் முக்கியப் பிரீதிக்கு விஷயமா யிருத்தலின் ஆநந்தமெனவும், ஆன்மா கூறப்படுகின்றதென்க.

135. குளிரிளகல் வெண்மையென்ற பதங்களினு னீர்மூன்று கூறு
யிற்றே, ஒளிதவனஞ் செம்மை யென்ற பதங்களா லக்கினியு
மோருமூன் றமோ, வெளிமுதலாஞ் சகமசத்து மூடமிட ரெனப்
பிரித்து விலக்கி வேதம், எளிதறிய முரண்மொழிந்த சத்தாதி
யெனும்பிரம மேகந் தானே.

---

வெவ்வேறாகி தம்முள் அருத்தபேத முடையனவா யிருக்குமாயின், ஒரு விஷயத்தினின்றும் மற்றொரு விஷயத்திற் றாவிச் சென்று கலங்கும் என்மனமானது ஆன்ம சொரூபத்தில் பிறழா திருத்தல் எங்ஙனமாம்? (யானையென்னு மொரு பொருளைத் தெரிவிக்கும் அத்தி, அறுகு, ஆம்பல், இபம் என்றற்றொடக்கத்துப்) ¶ பரியாய பதங்களைப்போல அவை ஏகார்த்தத்தைப் போதிப்பனவா மென்பதை யானறியாதிருக்கின்றேன்; ஆதலால், அவற்றி னர்த்தங்களைத் தேனீக்கள் ஒன்றாகவும் ஒரு சுவையுடையதாகவும் பல பூவினின்று மெடுத்துச் சேர்த்த தேனைப் போல அறிவித்தருளல் வேண்டும். 134

குரு—விடை:—அன்பனே! எங்ஙனம் $ குளிர்ச்சி - நெகிழ்ச்சி - வெண்மை யென்று பிரயோகிக்கும் பதங்களால் நீர் மூன்று கூறாகவும், பிரகாசம் - உஷ்ணம் - சிகப்பென்று பிரயோகிக்கும் பதங்களால் அக்கினி மூன்று கூறாகவு மாவதில்லையோ, அங்ஙனமே சத்து-சித்து-ஆநந்தமென்று பிரயோகிக்கும் பதங்களால் ஆத்மாவும் மூன்று கூறாவதில்லையாம். † வான், வளி, தீ, நீர், மண் மயமான உலகம் கயிற்றின்கண் அரவுபோல ஆத்மாவின்கண் அத்தியாசமா யிருத்தலால், அதனை அசத்து ஜட துக்க வடிவ மெனப் பிரித் தொழித்து, ஆத்மாவை எளிதாக வறிதற்பொருட்டு, அவ் வசத்து முதலியவற்றிற்கு மாறாகச் சுருதி கூறிய சச்சிதாநந்த வடிவப் § பிரஹ்மம் ஏகமேயாம். 135

¶ ஒரு சொல்லின் பொருளைக் குறிக்கும் மற்றொரு சொல் பரியாய பத மெனப்படும்.

$ நீர்: குளிர்ச்சி-நெகிழ்ச்சி-வெண்மை வடிவாகவும்; அக்கினி: பிரகாச-உஷ்ண - சிகப்பு வடிவாகவு மிருத்தல்போலப் பிரத்தியகபின்ன பிரஹ்மமும் சத்து-சித்து-ஆநந்த வடிவமாக விருக்கின்றதென்றவாறாம்.

† பஞ்சபூத மயமான வுலகம் அசத்து ஜட துக்க வடிவமாமெனக் கூறப்பட்டதாயினும், இனம்பற்றி அதன் காரணமாகிய மாயையும் அசத்து ஜட துக்க வடிவமாமெனக் கொள்க. "அண்டபகி ரண்டமு மாயாவி காரமே யம் மாயை யில்லாமையே யாம்" என்று தாயுமானவர் கூறுவதிங் குணர்தற் பாலதாம்.



136. நித்தியம்பூ ரணமேகம் பரமார்த்தம் பரப்பிரம நிதாநஞ் சாந்
தம், சத்தியங்கே வலந்துரியஞ் சமந்திருக்குக் கூடத்தன் சாட்
சி போதம், சுத்தமிலக் கியஞ்சநா தநஞ்சீவன் தத்துவம்விண்
சோதி யான்மா, முத்தம்விபு சூக்குமமேன் றிவ்வண்ணம் விதி
குணங்கண் மொழியும் வேதம்.

---

சச்சிதாநந்தங்கள் தம்முள் வேறுபாடுடையன வன்றென்பது
உறுதிப்படற் பொருட்டு ஆத்மாவின் † விதிமுக விசேஷணங்களையும்,
மறைமுக விசேஷணங்களையும் கூறல்.

நித்தியம், பூரணம், ஏகம், பாமார்த்தம், பரப்பிரஹ்மம், நிதாநம், சாந்தம், சத்தியம், கேவலம், துரியம், சமம், திருக்கு, கூடத்தன், சாட்சி, போதம், சுத்தம், இலக்கியம், சநாதநம், ஜீவன், தத்துவம், விண், சோதி, ஆன்மா, முத்தம், விபு, சூக்கும மென்றிவ்வாறு ‡ விதிகுண (ஆத்மாவின் விதிமுக விசேஷண)ங்களை வேதம் கூறும்; 136

§ எங்ஙனம் ஒருவன் பிதாவினது நோக்கத்தால் புத்திரனென்றும், பாட்டனது நோக்கத்தால் பேரனென்றும், மாமனது நோக்கத்தால் மருமகனென்றும் சொல்லப்படுகின்றானோ, அங்ஙனமே ஆத்மாவும் மாயாப்பிரபஞ்சத்தின் அசத்தினது நோக்கத்தால் சத்தென்றும், சடத்தினது நோக்கத்தால் சித்தென்றும், துக்கத்தினது நோக்கத்தால் ஆநந்தமென்றும் சொல்லப்படுகின்றதென்பதிங் குணர்தற்பாலதாம்.

† ஒன்றை மற்றவற்றினின்றும் வேறுபிரித் தறிவிப்பதற் கேதுவாயிருப்பது விசேஷண மெனப்படும். உடன்பாட்டு வாயிலாகக் கூறும் விசேஷணம் விதிமுக விசேஷண மென்றும், எதிர்மறை வாயிலாகக் கூறும் விசேஷணம் மறைமுக விசேஷண மென்றும் சொல்லப்படும்.

‡ இவ்வாறு விதிமுக விசேஷணங்கள் கூறப்பட்டன வாயினும் இனம்பற்றிப் புத்தன் (பிரகாசஞ் செய்வோன்), சர்வஞ்ஞன், சம்பு, சர்வாதாரன், க்ஷேத்திரக்ஞன் (அதிஷ்டான வடிவன்), பிரத்தியக்கு (யாவற்றினு முள்ளாயிருப்பது), அபரோட்சன் (பிரத்தியட்சமா யிருப்பவன்) என்றற்றொடக்கத்தனவற்றையுங் கொள்க.

137. அசலநிரஞ் சநமமிர்த மப்பிரமே யம்விமலம் வசநா தீதம், அச
டமநா மயமசங்க மதுலநிரந் தரமகோ சரம கண்டம், அசமநந்த
மவிநாசி நிர்க்குணநிட் களநிரவ யவம நாதி, அசரீர மவிகார
மத்துவித மேனவிலக்கா மநேக முண்டே.

---

இங்ஙனங் கூறுவதேயன்றி, அசலம், நிரஞ்சநம், அமிர்தம், அப்பிரமேயம், விமலம், வசநாதீதம், அஜடம், அநாமயம், அசங்கம், அதுலம், நிரந்தரம், அகோசரம், அகண்டம், அசம், அநந்தம், அவிநாசி, நிர்க்குணம், நிட்களம், நிரவயவம், அநாதி, அசரீரம், அவிகாரம், அத்துவிதமென் றிவ்வாறு $ அளவிறந்த விலக்குக் குணங்களையும் (மறைமுக விசேஷணங்களையும்) கூறும். 137

---

$ 'அளவிறந்த' என்றமையின், அக்ஷரம் [க்ஷயமி (குறைவி) ன்றியது], அவ்வியயம் (தேய்தலும் வளர்தலு மில்லாதது), நிராகாரம் (ஸ்தூல முதலிய வடிவங்க ளில்லாதது), அஸ்தூலம் (ஸ்தூலமன்று), அநணு (அணுவன்று), அசப்தம் (சப்தமற்றது), அஸ்பரிசம் (பரிசமற்றது), அரூபம் (ரூபமற்றது), அகர்த்தா, அபோக்தா, அமனசு (மனமற்றது) என்றற் றொடக்கத்தனவற்றையுங் கொள்க.

விதிமுக விசேஷணங்களின் விளக்கம் வருமாறு :—

உற்பத்தி நாசமின்றி யிருத்தலின் நித்திய மென்றும், கடாதிகளில் மண் நிறைந்திருப்பதுபோன்று எப்பொருளினூடும் நிறைந்திருத்தலின் பூரண மென்றும், தனக்குச் சஜாதீயமாகிய (இனமுள்ளதாகிய) வேறு ஆத்மா வில்லா திருத்தலின் ஏக மென்றும், முக் காலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப்படுதலில்லா திருத்தலின் பரமார்த்த மென்றும், நாமரூபவடிவ எப்பொருட்கும் விவர்த்த காரணமாயும், தனக்கொரு காரணமின்றி மேம்பட்டும் வியாபகமா யிருத்தலின் பரப்பிரஹ்ம மென்றும், பிரபஞ்சத்தின் உற்பத்தி ஸ்திதி லயங்கட்கு விவர்த்த உபாதான காரண (அதிஷ்டான)மா யிருத்தலின் நிதான மென்றும் (நிதானம் - காரணமாத்திரம்), எஞ்ஞான்றும் புடைபெயர்ச்சியின்றி யொரு தன்மையதா யிருத்தலின் சாந்த மென்றும், தத்துவக் கூட்டங்களைத் தத்தங் காரணங்களி லொடுக்கிக்கொண்டு சென்றால் காரண காரியங்க ளிரண்டு மின்றி முடிவாய் நிற்றலின் சத்திய மென்றும், மோக்ஷவடிவா யிருத்தலின் கேவல மென்றும், ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தியென்னு மவஸ்தை மூன்றனையு மறிவதாய் நான்காம்பொருளா யிருத்தலின் துரிய மென்றும், சர்வ வுலகத்திலும் சர்வ வியவகாரமுமின்றி யிருத்தலின் சம மென்றும், திருசிய மனைத்தையு மறிவதா யிருத்தலின் திருக் கென்றும், கொல்லனது பணை (அடைகல்) போல விகாரமின்றி



யிருத்தலின் கூடஸ்த னென்றும், தனது சொரூபவடிவ ஞானத்தாலே மறைவின்றி நேரே சர்வப் பிரபஞ்சத்தையுந் தொடக்கின்றி யறிவதால் சாக்ஷி யென்றும், இந்திரியம் மனத்தினது சம்பந்தத்தாலும், மனம் ஜீவனது சம்பந்தத்தாலும், ஜீவன் தனது சம்பந்தத்தாலும் போத வடிவமா யிருப்பது போலாகாது தான் (பிறிதொன்றையு மபேட்சியாத) சம்வித் (அறிவு) வடிவமா யிருத்தலின் போத மென்றும், ஜாதி வருணச்சிரம முதலியவற்றால் தொடக்குற்ற ஜீவன்-கிருபை அவதார முதலியவற்றால் தொடக்குற்ற ஈசன்-ஜீவசம்பந்தத்தா லசுத்த முற்ற பூதங்களென்னு மிவற்றிற்கு வேறான தான் இவற்றோடு கூடினும் தன்னை யசுத்தம் பற்றாமையாலும் இவை (கயிற்றரவு போலத்) தனது விவர்த்தமா யிருத்தலாலும் சுத்தமென்றும், தத்துவம் பதங்களின் இலட்சணாவிர்த்திவாயிலாகப் போதிக்கப்பட்ட அர்த்தமா யிருத்தலின் இலக்கிய மென்றும், எஞ்ஞான்றும் ஒரே வடிவமா யிருத்தலின் சநாதந மென்றும், கடத்தால் வளைவுபட்ட ஆகாயம் போலச் சரீரமூன்றாலும் வளைவுபட்டிருத்தலின் ஜீவனென்றும், தத்துவம்பதங்களின் மெய்ப்பொருளா யிருத்தலின் தத்துவ மென்றும், அசங்கத்துவம் வியாபகத்துவ முதலிய தருமங்களால் ஆகாயத்திற் கொத்திருத்தலின் விண்ணெ (ஆகாயமெ)ன்றும், தனது பிரகாசத்தில் பிறிதொன்றன் பிரகாசத்தை யபேட்சியாது தான் எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் சொப்பிரகாச வடிவமா யிருத்தலின் சோதி யென்றும், நான் என்னும் புத்திக்கு முக்கிய விஷயமாக அல்லது முக்கியப் பிரீதிக் கிடமாக விருத்தலின் ஆத்மா (தான்) என்றும், (விசேஷியமான ஆத்மாவை ஈண்டு விசேஷணமாகக் கூறியது முரணாகாது ; சுத்த சேதனத்தை ஆத்மாவென்றுரைத்தலும் ஒரு விசேஷணம் பற்றியேயாகவி னென்க.)

இயல்பாகவே சம்சார பந்தம் விடுபட்டதா யிருத்தலின் முத்த மென்றும், கால தேச வஸ்துக்களாலாய பரிச்சேதமி(முடிவி)ன்றி யிருத்தலின் விபு (வியாபகம்) என்றும் (இது பூமா, அநந்தம், அபரிச்சின்னமென்றுங் கூறப்படும்.), நுண்மையாயுள்ள யாவற்றினும் அதி நுண்மையா யிருத்தலின் சூக்ஷும மென்றும், ஆத்மாவின் அல்லது காண்டற் கரிதா யிருத்தலின் விதிமுக விசேஷணங்கள் கூறப்படுகின்றன வென்க.

"பலகணி வெயிலினிற் பரந்து தோன்றிய
சலபர மாணுபோற் சாட்சி யாமெமை
யலைவுறு பொறியறி தற்க லாதலால்
இலகுநா மணுவென விதயத் துன்னுவாய்."

என்பது இலட்சணாவிருத்தி.

சுமங்கிலி யென்னுஞ் சொல் அமங்கிலி ஸ்திரீயை விலக்கிச் சுவாசினி (நல்வாசமுள்ள) ஸ்திரீயை நேரே யறிவிப்பதுபோல, நித்திய முதலிய விதிமுக விசேஷணங்களும் அநித்திய முதலிய பிரபஞ்சத்தின் விசேஷணங்களை விலக்கி நித்திய முதலிய வடிவினதாகிய பிரஹ்மத்தை நேரே யறிவிப்பனவாமென்க.

மறைமுக விசேஷணங்களின் விளக்கம் வருமாறு :—

அவஸ்தாத்திரயத்தாற் சலிக்கின்ற ஜீவேசுவர சகத்திற்குச் சாட்சியாய்ச் சலிப்பி (அசைவி)ன்றி யிருத்தலின் அசல மென்றும், அஞ்ஞன (தமஸ் அல்லது மனோ வியாபார) மின்றியதா யிருத்தலின் நிரஞ்ஞன மென்றும், மிர்த (மரண) மின்றியதா யிருத்தலின் அமிர்த மென்றும், பிரத்தியட்ச முதலிய பிரமாணங்கட்கு விஷயமாகா திருத்தலின் அப்பிரமேய மென்றும் (பிரமாணத்தா லறியப்படுவது பிரமேயமாம்.), மலமூத்திர முதலிய மலமுள்ள பிருதிவி, கலங்கல் புகை புழுதி முதலிய மலமுள்ள அப்பு முதலிய பூதங்கள், கோழை சளி பித்த முதலிய மலமுள்ள ஸ்தூல தேகம், காசபடலம் காமக் குரோத முதலிய மலமுள்ள சூக்கும தேகம், அறிவறியாமை யென்னும் மலமுள்ள ஜீவன், சிருஷ்டி முதலிய மலமுள்ள ஈசனென்னு மிவற்றிற்கு வேறாய் யாதொரு மலமுமின்றி அறிவாநந்த வடிவா யிருத்தலின் விமல மென்றும் (விமலம் - மலமற்றது), வாக்கினு (சொல்லின் சக்தி விருத்தியா) லறியப்படா திருத்தலின் வசநாதீத மென்றும், தேகாதிப் பிரபஞ்சம்போல ஜடமாகா திருத்தலின் அஜட மென்றும், § ஆதி (மாநசதாபம்)-வியாதி (சரீர தாபம்)- இவ்விரண்டின் காரணமான சம்ஸ்கார மென்னும் மூவகைத்தாபமு (நோயு) மின்றி யிருத்தலின் அநாமய மென்றும், ¶சஜாதீய விஜாதீய சுவகத மென்னும் மூவகைச் சம்பந்தமு மின்றி யிருத்தலின் அசங்க மென்றும், தனக்குவமை யின்றி யிருத்தலின் அதுல மென்றும் (துலம் - உவமை), அந்தர (அவகாச) மின்றி யிருத்தலின் நிரந்தர மென்றும் (இது நிச்சித்திரமென்றுங் கூறப்படும்.), தான் எப்பிரமாணத்திற்கும் விஷயமாகா திருத்தலின்

§ " தூலவுடம் பெழிலொழிதீ நாற்றம் புகுபிணிகண் முதலனவுஞ் சூக்குமதேகத்து, மிக்ககா மாதியுங்கா ரணத்தினிலவ் வாதி வியாதிகட்கு வித்தாம் வா சனையுமிகத் திடும்பை" என்று வேதாந்தசூடாமணி கூறுவதறிக.

¶ சங்கம் - சம்பந்தம். அது சஜாதீயம், விஜாதீயம், சுவகதமென மூவகைத்தாம். கடத்திற்குக் கடத்தோடுள்ள சம்பந்தம் சஜாதீய (தன்னினத்தோடுள்ள) சம்பந்தமாம்; கடத்திற்குப் படத்தோ (ஆடையோ)டுள்ள சம்பந்தம் விஜாதீய (வேற்றினத்தோடுள்ள) சம்பந்தமாம்; படத்திற்கு நூலோடுள்ள சம்பந்தம் சுவகத (அவயவத்தோடுள்ள) சம்பந்தமாம். ஏகமா யிருத்தலின் சஜாதீய சம்பந்தமும், அநாத்மா கயிற்றரவு போலத் தன்னி



அகோசர மென்றும் (கோசரம்-கிரகிக்கத்தக்கது), ‡ காலதேசவஸ்துக்களால் கண்டிக்க (வேறுபடுத்த)ப்படா திருத்தலின் அகண்ட மென்றும், ஜன்மமி (பிறத்தலி)ன்றி யிருத்தலின் அஜமென்றும் (ஜம்-பிறப்பு, அஜம்-பிறப்பின்மை; இஃது அஜன்மமென்றுங் கூறப்படும்.), அந்தமி (முடிவி)ன்றி யிருத்தலின் அநந்தமென்றும், நாசமின்றி யிருத்தலின் அவிநாசி யென்றும் (விநாசி-நாசமுடையது), வியவகார தசையில் சிருஷ்டி முதலிய வற்றைக் குறித்துக் கற்பிக்கப்படும் சர்வஞ்ஞத்வாதி குணங்கள் பாரமார்த்திக தசையில் அற்பமாக வேனு முண்டென்பதற் கிடம்பெறா திருத்தலின் நிர்க்குண மென்றும், சகளவடிவ (மூர்த்தவடிவம்-கண்டமாயவடிவ) மின்மையின் நிஷ்கள மென்றும் (களம்-மூர்த்தவடிவம்), கை கால் என்றற் றொடக்கத்து அவயவங்க ளின்றி யிருத்தலின் நிரவயவமென்றும், உற்பத்தியின்றி யிருத்தலின் அநாதி யென்றும் (ஆதி-உற்பத்தி), யாதொரு சரீரமு மின்றி யிருத்தலின் அசரீர மென்றும், பிறத்தல், இருத்தல், வளர்தல், திரிதல், குறைதல், அழிதலென்னுஞ் சட்பாவ விகாரமுமின்றி யிருத்தலின் அவிகார மென்றும், துவிதமின்றி யிருத்தலின் ¶ அத்துவித மென்றும், ஆத்மாவின் மறைமுக $ விசேஷணங்கள் கூறப்படுகின்றன வென்க.

அவிதவை யென்னுஞ் சொல் விதவை ஸ்திரீயை விலக்கி அர்த்தத்தினுல் அவளுக்கு வேறாகிய சுவாசினி ஸ்திரீயை யறிவிப்பதுபோல, அசல முதலிய மறைமுக விசேஷணங்களும் சல முதலிய பிரபஞ்சத்தின் விசேஷணங்களை விலக்கி அர்த்தத்தினுல் அவற்றிற்கு வேறாகிய பிரஹ்மத்தை யறிவிப் பனவாமென்க.

விதிமுக மறைமுக விசேஷணங்களின் விரிவை இலட்சண விருத்தியிற் காண்க.

டத்திற் கற்பிதமா யிருத்தலின் விஜாதீய சம்பந்தமும், நிரவயவமா (அவயவமின்றியதா)யிருத்தலின் சுவகத சம்பந்தமும் ஆத்மாவிற் கில்லை யென்க. சஜாதீயம் விஜாதீயம் சுவகத மென்னு மிம்மூன்றும், காலபரிச்சேதம், தேசபரிச்சேதம், வஸ்து பரிச்சேத மென்னு மூன்றனுள் வஸ்து பரிச்சேதத்திலந்தர்க்கதமாம்.

‡ உற்பத்தி நாசமின்றி யிருத்தலின் காலபரிச்சேதமும், ஆகாயம்போல் எங்கும் வியாபகமா யிருத்தலின் தேசபரிச்சேதமும், தனக்கு வாஸ்தவத்தில் வேறுபட்ட பொருளின்மையின் வஸ்து பரிச்சேதமும் ஆத்மாவிற்கில்லை யென்க. பரிச்சேதம்-முடிவு. அத்தியந்தா பாவத்தின் பிரதியோகி தேசபரிச்சேதமும், பிராகபாவப் பிரத்துவம்சாபாவங்களின் பிரதியோகி காலபரிச்சேதமும், அநியோந்நியா பாவத்தின் பிரதியோகி வஸ்துபரிச்சேதமுமாம். இவற்றினியல்பைப் பாலபோதத்தின் முதலுபதேசத்தில் விரிவா யறிக.

¶ துவைத வடிவப் பிரபஞ்சம் சொப்பன வுலகம் போலக் கற்பிதமா யிரு

138. இன்னவகை விதிவிலக்குக் குணங்க ணன்றுய்ச் சேர்ந்தொரு
மித் தெல்லாங் கூடிச், சொன்னபொரு ளொன்றன்றி யிரண்
டில்லை யொருபொருளைச் சொல்லுஞ் சொற்கள், பின்னபத மா
மதனுற் சத்தாதி குணப்பொருளாம் பிரம மேகம், அன்னபொரு
ளொருமையறிந் தகண்டபரி பூரணமா யாவாய் நீயே.

---

விதிமுகமாகவும் மறைமுகமாகவுங் கூறிய விசேஷணங்களின்
தாற்பரியப் பொரு ளொன்றே யெனக் கூறல்.

அன்பனே ! (நித்தியம் பூரணமென்றற் றொடக்கத்தனவாக) இவ்வாறு சுருதி கூறிய விதிமுக மறைமுக விசேஷண (குண)ங்க ளியாவுஞ் செவ்வையாகச்சேர்ந் தொருமித்துத் திரண்டு கூறிய பொருள் ஒன்றே யன்றி யிரண்டன்றும். யாண்டும் ஒரு பொருளைப் பிரதிபாதிக்கும் † பதங்கள் தம்முள் ஒன்

---

த்தலின் மித்தையாம். ஆத்மா துவைத மின்றியதாக விருத்தலின் அத்வைதமாம். துவைதம்-இரண்டு ; அஃதின்றியது அத்வைதமாம். சூத சங்கிதை வேதாவிரோத முரைத்த வத்தியாயத்தில் "அறையா ரணஞ்சத் தியமான வத்து விதநற் பரமென்றும், பறையா நின்ற கற்பிக்கப்பட்ட துவித பரமென்றும், துறையா ரிரண்டாந் துவிதப்பிர பஞ்சங் காணப் படலானும், குறையாப் பரத்தா ரோபிதமாய்க் குலவ லானுங் கற்பிதமே" என்று கூறுவ தறிக. "சுருதியினு ளேகமே வாத்துவித மென்னுஞ் சொற்கிடையு ளேக மெனுஞ் சொல்லதனுக் கயிக்கம், அரிதினுண ரேவவெனு மிடைச்சொற்குத் தேற்ற மத்துவித மெனுமொழிக்குத் துவிதவிலக் காகக், கருதுபொருள்" என்பதனை யுணராதார் சுவகபோல கற்பனையாக "அத்துவிதமாவது பேதப் பொரு ளிரண்டுந் தம்முள் அபேதமாதற் குரிய சம்பந்தவிசேடம்" என்று கூறுவர்.

$ ஒரே புருஷன் மனைவி முதலியோரது நோக்கத்தால் கணவன் மைத்துனனென்றற் றொடக்கத்தனவாகக் கூறப்படுதல் போல, ஒரே ஆத்மாவும் பிரபஞ்சத்தின் விசேஷணமாகிய அநித்திய முதலியவற்றின் நோக்கத்தால் நித்தியமென்றற் றொடக்கத்தனவாகக் கூறப்படுகின்றமையின், ஆத்மாவின் விசேஷணங்கள் தம்முள் பின்னமாகா வென்க. ஆத்மா நிர்விசேஷ சின்மாத்திரவடிவமா யிருத்தலின், அது விசேஷண விசேஷிய பாவங்கட் கப்பாற்பட்டதாம்; அங்ஙனமாயினும், வியவகார நிமித்தம் அதற்கு விசேஷண மிருப்பதாகக் கூறப்படுகின்றது.

† நித்தியம் பூரண மென்றற் றொடக்கத்தன சொல்லால் வேறுபட்டனவே யன்றிப் பொருளால் வேறுபட்டன வன்றென்பது கருத்து. "அரன் சிவ னரூபி யநந்த னுருத்திரன்" என்றற் றொடக்கத்தன சொல்லால் வேறுபட்டனவாயும் பொருளால் வேறுபடாதனவாயு மிருத்தலறிக.



139. நிற்குணவத் துவின்குணங்க ளுரைப்பதுதாய் மலடியேன நிக
ரேன் னுதே, சற்குணனே வத்துநிலை யுரையாம லறியவல்ல
சதுர ருண்டோ, நற்குணவே தங்களிந்தச் சீவன்முத்தி பெறப்
பிரம ஞானந் தோன்றச், சொற்குணங்கள் பிரமத்தின் குணங்க
ளென்று பிரமமாஞ் சொரூபந் தானே.

---

றற் கொன்று வேறுபட்ட பதங்களாம். அக்காரணத்தினுல் சத்து, சித்து, ஆநந்தமென்றற் றொடக்கத்து விசேஷண (குண)ங்களின் பொருளான பிரஹ்மம் ஒன்றேயாம் ; அவ்வா றென்ற யிருத்தலால், அந்தப் பிரஹ்மத்தின் ஏகரசத் தன்மையைச் சுருதி கூறியவாற்றல் செவ்வையாக வறிந்து நீ அகண்ட பரிபூரணமா யிருக்கக்கடவாய். 138

சீடன், குணரகிதமான பிரஹ்மத்திற்குச் சத்தாதி குணமுன்டெனக் கூறல்
என்றய் மலடி யென்பதுபோல *வியாகாதமா மேன்று வினவுதலும்,
அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினு:—தேசிகோத்தமரே ! குணரகிதமான பிரஹ்மத்திற்குச் "சத்தியம் ஞாநம் அநந்தம் பிரஹ்மம்" என்றற் றொடக்கத்தனவாகச் சத்தாதி குணங்களைச் சுருதி கூறுவது என்றய் மலடியென்னும் வாக்கியத்திற் கொப்பாகுமன்று ?

கு—விடை:—சம தமாதி குணங்களைச் சம்பூரணமாக வுடைய அன்பனே ! நீ யவ்வாறு சங்கித்தல் நன்றன்று. ஒரு பொருளை யறிய விரும்பினோர் அப்பொருளின் குணங்களைப் பிறர்கூறக் கேட்டன்றே அறிதல்வேண்டும் ; அவ்வாறு கூறாம லறியத்தக்க விவேகமுடையா ரிருக்கின்றனரா? இல்லை யல்லவா? ஆதலால், § "எத்தகைய வுயிர்களுக்குந் தாய்போல வுண்மையையே யெடுத்துச் சொல்லும்" நற்குணமுடைய வேதங்கள் († அப்பியாசிகள் 'திசையார் திரிசிய மறியா தேதுயில் செறியா தேயுடலறிபோல, அசையா தேமதி சமமா கியநிலை யதுதான் முக்கிய வாநந்த'மென்னும்) இச்சீவன் முத்திச் சுகமடையவும், ¶ பிரஹ்மத்தின் பரோட்ச அப

---

*முன்னுக்குப் பின் முரணுகக் கூறல் வியாகாதமாம்.

§ சூதசங்கிதை, வேதாவிரோதம் 19.

† மாயாப் பிரபஞ்சத்தைச் சொப்பனப் பிரபஞ்சம்போல மித்தையென் றுணர்ந்து அதனை வெறுத்துப் பிரஹ்மத்தியானஞ் செய்கின்றவர் அப்பியாசிகளாவர்.

¶ இங்குப் பிரஹ்மமிருக்கின்றதென் றுணரும் ஞானம் பரோட்ச ஞானமாம் ; அகம்பிரஹ்மாஸ்மி (நான் பிரஹ்மமா யிருக்கின்றேன்) என்றுணரும் ஞானம் அபரோட்ச ஞானமாம்.

140. மோகவிருள் கெடக்கோடி யருணனென வருகுருவே மொழி
யக் கேளீர், ஏகபரி பூரணமா மென்சொருப மென்னுளத்தி
லிறுகும் வண்ணம், ஆகமங்கள் சொன்னபடி யென்னையகண்
டார்த்தமா வறிந்தே னையா, ஊகமுமொத் திடவுரைத்தாற் பசு
மரத்தி லாணிபோ லுறைக்கு நெஞ்சே.

ரோட்ச ஞானங்கள் *முமுட்சுக்களுக் குண்டாகவுங் கற்பித்துக் கூறிய ‡சத்து முதலிய குணங்கள் பிரஹ்மத்தின் குணங்களன்றும்; ஆனால், பிரஹ்ம சொருப மேயாம். 139

சீடன், சச்சிதாநந்தம் ஏகரச மென்பதற்கு யுக்தி கூறவேண்டுமென்று வினவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினா:—தனது காரியமாகிய பிரபஞ்சத்தோடு அஞ்ஞானாந்தகாரம் கெடும்படி கோடி சூரியர்போன் றெழுந்தருளிய குருமூர்த்தியே! தமியேனது விண்ணப்பத்தைக் கருணை கூர்ந்து கேட்டருளல் வேண்டும். ஏகரச சச்சிதாநந்த பரிபூரணமாயுள்ள எனது நிஜவடிவத்தி னனுபவம் எனதந்தக்கரணத்தி லழுந்துமாறு சுருதிகள் கூறியபடி சச்சிதாநந்தமாகிய எனது நிஜவடிவத்தை யகண்டாகாரப் பொருளாகச் சந்தேகவிபரீதமின்றி யறிந்தேன். தேவரீர் சச்சிதாநந்தங்கள் ஏகரச மென்பதற்கு யுக்தியும் பொருந்துமாறு கூறியருளினால், எனதந்தக்கரணம் சுவானுபவத்தின்கண் பசுமரத் தறைந்த வாணிபோல் ஸ்திரப்படும். 140

* மாயாப் பிரபஞ்சத்தை மித்தையென் றுணர்ந்து, மோட்சமடைய முயற்சி செய்கின்றவர் முமுட்சுக்களாவர்.

‡ "சொருபலட்சணம் - சொருபமே லட்சணமாம். அஃதெங்ஙனம்? 'சத்தியம், ஞானம், அநந்தம், பிரஹ்மம்' என்னும் பிரஹ்மத்தின் சொருபமே லட்சணமாம். (ஆட்சேபம்)-[லட்சணம் தன்னிட(லட்சிய)த்துள்ள அசாதாரண தர்மமாம் (சிறந்தகுறியாம்). சொருபத்தை லட்சணமாகக் கூறுமிடத்துச்] சொருபம் தன்னிடத்திராமையின், எங்ஙனம் லட்சணமாதல் கூடும்? (சமாதானம்) - தன்னையே தர்மியாகவும் தர்மமாகவும் கற்பித்தலால் லட்சிய லட்சணத்தன்மை சம்பவிக்கும். 'ஆநந்தமென்றும், விஷயாநுபவ மென்றும், நித்தியத்தன்மையென்றும் தர்மங்களிருக்கின்றன. அவை சைதன்னியத்திலும் வேறாகாதிருப்பினும் வேறுபோற் றோன்றுகின்றன' என்று பத்மபாதாசாரியாரால் கூறப்பட்டிருக்கின்றது. இங்ஙனம் சொருபலட்சணமாம்" என்று வேதாந்த பரிபாஷை கூறுவதிங் குணர்தற்பாலதாம்,



141. சத்தேசித் தாகுமய லெனிலசத்தா மசத்தானுற் சாட்சி யெங்
கே, சித்தேசத் தாகுமய லெனிற்சடமாஞ் சடங்களுக்குத் திதியு
மில்லை, ஒத்தேதோன் றியசத்துஞ் சித்துநல்ல சுகமாகு மூகத்
துக்கோர், வித்தேயன் னியமாகிற் சடமசத்தாஞ் சுகாநுபவம்
விளைந்தி டாதே.

142. வியாத சத்துமுன்னம் விளங்குவது தன்னுலோ வேறொன்
றுலோ, வாயால்வே றெனிலதுவு மசத்தோசத் தோவசத்தேன்
மலடி மைந்தன், பேயாகா ரியஞ்செயுமோ சத்தெனவிப் படிய
தையும் பிரித்துச் சொன்னுல், ஓயாத வவத்தையாங் குதர்க்க
விகற் பங்களைவிட் டொழிந்தி டாயே.

சச்சிதாநந்தங்களி னேருமையை யுக்தி வாயிலாக விளக்கல்.

குரு—விடை :—அன்பனே! (1) சத்தே சித்தா யிருக்கின்றது; சத்திற்குச் சித்து வேறுபட்டதா மெனின், அப்போது சித்திற்கு இருப்பின்மையின் அது சுவயமே சத்தா சூனியமாயுள்ள முயற்கோடுபோன் றசத்தாம்; அசத்தாமாயின், அஃதெங்ஙனம் சாட்சியாம்? சத்தின்றிய சித்துச் சாட்சியாதல் பொருந்தாமையின், சத்தே சித்தாகும். (2) எங்ஙனம் சத்தே சித்தாயிருக்கின்றதோ அங்ஙனமே சித்தே சத்தா யிருக்கின்றது: சித்திற்குச் சத்து வேறுபட்டதாமெனின், அப்போது சத்திற்கு விளக்க மின்மையின், அது கடபடம் போன்று ஜடமாம்; ஜடபதார்த்தங்கட்குக் கயிற்றரவு போன்றிருப்பின்றாகலின், சித்தே சத்தாகும். (3) இவ்வாறு தம்முள் பின்னமாகாமலோத்து விளங்குகின்ற சத்தும் சித்தும் பூரணாநந்தமாம்; சத்திற்கும் சித்திற்கும் ஆநந்தம் வேறுபட்டதாமெனின், அப்போது ஆநந்தத்திற்கு இருப்பும் விளக்கமு மின்மையின், அஃது அசத்தும் ஜடமுமாம்; அசத்து ஜடங்களாற் சுகாநுபவ முண்டாகாமையின், சத்தும் சித்துமே ஆநந்தமாம். சச்சிதாநந்தங்களி னேருமையை யாராய்ந்தறிதற்கு இவ்வுத்தியே தலைமையான யுத்தியாம். 141

சச்சிதாநந்தங்களி னேருமையை வற்புறுத்திக் கூறல்.

$முக்காலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப்படுதலில்லாத சத்து விளங்

$ "சத்துத் தானாகவே விளங்குகின்றதா? அல்லது மற்றொன்றினால் விளங்குகின்றதா? எனின், முந்திய பக்ஷத்தில் சத்தே சித்தாகும் (தானாகவே பிரகாசிக்கின்றதாம்); வேறொன்றினால் பிரகாசிக்கிறதெனின், அப்படிபிரகாசிப்பிக்கிற வஸ்து சத்தைவிட அந்நியமானதா? அல்லது வேறொரு சத்தா? சத்தைவிட அந்நியமானதாயின், முயற்கொம்பு முதலியன போல அசத்தாகவே

யிருத்தல் வேண்டும். அதற்குச் சத்தைப் பிரகாசிப்பிக்கிற யோக்கியதை யிருக்கமாட்டாது. வேறொரு சத்தென்னும் பக்ஷத்தில் அந்தச் சத்துத் தானாகவே பிரகாசிக்கிறதா? அல்லது வேறொன்றினால் பிரகாசிப்பிக்கப் படுகிறதா? என்னும் சந்தேகத்தில், முதற்பக்ஷத்தில் தானாகவே பிரகாசிக்கின்றதெனின், அதுவே சித்தாகும்; அந்நியத்தால் பிரகாசிப்பிக்கப் படுகின்றதெனின், மீண்டும் விகற்ப முண்டாய்க்கொண்டே யிருக்கும். இவ்வாறு விகற்பம் செய்துகொண்டு போனால், ஆத்மாசிரய தோஷம், அந்நியோந்நியாசிரய தோஷம், சக்கிராபத்தி தோஷம், அநவஸ்தா தோஷம் எனப் பல தோஷங்கள் சம்பவிக்கும். ஆகையால், சத்துத் தானாகவே பிரகாசிக்கிறது. எது சுவயமே பிரகாசிக்கின்றதோ அது சித்தென்பது சித்தமாம். அந்தச் சத்தே சித்து; சித்தே சத்து; இரண்டு மொன்றுதான். இன்னொரு சத்திருக்கிறதென்பது வேதங்களில் எவ்விடத்திலும் காணப்படவில்லை; ஆகையால், சத்துத் தானாகவே விளங்குகின்றதென்பது நிச்சயமாம். ஆகையால், சத்தே சித்தென்பது சித்தமாம். அப்படி தானாக விளங்குகின்ற சத்துக்கு ஆநந்தத்துவ மெப்படியெனின், சத்திற்கிரண்டாவது வஸ்து வில்லாமையால் ஆநந்தத்துவம் பூரணமாகவே யிருக்கிறது. அற்பத்தில் பூரணத்துவமில்லையாம். ஆகையால், பூரணத்துவம் அத்துவயத்திற்கே யன்றித் துவைதத்திற் கில்லையாம். சத்து எப்படி அத்துவைத மெனின், ஓ புத்திரா! சத்துக் கிரண்டாவதுடன் கூடி யிருக்கும் தன்மை வேறொரு சத்தினாலேயா? அல்லது சத்து விலக்ஷணமானதினாலேயா! எனின், வேறொரு சத்தினாலன்று.

ஏனெனின், சாஸ்திரத்தினாலேயும் யுக்தியினாலேயும் அனுபவத்தினாலேயும் வேறொரு சத்திருக்கின்றதென்பது சித்திக்காமையின், முதற்பக்ஷம் சித்திக்கவில்லை; இரண்டாவது பக்ஷமும் சித்திக்க மாட்டாது. ஏனெனின், சத் விலக்ஷணமான வஸ்து முயற்கொம்புபோலச் சுவரூபமே யில்லாமையினாற்றான். இந்த விரண்டு விகற்பத்தைத் தவிர வேறே விகற்பமில்லை.

ஆகையால், ஒன்றான சத்திற்கு இரண்டாவதில்லாமையாலே அத்துவைதத்துவமும் அதனாலே பூரணத்துவமும் சித்தமாம்; அதனாலே சுவப்பிரகாசமான சத்தே ஆநந்தமாம். இப்படி யுக்தியினாலேயும் சச்சிதாநந்த பதங்களுக்கு அகண்டார்த்தம் நிச்சயிக்கப்படுகின்றது.... யாவர்க்கும் சுஷுப்தியில் ஒரு சுகம் விளங்குகின்றது. அந்தச் சுகம் ஜாக்கிர-சொப்பனங்களின் சுகம்போலப் பலவல்ல; ஆனால், நிருபாதிகமான ஒரே ரூபமாயிருக்கின்றது. ஆகையா லந்தச் சுகம் அத்வைதந்தான். அந்த அவஸ்தையில் சூரியன் முதலிய பிரகாசத்தை விரும்பாமல் சுஷுப்தி ஆநந்தம் விளங்குகின்றமையால், அதற்குச் சித்துத்துவ மிருக்கின்றது. சுஷுப்தி ஆநந்தம் சுவயம்பிரகாசமென்பதிற் பிரமாணம் யாதெனின், தூங்கிவிழித்தவனுக்கு இதுகாறும் நான் சுகமாய்த் தூங்கினேனென்னும் நினைப்புண்டாகின்றது; நினைப்பு மூக்



துவது †தீபம்போன்று தன்னாலேயா ‡கடம்போன்று பிறிதோன்றினாலேயா? அச்சத்துக் கடம்போன்று பிறிதோன்றால் விளங்குகின்றதெனின், சத்திற்கு வேறான அதுவும் சத்தா? அசத்தா? அசத்தென்றால், § மலடிமகன் ஒரு காரியஞ் செய்வது முண்டோ? (அசத்து மலடிமகன் போல்வதாகலின், அதனால் சத்து விளங்குகின்றதெனல் பொருந்தாது). சத்தென் றிவ்வாறு அதனையும் பிரித்துக் கூறினால் அநு வாம்பின்றிச் சேறலென்னும் ¶ அநவஸ்தா

தியனுபவத்தினாலேயே யுண்டாதல் வேண்டுமென்பது நியமமாகையால், அப்போது அனு சுஷுப்தி சுகத்திற்கு அனுபவம் சொல்லவேண்டியதாம். சுஷுப்தி ஆநந்தத் பவத்திற்குக் காரணமான இந்திரியங்களில்லாமையால் சுஷுப்தி ஆநந்தத் தின் சுவானுபவம் சுவப்பிரகாசமென்றே யறி. சுஷுப்தியிற் சுகமும் பிரகாசிக்கின்றது, அஞ்ஞானமும் பிரகாசிக்கின்றது. இவ்விரண்டில் சுகம் சுவப்பிரகாசமா? அல்லது அஞ்ஞானம் சுவப்பிரகாசமா? என்று விசாரிக்குங் கால், சுகமே சுவப்பிரகாசமென்று சொல்லல்வேண்டும். அஞ்ஞானத்திற்கு ஆவரண ரூபத்தினாலே பிரகாசமில்லாமையால், அஞ்ஞானம் சுவப்பிரகாசமன்று. ஆகையால், சுஷுப்தியில் ஆத்மசுவரூபமே சுகமாகப் பிரகாசித்துக்கொண்டு தன்னிடத்து ஆரோபமாயிருக்கிற அஞ்ஞானத்தையும் பிரகாசிப்பிக்கின்றது. ஆகையால், சுகம் சுவப்பிரகாசமேயாம். இப்படி அனுபவத்தினாலேயுஞ் சச்சி தாநந்த பதங்களுக்கு அகண்டார்த்தத்துவம் சித்தமாம்." என்று வடமொழி வாசுதேவமனனங் கூறுவதிங் குணர்தற் பாலதாம்.

ஒன்று மறைப்பின்றித் தன்னையேதானபேட்சித்தல் ஆத்மாசிரயமாம்; இரண்டற்கு இரண்டின் பரஸ்பர அபேட்சை அந்நியோந்நியாசிரயமாம்; மேற்பட்டவற்றின் பரஸ்பர அபேட்சை சக்கிராபத்தியாம்.

† தீபம் பிறிதொன்றன் பிரகாசத்தை யபேட்சியாது தன்னாலேயே தான் விளங்குவதாம்.

‡ கடம் தீபமுதலியவற்றினால் விளங்குவதா யிருத்தலின், அது பிறிதொன்றால் விளங்குவதாம்.

§ மலடிமகன் சொன்மாத்திரமான பொய்யென்னும் அசத் பதார்த்தமாகலின், சுவயமே சத்தாசூனியமாயுள்ளவவன் ஒரு காரியத்தைச் செய்கிறானென்பது பரிகாசத்திற் கிடமாமெனக் குறிப்பிக்கப்பட்ட தென்க.

¶ முன்முன்னுள்ளது பின்பின்னுள்ளதை யபேட்சித்தல் அநவஸ்தா தோஷ மெனப்படும். முதலாவது சத்து இரண்டாவது சத்தாலும், அது மூன்றாவது சத்தாலும், அது நான்காவது சத்தாலும் விளங்குகின்றதென வரம்பின்றிக் கூறல் ஈண்டு அநவஸ்தையாம்.

143. சுருதியுத்தி யோத்ததுபோ லநுபவமுங் கேள்சுழுத்திச் சுகவா
நந்தம், மிருதிவடி வாதலிலவ் வாநந்த மேயறிவாம் வேறங்
கில்லை, கருதுபிர ளயஞ்சுழுத்தி யிரண்டிலுநீ யிருந்திருளைக் காண்
கின் றாயே, இருதயத்திப் படிநோக்கி யேகபரி பூரணமா யிருந்தி
டாயே.

தோஷமாம். ஆதலால், * பேபலைவதுபோ லலையும் புத்தியுள்ள மகனே! நீ முன் சங்கித்த †குதர்க்கமாகிய விகற்பங்களைவிட் டொழியக்கடவாய். 142

சச்சிதாநந்தங்கள் ஏகாசமேன்பதற் கனுபவங் கூறல்.

அன்பனே! சச்சிதாநந்தங்கள் ஏகரசமென்பதற்குச் சுருதியும் $ யுக்தியும் தம்முள் மாறுபடாம லொத்திருப்பதுபோல அனுபவ மொத்திருப்பதையுங் கூறுகின்றேன்; அதனை நீ கவனமாய்க் கேட்கக்கடவாய்.

சீ—வினா :—ஆண்டவனே! அதனைக் கூறியருளல் வேண்டும்.

குரு-விடை:-அன்பனே! உனது சுழுத்தி யவஸ்தையின்கண் நிரதிசயமாய் (வேற்றுமை யில்லாததா)யுள்ள, சுகவடிவ ஆநந்தமானது நீ விழித்தபோது நான் சுகமாயுறங்கினே னென்று § ஸ்மிருதி வடிவமாக வுனக்குத் தோன்றுதலால், அவ்வாநந்தமே சித்தாகும். அவ்விடத்து ஆநந்தம் அதனினும் வேறான சித்தா லறியப்படுகின்றதெனின், அச்சுழுத்தியின்கண் ஆநந்தத்தினும் வேறாகச் சித்துக் காணப்படாமையின், ஆநந்தத்தினும் வேறாகச் சித்துண்டென்பதின்றாம்; ஆகவே, அறிவாநந்தம் ஏகரசமாம். * பிரளயம் சுழுத்தி யென்னு மிரண்டவஸ்தையிலும் சிதாநந்த வடிவமாகிய நீ யிருந்தே யிருளை யறிகின்ற

* சீடனது புத்தி குதர்க்கத்தால் மாறுபா டடையுமாவண்ணம் சிறிது முனிவுற்றதுபோற் கூறினா ரென்க.

† அநிஷ்டத்தைச் சம்பாதித்தல் அல்லது நவீந (புதுவதாய) அர்த்தத்தைக் கற்பித்தல் தர்க்கமாம். இது சுதர்க்கம் - குதர்க்கமென விருவகைத்தாம்; அவற்றுள், சுருதிக்கு விரோதமில்லாத தர்க்கம் சுதர்க்கமாம்; சுருதிக்கு விரோதமான தர்க்கம் குதர்க்கமாம். இது சுஷ்கதர்க்கமென்றுஞ் சொல்லப்படும்.

$இது கூடும், இது கூடாதெனத் தோன்று மறிவு யுக்தி யெனப்படும்.

§ அறியப்படாத வஸ்துவின் ஸ்மிருதி யுண்டாகாதாகலின், சுழுத்தியில் ஆத்மா ஆநந்தவடிவமா யிருக்கின்ற தென்பது பெறப்பட்டதென்க.

" நித்தியமாயும் நிருபாதிகமாயும் நிரதிசயமாயுமுள்ள சுகமெதுவோ அதுவே ஆநந்தமாம்; அதுவே ஆத்மசுவரூபமாம். புஷ்பம், சந்தனம், ஸ்திரீ முதலிய விஷயங்களா லுண்டாவதாயும் அநித்தியமாயும் உபாதியுடையதாயும் அதிசயத்தோடு கூடியதாயுமுள்ள சுகமெதுவோ அஃது ஆத்மசுவரூபாநந்த சுகமாவதன்றாம். ஆகையால், முற்கூறிய ஆநந்தமே ஆத்மசுவரூபமாம். அஃதெங்ஙனமெனின், சுழுத்தி ஆநந்தத்தில் அந்தச் சுக லட்சண மிருத்தலின், அந்த ஆநந்தம் நானேயென் றறிந்துகொள்ளல் வேண்டும். சுழுத்தியில் துக்கநிவிர்த்திமாத்திரங் காணப்படுகின்றதன்றி ஆநந்த மனுபவிக்கப்படவில்லையாதலின், சுழுத்தியில் ஆநந்தலட்சண விசாரணை யெங்ஙனமாமெனின், உலகத்தில் தூங்கி யெழுந்த புருஷன் நானிதுகாறும் சுகமாய்த் தூங்கினேனென்று சுழுத்தியில் ஆத்மாவிற்குச் சுகத்தினிருப்பைக் கூறுகின்றான். அதனால், சுழுத்தியில் யாவர்க்கும் சுவானுபவத்தாலே ஆநந்த மிருக்கின்றது." என்று வடமொழி வாசுதேவமனனங் கூறுவதிங் குணர்தற்பாற்றாம். உபாதி - புஷ்பம் - சந்தன முதலியனவாம். அநித்தியம் - அழிவதாம். அதிசயம் - பேதமாம்.



* நித்தியப் பிரளயம், நைமித்திகப் பிரளயம், தினப்பிரளயம், மகாப்பிரளயம், ஆத்தியந்திகப் பிரளயமெனப் பிரளயம் ஐவகைத்தாம்.

(1) க்ஷணத்திற்கு க்ஷணம் காரியமனைத்தும் தீபச்சுடரைப் போல நாசமாதல், அல்லது சுழுத்தி நித்தியப் பிரளயமாம்; (2) பிரஹ்மாவின் இராத்திரியாகிய நிமித்தத்தாலுண்டாகும் பூலோக முதலிய கீழ் மூன் றுலகத்தினாசம் நைமித்திகப் பிரளயமாம்; (3) பிரஹ்மாவின் தினத்தில் பதினான்கு மநுவந்தரங்களுண்டாம், அவற்றுள் ஒன்றனாசம் தினப்பிரளயமாம்; (4) பிரஹ்மாவின் நூறு வருஷத்திற்குப் பின் பிராஹ்மதேவரோடு ஆகாயமுதல் சர்வபூதங்களும் நாசமாதல்மகாப்பிரளயமாம்; (5) அகம்பிரஹமாஸ்மியென்னுந் தத்துவஞானத்தால் காரணத்தோடு (அவித்தையுடன்) ஜகத்திற்குண்டாகும் பாதம் (அத்தியந்தநிவிர்த்தி) ஆத்தியந்திகப் பிரளயமாம்; இப்பிரளயம் மோட்சமாம். இதிலஞ்ஞான விருளில்லையாம்.

எது சாக்கிர சொப்பனமென்னு மவஸ்தை யிரண்டனது உற்பத்தி லயங்களுக் கிடமாயிருக்கின்றதோ எதில் விசேஷவிருத்தி யனைத்து மொடுங்கி யபாவவடிவமா யிருக்கின்றனவோ அந்தத் தமோகுண பரிணாம சம்ஸ்கார வடிவப் புத்திவிருத்தி சுழுத்தியவஸ்தையாம்.

சுழுத்தி க்ஷீண சுழுத்தி, காட சுழுத்தியென விருவகைத்தாம்; அவற்றுள்,

(1) புருஷனெதினின்றும் விழிப்பித்தலின்றித் தானே விழித்துக் கொள்ளுகின்றானோ, அது க்ஷீண சுழுத்தியாம்.

(2) புருஷனெதினின்றும் விழிப்பித்தாலன்றி விழிக்கின்றதில்லையோ அது காட சுழுத்தியாம்.

144. பலகலையு முணர்ந்த குரு மொழிந்தபடி யிவனுமநு பவம்வி டா மல், பலமலரின் மதுப்போலச் சச்சிதா னந்தமொன்றும் பரமா ர்த் தத்தைப், பலபொழுதுங் கண்மூடிச் சமாதியிருந் தான்விழி த்துப் பார்த்த போது, பலவடிவாஞ் சராசரசித் திரங்களெலாந் தோன்றுமொரு படமா னானே.

---

யல்லவா? அதனால் உனது வடிவம் ‡சச்சிதாநந்தமாம். இவ்வாறு நீ சச்சிதா நந்தவடிவமா யிருத்தலைப் புத்தியால் யூகித்தறிந்து † சஜாதீய விஜாதீய சுவ கத பேதரகித பரிபூரணப் பிரஹ்மமா யிருக்கக்கடவாய். 143

சீடன், குருவின்ருளால் சமாதி கூடிச் சந்தேகந் தெளிந்தமை கூறல்.

‡ ஞான சாஸ்திரம் பலவற்றையும் ஐயந்திரிபற வுணர்ந்து அதனால்

---

‡ பிரளய முதலியவற்றில் நீ யில்லா விடத்து ஆண்டுள்ள அஞ்ஞான வடிவ விருளை யறிதல் முடியாதாகலின் சத்தாகவும், அறிவதால் சித்தாகவும், சுழுத்தியில் சுகவடிவா யிருத்தல் விழித்தபோது நான் சுகமா யுறங்கினே னென்னும் ஸ்மிருதியால் நன்கு விளங்குதலின் ஆநந்தமாகவு மிருக்கின்றா யென விளக்கியவாறாம்.

†பிரஹ்மம் ஸஜாதீய விஜாதீய ஸ்வகத பேதரகிதமாயிருக்கின்றது. தனக் குச் சமான ஜாதியோடுள்ள பேதம் ஸஜாதீயமாம்; அது ஒரு பிராமணனுக்கு மற்றொரு பிராமணனோடுள்ள பேதம்போல்வதாம்; தனக்கு அன்னிய ஜாதி யோடுள்ள பேதம் விஜாதீயமாம்; அது பிராமணனுக்குச் சூத்திரனோடுள்ள பேதம்போல்வதாம்; தனக்குத் தன் அவயவங்களோடுள்ள பேதம் ஸ்வகத பேதமாம்; அது பிராமணனுக்குத் தனது கைகால் முதலிய அவயவங் களோ டுள்ள பேதம்போல்வதாம். எல்லாம் ஒரே பிரஹ்ம ஸ்வரூபமா யிருத் தலாலும் ஸஜாதீயமான வேறு பிரஹ்ம மில்லாமையாலும் பிரஹ்மம் ஸஜா தீய பேதரகிதமாம்; பிரஹ்ம சேதனத்துக்கு வேறாகத்தோன்றும் ஜடப்பிர பஞ்சம் விஜாதீயமாம்; பிரபஞ்சம் சத்தியமானால் பிரஹ்மம் விஜாதீயபேத சகி தமா யிருக்கும்; ஆனால், பிரபஞ்சம் சத்தியமன்று; ரஜ்ஜுவிற் கற்பிதமாயுள்ள சர்ப்பம்போல மித்தையாம். எது மித்தையோ அது அதிஷ்டானத்தினும் வேறுபடுகிறதில்லை; ஆதலால், பிரஹ்மம் விஜாதீய பேதரகிதமாம்.

பிரஹ்மம் நிரவயவமா யிருக்கின்றது. சச்சிதாநந்தங்கள் பிரஹ்மத்தின் தர்மங்களாம்; அவயவங்களன்று. புஷ்பத்தின் ஸ்பரிச ரூப ரஸ கந்தங்களாகிய குணங்கள்போலச் சச்சிதாநந்த தர்மங்கள் பிரஹ்மத்தின் ஸ்வரூபமேயாம்; அதனின் வேறன்று. ஆதலால், பிரஹ்மம் சுவகதபேதரகிதமா மென்பதினு ணர்தற்பாலதாம்.

‡ வேதாந்த சாஸ்திராப்பியாசஞ் செய்து அதன் பொருளை யுள்ளவா றறிந்து ஜீவப்பிரஹ்ம ஐக்கிய நிச்சயத்தால் ஆத்மஞானத்தில் நிலைத்தவர் குரு வாவரென்பது ஈண்டுக் காட்டப்பட்டது. "ஆனாற் கல்வியறி வடக்கம் வைராக மாதியாங் குணமுடைச் சற்குரு" என்று வேதாந்த சூடாமணி கூறுவது மறிக.



145. இதயமொத்த சற்குருவே நமக்கிதுவே விநோதமன்றி யினிவே றுண்டோ, அதையுரைத்து மதைநினைத்து மிருப்பதன்றோ ஞானி களுக் கான நீதி, முதலுரைத்த துரியாதீ தமுமேழாம் பூமியுமக் கியமா மென்ற, பதமுமதன் வகையுமெனக் கெளிதாகத் தெளி யும்வண்ணம் பணித்தி டீரே.

---

சமாதி செவ்வையாகச் சித்திக்கப்பெற்றுள்ள தனது குருநாதன் உப தேசித்தவாறு பல புஷ்பங்களினின்றும் தேனீக்களெடுத் தொன்றாகச் சேர்த்த தேனைப்போல ஏகரசமான சச்சிதாநந்தமென்னும் பரமார்த்த (உண்மை) நிலைமையை இச்சீடனும் சுருதி யுக்திக்கியன்றதான தனதனுபவத் தினை விடாதுட்கொண்டு வெகுநேரங் கண்களை மூடிச் §சமாதியி லிருந்தான்; அவ்வாறு சமாதியி லிருந்தவன் பிராரத்த கருமவசத்தால் சமாதியினின் றும் விழித்துத் தன்னைப் பார்த்தான்; பார்த்தபோது ¶ அநேக பிரகாரமாக விளங்குஞ் சராசரமா (இயங்குதிணை, நிலைத்திணையா)கிய சித்திரங்க ளியா வுந் தோன்றுகின்ற வொரு சித்திரப்பட (சச்சிதாநந்த வடிவப் பிரஹ்ம)மாக விளங்கினான். 144

சீடன், தன தனுபவத்தை வியந்து கூறி "எவனா கிலுமிந்தத் துரியா தீதத்தி லேழாம் பூமியி லிருந்தானேல்" என்று முன்னர்க் குருநாதன் கூறியதையும் அதன் வகையையு முணர்தற்பொருட்டு வினாவுதலும், அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வினா :—அவ்வாறு விளங்கிய சீடன் வியப்பும் அன்பும் மேலிடக் குருவைநோக்கி, யான்வினாவிய வினாக்கட்கெல்லாந்தக்கவாறு விடை யருளுவதா லெனது மனத்திற்கொத்துள்ள சற்குருமூர்த்தியே! இகலோக சம்பந்தமான இஷ்டப் பிராப்தி அநிஷ்ட நிவிர்த்தியின் பொருட்டுச் செய்யும் உழவு முதலியனவும், சுவர்க்க சித்தியின்

---

§ தியானிக்கின்றவன் தியானமென்னு மிரண்டையும் விட்டுக் காற் றில்லாதவிடத்துள்ள தீபம்போலத் தியானிக்கப்படும் பொருளொன்றை மாத்திரம் விஷயஞ் செய்யுஞ் சித்தம் சமாதி யெனப்படும்.

¶ பட்டினத்தடிகள் திருக்கழுமல மும்மணிக்கோவையில் "எந்தைநின், திருவளர் நாட்டங் கருணையிற் பெறலும், யாவையு மெனக்குப் பொய்யெ னத் தோன்றி, மேவரு நீயே மெய்யெனத் தோன்றினை, ஓவியப் புலவன் சாயல்பெற வெழுதிய, சித்திர விகற்ப மெல்லா மொன்றில், தவிராது தடவி னர் தமக்குச், சுவராய்த் தோன்றுந் துணிவுபோன் றனவே" என்று தம தனுபவங் கூறியவாறு மீண்டறிதற்பாலதாம்,

பொருட்டுச் செய்யும் வேள்வி முதலியனவும், மோட்ச சாதனமான ஞான சித்தியின்பொருட்டுச் செய்யும் சிரவண முதலியனவுமின்மையால் கிருத கிருத்தியராயுள்ள நமக்கு இவ்விசாரமே விநோதமாக விருப்பதல்லாமல், இனி விநோதமாக விருக்கத்தக்க வேறொன்றிருக்கின்றதா ? இல்லை யல்லவா ? § பாமரன், விஷயி, சிஞ்ஞாசு என்னும் புருஷர்களுள் சிஞ்ஞாசு வந்தால் அச்சிஞ்ஞாசுவிற்கு அந்தப் பிரஹ்மத்தை யடையும் வழியை யுபதேசித்தும், தனித்துள்ளபோது சிவோகமென அந்தப் பிரஹ்மத்தை யியல்பாகவே சிந்தனை செய்து மிருப்பதல்லவா ஞானவான்கட் குரிய நீதியா (ஒழுக்கமா)ம். இவ்வாறிருத்தலால், தேவரீர் முன்னர்க் கூறிய துரியாதீதமும் ஏழாம் பூமியுமுக்கியமாகு மென்ற பதமும் அதன் கூறுபாடும் அடியேனுக்கெளிதாகத் தெரியும்படி அவற்றைக் கூறியருளல்வேண்டும். 145

§ தனித்திருந்து பிரஹ்ம சிந்தனை செய்தல், முமுட்சுக்கள் வந்தபோது அவர்கட்கதனைச் சொல்லுதல், சமான அப்பியாசி வந்தபோது ஒருவர்க்கொருவ ரதனை யுசாவுதலென் றிவ்வாறு இவ்வொன்றன் கண்ணேயே அழுந்துதற் றன்மையாகிய தற்பரத்தன்மை பிரஹ்மாப்பியாசமாம்.

இலக்கணம், தருக்கம், காவியம், ஜபம், யாகம், தியான முதலியவற்றுள் எதிலெதில் எவர்க்குப் பிரவிர்த்தி யுண்டாகின்றதோ அதில் அதில் அவர்க்குச் சாமார்த்திய முண்டாவது போலப் பிரஹ்மாப்பியாசப் பிரவிர்த்தியுடையார்க்கும் அதிற் சாமார்த்திய முண்டாமென்பதிங் குணர்தற்பாலதாம்.

"எவ்வாற்றா னாயினும் அந்தப் பிரஹ்மாத்ம தத்துவத்தை யடிக்கடி சிந்தித்தல் வேண்டும்; அஃதாவது வேதாந்த சாஸ்திரங்களைக் கேட்டலாலாவது சொல்லுதலாலாவது வேதாந்த புஸ்தகங்களைப் பார்த்தலாலாவது படித்தல் படிப்பித்தல்களா லாவது அந்தப் பிரஹ்மாத்ம தத்துவத்தை மீண்டும் மீண்டும் அநுசந்தானஞ் செய்தல் வேண்டும். இதனையே தத்துவஞானத்தினப்பியாசமாக வறிக" என்று தத்துவாநுசந்தானம் நான்காம் பரிச்சேதத்திற் கூறுவதிங்குணர்தற் பாலதாம்.

(1) இவ்வுலகத்தில் விலக்காயும் விதியாயுமுள்ள போகங்களில் பிரியமுள்ளவனாய், சாஸ்திர ஸம்ஸ்கார மின்றி யிருப்பவன் பாமரனாவன்; (2) சாஸ்திராநுசாரமாக விஷயபோகங்களை யனுபவித்துக்கொண்டு இகபர லோகங்களின் போகங்களை யடையக் கருமஞ் செய்பவன் விஷயியாவன்; (3) தன்னை (ஆத்மாவை)யறிய விரும்புகின்றவன் சிஞ்ஞாசுவாவன்; (4) தன்னை (ஆத்மாவை) யறிந்தவன் (தன்னை யறிந்து தானறிவாநந்த வடிவமாக விளங்குகின்றவன்) ஞானியாவனென்க.



146. வினவுமிடத் தஞ்ஞான பூமிகளேழ் ஞானபூ மிகளே ழென்பார்,
இனியவற்று ளஞ்ஞான பூமிகளே ழையுமுந்தி யியம்பக் கேளாய், தனிவித்துச் சாக்கிரஞ்சாக் கிரமகா சாக்கிரஞ்சாக் கிரத்தைச் சார்ந்த, கனவுகனுக் கனவுசாக் கிரஞ்சுழுத்தி யென்றேழு பேர் கணித்தார் மேலோர்.

147. முந்துவகண் டத்தெழுமோ ரறிவுமாத் திரமதுதான் முதல்வித்தாகும், இந்தவறி விற்பண்டில் லாவகந்தை முளைபோலா மிது நனவாம், வந்துவந்து பிறவிதோறு மகமமதை வளருமது மகாநனவாம், நந்துமகங் கோடுநனவின் மனோராச்சி யஞ்சேயலே நனுக்க னவே.

சீடனுக்கு ஞானபூமிகளை யுபதேசிக்கத் தொடங்கிய ஆசிரியர் முன்னர் அவற்றிற்கு விரோதமாயுள்ள அஞ்ஞான பூமிகளைக் கூறல்.

## அஞ்ஞான பூமி.

கு—விடை :—அன்பனே ! அறிஞர் † அஞ்ஞான பூமி யேழ்வகைத்தா மென்றும், ஞானபூமி யேழ்வகைத்தா மென்றும், பூமியின் வகையைக் கூறுவர். இனி யப்பூமிகளுள், அஞ்ஞானபூமி யேழையு முன்னர்க் கூறுகின்றோம்; அவற்றை நீ கேட்பாயாக.

சீ—வினா:—ஆண்டகுருவே ! அவற்றைக் கூறியருளல் வேண்டும்.

கு—விடை:—அன்பனே! (1) பீஜ ஜாக்கிரம், (2) ஜாக்கிரம், (3) மகா ஜாக்கிரம், (4) ஜாக்கிர சொப்பனம், (5) சொப்பனம், (6) சொப்பன ஜாக்கிரம், (7) சுழுத்தி யென்பன அஞ்ஞான பூமிகளாம். 146

(1) ‡ சிருஷ்டியி னாரம்பத்தில் அல்லது ஜாக்கிரத்தி னாரம்பத்தில் மாயையோடு கூடிய சேதனத்தினின்றும் வெளிப்பட்ட ஆபாசசேதனமே (சீவனே) பிரதமாவஸ்தையான பீஜ ஜாக்கிரமாம். (பீஜம், வித்து, விதை,

† ஞானபூமிகளுக்கு விரோதமா யிருப்பன பீஜசாக்கிர முதலியனவாம்; அவை அஞ்ஞானபூமி யெனப்படும். பூமியென்ப தீண் டவஸ்தை (நிலை)யாம். "மற்றுமொன் றுரைக்க வள்ளலே கேட்பாய் மடமையாம் பூமியேழ் பதமாம், முற்றுள ஞான பூமியேழ் பதமாம்" என்று ஞான வாசிட்டங் கூறுவதறிக.

‡ "சித்திலே நின்றோ ரறிவுபே ரின்றிச் செறிமல மின்றிமேல் வந்து, வர்த்தியா நிற்குஞ் சித்தசீ வாதி வருபெயர் செயல்களுக் கிடமாய், வித்துரு பமதாய் நின்றிடு மதனால் விதைநன வாமுதற் பதமே" என்பது ஞான வாசிட்டம்.

148. உண்டுறங்கி மனோராச்சி யஞ்செயல்சொப் பனமெனும்பே ருடைய தாகும், பண்டுகனாக் கண்டுமறந் ததைமீண்டு நினைப் பதுசொப் பனநனவாம், மண்டுமிருண் மூடுவது சுழுத்தியா மஞ் ஞான வகைகள் சொன்னோம், விண்டுநிறை முத்திதரு ஞானபூ மிகளேழும் விளம்பக் கேளாய்.

மூலமென்பன ஒரு பொருட்கிளவியாம். தேகோற்பத்தியின்பின் வெளிப் பட்டு விருத்தியாகர்நிற்கும் சித்தம், புத்தி, அகங்கார முதலிய நாமங்கட்கும் அவற்றி னர்த்தங்கட்குங் காரணபூதமாய் நிற்றல்பற்றி இது பீஜ ஜாக்கிர மென்று கூறப்படுகின்றது.)

(2) ‡ இவ்வாபாச சேதனத்தில் முன்னில்லாத அகமமதை (யானென தென்னுந் தன்மை)கள் அங்குரம் (முளை) போலச் சூக்குமமாக வெழுதலே ஜாக்கிரமாம். (ஜாக்கிரம் - நனு.)

(3) ¶ இவ்வாபாச சேதனத்தின்கண் அகமமதைகள் பிறவிதோறு மிடைவிடாது சம்ஸ்கார வாயிலாக வந்து திடதரமா யுண்டாதலே மகா ஜாக்கிரமாம்.

(4) $ இச்சேதனம் சாக்கிராவஸ்தையில் * அகமமதை காரணமாக முன்னர்த் தானறிந்துள்ள விஷயத்தைப் பற்றியாவது பூரணமா யறியாத விஷயத்தைப் பற்றியாவது அதனதன் மயமாய் நின்று மனோராச்சியஞ் செய்தலே சாக்கிர சொப்பனமாம். (மனோராச்சியம் - வீணெண்ணம்.) 147

(5) † இச்சேதனம் உண்டுறங்கி விழித்து அற்பகாலத்தில் (தமதுற்பத் திக்கியன்ற காலதேசங்களைப்பெறாத) அநேக விஷயங்களைக் கண்டறிந்தன மென்று சிந்திப்பதே சொப்பனமாம்.

‡ “இதுவறி வுக்கு முதலவத் தையதா மிதத்துறப் பிறந்தபின் னிவ னுன், இதுவென தெனப்பண் டிலாமையா னெய்தா யெழுந்துள வறுதியே நனவாம்.” என்பது ஞான வாசிட்டம்.

¶ “இதுதனை யொழிய விவனவ னானே யிதுவது வென்னதென் றெண்ணும், இதுமுதற் பிறப்பிற் றொடர்ச்சியாய்ப் பருக்கு மிந்தநிச் சயம் பெரு நனவாம்” என்பது ஞான வாசிட்டம்.

$ “அறிந்துள தெனினு மறியலா தெனினு மழுந்துறத் தானது வாகிச், செறிந்துள நனவிற் சித்தராச் சியமே செய்வது நனக்கனு வாகும்” என்பது ஞான வாசிட்டம்.

† “அற்பகா லத்தி லநேகமாஞ் செயல்கண் டறிந்தன மெனுங்கன வழிந்து, முற்படு செயலை நினைவது கனவாம்” என்பது ஞான வாசிட்டம்.



(6) † இச்சேதனம் பூர்வம் சொப்பனத்திற் கண்டு மறந்த விஷயங் களை மீண்டுஞ் சிந்தித்து நினைப்பதே சொப்பன சாக்கிரமாம்.

(7) $ இச்சேதனம் மேற்கூறிய ஆறவஸ்தைகளும் நீங்கப்பெற்று மேலனுபவிக்கத் தக்க சுபாசுப கருமங்களின் சம்ஸ்கார மிருத்தற்கிடமாகிய அஞ்ஞானவடிவ விருளால் மூடப்பட்டுள்ள நிலைமையே சுழுத்தியாம்.

அன்பனே! இதுகாறும் § யாம் அஞ்ஞான பூமியின் கூறுபாடுகளைக் கூறினும்; இனி அவித்தையி னின்றும் நீங்கிச் சர்வவியாபகமாக விளங்கு மோட்சத்தைச் சீவனுக்குத் தருகின்ற ஞானபூமிக ளேழையும் கூறுகின் றேம்; அவற்றை நீ கேட்பாயாக. 148

† “முந்துகண் டதனைநா ளகன்று, பிற்படக் காணும் பொருள்களை மறந்து பெரும்பொழு துணர்வுற நோக்கும், சொற்பன நனவு போனன விற்கே தோன்றுமிச் செயல்கனு நனவே” என்பது ஞான வாசிட்டம்.

$ “அறுவகை யவத்தை யகற்றிய சீவ னடைந்துள வவத்தையி னியற் கை, யுறுசட மாகி மேல்வருந் துயர்கூ ருணர்வுள தாமிது சுழுத்தி” என்பது ஞான வாசிட்டம்.

பீஜ சாக்கிரம் சாக்கிரத்திற்கும், அது மகாசாக்கிரத்திற்கும், அது சாக் கிர சொப்பனத்திற்கும், அது சொப்பனத்திற்கும், அது சொப்பன சாக்கி ரத்திற்கும், அது சுழுத்திக்கும் காரணமா மென்ப தீண்டுணர்தற்பாற்றும்.

§ ஜாக்கிரம் :—(1) வர்த்தமான (நிகழ்கால) ஜாக்கிரத்திலுண்டாகுஞ் சொரூப சாட்சாத்காரம் சாக்கிர சாக்கிரம்; (2) ஜாக்கிரத்தி லுண்டாகும் சென்ற அல்லது இனிவரும் விஷயங்களைச் சிந்தித்தலாகிய மனோராச்சியம் சாக்கிர சொப்பனம்; (3) ஜாக்கிரத்தில் பிராந்தியா லுண்டாகும் ஜடசொரூப மாகிய விருத்தி சாக்கிர சுழுத்தி.

சொப்பனம்:—(1) யதார்த்தமாகிய பொருளைச் சொப்பனத்திற் காண் டல் சொப்பன சாக்கிரம்; (2) சொப்பனத்தில் இரச்சுச் சர்ப்பமுதலிய பிராந்திகளைக் காண்டல் சொப்பன சொப்பனம்; (3) கண்ட சொப்பனத்தின் மறதி சொப்பன சுழுத்தி.

சுழுத்தி :—(1) சாத்வீக விருத்தி பூர்வகமாகிய சுகசுழுத்தி சுழுத்தி ஜாக்கிரம்; (2) இராஜச விருத்தி பூர்வகமாகிய துக்க சுழுத்தி சுழுத்தி சொப் பனம்; (3) தாமச விர்த்தி பூர்வகமாகிய காட (ஆழ்ந்த) சுழுத்தி சுழுத்தி சுழுத்தியா மென்பன வீண்டறிதற்பாலனவாம்.

149. புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சைவிசா ரணையிரண்டாம் பூமி யா
கும், நலதநுமா னசிமூன்றாம் பூமிசத்து வாபத்தி நாலாம் பூமி,
சோலுமசம்சத் திப்பேரும் பதார்த்தாபா வனைப்பேருந் துரியப்
பேரும், மலினமறு மகனேயைந் தாறேழு பூமிகளா வகுத்தார்
மேலோர்.

---

ஞானபூமி.

சீ—வினா :—சிவசொரூபமாந் தேசிகமூர்த்தியே! அவற்றைத் திருவாய்மலர்ந்தருளல் வேண்டும்.

குரு—விடை :—அன்பனே! (1) சுபேச்சை, (2) விசாரணை, (3) தநுமாநசி, (4) சத்துவாபத்தி, (5) அசம்சத்தி, (6) பதார்த்தாபாவனை, (7) துரியமேன்பன ஞானபூமிகளாம். 149

1. முற்பிறப்பிலாவது இப்பிறப்பிலாவது செய்துள்ள நிஷ்காம கர்ம உபாசனைகளின் வலியால் சித்தசுத்தி யுண்டாயிருப்பவன் நல்லாரல்லாதாரது கூட்டத்தினின்றும் நீங்குதல்பெற்று நானிதுகாறும் மனைவி முதலியவரோடு கூடி மூடனாயிருக்குங் காரணமென்னை? இனி யவ்வாறிராது பிரஹ்ம நிஷ்டர்களாகிய ஞானிகளாலும் ஞான சாஸ்திரங்களாலும் சிவத்தை யறிவேனென்று சிவஞானத்தை யடைய விரும்பும் தீவிர விச்சையே ¶ சுபேச்சையாம்.

2. யான் சிவஞானத்தை யடையவேண்டுமென்னுந் தீவிர விச்சையுள்ள அவன் சாதுசங்கத்தோடு கூடியுள்ள சற்குருவை யடைந்து விதிப்படி வணங்கி, அவர் வாக்கால் ஜீவப் பிரஹ்மங்களின் அபேதத்தை யுணர்த்தும் வேதாந்த வாக்கியங்களைக் கேட்டு, அவற்றின் பொருள்கள் நன்றாய் மனதிற்பதியும் நிமித்தம் அவற்றை யுக்திகளால் மனனஞ் செய்தலே * விசாரணையாம்.

---

¶ சுபேச்சை - சுப - இச்சையென்று பிரிபடும்; அதன்பொருள் நன்மையை விரும்புதல் என்பது.

“நவையுறுமோ கத்தொடு நாமடைவ தென்னே
நல்லோரா னன்னூலா னன்றா ஞானச்,
சுவைபெறுது நிராசையினா லென்று நாடல்
சுபம்விரும்ப லாகும்” என்பது ஞானவாசிட்டம்.

* “இந்தச் சுபேச்சை முற்றிக், கரையறுநல் லோரியற்கை யாசாரங்கள் கைவருதல் விசாரமாக் கருதல் வேண்டும்” என்பது ஞானவாசிட்டம்.



150. துற்சங்க நிவிர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சை
யாகும், நற்சங்க மொழிவினவி ஞானநூல் பழகல்விசா ரணையா
நம்பி, முற்சங்க வேடணைகள் விடறநுமா னசியிந்த மூன்றி
னாலும், சற்சங்க மனதிலுண்மை யறிவுதித்தல் சத்துவா பத்தி
தானே.

151. தத்துவத்தின் மனமுறைத்து மித்தையெலா மறத்தலசம் சத்தி
யாகும், அத்துவிதா னந்தம்வருந் திரிபுடிபோம் பதார்த்தாபா
வனைய தாகும், வத்துநிலை யிருந்தபடி யிருந்தமவு னசுபாவந்
துரிய மாகும், இத்துரிய பூமியைமுன் றுரியாதீ தப்பதமென்
றதுவுங் கேளாய்.

---

3. அவன் இவ்விரண்டு பூமிகளின் அப்பியாச வலியால் குரு சாஸ்திர வாக்கியார்த்தங்களை விசுவசித்து நிதித்தியாசனஞ் செய்து அதன் அப்பியாச மிகுதியால் முன்னுள்ள மனைவி மக்கள் அர்த்தங்களிலுள்ள இச்சை நீங்குதலே §தநுமாநசியாம்.

4. இம்மூன்று பூமிகளின் அப்பியாச வலியால் அநாத்ம சம்ஸ்காரம் நீங்கப்பெற்று ஆத்ம சம்ஸ்காரத்தோடு கூடிய மனத்தின்கண் அவனுக்குச் சொரூப சாக்ஷாத்காரம் (தன்னையறிதல்) உண்டாதலே 150
†சத்துவாபத்தியாம்.

5. அவன் முற்கூறிய நான்கு பூமிகளின் அப்பியாச வலியால், ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தில் மனமழுந்தி நிற்க, மித்தையான நாமரூபங்க ளெல்லாவற்றையும் நினையாதிருத்தலே ‡அசம்சத்தியாம்.

---

§தநு - சூக்குமதமம்; சூக்கும தமத் தன்மையை யடைந்த மனத்திற்கு தநுமாநசி என்று பெயராம். தநுமாநசி எனினும் சித்தஞ் சிறுகலெனினும் ஒக்கும்.

“இனையசுகம் விரும்பலொடு விசார மென்ற விரண்டுநிறை தலும் விடயத் திச்சை மாற்றி, நினைவுகுவி வதுசித்தஞ் சிறுக லாகும்” என்பது ஞானவாசிட்டம்.

†சத்துவாபத்தி என்பது சத்துவ - ஆபத்தி எனப் பிரிபடும்; சத்துவம்- சொரூப சத்தை, ஆபத்தி - அடைவு. உண்மைநிலைமருவல் சத்துவாபத்தி என்பன ஒருபொருட்கிளவியாம்.

“வனைதருமவ் விரத்தியினா லுண்மைப் போத மன்னுதலே யுண்மைநிலை மருவ லாகும்” என்பது ஞானவாசிட்டம்.

‡ சம்சத்தி - (நாமரூபங்களின்)சம்பந்தம்; அஃதின்மை அசம்சத்தியாம். அசங்கம் அசம்சத்தி யென்பன ஒருபொருட்கிளவியாம்.

6. இவ்வைந்து பூமிகளின் அப்பியாச மிகுதியால் அவன் அத்துவிதாநந்தம் மேலிட அதனால் பாகியாந்தரமாயுள்ள திரிபுடிகள் நீங்கப்பெற்றிருத்தலே * பதார்த்தாபாவனையாம்.

7. இவ்வாறு பூமிகளின் அப்பியாச மிகுதியால் அவன் ஆன்ம சுபாவத்தில் இருந்தபடி யிருக்கும் மோன நிஷ்டையே ‡ துரியமாம்.

இத்துரிய பூமியை முன்னர் யாம் துரியாதீத பூமியென்று கூறியதன் காரணத்தையுங் கூறுகின்றோம்; நீ கேட்கக்கடவாய். 151

---

"அனையனவிர் நான்காலு முண்மைப் போதத் தழுந்தியயற் சங்கமற லசங்க மாகும்" என்பது ஞானவாசிட்டம்.

* பதார்த்தாபாவனை-பதார்த்த + அபாவனை எனப் பிரிபடும். பதார்த்தம் - பாகியாந்தர பதார்த்தங்களின் அநுசந்தானம் (பற்று); அபாவனை - அஃதின்மை. பதார்த்தாபாவனை - பதார்த்த நினைவொழிதல்.

"அறைந்தபத மைந்தாலுந் தானும் போதத்
தழுந்தியவின் பத்தமைவாற் புறனு முள்ளும்,
உறைந்தபதார்த் தங்கள்மறந் தயலோர் வன்பா
லுணர்வதுவே பதார்த்தநினை வொழித லாகும்"

என்பது ஞானவாசிட்டம்.

‡ ஞாதுரு ஞான ஞேயமென்னும் காண்பான் காட்சி காணப்படும் பொருள் வடிவத் திரிபுடி; நான்காம் ஐந்தாம் பூமிகளைப் போலப் பாவவடிவமாகவும், ஆறாம்பூமியைப்போல அபாவவடிவமாகவுந் தோன்றாதொழிய, தன்னாலும் பிறராலும் எழுதவில்லாத (சொரூபத்தில்) நிலைத்த மனத்தின் நிலை துரியமாம்.

"நிறைந்தவிவை யாறாலும் பேதம் போக்கி
நிலைபெறுதற் சுபாவத்தே நிற்ற றானே,
மறைந்தபொருள் வெளியாக்குந் துரிய மாகும்"

என்பது ஞானவாசிட்டம்.

இந்த ஞானபூமி யேழனுள் முதல் மூன்று பூமிகள் தத்துவ ஞானத்திற்குச் சாதனமும், நான்காவது பூமி தத்துவஞான வடிவமா யிருத்தலின் ஜீவன்முத்தி விதேக முத்திகளுக்குச் சாதனமும், ஐந்தாவது ஆறாவது ஏழாவது பூமிகள் ஜீவன் முத்தியின் விலக்ஷணாநந்தத்திற்குச் சாதனமுமாம்.

ஈண்டு முதலாவது சாதன சதுஷ்டயபூமியும், இரண்டாவது சிரவண மனன பூமியும், மூன்றாவது நிதித்தியாசன பூமியும், நான்காவது பிரஹ்மவித்துப் பூமியும், ஐந்தாவது பிரஹ்மவித்வான் பூமியும், ஆறாவது பிரஹ்மவித் வரியான் பூமியும், ஏழாவது பிரஹ்மவித் வரிஷ்டன் பூமியுமாம்.



152. முற்புவிமூன் றினுமுலகந் தோன்றுதலாற் சாக்கிரமா மூன்றற்
கப்பால், சொற்பனமா மதுவுமேள்ள நழுவுமைந்தாம் பூமியே
சுழுத்தி யாகும், அற்புதமாஞ் சுகாநுபவ மிகுமாறும் புவிதுரிய
மதற்கப் பாலோர், கற்பனையி லாதவிட மதீதமென்று மௌன
மாக் காட்டும் வேதம்.

153. துரியநிலந் தனைத்துரியா தீதமெனின் மயக்கமென்று சுருதிமே
லோர், அரியதோரு விதேகமுத்தி யதீதமென்பா ரதுகணக்கி
லாறும் பூமி, மருவுசுழுத் தியிற்காட சுழுத்தி யென்பா
ரென்பதுநீ மனத்திற் கொள்வாய், பெருமைதரு ஞானபூ மியின்
விகற்ப மின்னமுண்டு பேசக் கேளாய்.

---

துரிய பூமியைத் துரியாதீதபூமி யென்றதற்குக் காரணங் கூறுதற் பொருட்டு இவ்வேழு பூமிகளையும் பஞ்சாவஸ்தைகளாகக் கூறல்.

அன்பனே!(அதிகாரி புருஷனுக்குச்)சுபேச்சை முதலிய மூன்று பூமிகளிலும் ஆத்மஞானம் பூரணமாகச் சித்தித்தலின்மையின், உலகம் (பரோக்ஷ அநித்தியமாய் அபரோட்ச சத்தியமாய்த்)தோன்றுதலாலே அம்மூன்றும் ஜாக்கிராவஸ்தையாம்; நான்காம் பூமியில் உலகம் சொப்பனம்போலப் பிராத்தியக்ஷமாக மித்தையாய்த் தோன்றுதலால் அது சொப்பனாவஸ்தையாம்; அம்மித்தியாத் தோற்றமுங் கிரமங்கிரமமாக நீங்கா நிற்கும் ஐந்தாம் பூமியில் யாதொன்றும் சுழுத்திபோலத் தோன்றா தொழிய (அவன்) சின்மாத்திரமாக நிற்றலால், அது சுழுத்தியவஸ்தையாம்; ஆநந்தாநுபவ மிகுதற்குக் காரணமான ஆறாம்பூமி இம்மூன்றவத்தைக்கும் வேறாயிருத்தலின், துரியமாம். இத்துரியத்திற் கற்பாற்பட்டுச் சத்தசத்தென்னுங் கற்பனைக ளொரு சிறிது மில்லாத பூமி ஏழாவது பூமியாகிய துரியாதீத பூமியாம். இத் துரியாதீதப் பூமியைச் † சுருதி மௌனமாகத் தரிசிப்பிக்கும். 152

சீ—வினா:—சற்குருவே! அவ்வாறு கூறின் மயக்கமாகாதோ?

குரு—விடை:—அன்பனே! சுருதிப் பொருளுணர்ந்த தூயவர் துரிய பூமியைத் துரியாதீத பூமியெனக் கூறினால், மந்த (ஸ்தூல புத்தியுடைய) ஜிஞ்ஞாசுகட்கு மயக்க முண்டாகுமென்றெண்ணி, விதேக கைவல்லியத்தைத் துரியாதீதபூமி யென்று கூறுவர்; அவ்வாறு கூறுங் கணக்கின்படி,

---

† "தன்பதி யல்லாப் பேர்கள் தமைபல்ல னல்ல னென்றாள், அன்பனைக் கேட்டநேர மவள்வெட்கி மௌன மானாள், என்பது போல நீக்கி யிதன்றிதன் றெனச்சே டித்த, பின்பரப் பிரமந் தன்னைப் பேசாமற் காட்டும் வேதம்" என்பதுபோ லிது அதத்வியாவிருத்தி லக்ஷணமாம்.

154. முன்னிலங்க ளேறியமு வருமப்பி யாசிகளா முத்த ரல்லர்,பின்
னிலங்கள் வரன்வரியான் வரிட்டனெனுஞ் சீவன்முத்தர் பேத
மாகும், சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே பிரமவித்தாந் தூய
முத்தர், இன்னமுமப் பூமிகளின் பெருமைதனை நீயறிய யான்
சோல் வேனே.

---

பதார்த்தாபாவனை யென்னும் ஆறவது பூமியை $ க்ஷீன சுழுத்தி கர்ட சுழுத்தியென்னு மிருவகைச் சுழுத்தியுள் கர்டசுழுத்தி யென்பர்; (இவ்வாறு கூறுங்கணக்கால் ஏழாவது பூமியைத் துரியாதீதமென்னுது துரியமென்று கூறுவர்). இவ்வாறவர் ஞானபூமியின் வகையைச் சிறிது வேறகக் கூறு வதையும் நீ மனத்திற்கோண் டமைந்திருப்பாயாக.

சீ—வினு:—ஐயனே! ஞானபூமியின் வேறுபாடு இன்னமு மிருக்குமாயின், அதனையுந் திருவாய்மலர்ந்தருளல் வேண்டும்.

குரு—விடை :—அன்பனே! உண்டு. அவ்வேறுபாட்டையுங் கூறுகின் றேம்; நீ கேட்பாயாக. 153

(சுபேச்சை, விசாரணை, தநுமாநசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த் தாபாவனை, துரிய மென்னும் ஞானபூமி யேழனுள்) முன்னுள்ள சுபேச்சை-விசாரணை-தநுமாநசி யென்னு மூன்று பூமியிலு மேறி யிருக்கும் மூவரும் ‡ அப்பியாசி (ஜிஞ்ஞாசுக்) களேயன்றிச் சீவன்முத்தரல்லர்; * பின்னுள்ள அசம்சத்தி, பாதார்த்தாபாவனை, துரியமென்னு மூன்று பூமியிலு மேறியிருக் கும் மூவரும் (முறையே) வரன், வரியான், வரிஷ்டனென்று சொல்லப்படு வர்; இவற்றினிடையேயுள்ள சத்துவாபத்தியென்னும் நான்காவது பூமியி லேறியிருக்கும் ஞானிகள் பிரஹ்மவித்தென்று கூறப்படுவர். வித், வரன், வரியான் வரிஷ்டனென்னு மிந்நால்வரும் சீவன் முத்தராவர். 154

---

$ ஈண்டு ஐந்தாவது பூமியை க்ஷீண சுழுத்தியென்றும், ஆருவது பூமியைக் காடசுழுத்தி யென்றும், ஏழாவது பூமியைத் துரியமென்றுங் கொள்ளல்வேண்டும்.

‡ "உலகங் கனவெனக்கண் டுள்ள நற்கருமஞ் சேர்ந்துபிறப் பிரண்டுளனப் பியாசி" என்று வேதாந்த சூளாமணி கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

* 1. மகா வாக்கிய விசாரத்தாலுண்டாய ஞானத்தால் ஆவரண அத்தியாசங்களினிவிர்த்தி யுண்டாகப் பூரணாநந்தப் பிரஹ்மத்தைப் பிரத்தியகாத்ம ஞானவடிவத்தால் ஸாக்ஷாத்தாக (பிரத்தியட்சமாக) அறிந்தவன் பிரஹ்மவித்தெனப்படுவன். அவனே சத்துவாபத்தியென்னும் நான்காவது பூமியிலிருப்பவன்; அவனே சுரோத்திரிய பிரஹ்மநிஷ்டகுரு; அவனே உபதேச வாயிலாக வேதாந்த சம்பிரதாயங்களில் அதிகாரிகளைப் பிரவிர்த்திக்கச் செய்



---

பவன். அவனுக்கு இந்தச் சாக்கிரப் பிரபஞ்சம் சொப்பனப் பிரபஞ்சம் போலத் தோன்றுவதாம். எங்ஙனம் சொப்பனங் கண்டெழுந்தவன் அச் சொப்பனப் பிரபஞ்சத்தை ஸ்மரித்தானுயினும் அதனை மித்தையாகவே மதிக்கின்ருனே, அங்ஙனமே இவனும் பிராரத்த கருமப்பயனை யனுபவிக்குங் காலத்தில் சாக்கிரப் பிரபஞ்சத்தைக் கண்டானுயினும் அதனை மித்தை யாகவே மதிக்கின்ருன்.

2. எவனுக்குப் பிரஹ்ம ஞானத்தின்பின் புத்திரன் பொருள் முதலிய வாசனைகளும் தேக லோக சாஸ்திர வாசனைகளும் நீங்குதற்பொருட்டுச் சின்மாத்திர வாசனையும் மைத்திரி முதலிய (தேகவாசனை முதலியவற்றின்) விரோதி வாசனைகளின் திடதர அப்பியாசமுமுண்டாய், சீவன் முத்தியின் பொருட்டு (தேகாதி) வாசனை நசித்திருக்கின்றதோ அவனுக்கே முற்கூறிய பிரஹ்ம வித்தினும் வரிஷ்டத் தன்மை யுண்டாகின்றது. அவனே அசம்சத்தி யென்னும் ஐந்தாவதாகிய யோகபூமியிலிருப்பவன். அவனே பிரஹ்மவித் வர னெனப்படுவன். அவனுக்கிந்தச் சாக்கிரப் பிரபஞ்சம் சுழுத்தி போன்றிருப் பதாம். சுழுத்தியிலிருப்பவனுக்கு விருத்தியனைத்தும் நித்திரையிலொடுங்கி யிருத்தல்போல இவனுக்கும் சாக்கிராவஸ்தையில் இந்திரிய முதலியன விருப்பனவாகக் காணப்படினும், அவற்ருல் விஷயங்கள் கிரகிக்கப்படாமை யால், இவன் சுழுத்தனும். இவனுக்குப் பெரும்பான்மையும் அடங்கிய விருத்திகள் நிர்விகர்பமாகவே யிருக்கின்றன; ஜடபாதர் முதலாயினுரைப் போல ஒரு சமயம் உபதேசத்தின் பொருட்டும் அல்லது சரீர யாத்திரையின் பொருட்டும் விருத்திக ளெழுதலு முண்டு.

3. எவன் பிரஹ்ம ஞானத்தின்பின் வாசநாக்ஷயம் மநோநாச முதலிய வற்ருல் பூரணனுயிருக்கின்ருனே, அவன் பதார்த்தாபாவனையென்னும் ஆருவது பூமியிலிருப்பவன். அவன் முற்கூறியவரனிலும் வர (மேலானவ ஞக விருத்தலால், பிரஹ்மவித் வரியா னெனப்படுவன். காட சுழுத்தியுடைய வன் நித்திரையினின்றும் தானே விழித்துக்கொள்ளாது பிறரெழுப்ப விழிப் பது போல இவனும் சதா நிர்விகற்பப் பிரஹ்மத்தில் லயமாயிருத்தலால், அவதூதர் முதலாயினேரைப் போலத் தானே உத்தான தசையை (விழித்துக் கொள்ளும் நிலையை) யடைவதில்லை; ஒரு சமயம் பிறர் விழிப்பிக்க விழித்தலுமுண்டு. (அவதூதர் - தத்தாத்திரேயர்.)

4. எந்தப் பிரஹ்ம வேத்தாவின் (பிரஹ்மத்தை யறிந்தவனது) மன மும் வாசனையும் அத்தியந்தம் நாசமாயிருக்கின்றனவோ அவன் அந்த அகண் டப் பிரஹ்மத்தோடு தன்மயனுயிருத்தலின், ஒருபோதும் பிறராலும் விழிப் படைவதில்லை; நீர் நிரம்பிய கடத்தைத் தடாகத்தில் வைத்தபோது அந் தக் கடத்தின் உள்ளிலும் வெளியிலும் நீர் நிறைந்திருப்பதுபோல........

155. நாலாம்பூ மியில்வருமுன் மூன்றுபூ மியுமடைந்து நடந்து மாண்
டோர், மேலான பதமடைந்து பிறந்துமெள்ள மெள்ளவந்து
வீடு சேர்வார், மாலான பவத்தில்விழார் முதற்பூமி கிடைப்பது
வே வருத்த மைந்தா, காலான முதற்பூமி கைவந்தான் முத்தி
யுங்கை வந்த தாமே.

முன் மூன்று பூமியை யடைந்தோர் பெறும்பயனையும், முதற்
பூமியி னருமையையுங் கூறல்.

ஞானபுத்திரனே! $ சத்துவாபத்தியென்னும் நான்காம் பூமியில் வருவ தற்கு முன்னே சுபேச்சை-விசாரணை - தநுமாநசி யென்னுமப்பியாச பூமி



கள் மூன்றினையுமடைந்து அப்பியசித்து மரணமடைந்தவர் தேவ விமானத்தின் மேலேறிச் சென்று சுவர்க்கமுதலிய பதவிகளை யடைந்து ஆண்டுள்ள போகங்களை யனுபவித்து அப்போக மனுபவித்தற்குரிய வினை நசித்த பிறகு அப்பதவிகளினின்றும் நீங்கிப் பூமியில் ஞானிகள் குலத்திலேயாவது யோகிகள் குலத்திலே யாவது பிறந்து காலக்கிரமத்தில் நான்காம் பூமியில் வந்து ஞானிகளாய் மோட்சமடைவர்; மயக்கத்திற்கேதுவான பிறவிகளை யடையார். ஈண்டுக் கூறிவரும் ஞானசப்த பூமிகளுள், சுபேச்சையென்னு முதற்பூமி கிடைப்பதே எவர்க்கும் பிரயாசமாம். விசாரணை முதலிய பூமிகளை யடைவதற் கேதுவான † அம்முதற்பூமி ஒருவனுக்குச் சித்திக்குமாயின், முத்தியு 155
மவனுக்குச் சித்தித்ததாம்.

---

ஏழாவதாகிய துரியமென்னும் யோக பூமியிலிருத்தலால், ரிஷபர் முதலியோரைப்போல (ஆத்ம) சொரூபத்தினின்றும் சலிக்கின்ற (பிரிகின்ற) தில்லை. இவனே பிரஹ்மவித்வரிஷ்டன்" என்று விசார சந்திரோதயங் கூறுவதும்,

(1) "சத்துவாபத்தியென்னும் நான்காம் பூமியையுடைய பிரஹ்மவித்தென்னுஞ் சீவன் முத்தனாகிய வித்வானுக்குத் தனது சொரூபத்தின் அவிசார காலத்தில் சாக்கிராவஸ்தை போன்ற அவஸ்தை யிருக்கின்றது; விசார காலத்தில் சொப்பனத்தினின்றும் விழித்தவனுக்குள்ள அவஸ்தை போன்ற அவஸ்தை யிருக்கின்றது.

(2) அசம்சத்தியென்னும் ஐந்தாம் பூமியையுடைய பிரஹ்மவித் வரனென்னுஞ் சீவன் முத்தனாகிய வித்வானுக்குச் சமாதியினின்றும் விழித்த காலத்தில் சொப்பனத்தினின்றும் விழித்தவனுக்குள்ள அவஸ்தை போன்ற அவஸ்தை யிருக்கின்றது; சமாதிகாலத்தில் சுழுத்திபோன்ற அவஸ்தை யிருக்கின்றது.

(3) பதார்த்தாபாவனையென்னும் ஆறாம் பூமியையுடைய பிரஹ்மவித் வரியானென்னுஞ் சீவன் முத்தனாகிய வித்வானுக்கு அநேகமாய்ச் சுழுத்தி போன்றதும் ஒரு காலத்தில் சொப்பனத்தினின்றும் விழித்துக்கொண்டமை போன்றதுமாகிய அவஸ்தையிருக்கின்றது.

(4) துரியமென்னும் ஏழாம் பூமியையுடைய பிரஹ்மவித் வரிஷ்டனென்னுஞ் சீவன் முத்தனாகிய வித்வானுக்கு எப்போதும் காட சுழுத்தி போன்ற அவஸ்தை யிருக்கின்றது." என்று பாலபோதங் கூறுவது மிங் குணர்தற் பாலனவாம்.

$ " அவனுக் கெங்க னேயுண்டா மறைந்த நன்மை யிதுநிற்க
விவண முயர்பூ மியிலொன்றை யிரண்டை மூன்றும் வேறொன்றைக்
கவர்வுற் றடைந்தோ னுயிர்மாய்ந்தாற் கலந்து மேவுங் கதியேது
தவறிற் பெரியோ யுரையென்னச் சான்ற வசிட்ட னுரைசெய்வான்.

மூட ளுகிப் பலகுற்ற மூடு மவனுக் கநேகமென
நீடு பிறப்பா முதற்பூமி நேரு மட்டும் பிறப்பகலா
நாடு மிதுவன் றியிற்காக தாலீ யம்போ னல்லநெறி
கூடு மெனினு மதனாலே குறைவி னிராசை யதுபிறக்கும்.

அன்றி நல்லோர் கூட்டரவா லடுத்த விராக மதுபிறக்கு
மொன்று நிராசை யுறுபோதே யோக பூமி யுறற்றப்பா
துன்று மதனாற் பிறப்பகலுந் தொகுநூற் பொருளின் சுருக்கமிதா
நின்ற யோக பூமியுட னிதன மடைந்தோர் நெறிகேளாய்.

யோக பூமி யம்சம்விடா துறலாற் பழய தீவினைபோ
மாக விமான மதன்பின்பு வந்து கொடுபோய் வானவர்வாழ்
நாக முதலா முயர்பதியி னன்மே ருவின்சூழ் பொழின்முழையிற்
போக மடவா ரொடுங்கூடிப் புணர்ந்து சிந்தை களிகூர்வன்.

அருந்து போக மாய்தலினு லளவில் பண்டை யிருவினையும்
பொருந்த மாயு மப்போது புவியிற் பிறப்பர் யோகிகடாங்
திருந்து செல்வங் குணஞ்சுத்தஞ் சிறந்த நல்லோர் மனைப்பிறந்து
வருந்தி முன்னம் பழகுதலால் வழுவா யோக நெறிநிற்பர்."

என்று ஞானவாசிட்டம் கூறுவதிங் குணர்தற் பாலதாம்.

† இங்ஙனம் கூறியது "ஒருமலர்க்குத் துறக்கமெனல் போல்" ஸ்துதி அர்த்தவாதமாம். நிந்தையையாவது ஸ்துதியையாவது அறிவிக்கும் வாக்கியம் அர்த்தவாதமாம். இஃது "ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும், கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகி லவர்கண்டீ ரியாம்வணங்குங் கடவுளாரே" என்றப்பர் சுவாமிகள் கூறுவதாலு முணர்தற்பாற்றும்.

"எறியுங் கடலி னுகத்துளையி லாமைக் கழுத்துப் புகுவதுபோற், பொறிவெம் பிறவி யநேகத்தாற் புருடன் விவேகி யெனப்பிறந்து," "மோகமில்லா தவர்செறிவான் முதுநல்லறத்தின் சமுகத்தாற், காகதாலி யம்போலக் கருத்தினுதிக்கு முதலான, யோகபூமி"யைப் பெற்றபோது, அந்த யோகபூமி (சுபேச்சை) விசாரணை முதலிய பூமிகளை யுண்டாக்குவது வாயிலாக அவனுக்கு மோட்ச சாதனமாயிருக்கின்ற தென்பதுமிங் குணர்தற்பாலதாம். "ஒடிவின் மறுபூ மிக்கிந்த வொன்றே சகந பூமியென, முடிவில் வெளியாம்" என்று ஞானவாசிட்டம் நிருவாணப் பிரகரணத்திற் கூறுகின்றது.

156. இப்புவியி லிஞ்ஞான பூமியொன்றி லிரண்டிலடைந் திருந்தா
ராஞல், அப்புருடர் மிலேச்சரா கிலுமுத்தர் குருபாதத் தாணை
மெய்யே, தப்புரையென் றவர்கெடுவார் நடுவான மறைகளைநீ
சங்கி யாதே, செப்புமொழி வழிதிடமா யதம்பிரம மென்றிருந்து
தெளிந்தி டாயே.

---

அப்பியாச பூமியையடைந்தோர் யாவராயிருப்பினும் அவர் தப்பாது
சீவன்முத்த ரர்வரெனச் சபத்துடன் கூறி ஞான
பூமியின் விசாரத்தை முடித்தல்.

அன்பனே! ஒருவர் ஈண்டுக் கூறிய ஞான பூமியேழனுள் சுபேச்சை யென்னு முதற் பூமியி னப்பியாச முடையவராயாவது விசாரணை யென்னு மிரண்டாம் பூமியி னப்பியாச முடையவராயாவது இருந்தால், அவர் † மிலேச்சராயிருப்பினும் ஜீவன் முத்தராவர். சற்குரு பாதத்தின்மீ தாணையாக இது சத்தியமாம். இது தப்பு வார்த்தை யென்பவர் தவறாது கேடடைவர். ‡ வேதப் பொருளி னுக்கேபஞ் செய்பவ னாகினேச் சேரும்’’ என்று பிரமாணமிருத்தலால், மக்களிடத்து நற்றுய் போன்று யாவரிடத்தும் பாரபட்சமற்றுள்ள வேத வாக்கியங்களை நீ குதர்க்கமாகச் சங்கை செய்யாதே. வேதங்கூறும் வாக்கிய நெறியி லுறுதியுடையவனுய் அகம் பிரஹ்மாஸ்மி யென்று ¶ சம்பிரஞ்ஞாத சமாதி புரிந்து அது வாயிலாக

---

† மிலேச்சர்-கோமாம்ச முதலியவற்றையுண் ணுமறிவீனர். ஈண்டு அஜாமிளனென்னு மதமன், கஜேந்திரனென்னும் யானை, அனுமானென்னும் வாநரம், கற்கடி யென்னுமரக்கி, பிரகலாதனென்னு மசுரன் சீவன் முத்தி பெற்றமை யுணர்தற்பாலதாம். இராவணன் - பாணன் முதலாயினேரும் சீவன்முத்த ராவரென்ப துணர்க.

‡ சூதசங்கிதை - வேதப்பிரமாணிய விசாரம் - 13

¶ விஜாதீய (அநாத்ம) பிரத்தியய விருத்திகளின் அந்தராயமி (மறைப்பி) ன்றிய தயிலதாரை போன்று இடையீ டில்லாத சஜாதீயப் பிரஹ்மாகார விருத்தியின் பிரவாகம் சம்பிரஞ்ஞாத சமாதியாம்.

“புகழுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான் பொய்யான பேதமெலா நாசஞ் செய்யும், திகழுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான் றிடசிந்தா ரோகமெலா நாசஞ் செய்யும், மகிழுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான் மனதிலுள வியாதியெலா நாசஞ்செய்யும், பகருமகம் பிரமாஸ்மி மந்திரந்தான் பவவாதி வியாதிகளை நாசஞ் செய்யும்.’’ “சாற்றுமகம் பிரமாஸ்மி மந்திரந்தான் சலனமிலா வபரோட்ச ஞானநல்கும்’’ “அநிசமகம் பிரமாஸ்மி மந்திரந்தா னகண்டமதா மோட்சசுகமளிக்குமன்றே.’’ என்று ரிபுகீதை கூறுவதிங் குணர்தற்பாலதாம்.



157. பொல்லாத மிலேச்ச ருக்கும் விதேகமுத்தி தருஞான பூமி
யென்று, நெல்லாகி முளைக்குமெனைத் தண்டுலமாக் கியகுருவே
நீர்சொன் னீரே, இல்லாளுங் குடும்பம்விட்டுச் சந்நியா சம்புகுந்
தே காங்கி யானேர், அல்லாமன் முத்திபெறு ரேன்றுசிலர்
சொலுமயக்க மகற்று வீரே.

---

$ அசம்பிரஞ்ஞாத சமாதியடைந்து அதனல் நானே பிரஹ்மமென்று நீ
§ தெளிவடைந்திருப்பாயாக. 156

சீடன் மிலேச்சரும் ஞானிகளாவாராயின், சந்நியாசிகளன்றி
யேனையோர் முத்திபெறுதல் கூடாதென்று கூறுதல்
மயக்கத்திற் கேதுவன்றே வென்று வினவுதலும்,
அதற்குக் குரு விடை கூறுதலும்.

சீ—வின:—* நெல்லைப்போலப் பிறந்திறக்கு மென்னை அரிசியைப்போலப் பிறந்திறவாவாறு செய்த தேசிகோத்தமரே! தேவரீர்

---

$ சர்வ விர்த்திகளின் நிரோதத்தோடு சித்தம் நிர்விகற்பப் பிரஹ்மாகாரமாக நிலைத்தல் அசம்பிரஞ்ஞாத சமாதியாம்.

“அந்தக்கரண விருத்தி பிரஹ்மாகாரமாகும்போது அந்த விருத்தி வெளியிற் போகாமல் சரீரத்தினுள்ளேயே யிருக்கிறது; அந்த விருத்தியுடன் பிரஹ்மத்திற்குச் சம்பந்தமிருக்கிறது; அதனல், பிரஹ்மஞானமும் சுகதுக்கங்களின் ஞானம்போலப் பிரத்தியட்ச ரூபமாயிருக்கின்றது.” என்று விசாரசாகாரம் நான்காந்தரங்கத்திற் கூறுவதும்,

“சத்துருவாம் பிரதிபந்த மொன்று மின்றிச் சலனமிலாப் பாப்பிரம சுகத்தை மேவி, யித்துவித நினைவணுவு மிலாது நீங்கி யிருளான வாபரண மனைத்து நீங்கிச், சித்துருவாம் பாப்பிரம சொரூபத்தின்கண் க்ஷீரசல நியாயம்போற் சேர்ந்து நிற்கும், புத்தியுடை விருத்தியினிற் பிரதிபிம்பிக்கும் பூரணசை தன்னியமே சாட்சாத் காரம்’’ என்று ரிபுகீதை கூறுவதும்,

“பிரஹ்ம ஞானத்தால் மாயை அவித்தைகளி னிவிர்த்தியுண்டாம்; அதனல், காரிய (உலக)த்தோடு பிரகிருதியி னிவிர்த்தியுண்டாம்; அதனல், பிரகிருதிப் பிரஹ்மங்களின் சம்மந்த நிவிர்த்தியுண்டாம்; அதனல், ஜீவத்தன்மை ஈசுவரத்தன்மைகளி னிவிர்த்தி யுண்டாம்; அதனல், சீவேசுவரர்களின் பேதநிவிர்த்தியுண்டாம்; அதனல், பந்த நிவிர்த்தியுண்டாக மோட்சமுண்டாம். இவ்வாறு ஒரே காலத்தில் சகல ஆரோபங்களி னிவிர்த்தியாகிய அபவாதமுண்டாகின்றது’’ என்று விசார சந்திரோதயங் கூறுவதுமிங் குணர்தற்பாலனவாம்.

§ தெளிதல் - சந்தேகத்தினின்றும் நீங்குதல்.

* நெல் முளைத் தழிதற்கு உமி முதலியன காரணமாயிருப்பதுபோல ஞானிகளல்லாதார் பிறந்திறத்தற்கு அவித்தை காம கர்மங்கள் காரணமாயிருக்கின்றன வென்க.

“உமியால் கட்டுப்பட்டிருக்கின்றபோது நெல்லா யிருக்கின்றது; உமியற்றதாயின் அஃதரிசியாகின்றது; அங்ஙனமே சீவனுங் கட்டுப்பட்டிருக்கின்

158. சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்த சங்கைநன்று தெரியக் கேளாய்
கட்டழியுந் துறவுநால்வகையாகு மவைகளுக்கங் காகும்பேர்கள்
பட்டதுயர் கெடுங்குடீ சகம்வெகூ தகமஞ்சம் பரம வஞ்சம்
விட்டகலுந் துறவுக்கு விராகங்கா ரணமன்றி வேட மன்றே.

---

ஞானபூமி பொல்லாத மிலேச்சர்க்கும் விதேகமுத்தியைக் கொடுக்கு மென்று திருவாய்மலர்ந்தருளினீர். இதற்கு மாருகச் சிலர் மனைவியையும் குடும்பத்தையுந் துறந்து ‡ சந்நியாச ஆசிரமத்தை யடைந்து § மலைமுழை (குகை) முதலிய விடத்திற் றனித்திருந்து ஞான பூமியைப்பெற வப்பியாசஞ் செய்பவரே யல்லாமல் ஏனையோர் மோட்சமடையாரென்று கூறுங் காரணம் என்ன? இப்பிராந்தியை நீக்கி யருளல் வேண்டும். 157

சந்நியாச வகையையும், அவற்றின் பெயரையும், சந்நியாசத்தின் முக்கிய காரணத்தையுங் கூறல்.

கு—விடை :—நல்லொழுக்கமுடையோரால் புகழப்படுகின்ற மகனே! நீ ஆட்சேபித்த ஆட்சேபம் நன்று யிருக்கின்றது. அவ்வாட்சேப மகல விடை கூறுகின்றனம்; அதனை நீ கவனமாய்க் கேட்கக்கடவாய். சந்நியாசம் நான்கு வகையாம்; அவற்றின்பேர் † குடீசகம், பகூதகம், அம்சம், பரமாம்ச மென்பனவாம். இச்சந்நியாசத்திற்கு ‡ விராகம் (நிராசை - ஒன்றிலும் ஆசையின்மை) காரணமே யல்லாமல் ¶ (காஷாய வஸ்திரந் தரித்தல் முதலிய) வேஷம் காரணமன்றாம். 158

---

ருன்;கருமம் நாசமாயின், எப்போதும் மங்களசொரூபியா யுள்ள)சிவனுயிருக்கின்ருன். (கரும) பாசத்தால் கட்டுப்பட்டிருக்கின்றவளவும் சீவனுயிருக்கின்ருன்; (அந்தப்) பாசத்திலிருந்து விடுபட்டால் அப்போது சிவனுயிருக்கின்ருன்” என்று ஸ்கந்தோபநிஷத் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

‡ சந்நியாசம் பெறுபவன் (1) பெண், (2) பொன் நிலமென்றற்றொடக்கத்துத் தனம், (3) சப்த பரிச ரூப ரச கந்தமென்னும் விஷயம், (4) சபை (ஜனக்கூட்டம்), (5) சன்மான மென்னும் ஐந்தினையும் விட்டு, (1) வஸ்திரம், (2) கயிற்ருேடு கூடிய கமண்டலம், (3) ஏகாந்தம் (தனிமை), (4) (தேகநிலைத்தற் கேற்ற வளவான) பிச்சை, (5) வேதாந்த விசார மென்னுமைந்தினையும் விடாமல் சஞ்சரித்தல்வேண்டு மென்பது நியமமாம்.

§ துஷ்ட மிருகங்களின் உபத்திரவமின்றியதாய், நல்ல ராஜ்ஜியத்தை யடுத்ததாய், குளிர் வெயில் முதலியவற்றின் சம்பந்தம் தேகஸ்திதிக்கு இணக்கமாக வுடையதாய், சமயமறிந் துணவு முதலியன வுதவுதற்குரிய கிராமத்தை யடுத்ததாய், கொசுகு, மூட்டுப்பூச்சி முதலியன வின்றியதாயுள்ள விடம் சமாதி செய்வதற்குத் தக்க விடமாம். சமாதி புரிவதற்குரிய அத்தகைய ஏகாந்த ஸ்தானம் மலை முழை, நதிதீரம், புண்ணிய க்ஷேத்திர முதலியனவாம்.



159. மந்தமுந்தீ விரமுந்தீ விரதரமு மெனமூன்று வகைவி ராகம்,
வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்துவரும் விராக
மந்தம், இந்தவுட லளவுமனை தனம்வேண்டா மெனவிடறீ
விரமென் பார்கள், அந்தணனூர் மித்தையென விடலதுதீ விர
தரமா மறிந்தி டாயே.

---

விராகம் மூவகையாமென்றும் அவற்றினிலக்கணம் இனைய வென்றுங் கூறல்.

அன்பனே! விராகம் $ மந்தம், தீவிரம், தீவிரதர மென மூவகையாம்; அவற்றுள், (1)மனைவிமக்க ளிறத்தலாலும், உள்ளபொருளை யிழத்தலாலும்,

---

† (1) யாத்திரை செய்யச் சக்தி யின்மையா லெங்கேனுமொரு குடிசை யேற்படுத்திக்கொண் டிருத்தல் குடீசகமாம்; (2) சந்நியாச ஆசிரமத்தின் கர்மத்தைச் செய்துகொண்டு யாத்திரை செய்தல் பகூதகமாம்; (3) அக்கினியாற் சாதிக்கப்படுங் கர்மத்தினை விட்டுப் பிரணவ ஜப முதலியவற்றை யனுஷ்டித்தல் ஹம்சமாம்; (4) பரமஹம்சம் விவிதிஷை - வித்வத் என்றிருவகையாம்; அவற்றுள், (க) ஞானத்திற்கு முன் தோஷ திருஷ்டியா லுண்டாகுந் தீவிரதர வைராக்கியத்தால் ஜிஞ்ஞாசுவினுற் செய்து கொள்ளப்படும் சந்நியாசம் (துறவு) விவிதிஷை சந்நியாசமாம்; (உ) ஞானத்திற்குப் பின் தோஷ திருஷ்டியாலும் மித்தியாத்துவ திருஷ்டியாலும் தோன்றும் தீவிரதர வைராக்கியத்தால் வித்வானுல் (ஞானியால்) செய்து கொள்ளப்படும் சந்நியாசம் வித்வத் சந்நியாசமாம்.

‡ ராகம் - ஆசை, விராகம் - ஆசையின்மை.

¶ “வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்” என்று திருமந்திரம் கூறுவதறிக.

$ (1) “புத்திரன் திரவிய முதலியவற்றின் நாசத்தால் ‘சை! ஈதென்ன சம்சாரம்’ என் றுண்டாகும் க்ஷணிகபுத்திவிருத்தி மந்த வைராக்கியமாம்; (2) இவ்வுலகத்துப் புத்திரன் முதலியவற்றின் சம்பந்தமாகிய சுகத்தின் விருப்பமின்மை யெதுவோ அது தீவிர வைராக்கியமாம்; (3) புநராவிருத்தி யுடையனவென் றறிந்து சர்வலோகங்களி னிச்சையையும் விடுதல் தீவிரதர வைராக்கியமாம். அவற்றுள், ஞானத்திற்குக் காரணமாயுள்ள தீவிரதர வைராக்கியத்தை முமுட்சுச் சம்பாதித்தல் வேண்டும்” என்று பாலபோதம் முதலுபதேசத்திற் கூறுவதறிக.

பிறவாற்றலுங் கொடிய துக்க முண்டான காலத்தில் அதனுல் இச்சம்சாரம் மிகக்கொடியது, இதனை யெவ்வாற்றலாவது விட்டகலல் வேண்டுமென் றப்போது மாத்திரம் சம்சாரத்தை வெறுக்கும் விராகம் (வைராக்கியம்) மந்த விராகமாம்; (2) † பிராரத்த கன்ம வசத்தா லித்தேக மிறவாதிருக்குமளவும் §தார தன முதலிய சம்சாரம் நமக்கு வேண்டாமென்று அவற்றை விராகத்தால் விட்டிருத்தல் தீவிர விராகமாம்; (3) பெரும் புண்ணியத்தாற் கிடைப்பதான ¶ பிரஹ்மலோகம் கிரியையுடையதாயும் நாசமுடையதாயு மிருத்தலின் மித்தையாம்; அது நமக்கு வேண்டாமென்று அதனையும் வெறுத்திருத்தல் ‡ தீவிரதர விராகமாம். 159

† தீவிரவிராகம் இந்தவுடலளவு மனை தனம் வேண்டாமென அவற்றை விடுவதாகலின், அதனு லுண்டாகும் குடீசகம் பகூதக மென்னு மிருவகைச் சந்நியாசமும் மறுமைப் பயனைக் குறித்த கரும சந்நியாசமாம்.

§ தாரம் - மனைவி, தனம் - திரவியம். புத்திரன், பூமி, பசு, தாசி, தாசன், வீடு, தானிய முதலியவற்றையும் முதலிய என்றமையாற் கொள்க.

¶ பிரம்மலோக மொன்றே விஷ்ணு வுபாசகர்க்கு வைகுண்டமாகவும் சிவோபாசர்கட்குச் சிவலோகமாகவும் காணப்படுகின்றதென்பது சாஸ்திர சம்மதமா யிருத்தலின், வைகுண்டமும், சிவலோகமும் மித்தையாமென் றீண்டுக் கூறுது விடப்பட்டனவென்க. இதன் விரிவை விசாரசாகரம் எழாவது தரங்கத்திற்காண்க.

‡ இத்தீவிரதர விராகமே சாதன சதுஷ்டயங்களுள் கூறப்படும் வைராக்யமாம். விசாரசாகரம் "பிரஹ்மலோக பரியந்தமான போகங்களி லிச்சை யுண்டாகாம லவற்றை விடுதலே வைராக்கியமாம்" என்று கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

தீவிரதர வைராக்கியமென்னும் வாட்படை சம்சாரமென்னும் அச்சுவத்த விருட்சத்தை வெட்டி யழிப்பதற்குச் சாதனமா யிருக்கின்றதென்பதிங் குணர்தற்பாலதாம். இது பகவத்கீதை 15-வதத்தியாயத்தில் "மந்திர மாய விந்த மாத்திரனைத் துறவென் கின்ற, தந்திர வாளால் வெட்டித் தற்பர மாகி" என்று கூறுவதாலும், "எல்லாவற்றினும் மேலானதாயிருத்தலின் உயரமாயுள்ள மாயா விசிஷ்ட பரப்பிரஹ்மம் எதற்கு மூலமா (வோ) யிருக்கின்றதோ, மகத்தத்துவம் எதற்கு முளையா யிருக்கின்றதோ, அகங்காரம் எதற்குக் கிளையாயிருக்கின்றதோ, பஞ்சதன்மாத்திரைகள் எதற்குக் கொம்பாயிருக்கின்றனவோ, கூறிய மகத்தத்துவமுதலிய வெல்லாங் காரியத் தன்மையால் தாழ்வுடையனவாயிருத்தலின் எதற்குக் கீழ்சாகைகளெனப்படுகின்றனவோ, வேதமுதலிய சாஸ்திரங்கள் எவையோ அவை மிக இனிமையைத்தரும் வாக்கியங்களால் அதன் அநித்தியத்தன்மைமுதலிய தோஷங்களை



160. பாவிமந்த விராகத்திற் சந்நியா சங்க ளொன்றும்பலித்தி டாதே,
தீவிரத்திற் குடீசகமும் வெகூதகமு மென்றிரண்டு திறங்க ளுண்
டாம், தாவிநடந் திடத்திடமி லாதவர்க்குக் குடீசகமுஞ் சகங்க
ளேங்கும், மேவிநடந் திடத்திடமுள் ளவர்குவெகூ தகமுமென
விதித்தார் மேலோர்.

மந்தவிராகம் சந்நியாசத்திற் கேதுவர்காதென்றும், தீவிர விராகத்தாலுளவாதுஞ் சந்நியாசம் இருவகையாமென்றும், அவற்றினிலக்கண மினைய வென்றுங் கூறல்.

தீவினையுடையோனுக்கு மனைவி முதலியோ ரிறத்தலாலும் பிறவாற்றலு முண்டாகும் † மந்த விராகத்தில் குடீசகம், பகூதகம், அம்சம், பரமாம்சமென்னும் நால்வகைச் சந்நியாசங்களுள், யாதொரு சந்நியாசமும் சித்திக்கமாட்டாது. தீவிரவிராகத்தில் § குடீசகம் பகூதகமென்னு மிருவகைச் சந்நியாசங்கள் சித்திக்கும்; இவ்விரண்டனுள், குடீசக சந்நியாசத்தை யாத்திரை முதலியன செய்யச் சக்தியில்லாதவர்க்கும், பகூதக சந்நியாசத்தை யாத்திரை முதலியன செய்யச் சக்தியுள்ளவர்க்கும் பெரியோர் விதித்தனர். 160

மூடுகின்றனவாகலின் அச்சாஸ்திரங்கள் எதற்கு இலைகளாயிருக்கின்றனவோ, தர்மா தர்மங்கள் நான்கு புருஷார்த்தமும் எதற்கு இரசமாயிருக்கின்றனவோ, ஜனனமரணதி துக்கங்கள் எதற்குப் பழமாயிருக்கின்றனவோ, அஞ்ஞானமுடைய ஜீவர்களாகிய பக்ஷிகள் எதற்குப் போக்தாவாகின்றனவோ, வைராக்கியத்தினுல் தீட்டப்பட்ட ஞானமாகிய கோடரி எதனை வெட்டுவதாயிருக்கின்றதோ, அத்தன்மையதாம் இச்சம்சாரவடிவ அச்சுவத்த விருட்சம் (அரசமரம்)" என்று விசாரசாகரம் 6-வது தரங்கத்தின் குறிப்புரை கூறுவதாலும் நன்கு விளங்குவதாம்.

† மந்தவிராகம் புராணவைராக்கியம் மயானவைராக்கியம் போல்வதாம்; அது நிலைத்திருப்பதன்மையின், அதனுல் யாதொரு சந்நியாசமும் சித்திப்பதில்லையாமென்க.

§ குடீசக சந்நியாச முடையவனைக் குடீசகனென்றும், பகூதக சந்நியாச முடையவனைப் பகூதகனென்றும் கூறுப.

161. இருவகைதீ விரதரத்து மஞ்சனேன்றும் பரமாஞ்ச னேன்றுஞ் சொல்வர், வருமஞ்ச னுக்குமுத்தி சத்தியலோ கத்தன்றி வாரா தேன்பார், பரமாஞ்ச னுக்குமுத்தி யிவ்வுலகின் ஞானத்தாற் பலிக்கு மேன்பார், திரமருவும் பரமாஞ்சன் ருனுமிரு வகையா குஞ் சேப்பக் கேளாய்.

---

தீவிரதர விராகத்தா லுளவாகும் சந்நியாச மிருவகையாமென்றும்,
அவற்றின் பயனிவையென்றும், அவ்விரு சந்நியாசங்களுள்
ஒன்றிருவகையாமென்றும், அவற்றை யுடையோ
ரிலக்கண மினையவென்றும், அவ்விரண்டனு
ளொன்றிருவகையா மென்றும் கூறல்.

தீவிரதர விராகத்தால் அம்சம் பரமாம்ச மென விருவகைச் சந்நியாசங்க ளுண்டாம்; அவற்றுள், அம்ச சந்நியாச முடையவனை அம்சனேன்றும், பரமாம்ச சந்நியாச முடையவனைப் பரமாம்ச னேன்றும் கூறுவர் மேலோர். அம்சன் பரமாம்ச னேன்னு மிருவருள், † அம்சனுக்கு மோட்சம் சத்தியலோகத்தி லுண்டாகுமேயல்லாம லிவ்வுலகத்தி லுண்டாவதில்லை

---

† அம்சசந்நியாசி பிரமலோக விச்சையால் முமுட்சுத்துவமின்றி அக்கினியாற் சாதிக்கப்படுங் கர்மங்களை விட்டுப் பிரணவோபாசனை செய்திருப்பவனாகலின், அவனுக்குத் தத்துவஞானத்தாற் சித்திக்கும் மோட்சம் இம்மையிற் சித்தியாது மறுமையில் பிரம லோகத்தில் அந்தக்கரண சுத்தி வாயிலாகத் தத்துவஞான முண்டாவதாற் சித்திக்கின்றதென்பது சாஸ்திர நியமமாம். விசாரசாகரம் 5-வது தரங்கத்தில் "உபநிஷத்துக்களில் பிரணவோபாசனை யிருவகையாகக் கூறப்பட்டிருக்கின்றது; ஒன்று பரப்பிரஹ்ம ரூபமாகப் பிரணவத்தைச் சிந்தித்தலாம்; மற்றொன்று அபரப்பிரஹ்ம ரூபமாகப் பிரணவத்தைச் சிந்தித்தலாம். நிர்க்குணப் பிரஹ்மம் பரப்பிரஹ்மமாம்; சகுணப் பிரஹ்மம் அபரப்பிரஹ்மமாம். பரப்பிரஹ்மரூபமாகப் பிரணவத்தைச் சிந்திக்கிறவன் மோட்சத்தை யடைகின்றான்; அபரப்பிரஹ்மமாகப் பிரணவத்தைச் சிந்திக்கிறவன் பிரம லோகத்தை யடைகின்றான். இவ்வாற்றால் நிர்க்குண சகுண பேதத்தால் பிரணவோபாசனை யிருவகைத்தாம். பிரமலோக விச்சையுள்ளவனுக்கு நிர்க்குண வுபாசனையாலும் இச்சையாகிய பிரதிபந்தத்தால் ஞானவாயிலாகத் தற்காலம் மோட்சமுண்டாவதில்லை; ஆனால், அவன் பிரமலோகத்தை யடைகின்றான்; அவ்விடத்திலிரணியகருப்பனுக்குச் சமானமாகப் போகங்களை யனுபவித்துப் பின் ஞானமுண்டாக மோட்சத்தை யடைகின்றான். பிரமலோக விச்சையில்லாதவனுக்கு இவ்வுலகத்திலேயே ஞானமுண்டாவதால் மோட்சஞ் சித்திக்கின்றது." என்று கூறுவதிங் குணர்தற்பாலதாம்.



162. சிஞ்ஞாசு ஞானவா னேன்றிரண்டு பேர்களவ ரிற்சிஞ் ஞாசு, மேய்ஞ்ஞான பூமியின்முன் மூன்றுபூ மியுணடக்கும் விவேகியா னேன், சுஞ்ஞான வானேன்போன் சீவன்முத்தி யடைந்திருக் குந் தூய மேலோன், அஞ்ஞான மகலுமந்தச் சிஞ்ஞாசு மிருவகையா மதுவுங் கேளாய்.

163. பந்தமனை துறந்துசில ரதிதிகளா யிருந்தடைவர் பரம ஞானம், அந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரரா யிருந்துசில ரடைவர் ஞானம், இந்தவகைச் சாத்திரத்து முலகத்து நடப்பதுகண் டிருந்து மைந்தா, சிந்தனையின் மயக்கமேன்னே சுருதியுத்தி யநுபவத்தாற் றேளிந் திடாயே.

---

யாம்; பரமாம்சனுக்கோ மோட்சம் தத்துவஞானத்தா லிவ்வுலகத்திலேயே சித்தியாம். பரமாம்ச சந்நியாசிகளும் ¶ சிஞ்ஞாசு, ஞானவானென விருதிறத்தா ரிருப்பர். 161

அவ்விருவருள் சிஞ்ஞாசுவென்பான் முற்கூறிய ஞானபூமி யேழனுள் முன்னுள்ள சுபேச்சை, விசாரணை, தனுமானசி யென்னு மூன்றனு ளொன்றனை யப்பியாசிக்கும் விவேகியாம்; ஞானவானென்பான் பின்னுள்ள சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தாபாவனை, துரியமென்னும் நான்கனு ளொன்றில் சீவன்முத்தி யடைந்திருப்பவனும். சொருபாஞ்ஞானமகல முயற்சி செய்யும் அச்சிஞ்ஞாசுவின் பாகுபாடு மிருவகையாம். 162

சிஞ்ஞாசுக்களிற் சிலர் எனதென்னு மபிமானத்தால் பந்தவடிவமாயுள்ள மனைவி, புத்திரர், திரவியம், பூமி, தாசன், தாசி, பசு, வீடு, தானிய

---

¶ சர்வதுக்கத்திற்குங் காரணம் சொரூபத்தின் (ஆத்மாவின்) அஞ்ஞானமாம்; அது சொரூபஞானமின்றி நிவிர்த்தியாகாது. எந்த வஸ்துவி னஞ்ஞான மிருக்கின்றதோ அஃது அந்த வஸ்துவை யறிவதால் நிவிர்த்தியாகின்றது. அது ரச்சுவி னஞ்ஞானம் ரச்சுஞானத்தால் நிவிர்த்தியாதல்போலவாம். சொரூப ஞானமே அஞ்ஞான நிவிர்த்திவாயிலாகச் சர்வதுக்க நிவிர்த்திக்குங் காரணமாம். சொரூப (ஆத்ம)ஞானத்தால் பிரஹ்மம் (ஆத்ம சொரூபமாக) அடையப்படுகின்றது; அந்தப் பிரஹ்மம் நித்தியமாயும், ஆநந்த சொரூபமாயும், துக்கசம்பந்த மின்றியதாயு மிருக்கின்றது; ஆகையால், சொரூப ஞானத்தால் நித்தியமும் துக்கசம்பந்த மில்லாததுமான பிரஹ்ம சொரூப ஆநந்த மடையப்படுகின்றது. இவ்வாறு சர்வதுக்க நிவிர்த்திக்கும் பரமாநந்தப் பிராப்திக்கும் காரணமாயிருப்பது சொரூபஞானமாம் (ஆத்மாவை யறிதலாம்); ஆதலால், சொரூபமறியத்தக்கதாமென்னும் விவேகத்தோடு ஆத்மாவை யறிய விரும்புகின்றவன் சிஞ்ஞாசுவாவனென்பதிங் குணர்தற்பாற்றும்.

மென்னுந் தனத்தைப் புத்தி பூர்வகமாகத் துறந்து யதிக (சந்நியாசிக)ளாய்ச் சற்குருவை யடுத்திருந்து சிரவண மனன நிதித்தியாசனஞ் செய்வது வாயிலாகத் தத்துவஞானத்தை யடைவர்; சிலர் பிராஹ்ம - க்ஷத்திரிய - வைசிய - சூத்திரரென்னும் நான்கு வருணத்தாரு ளொருவராய்த் தத்தமக்கு விதித்துள்ள கருமங்களை நிஷ்காமியமாய்ச் செய்து, அகத்துற வுடையவராய்ச் சற்குருவை யடுத்திருந்து சிரவணாதிகளால் தத்துவஞானத்தையடைவர். மைந்தனே ! நீ இவ்வாறாக சிஞ்ஞாசுக்க ளிருப்பரென்று † சாத்திரங்கள் கூறுவதையும் உலகத்தில் சிஞ்ஞாசுக்கள் துறவறத்தாராகவும் இல்லறத்தாராகவும் ஒழுகுவதையும் அறிந்திருந்தும், (இல்லாளுங் குடும்பமும்விட்டுச் சந்நியா சம் புகுந்தே காங்கியானோர், அல்லர்மல் முத்திபெறார் என்று) உனது சித்தத்தில் மயக்க முண்டானது வியப்பா யிருக்கின்றது. (சிலர் சாஸ்திரத்தின் கருத்தறியாது சந்நியாசிகட்கே முத்தியுண்டு; ஏனையோர்க் கில்லையென்று கூறும் பிராந்திவசனத்தை யுட்கொள்ளாது) சுருதி யுக்தி யனுபவங்களால் இச்சந்தேகத்தினின்றுந் தெளியக்கடவாய். 163

† "தகைமைமிகும் விபூதியுடைத் தாரணத்துந் தவிராம லுருத்திராக்க தாரணத்தும், மகிமைமிகுஞ் சிவநாம கீர்த்தனத்து மகேசனுடைத் தியானத்துஞ் சிவதலத்தில், இகழ்வறவே வாசத்து மூலகிலுள்ளோ ரியாவர்க்கு மதிகார மிருப்பதாலே, சகமதனின் முமுட்சுவெலா முறையா யிங்குச் சாற்றிய விச் செய்கையினைச் செய்ய வேண்டும்." "அன்றியுமே விதியுடனே நியமமாக வமலமதாம் விபூதியினா லங்கமெல்லாம், நன்றுறவே யணிந்துதிரி புண்டரத்தை நலமாகச் சந்ததமுந் தரிப்போ ருக்கே, துன்றியநற் பரமசிவ கருணையுண்டாந் தோன்றியவக் கருணையினாற் சித்தந் தூய்தாய், என்றுமொரு விக்கினமு மின்றிநன்ரு யிருமையிலா வகம்பிரம ஞானந் தோன்றும்" என்று ரிபுகீதை கூறுவதும்,

"ஜன்மாந்தர சம்ஸ்காரத்தால் அந்தியஜர் (கடைச்சாதியார்) முதலியோர்க்கும் ஞான விருப் புண்டாய்விடுமாயின், பௌருஷேய (தருமசாஸ்திர முதலியவற்றின்) வசனத்தினால் அவர்களுக்கும் ஞானமுண்டாய்க் காரியத்தோடு அவித்தையின் நிவிருத்தி வடிவ மோக்ஷ முண்டாகின்றது; ஆதலால், தேவர் அசுரர்களைப்போலச் சகல மனுஷர்க்கும் தத்துவ ஞானத்தில் அதிகாரமுண்டு. ஆத்ம சொரூபத்தின் யதார்த்த ஞானத்தினைத் தத்துவ ஞானமென்பர். ஆத்மாவின்றிய ஒருசரீர முளதாயின், ஞானத்தின் அதிகாரமின்மை உளதாம். ஆதலால், ஆத்ம ஞானத்தின் சாமர்த்தியம் மனுஷ மாத்திரத்திலுண்டு." என்று விருத்திப் பிரபாகரம் எட்டாவது பிரகாசத்திற் கூறுவது மிங்குணர்தற்பாலனவாம்.



164. பிறந்ததுண் டானு லன்றே பிறகுசா வதுதா னுண்டாம்
பிறந்ததே யில்லை யென்னும் பிரமமா வதுவு நானே
பிறந்தது நானேனென் ருகிற் பிரமமன் றந்த நானே
பிறந்தது மிறந்த தற்ற பிரமமா நானே நானே.

'வித்தைசுக மினிமேற் சொல்வோம்' என்று முற் (133-ல்) கூறிய வித்தியாநந்தத்தைக் கூறுதற்பொருட்டு † ஞானபல சதுஷ்டயங்களுள் முதலிலுள்ள துக்காபாவங் கூறல்.

அன்பனே! நான் முன்னர் ஒரு நிமித்தம்பற்றி யொன்றினின்றும் ‡பிறந்திருந்தாலல்லவோ பின்னரொரு நிமித்தம்பற்றி மரிப்பது மெனக்குண்டாம்? நானோ பிறப் பிறப் பற்றவன்.

சீ—வினா :—அஃதெவ்வாறு பொருந்தும் ?

கு—விடை:—ஒரு பொருளும் பிரஹ்மமி (அறிவி)ன்றிச் சித்திப்பதின்றாகலின், அஃதொன்றினின்றும் தோன்றியதன்றாம் ; அதனால், பிறந்ததேயில்லையே(அஜன்மமே)ன்று சுருதி கூறும் அந்தப் பிரஹ்மம் எனது நிஜவடிவமா யிருத்தலின், நான் அந்தப் பிரஹ்மமாகவே யிருக்கின்றேன் ; அதனால், § நான் பிறப் பிறப் பற்றவனா யிருக்கிறேன்.

† துக்காபாவம், சர்வகாமாப்தி, கிருதகிருத்தியத்துவம், பிராப்தப் பிராப்பியத்துவமென்பன ஞான பல சதுஷ்டயமாம்.

‡ அஜன்மமான பிரஹ்மம் எனது சொரூபமா யிருத்தலின், நான் பிறப் பிறப்புடையே னென்பது பொருந்தா தென்பதாம்.

§ துக்கவேது பிறப்பா யிருத்தலின் பிறப்பில்லாதவர்க்குத் துக்கமில்லையாமென்க. துக்கம்: இகலோக துக்கம் பரலோக துக்கமென் இருவகைத்தாம். அவற்றுள், இகலோக துக்கம் மூவகைத்தாம். அவற்றுள், (1) ஸ்தூல சரீரத்தில் அழகின்மை, துர்க்கந்தம், கபம், குன்மம், க்ஷயம், சூலை முதலிய வியாதிகளிருத்தல் முதலாவது துக்கமாம் ; (2) சூக்கும சரீரத்தில் காமக்குரோதாதிக ளிருத்தல் இரண்டாவது துக்கமாம் ; (மானசதாபம் ஆதி யென்றும் சரீரதாபம் வியாதி யென்றும் சொல்லப்படும்) (3) காரண சரீரத்தில் அவ்வாதி வியாதிகளுக்குப் பீஜமான சம்ஸ்கார மிருத்தல் மூன்றாவது துக்கமாம். புண்ணிய மெப்போதுவருமோ, பாபம் எப்போதுபோமோ என்னுஞ் சிந்தனையே பரலோகதுக்க மாம். ஞானியினிடத்து மூவகையாயுள்ள இகலோகதுக்கமும் பரலோகதுக்கமு மின்மையின், தத்துவ ஞானத்தின் முதலாவது பயன் துக்காபாவமாம். துக்காபாவம் - துக்க மின்மையாம்.

ஆத்மா பிறப்பது மில்லை; இறப்பது மில்லை; இருப்பதென்பததுவே; அதற்கு வேறாக மாயாப் பிரபஞ்ச மிருப்பதென்பது சொன்மாத்திரமேயாம்;

165. நானேன்ற பிரம மான நானேநா னறியே னென்றல்
நானேன்ப தேது பின்னை நம்முடைப் புந்தி யென்னில்
தானது மயக்கந் தன்னிற் சாகுமே சாவா தாகி
நானேன நிறைந்தி ருந்த ஞானமா நானே நானே.

---

*சீ—வினா:—எனக்கு வயது இவ்வளவாயிற்று; இதுகாறும் நான் ஜீவித்திருப்பே னென்றற் றொடக்கத்து வியவகார மிருத்தலின், நான் பிறக்கவு மில்லை, இறக்கவு மில்லை யென்பது எவ்வாறு பொருந்தும்?*

கு—விடை:—ஒரு நிமித்தம்பற்றி யொன்றினின்றும் பிறந்தது நானென்று கூறப்படுமாயின், அந்த நான் ‡ நானென்னுஞ் சொல்லுக்கு வாச்சியமான அகங்காரமேயன்றி இலட்சியமான பிரஹ்மமன்றும். எனது நிஜவடிவம் நானென்னுஞ் சொல்லுக் கிலட்சியமான பிரஹ்மசொருபமா யிருந்தலின், பிறப்பு மிறப்பு மற்ற பிரஹ்மமாகிய நானே நானு யிருக்கின்றேன்; இதில் யாதோ ராசங்கையு மில்லையாம். 164

நானென்னுஞ் சொல்லி னுண்மைப் பொருளை விளங்கக் கூறல்.

விருப்பு வெறுப்பற் றிருக்கும் நிலையதாகிய உதாசீனகாலத்தில் யாதொரு சிந்தனையு மின்றி நானிருக்கின்றேனென்று கூறுகின்ற பிரஹ்மமாகிய நானே (ஆத்மாவே) நானும். அக்காலத்தில் நான் ஆத்மாவை யறியே னென்று கூறின், பின்னர் நான் சாத்தன், நான் கொற்ற னென்று விசேடமாகக் கூறுவது யாது? அங்ஙனங் கூறுவது நம்முடைய புத்தியா மென்று கூறின், அப்புத்தி சுழுத்தியி லழிகின்றதல்லவா? அங்ஙனம் அழிகின்ற புத்தி நானென்பத னுண்மைப் பொருளாவ தெவ்வாறும்?

அன்பனே! புத்தியைப்போலச் சுழுத்தியி லழியாதாகிச் † சாக்கிரம், சொப்பனம், சுழுத்தியென்னு மவஸ்தாத்திரயங்களில் மணிவடத்தில் நூல்போ லனுசூதமாய் நான் நானென்று பூரணமாயிருக்

---

*அதனால், மாயாப்பிரபஞ்சத்தி னாரோபமு மில்லை, அபவாதமுமில்லை யென்னும் சித்தாந்தம் அஜாதவாதமாம்.*

*‡ லோகாந்தகுந்தம் போன்று சித் பிரதிபிம்ப முடையதாய் ஜன்மவேதுவான அவித்தை, காம, கர்மங்களோடு கூடிய அகங்காரமே நானென்னுஞ் சொல்லுக்கு வாச்சியமாம்; இதுவே சகலாவஸ்தையில் ஜீவனும்.*

*† “நனவிற் றசேந்திரிய நாட்டியங்கள் பார்ப்போம்*
*கனவின் மனக்கூத்துங் காண்போம்—நினைவில்*
*சுழுத்தியிலே யில்லாத சூனியக்கூத் தாடி*
*விழுப்பொருளா நாமிருப்போமே”*
*என்று சொரூபசாரங் கூறுவதறிக.*



166. நிறைந்தவா றெந்த வாறு நிலைதெரிந் திலனேன் றுயேல்
அறிந்ததாஞ் சுழுத்தி தன்னி லாநந்த மதுவே யாகும்
குறைந்ததற் காநந் தந்தான் குவலயந் தன்னி லில்லை
நிறைந்ததே யிந்த வான்மா நிதானமிவ் வறிவு தானே.

---

கின்ற ஞானசொருபமாகிய ‡ ஆத்மாவே (பிரஹ்மமே) நானென்பத னுண்மைப் பொருளாம். 165

ஆத்மா ஆநந்தவடிவா யிருத்தலால் பரிபூரண வடிவமாமெனல்.

*சீ—வினா:—பரம குருவே! ஞானசொரூபமாகிய நான், பூரணமா யிருப்ப தெக்காரணத்தால்? அந்நிச்சயமான காரணத்தை யானறியா திருக்கின்றேன்; அதனைக் கூறியருளல்வேண்டும்.*

கு—விடை:—அன்பனே! சுழுத்தியின்கண் அஞ்ஞானத்தை யறிந்திருப்பதாகிய அவ்வாத்மாவே ஆநந்தவடிவமாம்; ஆநந்தவடிவமா யிருத்தலால், பரிபூரண வடிவமாம். § குறைந்திருப்பதற்கு ஆநந்தம் உலகத்தில் ஓரிடத்துங் காணப்படுவ தில்லையா மாகலின், இந்த ஆத்மா பரிபூரணவடிவமே யாம்; இதில் யாதோ ராசங்கையு மின்றும். இப்பரிபூரணப் பிரஹ்மவடிவ 166
ஆத்மாவே உலகத்திற் காதி காரணமாம்.

---

*‡ கிருசோகம் (மெலிந்தவன் யான்), திருஷ்டாகம்(காண்பவன் யான்), ஸ்மார்த்தாகம் (நினைக்கின்றவன் யான்) என்றற் றொடக்கத்தனுபவம் அகங்காரத்திற்கேயன்றி ஆத்மாவிற் கின்மையின், ஆத்மா அபோக்தா வென்பது இதனால் குறிப்பிக்கப்பட்டதென்க. இதனை “நீலகுண விசேடமொ டுற் பலவி சேடியந்தா னிகழ்தாவேத் தியமாதல் போலிளைத்தே னெனினுன், றாலதனு வொடுங்கேட்ப னெனினிங் தியத்துஞ் சூழ்வனு னெனிற்காண முடனும்வேத் தியமாய்ச், சாலவுயர் துரியனிற் கையினுலாங் காரந் தானுன் மா வன்று” என்று வேதாந்த சூளாமணி கூறுவதாலு மறிக.*

*§ பண மில்லாக்குறை, பிள்ளை யில்லாக்குறை, தேகவலி யில்லாக்குறை, உத்தியோக மில்லாக்குறை, உண வில்லாக்குறை, நண்ப ரில்லாக்குறை, “ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ்வாரே வன்க ணவர்” என்ற வாறு ஈவா ரில்லாக்குறை, கொள்வா ரில்லாக்குறை முதலியனவுள்ள விடத்தே துக்கமிருத்தல் பிரசித்தமாயிருத்தலின், குறைந்திருப்பதற்கு ஆநந்தமில்லை யென்பது வெளிப்படையாம். இதனது விரிவை வாசுதேவமனனம் துக்காரோப நிரூபகத்திற் காண்க. (சாந்தோக்கிய வுபநிஷத்து எழாவது பிரபாடகம் 23-வது கண்டத்தில்) நாரதரை நோக்கி ஸநத்குமார குருமூர்த்தி “பூமா (பரிபூரணம்) எதுவோ அது சுகரூபமாம்; அற்பத்தில் (பரிச்சின்னத்தில்) சுகமில்லை; ஆகையால், பூமாவே சுகரூபமாம்” என்றருளி யிருப்பது மிங்குணர்தற்பாலதாம்.*

167. மனத்தினு லெண்ணித் தானே வந்ததிவ் வுலக மாகும்
நினைத்திடி லநேக லோக நிற்பதவ் வறிவி லன்றே
அனைத்தையுங் கடந்தப் பாலு மந்தமற் றறிவி தாமென்
றெனைத்தனி விசாரித் திட்டா லேகமாய் நிறைந்தோ னுனே.

உலகத்திற் காதிகாரணம் ஆத்மாவென்பதை விளங்கக் கூறல்

சீ—வினு:—ஐயனே ! ஆத்மா உலகத்திற் காதி(முதற்) காரணமென்பதை விளக்கமாக வுரைத்தருளுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு—விடை:—அன்பனே ! ஐம்பூத விகாரமாகிய விப்பிரபஞ்சம் † மனோபாவனையினுலேயே யுண்டானதாம். ஆராய்ந்து நோக்குமிடத்துப் பிருதிவிக்குக்கீழுள்ள அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகர் தலம், பாதாலமென்னுமேழும், பிருதிவிக்கு மேலுள்ள பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகாலோகம், ஜநலோகம், தபலோகம், சத்திய (பிரம) லோகமென்னு மேழுமாகிய பதினுன்குலகமும் அம்மனத்தோடுகூட நிற்பது அவ்வாத்மாவிலல்லவா? பஞ்சின்கண் நூலும் அதன் காரியமான ஆடையும் நிற்றல்போல ஆத்மாவின்கண் மனமும் அதன் பாவனையாலுண்டான வுலகமும் நிற்றலால், $ ஆத்மாவின்க ணுண்டாகி யதன்க ணிற்கு மிம்மன முதலிய

† "நினைவெதுவோ வதுதானே சீவ னுகும்
நினைவெதுவோ வதுதானே யீச னுகும்
நினைவெதுவோ வதுதானே சகமு மாகும்
நினைவெதுவோ வதுதானே மனது மாகும்
நினைவெதுவோ வதுதானே காம மாகும்
நினைவெதுவோ வதுதானே கரும மாகும்
நினைவெதுவோ வதுதானே துக்க மாகும்
நினைவெதுவோ வதுதானே யனைத்து மாமே"
"நினைவின்றி நிற்பதுவே யகண்ட மாகும்."

என்று ரிபுகீதை கூறுவதும்.

"கனவிற் ரோன்றும் பொருளெல்லாங் கனவிற் கனவென் றுணர்ந்தக்கால், நனவில் விவகா ரந்தோன்று நவிற்று மிந்தத் தகைமைபோல், நனவிற் ரோன்றுஞ் சகமனைத்து நமது சங்கற் பம்மெனவே, நனவிற் ரோன்றி யிடுங்காலை நமது சொரூபந் தோன்றிடும்." என் றத்துவித வுண்மை கூறுவதிங் கூன்றி யறிதற்பாலனவாம்.

$'அப்பிர மத்திற் ரோன்று மைம்பூத விகார மெல்லாம்' என்று (தத்துவ விளக்கப்படலம்-28-ல்) முன்னர்க்கூறி யீண்டு அவை ஆத்மாவின்க ணுண்டாகி யதன்க ணிற்குமெனக் கூறியதால், பிரஹ்மமும் ஆத்மாவும் சொல்லாவிரண்டும் பொருளாலொன்றுமா மென்பது பெறப்பட்டது. இங்ஙனங் கொள்ளாது



168. அந்தவா றிருந்து கோண்டே யாநந்த மநுப விக்க
எந்தவா றிருந்து கோண்டா லெனக்கிது தெரியு மென்னில்
இந்தமூன் றவத்தை தம்மு ளெழுந்திடும் விருத்தி நீக்கில்
அந்தவா றிருந்து நீயு மாநந்த மடைய லாமே.

பிரபஞ்சம் ஆத்மாவே யாமென்று ஆத்மாவாகிய வென்னை ஏகாந்தத்திருந்து விசாரித்துப் பார்த்தால், மனத்திற்கும் அதன் காரியமாயுள்ள பிரபஞ்சத்திற்கு மப்பாற்பட்டு, அவற்றிற்கு மேலு மெல்லை யின்றி ¶ சஜாதீய விஜாதீய சுவகதபேதரகித (ஏக)மாய்ப் பூரணமா யிருப்பவன் நானே யாவன். (இதனை நீ யுணாக்கடவாய்.) 167

ஆநந்தானுபவம் (சர்வகாமாப்தி) பெறுதற்குரிய வுபாயங் கூறல்.

சீ—வினு:—தேசிக மூர்த்தியே ! யான் அப்படி சர்வாதீதமாய் அநந்தமாய் ஏகமாய்ப் பூரணமா யிருந்து கொண்டு † ஆநந்தத்தை யனுபவிக்க விரும்புகின்றேன் ; எப்படியிருந்தா லெனக்கிது விளங்கும் ?

கு—விடை:—மைந்தனே ! சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி யென்னு மிம்மூன்றவஸ்தையிலும் முறையே யெழுகின்ற ‡ இந்திரிய விர்த்தி, மனோ

பிரஹ்மமும் ஆத்மாவும் சொல்லாலும் பொருளாலும் வேறுபட்டனவா மெனின், அப்போது ஆத்மாவினும் வேருகிய பிரஹ்மம் அநாத்மாவாம். எது அநாத்மாவோ அஃதசத்தா மென்பது நியமமாகலின், பிரஹ்மமும் வான் மலர்போல அசத்தாம்.

¶ இவ்வாறு கூறியதால், கானல் தன்னிடத்துக் கற்பிதமாயுள்ள நீரால் நனைதலை யடையாமைபோல, ஆத்மாவும் தன்னிடத்துக் கற்பிதமாயுள்ள பிரபஞ்சத்தால் துக்கத்தை யடைவதில்லையா மென்பது பெறப்பட்டதென்க.

† இவ்வாநந்தம் "மனுடன் மனுடகந் தருவன்" என்னும் (131-வது) செய்யுளிற் கூறியுள்ள பிரஹ்மாநந்தமாம். இதுவே சர்வகாமாப்தி யென்னும் வித்தியாநந்தமாம். சர்வகாமாப்தி யென்பது சர்வ-காம-அப்தியெனப் பிரிபட்டு நிற்கும்; இதன் பொருள் சர்வாநந்தத்தையு மடைத லென்பதாம். "சர்வைசுவரிய சம்பன்னனுன சார்வ பௌமன் முதல் இரண்யகருப்பனீருகவுள்ளவரிடத்து முறையே பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) நூறுமடங்கதிகமாயுள்ள ஆநந்த மனைத்தும், நிவிர்த்தனுன விவேகிக் குண்டாயினும், அவ்வாநந்த மனைத்தும் பிரஹ்மாம்சங்களாய், அகண்டாநந்தம் சித்தித்தலால் அதுவே சர்வகாமாப்தியாம்." என்று வேதாந்த பரிச்சேதங் கூறுகின்றது.

‡ சாந்தவிருத்தி, கோரவிருத்தி, மூடவிருத்தி யெனினு மொக்கும். வேதாந்தபரிபாஷையின் விஷய பரிச்சேதத்தில் "சாக்கிராவஸ்தை

169. வாதனை வசத்தி னாலே வருகின்ற விருத்தி யெல்லாம்
ஏதினு லடக்க லாகு மென்றுதான் விசாரஞ் செய்யில்
போதமா மிராசன் றானாய்ப் புந்தியைம் புலன்க ளெல்லாம்
தாதரா யிருக்கப் பெற்றாற் சகலமு மடங்குந் தானே.

விர்த்தி, அவித்தியா விர்த்தி யென்னு மூன்று விருத்தியையு மொழிப்பா யானல், நீயும் அப்படி சர்வாதீதமாய் அநந்தமாய் ஏகமாய்ப் பூரணமா யிருந்துகொண் டாநந்தத்தை யடையலாம். 168

விருத்திகளை யடக்குதற்குரிய சாதனங் கூறல்.

சீ—வின:—*குருநாதனே! § சம்ஸ்கார வசத்தா லந்தக்கரணத்தினின்று முண்டாகின்ற $ விருத்திகளையெல்லாம் எவ்வுபாயத்தா லடக்கலாம்? அதனைக் கூறியருளல் வேண்டும்.*

கு—விடை:—அன்பனே! அவ் வுபாயத்தைக் கூறுகின்றேன்; நீ சர்வதானமாய்க் கேட்கக்கடவாய். விருத்திகளை யடக்க முயலுமொருவன் தான் (ஆத்மா) ஞான்வடிவ அரசனாகி அந்தக்காண சதுஷ்டயம், ஞானேந்திரிய பஞ்சகம், கர்மேந்திரியபஞ்சக மென்னு மிவையனைத்தும் தனதாளா (தனது வசமா)கவிருக்க அவற்றைப் பெறுவானாயின், அப்போதவன்வசமாய்ச் சகல

*இந்திரியஜன்னிய விருத்தியோடு கூடியது;” “சொப்பனாவஸ்தை இந்திரிய அஜன்னியமாகிய விஷயத்தைக் கோசரிக்கும் பிரத்தியட்சமான அந்தக்காண விர்த்தியோடு கூடியது.” “சுழுப்தி யவஸ்தை அவித்தையைக் கோசரிக்கும் அவித்தியா விருத்தியோடு கூடியது” என்றெழுதப்பட் டிருக்கின்றமை காண்க. சாக்கிர முதலிய அவஸ்தைகளி லெழுகின்ற விருத்திகளை யொழித்தா லாநந்த மடையலாமென்றமையின், அவ்விருத்திகட்குச் சாட்சியாய் விளங்கிக் குணாதீதனாய் நிற்பவனால் பிரஹ்மாநந்த மடையப்படு மென்க. நவநீதசாரம் “நேத்திரங் கண்ட மிருதயங்களை ஸ்தானமாக வுடைய சாக்கிர சொப்பன சுழுத்தியாகிய அவஸ்தாத்திரயங்கட்கு விலட்சணமா (வேறா) யிருப்பதே குணத்திரயங்களைக் கடப்பதாம்” என்றும், ரிபுகீதை “முக்குணமுங் கடந்தபர போதம்பெற்று மூதுணர்வாம் பரப்பிரம நானே யாகித், தூர்க்குணமா மெக்குணமுந் தூரத் தள்ளித் துகளற்ற குணாதீத னானே னையா” என்றுங் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.*

*§ காண்டல் முதலிய அனுபவத்தின் காரியமாய் நினைப்பிற் கேதுவாயி (அந்தக்காணத்தின்கணி) ருப்பது சம்ஸ்கார மெனப்படும். சம்ஸ்காரம், வாசனை, பாவனை யென்பன ஒரு பொருட்கிளவி.*

*$ இராகம், துவேஷம், காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மற்சாம், ஈரிஷை, அசூயை, இடம்பம், தர்ப்பம், அகங்காாம். இச்சை முதலியன ஈண்டு விருத்திகளாம்.*



170. விருத்திக ளடக்க வின்னம் விநோதமாம் யோகத் தாலே
துருத்திபோ லூது மூச்சைச் சுகமுட னடக்கி னிற்கும்
கருத்ததற் கில்லை யென்னிற் காரண சரீர மாகிப்
பெருத்ததோ ரவித்தை தன்னைப் பிடுங்கிடி லடங்குந் தானே.

விருத்திகளும் தாமாகவே அடங்கிப்போவனவாம். (இதில் யாதொரு சந்தேகமுமில்லையாம். நீயுமவ்வாறே யிருந்து விருத்திகளை யடக்கக் கடவாய். 169

விருத்திகளை யடக்குவதற்குரிய வேறிரண்டு சாதனங் கூறல்.

சீ—வின:—*என்னையாண்டருளிய குருமூர்த்தியே! இன்னும் விருத்திகளையடக்க வேறுபாயங்களும் உண்டோ?*

கு—விடை:—அன்பனே! உண்டு. அவற்றைக் கூறுகின்றேன்; நீ கவனமாய்க் கேட்கக்கடவாய். (1) அப்பியாசத்தின் மிகுதிப்பாட்டால் விநோதமாகச் செய்யும் ‡ பிராணயாமமென்னும் யோகசித்தியினுல் கொல்லனது துருத்திபோல நாசித்துளைவழியே செல்லுகின்ற பிராண வாயுவை அநாயாசமாக நிரோதஞ் (தடை) செய்தால், $ தோயம் நிற்கத் துரும்பும் நிற்பதுபோல விருத்திகள் நிரோதமாம். (2) அவ்வாறு யோகாப்பியாசஞ் செய்வதற்கு விருப்ப மின்றாயின், ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்கட்குக்

*§ விருத்தியை யடக்குதல் மனத்தை வசப்படுத்தினா லன்றி வேறொன்றினாலு முடியாதென்பது ஈண்டுத் தாற்பரியமாம். மனத்தைத் தம்வசமாகச் செய்து விருத்திகளை யடக்கியவர்க்கே சொரூபாநந்த முள்ளவாறு விளங்குமென்க. தத்துவராயர் “ஓடுமன நம்மினுட னுறவுசெயு மாகி னுள்ளநிலை மெள்ளவுணர் வாகிவரு மாகின், நாடுமிட மெங்குமறி வாகிவிடு மாகிலே” என்று கூறுவதிங் குணர்தற்பாலதாம்.*

*‡ “உயிர்த்தடைக்கே (பிராணாயாமத்திற்கே) பெருக வுடைத்தா மியோகப்பேர்,” என்று ஞானவாசிட்டங் கூறுவதறிக. பிராணாயாமம் - பிராணவாயுவைத் தடுத்தல். உயிர்த்தடை யென்னும் பிராணாயாமம் பூரகம், கும்பகம், இரேசகமென மூவகைத்தாம். (1) முன்னர்ச் சந்திர நாடியாலும் பின்னர்ச் சூரிய நாடியாலும் சுவாசத்தை நிரப்புதல் பூரகமாம்; (2) பூரித்த சுவாசத்தை நிறுத்துதல் கும்பகமாம்; (3) நிறுத்திய சுவாசத்தைத் தைரியமாகவிடுதல் இரேசகமாம். பிரணவ வுச்சாரணமின்றிய பிராணாயாமம் அகர்ப்பமென்றும், பிரணவவுச்சாரணத்தோடுகூடிய பிராணாயாமம் சகர்ப்பமென்றுஞ் சொல்லப்படும். இவற்றின் விரிவை அடயோகப் பிரதீபிகையிற் காண்க.*

*$ “ஆயின் மிக்கோ ரரிய செயலெலா*
*நேய மிக்க மனத்தை நிறுத்தல்காண்*
*வாயு நிற்க மனமு முடனிற்குந்*
*தோய(நீர்) நிற்குறி னிற்குந் துரும்புமே”*

*என்று பிரபுலிங்கலீலை கூறுவதிங் கூன்றி யுணர்தற்பாலதாம்.*

171. காரண சரீரந் தன்னைக் களைவதெவ் வாறென் றேதில்
ஆரணம் பொய்சொல் லாதே யதன்பொரு ளகத்தி லுய்த்துப்
பூரண மாகு மென்மேற் புவனங்க டோன்று மென்று
தாரணை வந்த தாகிற் றரித்திடு மவித்தை யெங்கே.

காரண சரீரமாகியுள்ள ¶ அவித்தையை நாசஞ்செய்தால், தமது உபாதான காரணமான அவித்தையி னசத்தால் விருத்திகள் தாமே (அஃதாவது பிரயத்தனமின்றியே) நிரோதமாம். (* இவ்விரண் டப்பியாசங்களுள், முன்னது யோகாப்பியாசமும், பின்னது ஞானப்பியாசமுமாம். யோகாப்பியாசத்தால் விருத்தியை நிரோதஞ் செய்வதிலும் ஞானப்பியாசத்தால் விருத்தியை நிரோதஞ் செய்வதே மேன்மை யுடையதாம். இதனை நீயே யூகித்துணரக் கடவாய்). 170

காரண சரீர வடிவ அவித்தையைக் கெடுப்பதன் காரணங் கூறல்.

சீ—வினா:—ஐயனே! § காரண சரீர வடிவ அவித்தையைக் கெடுப்பது எவ்வாறு? அதனைக் கூறுமாறு பிரார்த்திக்கின்றேன்.

கு—விடை:—அன்பனே! வேதம் சார்வாக, சமண, பௌத்த முதலிய சாஸ்திரங்களைப் போன் றசத்தியங் கூறுதாகலின், நீ † அதனர்த்தத்தை மனத்திற் சிந்தித்தமைத்து, பரிபூரண சொருபமாகிய என்னிடத்திற் பிரபஞ்சங்கள் கயிற்றரவு போன்று கற்பிதமாகத் தோன்றுகின்றனவா மென்று ‡ தாரணை (நிச்சயம்) செய்யக்கடவாய். அத்தாரணை யுனக்குண்டானால், $ அவித்தை யெங்கே யிருக்கும்? (ஓரிடத்து மிராதென்க). 171

¶ நூல் தீயால் நாசமானபோது அதன் காரியமான ஆடையும் அதன் விகாரங்களும் நாசமாவதுபோல, அவித்தை தத்துவ ஞானத்தால் நாசமானபோது அதன் காரியமான அந்தக்காணமும் அதன் விருத்திகளும் நாசமாமென்பதாம்.

* ஞானவாசிட்டம் வீதகவ்வியன் கதையில்,

"சித்த நாசத்தி னெறியிரண் டியோகமுந் தெளிந்தஞா னமுமாகும்
ஒத்த யோகந்தான் மனத்துறு தொழிலினை யொருவழிப் படமாற்றல்
சுத்த ஞானந்தா னலம்பெறக் காண்பதாந் தொடர்மன மேதென்னி
மெத்து மாகம பூடண ருரைத்தது விசையுயி ரசைவாகும்." [ன்

என்று கூறுவதிங் குணர்தற்பாற்றும்.

§ ஸ்தூல-சூட்சும சரீரங்களுண்டாதற் குபாதான (முதற்) காரணமாயுள்ள அஞ்ஞானம் காரணசரீரமாம்.

† அதனர்த்தமாவது "மாயாபாஸேநஜீவேசௌகரோதி—மாயை(சேதநத்தைப்) பிரதிபிம்பத்தினுல் ஜீவேசுரர்களாகச் செய்கின்றது" "தமேவ விதித்வா அதிமிருத்தியுமேதி நாந்ய: பந்தா வித்தியதே அயநாய—அந்தப் பிரஹ்மத்தையே யறிந்து அவிச்சையை நாசஞ்செய்கின்றுன்; மோட்சமடைய வேறு மார்க்க மின்று", "தரதி சோக மாத்மவித்—ஆத்மஞானி சோகத்தைக் கடக்கின்றுன்", "அயமாத்மாப் பிரஹ்மம்—இந்தஆத்மா பிரஹ்மம்" "ததேதத்பிரஹ்மா பூர்வம் அநபரம் அநந்தரம் அபாஹியம்—அந்தப் பிரஹ்மம் காரணமற்றது, காரியமற்றது, உள்வெளியற்றது" என்றற்றொடக்கத்து வேதாந்த (உபநிஷத்) வாக்கியங்களி னர்த்தங்களாம்.

‡ பிரஹ்மத்திற்கு எவ்வாற்றானும் வேறாகாதுள்ள எனது ஆத்மசொரூபத்தில் ஸ்தூல சூட்சும சரீரங்களும், அவற்றின் சுபாசுபக் கிரியைகளும், அவற்றின் பயனுப பிறப்பிறப்பு - சுவர்க்க நரகம் - சுக துக்கங்களுமாகியவெல்லாம் அவித்தையாற் கற்பிக்கப்பட்டிருக்கின்றன; எனது பிரஹ்மத்தன்மை கானல் நீரால் பூமி வேறுபடாமைபோல அக்கற்பித சாமக்கிரியால் வேறுபடுகின்றதில்லை யென்னும் நிச்சய மிங்குத் தாரணையாம்.

$ தன்னிடத்திற் கற்பிதம் உலகமென்றதனை ஐயந்திரிபின்றி யறிதலால் அஃதுண்டாதற் கேதுவாய்த் தன்னிடத் திருக்கும் அவித்தையும் கற்பிதமாயகலுமென்க. இது கயிற்றரவு பொய்யானபோது அஃதுண்டாதற் கேதுவாய சத்தியும் பொய்யாதல் போலவாம். இங்ஙனம் அவித்தையும் அதன் காரியமான ஸ்தூல சூக்கும சரீரங்களும் உலகங்களும் மித்தையென்றறிந்த மாத்திரத்தில் அவற்றிற் கதிஷ்டானமாயுள்ள தான் (ஆத்மா) ஆநந்தவடிவமென்பது நன்கு விளங்குமென்க. இவ்வாறு விளங்குதலே சர்வகாமாப்தியாம்.

"சிருஷ்டியைக் கூறாது பிரபஞ்சத்தின் நிஷேதம் பிரஹ்மத்தின்கண் பிரதிபாதிக்கப்படின், அப்போது பிரஹ்மத்தின்கண் நிஷேதிக்கப்பட்ட பிரபஞ்சமானது வாயுவினிடத்தில் நிஷேதிக்கப்பட்ட ரூபம்போல் பிரஹ்மத்தின்கணிராது வேறிடத் திருக்கின்றதோவென்னும் சங்கைதோன்றும்; சந்தேகமின்றிப் பிரஹ்மம் அத்விதீயமென்று பிரதிபாதித்ததாகமாட்டாது. ஆகையால், சிருஷ்டியைக் கூறும் வாக்கியத்தினுல் பிரபஞ்சம் பிரஹ்மத்தினின்று முண்டானதென்னும் ஞான மிருக்கும்போது உபாதானமன்றிக் காரியம் மற்றோரிடத்தி லிருக்கு மென்னும் சங்கை நிவிர்த்தியாகின்றமையின், 'நேதி நேதி' என்றற்றொடக்கத்து வாக்கியத்தினுல் பிரஹ்மத்தினிடத்திலும் அந்தப் பிரபஞ்சம் இல்லையென்று பிரதிபாதிக்கும்போது, பிரபஞ்சம் துச்சமெ(அசத்தெ)ன்று தெரிகின்றது. அப்பொழுது அகிலப் பிரபஞ்சப் பிராந்தி யற்ற அகண்ட சச்சிதாநந்த ரூபமான பிரஹ்மம் ஒன்றெனச் சித்திக்கின்றது; ஆகையால், பரம்பரையாய்ச் சிருஷ்டி வாக்கியங்களுக்கும் அத்விதீயமான பிரஹ்மத்தினிடத்திலேயே தாற்பரியமாம்" என்று வேதாந்த பரிபாஷை விஷயபரிச்சேதத்திற் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

172. அப்படி யிருக்கச் சித்த மலேதலால் விவகா ரத்தில்
எப்படி கூடு மேன்னி லென்னேவிட் டோன்று மில்லே
இப்படி கண்ட வெல்லா மேன்மய மேன்க ளுப்போல்
கற்பித மேன்று தானே காண்கின்ற சித்து நானே.

கிருதகிருத்தியத்துவங் கூறல்.

சீ—வினு:—ஐயனே! பிராரத்தகன்ம வசத்தாற் சம்பவிக்கின்ற லௌகிக வைதிகமென்னு மிருவகை வியவகாரங்களுள் யாதாவதொரு வியவகாரத்தில் சித்தம் விட்சேபத்தை யடைதலால், யானவ்வாறிருத்தல் (பூரண மாகு மென்மேற் புவனங்க டோன்றுமென்று தாரணே யோடிருத்தல்) எவ்வாறு கூடும்? அவ்வாறிருத்தற் குபா யங் கூறியருளல் வேண்டும்.

து—விடை:—அன்பனே! ஒருவன் காணப்படு மிப்பிரபஞ்ச மெல்லாம் (போற்பணி, மட்குடம், கடலலே முதலியன போன்று) என்மய (காரிய)மா யிருத்தலின், அவற்று ளோன்றும் ‡ என்னேத் தவிரவில்லேயாம்; அவ்வாறிருத்தலா லவை எனது சொப்பனப் பிரபஞ்சம்போலக் கற்பிதமாமென்று நிச்சயித்து, அவற்றின் பர்வாபாவங்களேக் காண்கின்ற சித்து நானே யாம்; 172

அவ்வாறு * சித்தாயுள்ளநான் பூரணமா யிருப்பவனேன்னு முறுதியை

‡ "என்னேத் தவிரமற்றிங் கேதுமில்லே யென்னுணே
பொன்னேத் தவிரவிலாப் பூடணம்போல்-பொன்னேயுரு
வேருக்கிப் பேருரைத்த வேற்றுமைபோ னம்மையுமவ்
வாருய்ப் பகுத்துரைத்தோ மால்"

என்று சொரூபசாரங் கூறுவதறிக.

* (சூரியன் முதலிய சாதனங்களே யபேட்சியாது தானுகவே விளங்குவதால்) சித்ரூபமாயுள்ள ஆத்மா, தன்னிடத்துக் கற்பிதமாயுள்ள பாகியப் பிரபஞ்சம் ஆந்தரப் பிரபஞ்ச மென்னு மிரண்டையும், அவற்றுள் (தன்காரியமாயுள்ள கடத்துள் மண்ணிறைந்திருப்பதுபோல) நிறைந்திருந்து, விளங்கச் செய்தலின், சர்வ வியாபகப்பொருளா மென்ப திங்குணர்தற்பாலதாம்.

(1) பஞ்சீகிருத பஞ்சபூதங்கள் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) கலத்தல் வாயிலாக வுண்டாய பிரஹ்மாண்டமும், அந்தப் பிரஹ்மாண்டத்துள் சீவர்களநு வாசத்தின்பொருட்டுப் பிருதிவிக்குக் கீழுள்ள அதலம்-விதலம்-சுதலம்-தராதலம்-ரஸாதலம்-மகாதலம்-பாதால மென்னு மேழுலகமும், பிருதிவிக்குமேலுள்ள பூலோகம்-புவர்லோகம்-சுவர்லோகம்-மகர்லோகம்-ஜநலோகம்-தபலோகம்-சத்திய (பிரஹ்ம)லோக மென்னு மேழுலகமும்,



173. சித்துநா னிறைந்தோ னென்ற திடமற வாதி ருந்தால்
எத்தனே யெண்ணி னுலு மேதுசெய் தாலு மென்ன
நித்திரை யுணர்ந்த பின்பு நிற்கின்ற கனுவே போல
அத்தனே யும்போய் தானே யாநந்த வடிவு நானே.

மறவாமலிருந்தா னுயின், அவன் § மனத்தினுல் எவ்வளவு சங்கற்பஞ் செய்யினுஞ் செய்க; (வர்க்கால் யாது கூறினுங் கூறுக);காயத்தா லெத்தொழிலேச்செய்யினுஞ் செய்க;அவற்ற லவனுக்கு யாதோரு கெடுதியு மில்லேயாம். ஆதலால், நித்திரையினின்றும் விழித்தபிறது மித்தையாக விருக்கின்ற சொப்பன வியவகாரம்போல மனேவாக்குக் காயங்களாற் செய்யப்படும் வியாபார மவ்வளவும் மித்தையேயாம். அதனுல், நான் ஆநந்தவடிவமே யாவன்; (செய்யுஞ் செய்கை முடிந்தவனேன்னுங் கிருதகிருத்தியனுவன். இதனே நீயூதித் துணாக் கடவாய்). 173

அவற்றிலுள்ள தேவர் மனிதர் முதலிய ஜராயுஜ சரீரங்களும், பட்சிமுதலிய அண்டஜ சரீரங்களும், விருட்சமுதலிய வுத்பிஜ்ஜ சரீரங்களும்,பேன் முதலிய சுவேதஜ சரீரங்களுமாய நால்வகை யோனி ஸ்தூல சரீரமாகிய போகாயதன (போகத்திற்கிட) மும், அந்தந்த லோகங்களில் அந்தந்தச் சரீரங்களுக் குபயோகமுள்ள பெயர் - வடிவ - குண - தருமசத்திகளும், போகசாதனமாயுள்ள அன்ன முதலிய போக்கிய பதார்த்தங்களும் பாகியப் பிரஞ்சமாம்.

(2) அந்நமயாதி ஐந்து கோசங்களும்,ஸ்தூலாதி மூன்று சரீரங்களும்,அச்சரீரங்களின் சம்பந்தமுள்ள பிறத்தல் முதலிய ஆறு விகாரங்களும், துவக்கு-மாமிசமுதலிய ஆறு கோசங்களும், பசி - தாக முதலிய ஷடூர்மிகளும், சுரோத்திராதி ஞாநேந்திரியங்களும், வாக்காதி கன்மேந்திரியங்களும், பிராணுதி ஐந்து வாயுக்களும், மநாதி அந்தக்காண சதுஷ்டயமும்,அவற்றின் வியாபாரமான சங்கற்பாதி சதுஷ்டயமும், சாக்கிராதி மூன்றவஸ்தைகளும், அவற்றின் வியாபாரங்களும், அவற்றினபிமானியாய விசுவ - தைசத - பிராஞ்ஞசீவர்களும், சமாதி - மூர்ச்சை - மாணமென்னு மவஸ்தைகளும், காமக்குரோதாதி அரிஷட் வர்க்கமும்,விவேகாதி சாதன சதுஷ்டயமும், சாத்துவிகாதி முக்குணமும், அவித்தை-அஸ்மிதை-ராகம்-துவேஷம் - அபிநிவேச மென்னும் பஞ்சக் கிலேசமும், மைத்திரியாதி நான்கும், விபர்யய - பிரமாணுதி பஞ்சவிர்த்தியும், யம - நியமாதி அஷ்டாங்க யோகமும், பிரத்தியட்சாதி ஆறு அல்லது நான்கு பிரமாணமும்,நாநாவிதமாயுள்ள பெயர்—வடிவ-குண - தர்மசத்தியி னுசிரயமாயுள்ள ரோகமும் ரோகமின்மையும் ஆந்தரப் பிரபஞ்சமாம்.

§ பஞ்சதசி திருப்தி தீபத்தில் "எது செய்யத் தக்கதா யிருந்ததோ அது செய்யப் பட்டது; யாது அடைதற் குரியதா யிருந்ததோ

174. நானென வுடலைத் தானே நம்பினே னநேக சன்மம்
ஈனராய்ப் பெரியோ ராகி யிருந்தவை யெலாமிப் போது
கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே
நானென வென்னைத் தானே நம்பியீ டேறி னேனே.

இவ்வாறு சந்தேகந் தெளிந்து கிருதகிருத்தியனான சீடன் தனது ¶ பிராப்தப் பிராப்பியத்துவத்தைக் கூறுவது வாயிலாகக் குருவை வியந்து துதித்தல்.

சீடன்:—கீழ்ச்சென்ற வளவிறந்த ஜன்மங்களில் மக்கள்முதலிய வடிவத் தேகங்களையே பிராந்தியால் நானென்று நம்பியிருந்தேன்: அப்போது இழிந்தோராயு முயர்ந்தோராயு மிருந்த வவையனைத்

அஃதடையப்பட்டதென்னு மிதுவே எனது நிச்சயமாம். இலௌகிக அல்லது சாஸ்திரீய அல்லது இவ்விரண்டினும் வேறான வியவகாரத்தில் அகர்த்தாவும் அபோக்தாவு மாகிய வெனக்குப் பிராரத்த கருமத்தின் படி பிரவிருத்தி யுண்டாகுக. அல்லது நான் கிருதகிருத்தியனாயிருந்தும் உலகானுக்கிரகத்தினிச்சையால் சாஸ்திரங் கூறிய மார்க்கமாகவே யிருப்பேன்; அதனா லெனக்குக்கேடியாது? ஒன்றுமில்லை. தேவதார்ச்சனை-ஸ்நானம்-சௌசம் - பிட்சை முதலியவற்றில் சரீரம் நிகழ்க; வாக்குத் தாரமாகிய பிரணவத்தை ஜபிக்க; அங்ஙனமே, வேத சிரசாகிய வேதாந்த சாஸ்திரத்தினைப் படிக்க; புத்தி விஷ்ணுவைத் தியானஞ் செய்க, அல்லது பிரஹ்மானந்தத்தில் விலீனமாகுக. சாட்சி வடிவ நான் இங்கு இராஜவின் வேலைக்காரனைப்போல எதுவுஞ் செய்வதில்லை; இராஜாவைப்போலப் பிரேரணையால் (ஏவலால்) செய்விப்பதுமில்லை. அதனால், எனக்குநல்லொழுக்கத்தினபிமானத்தாற்றோன்றிய விகாரமுண்டாகாது." என்று கூறுவதும், விசாரசாகரம் ஆறாந்தரங்கத்தில் "ஞானி ஆத்மாவை அசங்கமாக வறிந்தும், தேகத்தின் போஜனாதி வியவகாரங்களையாவது ஜனகாதிகளின் வியவகாரங்களைப்போல அதிதமான ராஜ்யபாலனாதி வியவகாரங்களையாவது செய்கின்றான். அந்த வியவகாரத்திற்கு ஞானம் விரோதியன்று; வியவகாரமும் ஞானத்திற்கு விரோதியன்று. ஏனெனின், எந்த ஆத்மசொரூபம் ஞானத்தால் அசங்கமென்றறியப்படுகின்றதோ அந்த ஆத்மாவில் வியவகாரம் பிரதீதியாயின், வியவகாரத்திற்கு ஞானமும் ஞானத்திற்கு வியவகாரமும் விரோதியாம். வித்வானுக்கு ஆத்மாவில் அந்த வியவகாரம் பிரதீதியாவதில்லை. சர்வ வியவகாரமும் தேகாதிகளையாசிரயித்துக்கொண் டிருக்கின்றன. ஆத்மாவில் வியவகாரசகித தேகாதிகளின் சம்பந்தமே இல்லை. இத்தன்மைய புத்தியோடு ஞானி சர்வ வியவகாரத்தையுஞ் செய்கின்றான். இக்காரணத்தால் வித்வானது பிரவிர்த்தியும் நிவிர்த்தியேயாம்.'' என்று கூறுவதுமிங் குணர்தற்பாலனவாம்.

¶ விசிஷ்ட புண்ணிய பரிபாகம், முமுட்சுத்துவம், சேவை, சாஸ்திர சிரவணம், ஆத்மாநாத்ம விவேகம், குருபாத ஆத்ம சாட்சாத்காரம், சம்சார துக்கநிவிர்த்தி, அஞ்ஞான நிவிர்த்தி, நிசாநந்தப் பிராப்தி முதலிய சித்திகளே பிராப்தப் பிராப்பியத்துவமாம்.



175. என்னபுண் ணியமோ செய்தே னேதுபாக் கியமோ காணேன்
நன்னிலந் தனிலே ழுந்த நாரணன் கிருபை யாலே
தன்னிய னானே னுத் தரீயத்தை வீசு கின்றேன்
தன்னிய னின்னு நானே தாண்டவ மாடு கின்றேன்.

தையு மிப்போது சற்குருவின் கிருபாவிசேஷத்தாலே கானற்சலம் போல மித்தையாகக்கண்டு, பிரத்தியகபின்ன பிரஹ்மமாகிய வென்னையே நானென வுள்ளவாறு நம்பி யுய்ந்தனன்; அங்நிலை சித்தித்தற் பொருட்டு, 174

கீழ்ச்சென்ற ஜன்மங்களில் யான் எப்படிப்பட்ட மேலான ¶புண்ணிய கருமங்களைச் செய்தோனோ? அவற்றை யறியேன்; அஃது எப்பாக்கிய (அதிருஷ்ட) விசேஷத்தால் சித்தித்ததோ? அதனையும் அறியேன். நன்னிலமென்னுந் திவ்விய க்ஷேத்திரத்தி லெழுந்தருளியிருந்த நாராயண தேசிகரது கிருபா விசேஷத்தாலே நான் தன்னிய (கிருதார்த்த) னானேன்; அதனாலுண்டான * பரமானந்தத்தால் மேலாடையை ஆகாயத்தி லெறிந்து விளையாடுகின்றேன்; தன்னியனான நான் இன்னு மாநந்தக்கூத் தாடுகின்றேன். 175

¶ புண்ணியம் சுருதி-ஸ்மிருதி முதலியன கூறும் யாகம் முதலிய விகித கருமங்களாம். அவை தம்மைச் செய்பவர்க்கு அதிர்ஷ்டத்தை (தருமத்தை) யுண்டாக்குவது வாயிலாகச் சுவர்க்காதிலோக போகங்களை யடையும் பயனைத் தருவனவாம். இக்கருமங்கள் தம்மைப் பயனோக்கிச் செய்பவர்க்குச் சுவர்க்காதி லோக போக வடிவப் பயனைத் தருவனவாயும், பயனோக்காது செய்பவர்க்குச் சித்த சுத்தி வடிவப் பயனைத் தருவனவாயு மிருக்கின்றன வென்பதிங் குணர்தற்பாலதாம்.

* " வில்லாள ரானோர்க் கெல்லா மேலவன் விளித லோடுஞ்
செல்லாதவ் விலங்கை வேந்தற் காசெனக் களித்த தேவர்
எல்லாருந் தூசு நீக்கி யேறிட வார்த்த போது
கொல்லாத விரதத் தோர்தங் கடவுளர் கூட்ட மொத்தார்"

என்று கம்பராமாயணம் யுத்தகாண்டம் இந்திரசித்து வதைப் படலத் துள்ள செய்யுளிங் குணர்தற்பாலதாம்.

176. தத்துவ ஞானம் வந்த சந்தோட வதிச யத்தால்
நித்தமா டுவன்கா ணென்ற நிலைமுன்ன மேய றிந்த
சத்திய மதனா லன்றோ தாண்டவா வென்ற ழைத்தார்
அத்தனை மகிமை யுள்ளோ ரன்னையும் பிதாவுந் தாமே.

177. வந்ததோ ரிவ்வா நந்த மகிழ்ச்சியா ருடன்சொல் வேன்யான்
சிந்தையி லெழுந்து பொங்கிச் சேகமேலா நிறைந்து தேங்கி
அந்தமில் லாத தாயிற் றப்படி குருவே தாந்த
மந்திர மருளு மீசன் மலரடி வணங்கி னேனே.

---

தனது தாய்தந்தையரை வியந்து துதித்தல்.

† எனது தாயுந் தந்தையும் யான் தத்துவஞானத்தா லுதய மான வித்தியாநந்தத்தின் மிகுதியா லெப்போது மாநந்தக் கூத்தாடு வே னென்னும் நிச்சயத்தை யான் பிறந்தவன்றே தெரிந்த வுண்மை யாலன்றோ என்னைத் தாண்டவாவென் றழைத்தனர்; அதனால், அவர்கள் மிகவும் மகிமையுள்ளோ ராவர். 176

தனது நிரதிசயாநந்தம் வெளியாதற் சேதுவாய்,
சற்குருவாகவுஞ் சாஸ்திரமாகவு மிருந்த ஈசனை வியந்து வணங்கல்.

தத்துவஞானத்தா லுண்டானதாகிய விவ் வித்தியாநந்தத்தின் பெருக்கை யான் எவரிடத்திற் கூறுவேன்; (அஃதொருவரிடத்துங் கூறுவதற் கியையாததா யிருக்கின்றது). அவ் வித்தியாநந்தம் சத்துவ குணத்தால் வைராக்கிய மயமான அந்தக்கரணத்தின் சாந்த விருத்தியினின்றுந் தோன்றி மேலிட்டுப் பிரபஞ்சமுற்றும் வியாபித்துப் பூரணமாய் முடிவற்றதாயிற்று. அவ்வாறு நிரதிசயா நந்தமெனக் குண்டாகுமாறு குருவாகவும் வேதாந்த சாஸ்திரமாகவு மிருந் தருள்செய்த பரமேசுவரனது பங்கயப் பாதங்களை வணங்கு கின்றே னென்று கூறினான். 177

---

† "சச்சிதா நந்தமெனத் தாய்தந் தையரிட்டார், அச்சிதனை யேற்கு மெனு மாரணங்கள் - மெச்சுகுரு, காட்டினா னென்னிடத்திற் கண்டே னது வாக, நாட்டுமிதி லார்பெரியர் நாடு"

என்று திருக்குத் திருசிய விவேகங் கூறுவதறிக.



178. வித்தியா நந்த மிந்த விதமென விளம்பி னேமே
பத்தியா லிந்த நூலைப் பார்த்தநு பவித்த பேர்கள்
நித்திய தரும நிட்டை நிலைதனை யறிந்து சீவன்
முத்தியை யடைந்தி ருந்த முனிவர ராகு வாரே.

179. ஆரணப் பொருளாம் வித்தி யாநந்தம் விளங்க வேதும்
காரணங் குறைவி லாமற் கைவல்ய நவநீ தத்தைப்
பூரண மாக்க வேண்டிப் பூர்வமா நன்னி லத்தில்
நாரண குருந மக்கு நவின்றனர் கனவில் வந்தே.

---

இந் நூற்பயன் கூறல்.

† வித்யாநந்தம் துக்காபாவம், சர்வகாமாப்தி, கிருதகிருத்தியம், பிராப்தப் பிராப்பியமென்னு மிந்நான்கு வகைத்தாமென்றதனை யிதுகாறுங் கூறினும். இனிக் கூறத்தக்கது யாதொன்று மில்லையாம். அன்புடன் கைவல்லிய நவநீதமென்னு மிந்நூலினைச் சற்குருவை யடைந்து அவர் வாயிலாகக் கேட்டாராய்ந்து தமது நிஜவடிவத்தை யுள்ளவாறறிந்தவர் நிஷ்காம புண்ணியகரும விசேஷத்தாலே ‡ நிஷ்டைகூடி அது வாயிலாகத் தமதுண்மைநிலையைப் பிறழாதறிந்து அதனால் ¶ நித்தியமாயுள்ள ஜீவன் முத்தியை முன்னர்ப் பெற்றிருந்த § முனிசிரேட்ட ராவர். 178

குருநாதனருளால் இந்நூல் யாதொரு குறைவுமின்றி
முற்றுப் பெற்றதெனல்.

வேதார்த்தமான சாதன சதுஷ்டய முதல் வித்தியாநந்த பரியந்த மதிகாரிக்குச் செவ்வையாக விளங்கு நிமித்தம் எடுத்துக் கூற வேண்டுங் காரணங்களுள் யாதொன்றுங் குறைவுபடாவாறு கைவல்லிய நவநீதமென்னு மிந்நூலைப் பூரணமாக்க விரும்பி, நன்னிலமென்னுந் திவ்விய க்ஷேத்திரத்தி லெழுந்தருளி யிருந்த நாரயண தேசிகர் எனக்குச் சொப்பனத்திற் றோன்றிக் கூறவேண்டுவன வனைத்தையும் இந்நூல் முற்றுப்பெறு மளவும் கூறியருளினர். (அவ்வாறவர் கூறியருளினமையால், இது முற்றுப் பெற்றதேயன்றி யெனது கல்வி கேள்விகளாலாய அறிவால் முற்றுப் பெறவில்லையாம்). 179

---

† "அரியமறை முடிவாகும் வாக்கியஞா னத்தா லாதலது வித்தியா நந்தமென வறிக," என்றும், "தக்கமா ஞானபல நான்கு துக்கா பாவஞ் சர்வகா மாப்தியொடு கிருதகிருத் தியமே, தொக்க பிராப்திப் பிராப்பியங்கள்" என்றும் வேதாந்த சூளாமணி கூறுவதறிக.

‡ மன மசையாது சொரூபத்தில் நிற்றல் நிஷ்டையாம்.

¶ அஸ்தபூஷண நியாயம்போல முன்னரே பெறப்பட்டு நாசமின்றி யிருப்பதாகலின், ஜீவன்முத்தி நித்தியமா யிருப்பதாமென்க.

§ மனன சீலன் - முனி.

180. குலவுசற் குருவின் பாதக் குளிர்புனற் தலைமேற் கோண்டார்
உலகினிற் றீர்த்த மெல்லா முற்றபே றடைவார் போல
நலமெய் யாகிய கைவல்ய நவநீத நூலைக் கற்றோர்
பலகலை ஞான நூல்கள் படித்தஞா னிகளாய் வாழ்வார்.

இந்நூலைக் கற்றறிந்தோர் ஞானசாஸ்திரம் பலவற்றையுங்
கற்றறிந்தோராவரெனத் திருஷ்டாந்த வாயிலாகக் கூறல்.

† சற்குருவின் திருவடியி லபிஷேகஞ்செய்த தீர்த்தத்தைத் தமது சிரசில் புரோட்சித்து (தெளித்து)க் கொண்டவர் அதனால் கங்கை முதலிய புண்ணிய தீர்த்த மனைத்திலுஞ் சென்று மூழ்கினோரடையும் பயனெல்லா மடைவர்; அதுபோல, கைவல்லிய நவநீத மென்னு மிந்த மெய்ஞ்ஞான சாஸ்திரத்தைச் சற்குரு வாயிலாக வரலாற்று முறையாகக் கற்றறிந்தவர் * ஞானசாஸ்திரம் பலவற்றினையும் படித் துணர்ந்த ஞானிகளைப்போலச் சிறப்புற்று வாழ்வர். 180

† "நரன் குருவின் பாதோதகத்தை (திருவடி யபிஷேக ஜலத்தை)ப் பருகி, மிஞ்சியதைச் சிரத்திற் றெளித்துக்கொண்டு, அதனால் தீர்த்தமனைத் திலும் மூழ்கியதன் பயனை யடைகின்றான்." என்று குருகீதை முதலத்தி யாயங் கூறுவதும்,

"தீர்த்தம் பிரசாதந் திருநீறஞ் சக்கரமும், சாற்றுமிறை கட்பிறந்த தாழ்வடமும் போற்றும், குருலிங்க சங்கமமுங் கொள்குறிக ளெட்டாங், கருவகலக் கட்டுரைத்தேங் காண்" என்று சிவஞானப் பிரகாச வெண்பா கூறுவதும்,

"ஓதிய பரமயோகி யுண்டதெவ் வுலக முண்ட, தாதலா லவனைப் பூசித் தவனுல கங்கண் மூன்றும், கோதிலாச் சிவன்மா லோடுங் கூடவே குறைவில் பூசை, காதலாற் செய்தா னென்றே யருளினன் கருணை வாரி" என்று சிவஞானநிலயங் கூறுவதும் இங்குணர்தற் பாலனவாம்.

* இங்ஙனங் கூறினமையால், இதனைக் கற்றறிந்தவர் ஞானசாஸ்திரம் பலவற்றையும் பிறர்க் கோதுவிப்பதற் காசிரியராவரென்பது பெறப்பட்டது; படவே, இந்நூ லின்றியமையாது கற்கத்தக்கதா மென்பதாயிற்று.

இரண்டாவது சந்தேகந் தெளிதற்படலம்

முற்றிற்று.

---

கைவல்லிய நவநீதத்தின்
தத்துவ விளக்கப் படலம் பாயிரம் உட்படச் செய்யுள் 108;
சந்தேகந் தெளிதற் படலம் செய்யுள் 180;
ஆகச்செய்யுள் 288-ஆம்.

---

கைவல்லிய நவநீத வசன வினா விடை
விரிவுரையுடன்
முற்றுப் பெற்றது.

---

ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணே நம:

கைவல்லிய நவநீத நூலாசிரியாது மாணுக்கரு ளொருவர் அவரையும், அந்நூலையும் வியந்து துதித்தல்.

1. அண்ணறன் னருளி னாலே யகம்புற மின்றி யொன்றாய்
எண்ணமி லிலக்கி யார்த்தத் தின்பொரு ளதுநா னென்ன
நண்ணின சரீர மாதி நாதத்தி னுபாதி யென்றே
கண்ணதா யனைத்துங் காணக் காட்டினன் றூண்ட வேசன்.

அண்ணல் - நாராயண தேசிகர்; இலக்கியார்த்தம் - தத்துவம் பதங்களின் இலட்சியார்த்தமாய கூடஸ்தப் பிரஹ்மம்; நாதத்தினுபாதி - மாயா காரியம்; கண்ணதாய் - அறிவாய்.

2. ஆன்ற பதமா மூன்றற்கு மதுநீ யானு மெனும்பொருளிற்
சான்ற துரியா தீதத்திற் றடையற் றிலங்கொண் சைதந்நியப்
ஊன்றி யுணர்ந்தோர் விகற்பமயக் கொழித்துத் தடையு மூடறுத்
தோன்றித் தானே தானுவர் துலங்குந் தமக்கே சுவாநுபவம்.[துத்

பதமாமூன்று - தத்துவமசி; துரியாதீதம் - துரியாதீத மென்னும் ஏழாவது ஞானபூமி; தடை - மறைப்பு; விகற்பமயக்கு - பேதப் பிராந்தி; தடை - பூதப்பிரதிபந்தம், வர்த்தமானப்பிரதிபந்தம், ஆகாமியப்பிரதிபந்தம்; சுவாநுபவம் - ஆத்மானுபவம்.

3. என்னு மாவாக் கியநான்கு மிசைக்கும் வித்தி யாநந்தம்
சொன்ன நாரா யணன்பாதந் தொழுது துதிந்தோர் துகளற்றோர்
இன்ன மாணுக் கன்குருவாற் சந்தே கந்தீர்ந் திடுபதத்தே
துன்னி நிறைந்து நின்றோர்க டூய முத்த ராகுவரே.

துகளற்றோர் - பாவமற்றவராவர்; பதத்து - ஆத்மாவும் பிரஹ்மமு மொன்றே யென்னும் நிச்சயத்தில்; தூயமுத்தர் - சீவன்முத்தர்.

4. தத்துவ விளக்கத் தாலுஞ் சந்தேகந் தெளித லாலும்
ஒத்திருள் விடாத மாயா வுள்ளிரு ளிரிய வோங்கும்
சித்ததா மொளிவி ளங்கச் செய்துபின் விருத்தி பேதப்
புத்தியால் வருமை யத்தைப் புரையறத் தெளிவித் தாண்டான்.

இருள் - சந்தேகவிபரீதம்; மாயாவுள்ளிருள் - மாயையென்னுஞ் சொரூபாவரணம்; விருத்திபேதப்புத்தியால் - பலதலைப்பட்டு விரிந்த புத்தி விருத்தியால்; புரையற - குற்றமற.

5. ஆண்டதே சிகனு மைய ஞாண னநந்தன் பாதம்
பூண்டவா ரோபத் தான்முன் பொய்ம்மயக் காய்வந் தத்தை
மாண்டநல் லபவா தத்தான் மாய்த்தரு ணோக்கத் தென்றும்
காண்டிட வைத்த ளித்த காரணு போற்றி போற்றி.

நாரண னநந்தன் - நாராயண னென்னு முடிவற்றவன்; அ(வ்) வாரோபத்தால் - அவ்வத்தியாசத்தால் (காரணஞ்ஞானத்தால்); பொய்ம் மயக் காய்வந் தத்தை - மித்தையாய்த் தோன்றிய பிரபஞ்சத்தை; மாண்ட - சிறந்த; மாய்த்து - கெடுத்து; அருணோக்கத்து - கிருபாநோக்கத்தால்; காண்டிட - காண; போற்றி போற்றி - நமஸ்காரம் நமஸ்காரம்.

---

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு திருவடிவாழ்க.

---

